

"கவலனத்துல் இருபான்" என்னும்

# ஸ்ரீ ஞானரகசியம்



ஆசிரியர்:—
கருணையானந்த ஞானபூபதிகள்,
திருவாரூர்.



உ சிவமயம்

10/2

கருணாநிதி துணை.

"கஸானத்துல் இருபான்" என்னும்

# ஞானக்களஞ்சியம்


ஆசிரியர் - திருவாரூர்

கருணையானந்த ஞானபூபதிகள்


முன்னிலும் விரிவான




இரண்டாம் பதிப்பு.

(இந்நூல் பக்குவிகட்கு மாத்திரம்)

(This book is Reserved for Competent Men only)

முகவேடு (Title Page) மாத்திரம்


திருவாரூர்-விஜயபுரம்

"கருணாநிதி" அச்சு நிகேதனத்தில்
பதிப்பிக்கப்பெற்றது.

ரெஜிஸ்தர் செய்தது.] 1930. [விலை ரூபா. 3.

பெருநாழி:

ஸ்ரீ கருணையானந்தர் அவர்கள்,

“வேதாந்த பாஸ்கரன்” ஆசிரியர்.

1887-ம் ௵ ஏப்ரல் ௴ 18௳ (சர்வசித்து ௵ சித்திரை ௴ 7௳) சோமவாரம் ஜனனம்.

பிஸ்மில்லாஹி

# இந்நூலைப்பற்றிய நல்லபிப்பிராயங்கள்.

---

சென்னை ஜனோபகார ஜகதசற்குரு கனம் மவுலானா மவுலவியீயுல் மவுனவீ (சர்காஜி-ஏ-ஜார்ஜ் டவுன் மதராஸ் வஜில்லாஜாத் வகைரு) ஹலரத் சையத் ஷாஹ் முஹம்மது இனயத்துல்லா லெப்பை ஹில் ஆலிம் ஸாஹிபு தைக்கா கலீபத்துல் காதிரி அவர்கள் மகிழ்ந்தனுப்பிய

## சரியொப்ப (நற்சாட்சி)ப் பத்திரம்

---

பெருநாழி: மவுலானா ஷெய்குல் மஷாயகு ஷைகு முஹம்மது அப்துர் றஹ்மான் சாஹிபுல் இருபான் சற்குரு ஆரிபுபில்லாஹ் அவர்களின் தபோபல செய்வீகப் புதல்வராகிய சிர்றுல்லாவும், துறவறந் தாங்கித் தூரிய பூமியை நன்குணர்ந்து ஆரிபீன் சாலிகீன்கட்கும் நெறி நிலை யுணர்த்தும் நவகண்டயோகசாகர வாசியோக சித்தருமான ஆலீ ஜனுப் ஷெய்குல் முரீதீன் முர்ஷிதுல் முஉதக்கதீன் முறப்பியுல் முஸ்லிமீன் ஹாதியுல்முதக்கல்லிமீன் முஹிப்பீபில்லா ஷைகு முஹம்மது இபுறுஹீம் சாகிஹிபுத்தர்ஹீம் என்னும் பிள்ளைத் திருநாமம் புனைந்த மஹான் கருணையானந்த ஞான பூபதிகள் அவர்களாக இருக்கும்

"ஹாதா கிதாபுன் தந்திக்குல் இருபான்
வத்து ஹஸ்ஸிஹுல் ஈக்கான்
வத்து ஹக்கிக்குல் ஈமான்
வத்து அர்றிபுர் றஹ்மான்."

வேண்டுவார்க்கு வேண்டுவதை நல்கும் மெய்ஞ்ஞான கற்பக விருட்சமாகிய ஞானக் களஞ்சியமென்னும் மகா மாட்சிமை தங்கிய இந்நூலின் ஆசிரியர் அவர்

களை கி. பி 1928-ஹுத்தில் யான் சோழ தேசஞ் சென்று தீனுல் இஸ்லாம் மார்க்க போதனை புரியப் போந்த காலத்தில் திருவாரூரில் என்னுடைய அதிர்ஷ்டவசமாகச் சந்திக்க நேர்ந்தது. பின்னர் அவர்கள் எழுதிய விலைமதிக்க முடியாத மாணிக்கமாகிய ஞானக்களஞ்சியத்தை அதன் அருமை பெருமைக்காக விலை கொடுத்து வாங்கி நடுநிலைமை யாகப் பார்த்தேன். அதன் பார காரமான இன்பாமிர்தத்தை என்னவென்று சொல்வேன்! தலீலுக்கும் ஹதீதுக்கும் வெகு ஒற்றுமையான இன்றியமையாத சாரங்கள் அதில் எங்கு பார்த்தாலும் ஞான இரத்தினங்களைக் குவித்து வைத்ததுபோல் நின்று சொலிப்பதைக் கண்டு ஆனந்தபரவசப்பட்டு உலோகத்தின் மானிடவாசிகட்கெல்லாம் அதைப்பற்றி போதிக்கவேண்டியது என்பேரில் விழுந்த கடமையாயிற்று என்று இந்நூலின் முதற் பதிப்பிலேயே குறிப்பிட்டுள்ளேன்.

அது எதற்கென்றலோ!

(தலீல்) வமாகலகத்துல் ஜின்ன வல்இன்ஸ இல்லாலியஉபுதூன ஐ லி யஉரிபூன் என்று வந்துவிட்டதாலும்,

(தலீல்) அலம்தர, கைப லரபல்லாஹு மதலன் கலிமத்தன் தையிபத்தன் க ஷஜரத்தின் தையிபத்தின் அஸ்லுஹா தாபித்துன் வபர்உஹா பிஸ்ஸமாஇ துஉத்தி உக்குலஹா குல்லஹீனின் பிஇதுனி றப்பிஹா வயலுரிபுல்லாஹுல் அம்தால லின்னஸி லஅல்லஹும் யத தக்கரூன் என்று வந்ததாலுமேயாம்.

பூபதியவர்களை முதல் தடவை சந்தித்த கால முதல் இதுநாள் வரையிலும் இச் சென்னைமா நகரத்தில் அவர்களு

டன் நான் நெருங்கிய ஞான நேச விசுவாசத்துடன் அகமுக மாகக் கலந்துறவாடி நன்ருக் ஆழ்ந்து நோட்டமிட்டதில் அவர்களது உயரிய நோக்கமும், தோய்ந்த அநுபவஞான நன்னடையும், கல்லிகூபி அக்லாக்கில்லா என்பதற்குத் தகுந்த நேர் வழியும், பதுகுருனி அதுகுருக்கும் என்னும் தலீலுக்கும் இணக்கமான யோக ஞான சாதனைகளிற் சிறந்த மகானுகவும், ஆபிதீன்-ஸாஹிதீன்களின் அடையா ளங்கள் துலங்குபவர்களாகவும் அத்துன் யா மத்ஸ் ரஅதுல் ஆகிரா என்பதாகிய இக லோகத்தில் பரலோகத்திற்கான ஞானப் பயிர் விளைவேற்றுகிறவர்களாகவும் திட்டமாகக் காணப்பெறுவதால் என்னுடைய இருதய கமலமாகிய கல்பு குளிர்ந்து அவர்களுக்கு,

"அல் ஆரிபு பில்லா அஷ் ஷைகு
முஹம்மது இபுறுஹீம் சாஹிபுல் இருபான்
கருணுநிதி கானல்லாஹு லஹுர் றஹ்மான்"

என்னும் அபிதானந் தங்கிய மகுடத்தையும் அவர்களுக்குச் சூட்டி இரண்டா முறையும் இந்த நற்சாட்சிப் பத்திரத்தை வரைந்தனுப்பலானேன்.

இவர்களியற்றி யருளிய, வேதாந்த பாஸ்கரன், ஞான யோக ரகசியம், ரூஹுல் இஸ்லாம் முதலான நூற்களையும், இவர்களால் வெளியிட்டு வருகிற "ஷம்சுல் இருபான்" என் னும் பொருள் புனைந்த "ஞான சூரியன்" பத்திரிகையையும் பார்வையிட்டேன். அவை தலீல்-ஹதீது-இஸ்மாஉ-கியாஸ் முதலானவைக்கும், அகீதாவின் இமாம்களாகிய மாத்து ரைதீ, அஷ்அறீ இவர்களின் நுட்ப திட்பங்களுக்கும் மிக்க பொருத்தமாகவும் சர்வமத சமரசமாகவும் காணப் பெறுகிறது.

ஷரீஅத்தையும் மஅரிபத்தையும் ஒன்று சேர்த்து ஐம்தூக்கி நடந்த நாதாக்களில் ஜுனைதுல்பகுதாதீ (றஹ்) அவர்களைப்போல் அகம்புறத் தூய்மையாளராகவும், நபிமுஹம்மது (சல்) அவர்கள் பெரிதும் விரும்பிய வெண் துகில் புனைபவர்களாகவும் திகழ்வதுபற்றி யான் இன்னும் அதிகமாக நேசிக்க விரும்புகின்றேன்.

இங்ஙனம்,

அல்காலீ சையது ஷாஹ்

முஹம்மது இனயத்துல்லா

காதிறி கானல்லாஹு லஹு

(அறபுத் தமிழுக்கு நேர் தமிழ்ப்பிரதி)



---

இது.

இந்நூலாசிரியரது அத்தியந்த மித்திரவாளரும் சென்னை "லிவாவுல்ஹம்து" சங்கத்தின் பிரசிடெண்டுமாகிய

பாண்டிமண்டலம் செவ்வல்மாநகரம்

தமிழ் சாஸ்திரநிபுணர் ஸ்ரீலஸ்ரீ

**எம். ஏ. நெயினுன்முஹம்மதுப் பாவலரவர்களால் மகிழ்ந்தளித்தது.**

### மகுடத்தாழிசை விருத்தம் (மூன்றிதழ்.)

சந்தி விளைந்த நீள்ஞாங்கர்த் தரணி நிறைந்த மனுக்குலங்கள்
சரத்தின் யோக நிலையுணர்ந்து சனன முத்தி யடைந்திடற்கு
மலத்தைக் கழீஇய நபிகன்பிரான் வானேழ்பதினா யிரந்திரைக்குள்
வாசி செலுத்தி சனவ்பரியின் வாசற் றிறந்து பேசிவந்த

கலைமெய்ஞ் ஞான வருட்டேனுங் கடலைப் புகட்டிக் கடைபோகக்
கருத்தை விளக்கி நிரப்பிவிட்ட கனதி ஞானக் களஞ்சியத்தைச்
சிலைமேற் கொளுத்து மணிவிளக்காய்ச் செய்து தந்த மஹானவனைச்
செப்பக் கேண்மின் பெருநாழித் திருவூர் பிறந்த கருவூரான்

அதா அன்று:— [த்தின்

சோற்றைத் தசையை யறுசுவையைத் துனியா வென்னும் பொய்மட
சுகத்தைக் காம லாகிரியைத் துறந்து வெகுநாள் காடடைந்து
காற்றைப் பருகி மனப்பேயைக் காய்ந்த காமில் இன்சானாய்க் [வான்
கருதப் படுவோன் தமிழுலகின் கண்ணாய் விளங்கும் புண்ணிய
தோற்றப் படுமெய் பொருளகத்துந் தோற்றப்படுவோன்மலைகெபிக்கு
டுலங்குஞ் சமன சித்தர்களுந் தொழுது வணங்கிப் புகழ்க்கீதஞ் [ட்
சாற்றப் படுவோன் ஆரிபீன்கள் சாது சங்கந் தனிலுறைந்து
சடலம் சதாவுற் றிடுபாக்கு சாதித் திலங்குஞ் செகத்தாசான்

அதா அன்று:—

ஞானசூரிய சஞ்சிகையா நடனக் கோலா கலஒளியை
ஞாலத் திமிரம் போயொழிய நடத்துங் கிருபை யருளாளன்
வானின் ஒளிபோற் புகழ்ப்பிரபை வழங்கும் கோமா னென்பூமான்
மதிவே தாந்த பாஸ்கரனை வையத் தீந்த மஹோ பெருமான்
தானந் தருமந் தயாபொறுமை சமைந்து கிடக்கு முள்ளக்கு
சமான மெவருஞ் சொலற்கரிய தக்கோன் முஹம்மதி புராஹீம்
ஞானக் கொலுசிம் ஹாஸனத்தில் நனிவீற் றிருக்குந் தவராஜன்
நந்தி கருணை யானந்த நாதன் ஞான்றும் வாழியவே.

சென்னை இராயபுரம் } இங்ஙனம்,
எம். ஏ. நெயினுன் முகம்மது ப்பாவலர்.

---

† சனவ்பரி, அகக்கண், அல்லது மகாமன்மஹ்மூதா.

# KARUNAIYANANDHA G. P.



A GARLAND OF VERSE
WOVEN FROM A SHORT BIOGRAPHICAL
SKETCH OF

*His Holiness Swami*

**KARUNAIYANANDHA GNANA POOPATHIGAL**

Author of:-
*VEDANTA BASKARAN, GNANAK KALANJIYAM,*
*GNANA YOGHA RAGASIYAM & MANY PIOUS SONG BOOKS ETC,*

Editor of:- "*GNANA SURIYAN*" *MADRAS.*

And the Proprietor of:- *KARUNANITHI PRINTING PRESS,*
VIJAYAPURAM. TANJORE DT.

---

I Innermost this fertile land of sages wise Adjoin, A
M Much to joy of South India in *Vijayapuram* Ushered U
A Amazing figure of unique gift and Godly Taciturn ; T
W Witness all the Gods above, and human folk Hallowed, H
S Sprung from Holy *Abdul Rahman* Siddha Yoghi Oh ! O
S Sanctified by sire, illumed by Masthan's songs Rare ; R
S Steeped in thought at eight, at double developed fully Odd ; O
E Emerged a sage in Vision at age of twenty-eight Fast. F
*N* ***Named him Karunaiyanandha Gnana Poopathi Great***

| | | |
|---|---|---|
| I | Intuitive and quick to win spirit'al stage Nirvana ; | N |
| L | Longing lovely happiness and damning self Afar ; | A |
| O | Obscure to human signt and deep in thought and Noble ; | N |
| H | Happy in the realm of yoga, Ooncentrate Adored ; | A |
| S | Sweet in words, and pure in Mind, strong in head and Kind, | K |
| I | Intervening God and man for interpreting Knowledge ; | K |
| H | Hanker for eternal rest, worldly joy Avoid, | A |
| S | Searching for the state of soul, when body loses Life ; | L |
| S | Saturate with love of teaching mankind Adamant ; | A |
| E | Entered into world affairs, and producd books Nascent ; | N |
| L | Lo *Gnana Suriyan, Vedanta Baskaran* Jah ! | J |
| B | Bibles imbue " God for ever, dewlike earthly Incubus " | I |
| D | Dawned too *Gnanak Kalanjiyam* teachihg people Yearn | Y |
| O | Oft to self realize, viewing Self as God Attain | A |
| G | Godly virtue, in the self shunning pleasures Mundane | M |

*Notes* :—1. Reading up your left hand detached letters, passing through the curve, and reading down those on your right hand side, you will get the sentence "*God bless His Holiness Swami Karunaiyanandha Gnana Poopathigal, Author of Gnanakkalanjiyam.*

2. The detached letters represent respectively the head letters of the 1st and the last words in the lines,

***Prepared by*** **T. GANAPATHY PILLAY,**

***Pensioned Revenue Inspector & Court Oommissioner,***

**TIRUVARUR**

ஸ்ரீல ஸ்ரீ கருணையானந்த ஞானபூபதிகள் அவர்களது
மாணவர்கள் திலதமாகிய
பாவலர் திலகம்—பெருநாழி:
செ. மு. அஹமதாஸ்மணி அவர்கள்
துதிசெய்த பாமணிமகுடம்

—————

எழுசீரடி விருத்தம்.

1. திருவளர் மூலக் குகையினிற் கலிமாத்
தேனதைச் சிருவைகொ டயிலப்
பெருநெறி யளித்துத் தனையறி ஞானப்
பிழம்பதா யடிமையேன் சொந்தக்
குருவெனக் குன்றூ தாத்தினிற் கலந்து
குளிர்மவு ஜூதினிற் றிளைத்த
மருவளர் கருணை யானந்த மஸ்தான்
மலரடி தலைமிசை வகிப்பாம்.

2. அஹதுஹ தாகி வாஹிதாய் நுக்கத்தாய்
அலிபுலாம் மீமதின் பொருளாய்ப்
பகலிர விலதாய் அலிபுநூன் ஸீன்நூன்
படைத்தஹூ வொருமொழிப் பொருளாய்
முகமதுண் முகமாய் அகமதுள் ளகமாய்
மோன முஹம்மதிப் ரூஹீம்
மகரிஷி கருணை யானந்த மான
மாதவர் மலரிணை துணையே.

3. கள்ளமொன் றணுகாத் தெள்ளிய ஞானக்
களஞ்சிய மந்திரப் பொருளின்
வள்ளலன் புடையா ரென்னையாண் டருளும்
மாதவஞ் சிறந்தமா மணியெ
னுள்ளநின் றொளிரும் ஞானசற் குருவாம்
உத்தமக் கருணை யானந்தர்
பிள்ளையென் றொருபேர் பெற்றன னுலகிற்
பெரியபே றின்பம்வே றுளதோ.

4. மன்னிலோர் நான்கும் உஜ்ஜதியா பிறவும்
மணிச்சுடர்ச் சுக்லுபா சனையும்
தன்ஜிஹ் தஷ்பீ ஹதன் திரி பனைத்துந்
தன்ஜிஹ மஹனுமாய்த் திருபான்
கன்ஸலாய்த் திகழும் மெங்குலக் கொழுந்தாம்
கருணை யானந்த பூபதிகள்
தன்சுத னெனப்பேர் பெற்றனன் றமியேன்
றனக்கொரு குறையது மிலையே.

ஞானபூபதிகள் பாதவூழியன்,
சே. மு. அஹமதாஸ் மணி,
பெருநாழி—(14-7-30)

---

வண்டுவாஞ்சேரி வித்துவானும், கன்னற்கிளையுமாகிய
திருவாளர்
கோ. நாராயணசாமி நாயுடு அவர்களால்
இயற்றப்பெற்றன.

அறுசீர் விருத்தம்.

உட்புலந்தேர் ஞானியரு மறைத்துரைத்தார் சிலவருயிர்க்
கொருவன் றன்னைக்
கட்புலந்தேர்ந் தறுபகையைக் கடந்தாரிற் காட்டுவர்முன்
கலைக ளோதி
மட்புலத்திற் பிறர்க்குரைப்பார் நெறிநில்லார் சில்லோர்தன்
மதிப்பா ரூரில்
விட்புலத்துத் தாரகையி னுப்பனொரு மதியமென
விளங்கு நீரான் ; (1)

அதிமதுரத் தெளிதேனோ ! வருள்பழுத்த கனிரசமோ !
வமுதோ ! வென்னு
மிதமுதிரக் கவிதொடுக்கு மெழிலுடையான் செம்பாக
மிதுவே யென்று

சதமதிக்குங் கீர்த்தனமு முறைவழுவா வுரைநடையுஞ்
சாற்றுந் திட்டு
மதிமதியான் சுகதுக்கஞ் சமன்கருதும் பொறைவடிவான்
அன்பி னல்லான் ; (2)

தனிக் கருணை யானந்த ஞானபூ பதிகளெனுந்
தவத்தி னோனே !
மனக்கனிவுற் றுயிர்க்குறுதி செயக்கலைகற் றுங்கொழுகி
மைதீர் ஞானஞ்
சனிக்கநிலைக் களமாகி யநுபவத்தின் முதிர்ந்துலகோர்
தளரா துய்வா
னினைத்தெனக்குண் டலிசத்தி யடியார்சீ வன்முத்த
ரியல்பு மூன்றும் ; (3)

ஆன்றமன விருளிரிய மலமொழிய வான்மவுரு
வருவ ஞான
மூன்றுமுயர் சங்கீதப் பெருமையுநான் காச்சிரம
முடிவி னின்று [யெனத்
தோன்றுபொரு ளியல்பனைத்துந் தொகுத்தங்கை நெல்லி
துலங்கக் காட்டிச்
சான்றவரும் புகழ்ஞானக் களஞ்சியமென் றொருபெருநூற்
றந்தான் மன்னோ. (4)

பகர்கருணை யானந்த ஞானபூ பதியடிகள்
பாரோர்க் கோது
மிகபாசா தனஞானக் களஞ்சியத்தைக் கேட்பதெலா
மீத லாற்கற் [கோ !
பகமென்கோ ! விதிவிலக்கத் துணிவுறலான் மறையென்
பரமா னந்த
சுகமுறலாற் பிரமத்தி னிருப்பென்கோ ! யாதென்கோ !
சொல்லுங் காலே. (5)

---

இராமநாதபுரம் ஜில்லா சாத்தூர் தாலுகா ஆவுடையாள்புரம்.

மு. கருப்பண பிள்ளையவர்கள் குமாரரும்

ஸ்ரீலஸ்ரீ கருணையானந்த ஞானபூபதி அவர்கள்

சீடர்களில் ஒருவருமாகிய "வித்வரத்தினம்"

சோமசுந்தரம் பிள்ளை அவர்களியற்றிய

# விமலமணி மாலை.



சீர்வந்தி லங்குகதிர் நவமணிச் சுடிகைபுனை
சேடன்முடி மீதுவளருஞ்
செப்பரிய நீள்புவியி லெத்திசையு மனுடராச்
சென்மித்த பேர்கண்முழுதுங்
கூர்வந்த வேல்விழியர் மோகாந்த காரமாங்
கொடியபா சாடவிதனிற்
கூடித்தி ரிந்துபிற விக்கடலி லாழுமொரு
கொள்கைதனை மனதிலெணியோ
பேர்வந்த செந்தாம ரைத்தடஞ் சோலைசெறி
பெருநாழி யென்னுநகரிற்
பேரின்ப மெய்ஞ்ஞானி யாகிவந் தீரெனது
பிறவியைய மாற்றவிந்நாட்
கார்வந்து பொழிவதெனெ வருண்மழைபொ ழிந்துபர
கதிதருதி பிரமமணியே
கருணையா னந்தமெய்ஞ் ஞானபூ பதியெனுங்
கமலைவளர் விமலமணியே. (1)

சத்யஞா னனந்த நித்யபர மானந்த
தத்வமதை யுள்கியுள்கித்
தவளப்ர காசவிச யார்த்தகிரி நின்றுவிழு
தண்ணருவி போலமார்பில்
எத்தினமு மானந்த பாட்பத்தி னைச்சிந்து
மிருநயன முடையவரசே
யினிமைதரு சுகமுதவு சிவராச நிட்டைகொளு
மெந்தையே யடிமைகுருவே

பத்தகோ டிகண்முழுது முத்திபெற வேதாந்த
பாஸ்கரனு மகிமைவாய்ந்த
பரமார்த்த ஞானக்க ளஞ்சியமு மீந்தவெகு
பாண்டித்ய முடையதுரையே
கத்தன்வட லூர்வருமி ராமலிங் கத்துறவி
கருதுமருண் மவுனமணியே
கருணையா னந்தமெய்ஞ் ஞானபூ பதியெனுங்
கமலைவளர் விமலமணியே. (2)

விண்ணிற்ற வழ்ந்திலகு முழுநிலாக் கண்டநிரை
வீசம்பு ராசியெனவும்
மேகச்செ ழுந்திரளை மாகத்தி டைக்கண்ட
விரிதோகை மஞ்ஞையெனவும்
பண்ணிற்செ ழிக்கின்ற பமரங்கண் மூசபூம்
பைங்கடம் பாடவிதனிற்
பசுபதியி னைக்கண்ட குலசேக ரப்பெயர்ப்
பாண்டியவி ராசனெனவும்
எண்ணிக்கை யற்றபல கிளைசூழ்கு ருந்தடி
யிருந்தஞா னசிரியனை
யெதிர்கண்ட திருவாத வூரடிக ளென்னவு
மெந்தையே நம்மையடியேன்
கண்ணிற்க ளிப்புறக் காண்பதெக் காலமக்
காலமருண் ஞானமணியே
கருணையா னந்தமெய்ஞ் ஞானபூ பதியெனுங்
*கமலைவளர் விமலமணியே. (3)

எந்தநா ளிற்கருணை யானந்த சாதுவி
னிடத்திருந் தின்பநிட்டை
யிடைவிடா தனவாத மும்பழகி முத்திநிலை
யெய்துவோ மென்றவெண்ணஞ்
சிந்தையிடை யிரவுபகல் குடிகொண்டு வாட்டுதே
சிறியனென் செய்வலெந்தாய்

* கமலை=திருவாரூர்.

சீடர்கள நேகருட னெனேயுமொரு சீடனுச்
சேர்த்தாள வேண்டுமையா
அந்தமுற பசியமா கதமேவெ ஞரமே
யருணவொளி மாணிக்கமே
யையிரண் டோடின்ன மறைசேர்ந்த மாற்றுடைய
வத்கமே சுத்தவொளிவே
கந்தமிகு சோலேசூழ் புலிவலக் கந்தனேக்
கவிதைகொடு போற்றுமணியே
கருணேயா னந்தமெய்ஞ் ஞானபூ பதியெனுங்
கமலேவளர் விமலமணியே. (4)

வண்டுகளெ லாமதுவை யுண்ணமலர் மொய்த்ததென
வந்தன்பர் பணியுமணியே
மனவாக்கி லெட்டாத வமிர்தப்ர வாகத்தை
வாய்வைத்த ருந்துமணியே
யண்டிவரு சீடர்கட் குலகாசை யற்றுவிட
வறிவைப்பு கட்டுமணியே
அப்துர்றஹ்மானென்னும் *ஆரிபுல் லாவவர்க
ளருளியகு ழந்தைமணியே
யுண்டுமெனு மாமறையு ரைத்துமறி யாதிடையு
மொருமொழியு ணர்ந்தமணியே
யொப்பற்ற வேதாந்த முழுவதையு முலகினுக்
குதவியருள் கிருபைமணியே
கண்டுகொள வரிதான துரியநிறை சோதியைக்
கண்டுமகிழ் கொண்டமணியே
கருணேயா னந்தமெய்ஞ் ஞானபூ பதியெனுங்
கமலேவளர் விமலமணியே. (5)

நற்கதிபெ றற்குவழி தேடாம லிதுவரையு
நாள்முழுதும் வீணு தால்
நாடினே னுடினே னினியாவ தருளென்னு
நன்மழைபொ ழிந்தருளு வீர்

---

* ஆரிபுல்லா = பிரமஞானி. இஃது அறபி வாக்கியம்.

சற்குரிய தாய்தந்தை குருதெய்வ நீர்தவிர
  வினியாரு மில்லையரசே
 யெளியனே னிதயத்தில் வளர்கின்ற துரியமே
  யேசற்ற நவரத்னமே
சற்குண நிறைந்தபொரு ளேகரையி லாவின்ப
  சலராசி யேகரும்பே
 சனனக்கொ டும்பிணிக் கொருமருந் தேமதுர
  சர்க்கரைக் கட்டியேவெண்
கற்கண்டு பாகினுந் தித்திக்கும் வத்துவே
  கதியென்னு முத்திமணியே
 கருணையா னந்தமெய்ஞ் ஞானபூ பதியெனுங்
  கமலைவளர் விமலமணியே. (6)

உலகினிறை திமிரமொளி ரிரவிகுண திசையிலெழ
  வொருநிமிட மறையுமதுபோல்
 உலைவைவளி கொடுவிசிற வுயரவடர் முகின்முழுது
  முடனகலும் வளமையதுபோல்
அலகிலொளி விரியுமொரு துரியநிலை வளர்பொருளை
  யறியவல பெரியகுருவே
 யனிலமழை பொழிவதென விதுதருண நுமதுதிரு
  வமிர்தவருண் மழைபொழிவிரேல்
விலகரிய விருவினையு மரைநொடியில் வெருவுகொடு
  விடுவிடென விலகிவிடுமே
 விலகியபி னடிமைபர கதியடைதன் மிகவெளிது
  விரைவினும தருள்பொழிகுவீர்
கலகலென விகிரவகை யிசைகண்மொழி துடவைமரு
  கமழ் $பழசை நகரின்மணியே
 கருணையா னந்தமெய்ஞ் ஞானபூ பதியெனுங்
  கமலைவளர் விமலமணியே (7)

செப்பரிய சாதனச துட்டயம் பெற்றவர்கள்
  சென்மித்த பூமியின்கண்

---

$ பழசை நகர்="பெருநாழி" யென்னுநகர். இஃது பாண்டி மண்டலத்திலுள்ளது.

சிறியனேன் சென்னமுஞ் சென்னமோ வென்னையுந்
தேடிப் படைத்தசெய்கை
யெப்படியெமா ழிந்தாலு மாறுமோ தேறுமோ
விளவலென் செய்வலெந்தா
யீடேற லெவ்விதமு நுங்கடமை நுங்கடமை
யினியெவரு முலகிலுண்டோ
அப்பர்சுந் தரமூர்த்தி திருஞான சம்பந்த
ராதியோ ருண்டவயிர்தை
யாவலுட னிக்கால முண்கின்ற தேவரீ
ரடியேனு முண்ணவருள்வீர்
கற்பகவி ருட்சமென நற்பயன ளித்தடியர்
கலிதீர்க்க வந்தமணியே
கருணையா னந்தமெய்ஞ் ஞானபூ பதியெனுங்
கமலவளர் விமலமணியே. (8)

ஒருகவள மன்னமிட் டோர்கடங் கூடவே
யோடுகிற சுனகனைப்போ
லுள்ளன்பு கொண்டடிமை தேவரீர் பக்கலி
லுழைத்துவரு நாளுமுளதோ
விருகணிலு மானந்த நீரொழுகு வதுமிலே
னென்புருகி நினைவதுமிலே
னென்றைக்கு மனையாசி வாததீ பந்தன்னை
யெந்தவிதம் யானடைவனோ
வருகபர மானந்த குருவருக வேயென்கண்
வாழ்மணீ வருகவெனையாள்
மாதவா வருகசிவ யோகீஸ்வ ராவருக
மனமீது குடிகொள்ளவே
கருகிருணி கர்த்தகொடு மாயையாம் பகைவென்ற
கம்பீர ராசமணியே
கருணையா னந்தமெய்ஞ் ஞானபூ பதியெனுங்
கமலவளர் விமலமணியே. (9)

மையார்க ணரிவையரை நாடினவர் கைவல்ய
வாழ்க்கைபெற முடியாதென

வாசித்து மறிஞர்களை நேசித்த திந்துமென்
மனமினமொ டுங்கவிலையே
ஐயாவெ னைப்பெற்ற வப்பனேயடியேனை
யாளவரு ஞானகுருவே
யரியவொர்ம ருந்தேனு மந்த்ரமே னுந்தருண
மருளுவீ ரருளுவீரே
பொய்யாகு முலகினைப் பொய்யாக வேயெணிப்
பொய்யாத பொருளையுற்ற
புனிதவை ராக்யதவ சிங்கமே தீட்சண்ய
புண்ணியசொ ரூபமயமே
கையாத மதுரவச னங்காட்டி யன்பரைக்
கரைசேர்க்க வந்தமணியே
கருணையா னந்தமெய்ஞ் ஞானபூ பதியெனுங்
கமலைவளர் விமலமணியே. (10)

---

தந்ததன தந்ததன தந்ததன தந்ததன
தந்ததன தந்ததன தந்தனனு

1. கந்தமெழு கின்றவா விந்தமென நன்குறுமு
கந்தெரிம டந்தையர்க ளின்புகருதேன்
2. கண்டவர்வ ணங்குமதி ரண்டடியி லன்புகொடு
கண்களிலி ருந்துதக மென்று பொழிவேன்
3. ஐந்துபுல னுங்கெடந கந்தனினி குஞ்சமிசை
யன்றினிதி ருந்துதவ மொன்றி முதலோ
4. டந்தமில்பெ ரும்பொருள்க லந்ததுரை! யுந்தனிட
மண்டுசுத னுங்கதிபெ ருந்த வழிபார்!
5. சிந்துகலை பொங்கியொளிர் சந்த்ரனமிர் தென்றனுட
சிங்குகொட யின்றிளமை கொண்டுநமனுர்
6. திண்கயிற றுந்தவன்வெ ருண்டிடவொர் தந்த்ரமருள்
தென்பழுசை யம்பதிபி றந்தகுருவே!
7. நந்தனமும் வண்பழன முந்தடமு மெங்குநிறை
நன்கமலை தங்கிவள ருங்கருணையா
8. னந்த!மென வன்பர்பணி யுந்தருண மஞ்சலென
நன்றுரைமொ ழிந்தெதிர்வ ருங்கடவுளே.

# பொருளடக்கம்.

| அத்தி | பொருள் | பக்கம் |
|---|---|---|
| | புரியட்டக சரீரம் ... ... ... | 72 |
| | குண்டலி விழிப்பு ... ... ... ... | 73 |
| | பஸ்திரிகை ... ... ... ... | 75 |
| | குண்டலிவடிவம் (சித்திரம்) ... ... ... | 78 |
| | அட்டமாசித்திகள் ... ... ... | 79 |
| | அட்டமாசித்திகள் உண்டாவதின் காரணம் ... | 81 |
| 8. | அஞ்ஞான சத்தபூமிகள் ... ... ... | 87 |
| | அஞ்ஞான சத்தபூமிகள் (சித்திரம்) ... ... | 90 |
| | அஞ்ஞானபூமியின் சங்கிரகம் ... ... | 91 |
| 9. | ஞான சத்தபூமிகள் ... ... ... ... | 92 |
| | முதல்ஞானபூமி—சுபேச்சை ... ... ... | 95 |
| | இரண்டாம்பூமி—விசாரணை ... ... ... | 97 |
| | மூன்றாம் பூமி—தனுமானசி ... ... ... | 98 |
| | நான்கு பற்றின்மைகள் ... ... ... | 99 |
| | முதற்பூமி விசேடம் ... ... ... | 100 |
| | மூன்று பூமியின் பயனும்—சாதகர்களிலக்கணமும் | 102 |
| | ஞான சத்தபூமிகள் (சித்திரம்) ... ... | 103 |
| | நான்காம்பூமி—சத்துவாபத்தி ... ... | 104 |
| | ஐந்தாம்பூமி—அசம்சத்தி ... ... ... | ,, |
| | ஆறாம்பூமி—பதார்த்த பாவனை ... ... | ,, |
| | ஏழாம்பூமி—துரியம் ... ... ... | 105 |
| 10. | ஜீவன் முத்தி (பிரமவித்து) ... .. ... | 107 |
| | அபரோட்ச ஞானம் ... ... ... | 108 |
| | பரோட்ச ஞானம் ... ... ... ... | 110 |
| | பிரமவரன்—பிரமவரியான் ... ... ... | 114 |
| | பிரம வரிட்டன் ... ... ... ... | 115 |
| | ஜீவன் முத்தரும்—செகப்பித்தரும் ... ... | 117 |
| | ஞானிகள் சிரிப்பு—முத்தர் மனம் மோனத்தே ... | 118 |

| அத்தி | பொருள் | பக்கம் |
|---|---|---|
| | சாமியாருக்குக் கலியாணம் | 235 |
| | குஞ்சுப்பாம்புக்கு நஞ்சில்லையா? | 236 |
| | இரண்டாவது கடவுள் ... ... ... | 237 |
| | நபிகளுயகமும்—வேடிக்கை விளையும் ... | 240 |
| | எவர்மனதையும் புண்படுத்தலாகாது ... ... | 241 |
| | ஆரிபீன்கள் சரித்திரம் ... ... ... | 243 |
| | கண்ணுடியும்—கழுதையும் ... ... ... | 248 |
| | தொழுகையும்—சூடான வெந்நீரும் ... ... | 249 |
| | குல்ஹுவல்லாவும்—சக்கிலியன் செருப்பும் ... | 253 |
| | கடவுளுக்கு பெண்சாதி—பிள்ளை ... ... | 256 |
| | காபிறுக்கு நூறு முகாந்தரம் ... ... | 261 |
| 14. | சாதுசங்க விசாரணை ... ... ... | 263 |
| | கழுதையைப்பார்த்து குதிரையும் கெட்டது ... | 265 |
| | சேரிடம் அறிந்துசேர் ... ... ... | 268 |
| | கள்வர்களும்—வழுதுளங்காயும் ... ... | 271 |
| | பருமரத்தையண்டிய பல்லி ... ... ... | 274 |
| 15. | சாதிமதச்சங்கடம் ... ... ... | 277 |
| | சங்கராச்சாரியரும்—தீட்டும் ... ... | 292 |
| | சுந்தரமூர்த்தியும்—தூதுளங்கீரையும் ... ... | 293 |
| | தியாகேசர்தோற்றமும்—பிராமணர் ஏமாற்றமும் | 294 |
| 16. | ஆயுள்பரீட்சை ... ... ... ... | 297 |
| | சாயாபுருடதெரிசனம் ... ... ... | 298 |
| | வானவில்பரீட்சை ... ... ... ... | 299 |
| | சந்திரசூரிய பரீட்சை ... ... ... | 300 |
| 17. | சங்கீதமே சாயுச்சியவழி ... ... ... | 303 |
| | சங்கீத மகத்துவம் ... ... ... | 304 |
| | சங்கீதமே சருவ வசியம் ... ... ... | 305 |
| | சங்கீதமும்—கடவுளும் ... ... ... | 305 |

# இரண்டாம் பதிப்புரை.

அன்பர்காள்!

நமது ஞானக்களஞ்சியமானது கி. பி. 1927-ஆம் வருடத்தில் அச்சிடப்பெற்று அப்புத்தகங்களெல்லாம் எதிர் பாராத சொற்பகாலத்தில் செலவாகிவிட்டதே இந்நூலின் மகிமை இத்தன்மைத்தென்பதை யுணர்த்துகின்றது.

புத்தகம் கைவசமில்லாததனால் கேட்டவர்கட்கு புத்தகம் கிடைக்காமல் அருமையாகிவிடவே, பல அன்பர்கள் ஞானக்களஞ்சியம் கிடைக்குமா? ஒரு புத்தகமாவது வாங்கி அனுப்பமுடியுமா? முன்பணம் அனுப்பவா? என்று கேட்டுக் கேட்டு ஆவல்கொள்ளும்படி செய்துவிட்டது கண்டு நமது தொண்டின் பயனாகிய நமது நூற்கள் நந்தமிழ் நாட்டுக்கு திருப்தியும் நற்பயனும் அளித்திருக்கிறதென்று ஆனந்தமெய்துகின்றோம்.

சிற்சில முயற்சிகளின் தீவிரத்தினால் இவ்விரண்டாம் பதிப்பை அச்சிடுவதில் தலையிட தாமதமாகிவிட்டதுமன்றி, அச்சுவேலை நச்சுவேலை என்றபடி அச்சுநிலையத்தின் தாமதத்தால் நாம் எதிர்பார்த்தகாலத்தில் புத்தகம் வெளியாகாமலும், அன்பர்கள் விரும்பியகாலத்தில் புத்தகம் அனுப்ப முடியாமலும் நேர்ந்துவிட்டதுபற்றி வருந்தாதுவக்க விரும்புகின்றனம்.

முதற்பதிப்பிலுள்ள அநேக விஷயங்களை மணிமணியாகத் திருத்தியும், சுருக்கமாக எழுதப்பெற்றிருந்தவைகளை நன்றாக விளக்கியும் முதற்பதிப்பில் சேர்க்கப்பெறாமல் விட்டுப்போன அனேக உபதேசங்களையும் ஞானப்புதையல்களையும் இப்பதிப்பில் அற்புதம்! ஆனந்தம்! என்று கண்களில் ஒத்திக்கொள்ளும்படியாக வரைந்தும், சில படங்களைப் புதிதாகச் சேர்த்தும், சில படங்களை முன்னிலிருந்து திருத்தியும், பக்கங்களை அதிகப்படுத்தியும், கூடுமானவரையில் திருத்தமாகவே பதிப்பித்துள்ளது கண்டு பெரிதும் மகிழ்வுறுவீர்களென்று நம்புகின்றனம்.

சென்னை,
21—7—1930.

ஆசிரியர்.

# ஞானபூபதிகள் யோக கீதம்.

## "ஹாய்ரேசையா" என்ற வண்ணம்.

### கண்ணிகள்.

1. நாகைநாதா நளினமலர்ப்பாதா
நலஞ்செய்ய லாகாதா
தாகங்கொண் டேனே ஏழைநானே
ஷாகுல்ஹமீதெங்கோனே சரணமலர்த்தேனே
தயவுசெய்ம ஹானே
சஞ்சலமே துஞ்சும்வகை
கஞ்சமலர்த் தஞ்சமருள் (நாகை)

2. ஆன்மயோகம் அருட்பெரும்ப்ரவாகம்
அதிலென்ன சந்தேகம்
கானல்போன்றதேகம் இதில்மோகம்
கதிதருமோ போகம் ஹக்குல்எகீனின்தாகம்
கவலையெல்லாம் போகும்
காதிறுலி நாயகமே
காதலுடன் பாதுசெயும் (நாகை)

3. ஞானமந்த்ரம் நடுப்பிரம ரந்த்ரம்
நமனோட்டு மாதந்த்ரம்
வானசந்த்ரன் பாலே தலைமேலே
வருவதையுண்டாலே வளரும் வேகாக்காலே
வயங்கும் சிற்செங் கோலே
மவுனநிலைக் கெவுனவழித்
தவமறிய நவமருள்வீர் (நாகை)

4. கானந்தங்கும் கருணைநிதி பொங்கும்
கவிமாரி யேஎங்கும்
ஞானபூ பதியே கூறுந்துதியே
லாகூத்துமக்காம்நிதியே நமன்வாராதபதியே
நமக்கருளுங் கதியே
நாசிநுனி வாசல்தனில்
ஓசைமணி பேசவரும் (நாகை)

---



கருணாநிதி கருணை முன்னிற்க.

# ஞானக் களஞ்சியம்.

## ஞானசற்குரு வணக்கம்

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

முத்தியின் மூவா வித்திஃ தெனவோர்
மொழிதனை மொழிந்துமெய்க் கலிமாத்
தத்துவ மசிவாக் யார்த்தம் காண
தன்னையே பிரமமென் றுணரும்
புத்தியை எனக்குத் தந்திர மாகப்
புகட்டிய சற்குரு மணியாம்
சித்தாப் துர்றஹ் மானொலி யவர்கள்
திருவடி சிரமிசை சேர்ப்பாம்.

## பரமகுரு வணக்கம்

சுத்தமெய்ஞ் ஞானப் பழம்பொருள் வயங்குந்
துவாதசாந் தத்தருள் வெளியில்
முத்தொடு பவள மரகத மெனச்சொன்
முச்சுடர் களின்மணி வடிவாய்ச்
சித்தொளிர் மூலக் குகையினிற் கலிமாத்
திருமனுச் சுழிமுனைப் பொருளாய்த்
தத்துவா தீத முகியித்தீ னொலியென்
சற்குரு பதந்தலைக் கணிவாம்.

## கடவுள் வாழ்த்து

ஆதியாய் நடுவாய் அந்தமாய்ச் சுயம்பா
யகண்டமெய்ப் பூரணா னந்த
சோதியாய் ஞான மனவிழி யதற்குத்
தோன்றியுந் தோன்றிடாத் தனியாய்

சாதம்ார் ஹூலெங் காமெய்க் கலிமாத்
தத்துவ மசிமொழிப் பொருளாய்
நீதிசேர் ஆரி பின்கள்கண் ணிடையில்
நிருத்தனைக் கருத்தினில் நினைவாம்.

எண்சீர் விருத்தம்

வளஞ்சியத்தை சதத்தாற்பெற் றுன்ம லாபம்
வாய்த்தலுக்குண் மாணபவம் வருமோ வென்று
வுளஞ்சியத்தைப் பயக்காதத் துவித மோக்க
முறுபொருளா சிப்பவர்கட் குயிராம் ஞானக்
களஞ்சியத்தைப் பொருணிரப்பித் திறவு கோலுங்
காத்தளித்தோ மவர்கள்கதி யடையும் வண்ண
மளஞ்சியத்தைச் சந்தகழுஞ் சிந்தை யான
ஆலயத்துட் சாலவுமஞ் சலிசெய் வாமால்.

ஞான சமூக விண்ணப்பம்.

நோயினல் நலியு மாந்தர் மருந்தின் சுவையை நோக்கார்
தீயினல் நலிவோர் நீரின் றீதுநன் றுணர கில்லார்
தாயினுங் கருணை யெம்மான் றண்ணருட் டாக முள்ளார்
சேயனென் றமிழை நோக்கார் செம்பொரு ளுருவு வாரால்.

தற்சிறப்புப்பாயிரம்
அறுசீர் ஆசிரிய விருத்தம்

திக்கனைத்தும் புகழ்ஞானக் களஞ்சியத்தின் பாம்பொருளைத்
திறந்து மேலாம்
பக்குவிகள் கலியகற்றி யுலகமெலாஞ் சீர்திருந்தப்
பண்ணி னுல்
முக்கனியோ ! சர்க்கரையோ ! அமுதோ ! விவ் வசனமென
மொழியும் வண்ண
நற்கருணை யானந்த ஞானபூ பதிகளெனு
ஞானி தானே.

1 வளம்-சு-இயம்-தைசதம்—மாட்சிமை - சுகம், நன்மையைக் காட்டும் உபசருக்கம்-நாதானுபவம்-பாமாகங்காரம். 2 உள் - அஞ்சி அத்தை — மனம் - பயம் - குரு. 4 அள - அஞ்சி - அத்து - ஐ— நெருக்கம் - எசமானன் - செவ்வை - கடவுள்.

# ஞானசாரம்

அமிழ்தினும் இனிய தமிழ்மொழி யதனில், இலக்கணங் கூறும் இன்சொற் கிணங்க, பாயிரம் எல்லாப் பனுவல்களுக்கும் இன்றி யமையாத வியப்புடையதாகும். அதை முன்னர் வாசித்துப் பின்னரே நூலை வாசிக்கத் தொடங்குதல் முறை. ஏன்?

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்

என்று வள்ளுவர் பெருமான் கூறியதற்கிணங்க, ஒருவர் இருதயத்தின் மிகுந்த சுபாவத்தை அவர் முகமானது கண்ணாடிபோற் காட்டுகின்றது. அங்ஙனமே நூலினுட் கருத்தை அன்முகமானது விளக்குவதால், நூலை வாசிக்கப் புகுமுன் பாயிரத்தை வாசிக்க வேண்டியது மிக்க அவசியமாகும்.

ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்று

என்றனர் நன்னூலாசிரியர். ஆனால், நம்மவரிற் பெரும்பாலோர் பாயிரத்தைக் கண்டால் ஆயிரத்தைந்நூறு மைலுக்கப்பால் வாசிக்கின்றனர். அதை எடுத்துப் பாராமலே நூலை வாசிக்கத் தொடங்குகின்றனர். ஆதலால் இதைப் பாயிரம் என்று கூறாமல் நூலின் ஆரம்பம்போல் கூறவேண்டி நேர்ந்தது, "வழுவலகால வகையினானே" என்ற நன்னூற் கருத்தின்படி பிழையாகாது.

அன்றியும், முப்பத்திரண்டு உத்தியுள் ஒன்றாகிய நுதலிப்புகுதல் இலக்கணப்படி, "யான் இதனைச் சொல்வேன்" என்று ஒவ்வொரு அத்தியாய ஆரம்பத்திலும் ஒவ்வொரு செய்யுள் கூறப் பெற்றுள்ளனம்.

இவ்வுலகில் அவரவர்க்குத் தெரிந்த ஒருவித உன்னத அநுபவத்தை, நான்பெற்ற பேறு பெறுகவிவ் வையகம்,

எல்லாருமின்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே

என்பனவகட் கிணங்க, தாம் அநுபவித்ததுபோல் ஏனைய சகோதர சகோதரிகளும் அநுபவிப்பதற்காக, தமக்குத் தெரிந்ததை மறைக்காமல் விளங்கச் செய்யவேண்டியது கற்றுணர்ந்தோர் கடமை. அவ்வாறு செய்ய முயலும் போது, பலர் அபிப்பிராயம் பலவிதமா யிருப்பதால், அபிப் பிராயபேதம் உண்டாவது இயல்பாயிருக்கிறது. மௌனம் கலக நாசம் என்பதுபோல், தான் தெரிந்த ஒன்றை, தன் னோடாவது, அல்லது தன் மனதிற் கிசைந்தவர்களோடாவது ஒடுக்கிக்கொண்டு மவுனமாகப் போய்விடுவது ஒருவாறு சிறந்த தெனினும், கற்றுணர்ந்தவர்களிற் சிலர் அவ்வாறிருந்துவிட அவர்களால் முடிகிறதில்லை. அந்த முறையில் நூலெழுதி வெளியிட்டாலோ! சிலர் அருத்தமின்னதென நன்குணரா முன்னர் அனர்த்தம் செய்து விடுகின்றனர்.

காணுத லொழிக நல்லார்க் காணினங் கவர்பா னட்புப்
பேணுத லொழிக பேணிற் பிரிவுற லொழிக வுற்றான்
மாணுயி ருடம்பின் வாழும் வாழ்க்கையோ வொழிக

என்றனர் சிவப்பிரகாச வள்ளல். இதில், காணுதலொழிக நல்லார் என்று கூறியிருப்பதால், நல்லார்களைத் தெரிசிக்கக் கூடாதென்று பொருள்தோன்ற வாசிக்கின், அது வாசிப் போருடைய குற்றமா? நூலாசிரியருடைய குற்றமா? அது போல், இந்நூலில் சில விடங்களில் வீராவேசத்துடன் பிர யோகிக்கப்பெற்ற பதங்களை, அறிவுள்ளவர்கள் ஆனந்தம்! ஆனந்தம்!! என்று சிரமேற் கொள்வதுடன், இம் மகா வாக்

யங்களை "பட்டாலே புனைந்தாலும் மூவுலகும் பரிமளிக்கும், தொட்டாலுங் கைமணக்கும் சொன்னலும் வாய்மணக்கும்" என்று பரவசமடைவார்கள். சாமானியர்களோ அறியாமையால் விபரீதங்கொண்டு, வாய்க்கு வந்தபடி பிதற்றுவது சகசம். ஆனல், அவர்களுக்கும் பொருத்தமும், விளக்கமுமானவைகளை மட்டும் சிந்தித்தல் வேண்டுமேயன்றி, பொருத்தமற்றதென்றும், விளங்காததென்றும் தோன்றுவதை விட்டு வைத்தல் வேண்டும். ஏன்? அது, காலமறை - தேயமறை - கல்மறை யென்றபடி மற்ருரு காலத்தில் விளங்கும். துள்ளுகுட்டித்தனமாய் துவேசிப்பவர்கள், ஒரு காலத்தில் தமது அப்பியாசத்தில் விளக்கமாகும் பலன்களை யிழந்து விடுவார்கள் என்பதனலேயாம்.

தினமு மண்ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே
தீம்பண்ட மெதிர்காட்டிக்
கனம ருந்துக னொளித்துவைத் தழைக்கின்ற
கருணையாந் தாய்போலே

நூலாசிரியர்கள் காலத்திற்கேற்ப மறைவாகவோ! வெளிப்படையாகவோ! இதமாகவோ! கண்டனமாகவோ! (ஒரு மதத்தையும் நிந்திக்காமல்) நூலெழுதுவார்கள். அது அவர்கள் அபிப்பிராயம். அந்த முறையில் இந்நூல் எழுதப்பெற்றதாகையால், அஞ்ஞானிகளும், ஆன்ம ஞானமடைந்த மெய்ஞ்ஞானிகளும் இந்நூலை வாசிக்கவேண்டிய அவசியமில்லை. வாசிக்க நேர்ந்தால், காய்தல்-உவத்தல் அகற்றி வாசித்தல் வேண்டும்.

இக்காலமானது அந்தப்புர ரகசியம், 'தலையணை மந்திரம்', 'பக்காத் திருடன் கதை', 'முக்கால் திருடன் கதை' என்பது போன்ற பல கட்டுக்கதைகளோ! கால் ரூபாய் கூடப் பெருதது இரண்டு ரூபாய்க்குமேல் விலையாகி,

சமார் ஆறுமாத காலத்திற்குள் எட்டாம் பதிப்பு, பத்தாம் பதிப்பு வெளியாகுந் தன்மைத்தா யிருப்பதால், (சுத்த தங்கத்தில் சிறிது செம்பு சேர்க்க வேண்டிய நியாயம்போலும், பழுக்காத வாழைக்காயைப் புகைமூட்டம் போட்டுப் பழுக்க வைப்பதுபோலும்) சில அத்தியாயங்களில் சில சரித்திரங்களைச் சேர்த்திருக்கின்றனம்.

இந்தக் காலமானது மெய்யடியார்களை நிந்தித்தலும், மேற்குலமென்று எண்ணப்பட்டவர்கள் கீழ்க்குலக் கிரியைகளை அனுட்டித்தலும், சா யு ச் சி ய பதவிக்குப் பற்றுக்கோடான சங்கீதத்தை, தையலர்கள் சரும விளையாடலுக்காக உபயோகித்தலுமான கலிகாலமா யிருப்பதால், இந்நூலில் சந்தர்ப்பம்போல் சில கண்டனங்களை வீராவேசமாக எழுதியுள்ளனம். சகல துன்பங்களுக்கும் மாதர்களே காரண பூதமாயிருப்பதாலும், அதிலும் பலரிடத்தும் சம்போகம் செய்யும் விலைமாதர்களினாலேயே மேகம்-வெட்டை-சூலை குட்டம் முதலான எண்ணிறந்த கொடிய வியாதிகள் ஏற்படுவதாலும், யோகத்திற்கு நேர்விரோதம் போகமானதாலும், எதனாலுங் கெடாத யோகமானது போகம் ஒன்றினாலேயே அ டி யோ டு கெட்டுப்போவதாலுமே தேவதாசிகளைப்பற்றி அ வ் வ ள வு கண்டனமாகக்கூற நேர்ந்ததன்றி வேறெவ்வித துவேசமுமன்று. இதுபற்றியே இராகவனுக்கு வசிட்டமகரிஷி பின் வருமாறு கூறியுள்ளனர்.

## ஞானவாசிட்டம்.

வைபந்தொடியா ராசைநோய் கெம்பீர மனிதரையும்
பதுமர் தன்னை
முந்திரவிக் கதிர்போலு மிளிர்விக்குங் கனவிடியின்
மின்னர் வாளும்

வெந்தவிருப் புப்பொறிய மெனக்கொடிய மனவேட்கை
மேரு வொத்தோர்
சுந்தரஞா னியர்நீரர் குரைமெயல் லாமிமைப்பிற்
றுரும்பு செய்யும். (83)

மேருவின் குவட்டின் வீழும் விரிதிரைக் கங்கை நீர்போ
லாரமூற் றிலங்கு கின்ற வணியிழை மடவார் கொங்கை
யூரயன் மயானந் தன்னி லுற்றபோ தருண்டைச் சோற்றி
னேருறு கவளம் போல நிறைநிறை நாய்க டுய்க்கும். (94)

மாமடஞ் செறிந்த நெஞ்சின் மனிதராம் புட்பி டிக்கக்
காமனும் வேடன் வீசும் வலையொப்பார் கருங்கண் மாதர்
தீமனச் சேரூர் சன்மச் சிறுகுழி மீனு மாந்தர்க்
கேமவா தனைக்க யிற்றுத் தூண்டிலுக் கிரையு மொப்பார். (96)

சீவன் முத்தர்களியல், சங்கீதம், ஞானத்தம்பட்டம் முதலான அத்தியாயங்களில் சில சரித்திரங்களும், சில மேற்கோட் செய்யுட்களும் மிகையென்று சிலருக்குத் தோன்றினாலும், சில சந்தர்ப்பங்களில் அவை பொருத்தமாகவே தோன்றும். ஆயினும் சில கண்டனங்களையும், சில கதைகளையும் இப்பதிப்போடு நிறுத்திவிட்டு, மறுபதிப்பில் அதற்கு பதிலாக வேறு சில அப்பியாசங்களைச்சேர்த்து வெளியிடலாமெனவுங் கருதுகின்றனம் என்று முதற்பதிப்பிற் கூறியது போல் இப்பதிப்பில் அங்ஙனமே அமைத்துள்ளோம்.

பெரும்பாலும் மனிதர்கள் விரும்புவது இன்பம், வெறுப்பது துன்பம். இவற்றையே ஏனைய பிராணிகளும் பின்பற்றுகின்றன. இவ்வளவோடு நின்றுவிட்டவர்கள் சாதாரண மனிதர்கள். ஆனால் மனிதர்கட்குள் உயரிய நிலையை அடைந்தவர்களது கொள்கையோ! "நியாய வழியில் நடக்கவேண்டும். அதனால் வரும் இன்பமோ துன்பமோ

இரண்டையும் பொறுமையாக ஏற்றுக்கொள்ள வேண்டும்” என்பதுதான். இத்தகையோர்கள் ஒற்றுமைதான் நீடித்து நிற்கும்; அதனுலேயே நன்மையும் பயக்கும். நியாயவழி யென்பதென்னவென்ருல், அதற்கு பதில் எப்பொழுதும் எழுதியோ! சொல்லியோ! முடிந்தபாடில்லை. ஏன்? யார் எவ்வளவு எழுதி வைத்தாலும் விட்டுப்போன விஷயம் நேரிடாமலிராது. ஆகையால், அந்தந்த இடம் நோக்கி வாசிப்போருணரவேண்டியது இன்றியமையாததாயிருக்கிறது. அந்த உணர்ச்சியோ பலவன்று—ஒன்றுதான். அதையே வேதாந்த நூற்கள் மிக்க வெளிப்படையாகப் போதிக்கின்றனவென்பது விழுமியோர் கருத்து.

இந்நூலில் அக்கருத்துகளை எமக்குத்தோன்றின முறையில் தொகுத்து வெளியிட்டோமேயன்றி, பெரியோர்கட்கு விளங்காத கருத்தைப் புதிதாக நாம் எழுதியதொன்றுமில்லை. ஆயினும், நூலெழுதி வெளியிடவேண்டியது எமது கடமைகளில் ஒன்ருயிருந்தது-இருக்கிறது. இந்த நூலும், இதன் முன்-பின் நூற்களும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவா யிருத்தலால், ஒரு பாகத்தில் விட்டுப்போனதாகத் தோற்றும் பொருள் மற்ருெரு பாகத்திலும், ஒரு அத்தியாயத்தில் விட்டுப்போனதாகத் தோற்றும் பொருள் மற்ருெரு அத்தியாயத்திலும் கூறப் பெற்றிருக்கும். வெளிப்படையாகத் தோற்ருத பொருள் ஆழ்ந்து கவனித்தால் விளங்கும். அதிலும் விளங்காததை ஏனைய நூற்களாலும், பெரியோர்களாலும் உணரவேண்டியது வாசிப்போர் கடமைகளில் ஒன்ருயிருக்கின்றது.

ஆகையால், அன்பர்கள் இந்நூலை வாங்கி வாசித்து, மனிதராகப் பிறந்ததின் பயனுகிய ஆன்மலாபப் பேரின்பப் பெருவாழ்வில் திளைத்துய்யுமாறு எல்லாம் வல்ல ஏகப்பொருளைச் சிந்தித்து வந்திக்கின்றனம்.

திருவாரூர், இங்ஙனம்,
9—2—1930. ஆசிரியர்.

கருணாநிதி  கருணை முன்னிற்க

கருணையானந்த ஞானபூபதிகளியற்றிய

# ஞானக்களஞ்சியம்

## முதலாவது அத்தியாயம்



## சாதன சதுட்டயம்



### விருத்தம்

பூதன மடந்தையர் புதல்வ ரியாவையுந்
தீதென வுபாதி தெளிவு பெற்றனன்
மாதவம் விரும்பினோர் மாபிற் செய்திடுஞ்
சாதன சதுட்டயந் தனை விளக்குவாம்.

### ஞானச் செல்வம்

அரும்பெருஞ் செல்வமாகிய சாதன சதுட்டயமென்பது, முத்தியடையவேண்டும் என்னும் நிச்சய விவேக விசாரமுடையவர்கள் கிரமப்படி நடந்துகொள்ள வேண்டிய நான்கு வகைத்தான சாதனங்கள். அவை நித்தியா நித்திய வத்து விவேகம், இகபரபோக விராகம், சமாதி சட்க சம்பத்து, முமூட்சுத்துவம் என்பவைகள். இந்தச்சாதன

சதுட்டயத்தின் வழியில் நில்லாதவர்களுக்கு ஒரு பொழுதும் ஞானம் பிரகாசிக்காது. ஆனால் சிறிய மரம், செடி, தென்னம்பிள்ளை முதலிய விருட்சங்களை ஆடு மாடுகள் தின்று விடாதபடி அவைகளுக்கு வேலிகட்டுவதேயன்றி, முதிர்ந்த மரங்களுக்கு வேலிகட்டும் வழக்கமில்லாததுபோல், இந்தச் சாதன சதுட்டயமானது, அப்பியாசிகளாகிய சாதகர்களுக்குச் சொன்ன இன்றியமையாத அரும்பெருஞ் செல்வமேயன்றி, மனன சமாதியுடைய முமூட்சுகளுக்குச் சொன்ன காரியமன்று.

## (1) நித்தியா நித்திய வத்து விவேகம்

நித்திய வஸ்து இன்னது! அநித்திய வஸ்து இன்னது! என்று நிச்சயமாய்த் தெரிந்துகொள்ளுதல். அதாவது பரப்பிரம்ம சொரூபமாகிய ஆன்மாவானது எப்போதும் அழியாமலிருப்பதால் அதுவொன்றே நித்தியம். அதுவல்லாததும், காணப்படுவதுமாகிய ஏனைய பொருட்களெல்லாம் அழிந்துபோகுமாதலால், அவையாவும் அநித்தியமென்று நிச்சயமாய் அறிந்து உறுதிகொள்ளுகிற புத்திகோசரம். இந்த நிச்சயம் வருவதென்றால் மகா அருமை. ஏனெனில், காணப்படுகிற பொருள்களையே நிச்சயமென்று எண்ணிக் கொண்டிருந்த மனத்தை, அவை யல்லாததும், காணப்படாததுமான வோர் பொருளை நிச்சயமென்று எண்ணச்சொன்னால், அந்த மனம் திரும்புவது சாமானியமல்ல. வேறு எப்படித்தான் திரும்புமெனில், பிரபல வேதாந்த சாத்திரங்களின் ஆராய்ச்சியினாலும், பிரம்ம நிட்டாபரர்களாகிய சத்துக்களினது சங்கப் பழக்கத்தினாலும், தன் மனதுக்கு நம்பிக்கையுடைய சற்குரு மூர்த்தியினது உறுதியான வாக்கியாமிர்தத்தினாலும், வெகு நாளைக்குப்பின் அந்த நிச்சயம் வரும்.

சத்திய வஸ்து இன்னது அசத்திய வஸ்து இன்னதென்று பிரித்தறியக்கூடிய விவேகம் ஒருவருக்கு வந்துவிட்டால், ஏனைய மூன்று சம்பத்துகளும் ஒருங்கே வந்துசேரும். அதனால் "தத் துவம் அசி" யென்னும் மகா வாக்கியத்தின் படி சற்குரு மூர்த்தியின் கிருபாநோக்கத்தால் "அது-நீ-ஆகி யிருக்கிறாய்" என்னும் பிரம்ம நிட்டையுங் கைகூடும்.

ஒல்லதீன ஜாஹது பீனா லனுஹ்தியன்னஹும் சுபுலனா வஇன்னல் லாஹ லமஅல் முஹ்ஸினீன். (குர் ஆன்-3-21)

இதன் கருத்து:— நாம் கூறிய வழியில் தெண்டித்து சாதனை புரிந்தவர்கட்கே நம்மிடம்வரும் நேர்வழியைக் காண் பிப்போம். அருந்தவம் புரிந்தவர்களுடனேதான் நானிருப் பேன் என்பதாம்.

## 2. இகபர போக விராகம்.

இகம் என்பது இம்மையாகிய இவ்வுலகத்திலும், பரம் என்பது மறுமையாகிய சுவர்க்கலோகத்திலும், போகம் என் பது அனுபவிக்கும் போகபோக்கியம். விராகம் என்பது அந்த அனுபோகங்களில் ஆசையற்றிருத்தலாகிய வெறுப்பு.

ஈடணாத்திரயங்களாகிய தீனியாசை, யோனியாசை, திரவிய ஆசை என்னும் மூவாசைக்குளடங்கிய பெண்டு - பிள்ளை - தந்தை - தாய் - பந்து - மித்திரர் - ஆடு - மாடு - வீடு - வாசல் முதலான வாழ்க்கைகளிலும், புண்ணியவசத்தால் கிடைக்குமென்று சிலர் மனப்பால் பருகிக்கொண்டிருக்கிற சுவர்க்கலோகத்தின் அம்சதூளிகா மஞ்சத்தில், அப்சர தேவம்களிர்களாகிய ஊர்வசி, அரம்பை, மேனகை, திலோத் தமை முதலான யுவதிப்பருவ மடந்தையர்களிடத்தில் சரச சல்லாப வல்லாசமாக வெகுகோடி காலம் நிர்ச்சலனமாய் வாழலாம் என்கிற ஆசைப் பசாசிடத்திலும் நம்பிக்கை

வையாமல், சகல வாழ்க்கையிலும் எட்டிக்கனிபோல் கசப்புத் தோன்றும்படி வெறுப்புண்டாகுதலே விராகம்.

ஒகானூ பீஹி மினஸ் ஸாஹிதீன். (குர் ஆன் 12-12)

(இதன் கருத்து) அவர்கள் சாதனையால் (அல்லாவை யன்றி ஏனையவைகளை) வெறுத்துவிட்டார்கள்.

மேற்கூறிய விராகம் ஏற்படாமல் விருப்புண்டாவதை முறையே சிறுதீட்டு, பெருந்தீட்டு என்று கூறியுள்ளார்கள்.

பிரபஞ்சத்தையும் - அதன் தவாபு (போகம்) களையும், சுவர்க்கத்தையும் - அதன் நிஃமத்து(சுகம்)களையும் நினைப்பதனால் முழுக்கு (அசுத்தம்) உண்டாகிறது.

அபா யசீதுல் பிஸ்தாமி (றலி) அவர்கள் கூறியிருப்பதாவது:—

நான் துனியாவின் (பிரபஞ்சத்தின்) ஞாபகத்தை கல்பால் (இருதயத்தால்) நினைத்தால், உடனே ஒலு என்னும் அங்கசுத்தி செய்து கொள்ளுவேன். சுவர்க்கத்தையும் அதன் நிஃமத்துகளையும் நாடினேனானால் உடனே குளித்துவிடுவேன் என்பதாம். கேவலமான துனியாவை நினைத்தால் ஒலுச் செய்வதும், உயர்வான சுவர்க்கத்தை நினைத்தால் தலை முழுகுவதும் என்ன காரணம் என்று கேட்டதற்கு, சிறிய போகத்தையுடைய துனியாவின் சிறிய ஆசையை நினைத்தால் சிறு துடக்கென்றும், அதனாலேயே சிறு சுத்தியாகிய ஒலுச் செய்து கொண்டேனென்றும், பெரிய போகத்தையுடைய சுவர்க்கத்தின் பெரிய ஆசையை நினைத்தால் அது பெருந் துடக்கென்றும், அதற்காகவே பெருஞ் சுத்தியாகிய தலைமுழுகினேனென்றும் கூறினார்களாம். இதனால் நமக்கு விளங்குவது என்னவென்றால், அல்லாகுத்தாலாவுடைய விக்காவைத்

தெரிசிக்க அவாவுடைய ஆஷிக்கின்கள், சுவர்க்காதி போகங்களாகிய நிஃமத்துகளை அகற்ற வேண்டும் என்பதாம். அதாவது அல்லாவுடைய ஞாபகத்தைத் தவிர இதர வஸ்துக்களின் ஞாபகமானது முழுக்கென்று சொல்லப்படும். இதனாலேதான்,

முழுக்கு விதிக்கு முன்னே
முழுக்கறுக்க வேண்டுங் கண்டாய்

என்று பெரியோர்கள் கூறியுள்ளார்கள்.

இவ்வுலகத்தின் ஈடணாத்திரயமென்பது மண் - பெண் - பொன் என்று முன்னோர்கள் கூறியுள்ளார்கள். ஆனால் மண்ணும் - பொன்னும் ஒரே ஆசையில் அடங்குகிறது. எப்படியெனில், மண் என்னும் பூமியை விலை சாசமாக, அதாவது ஆயிரம் ரூபாய் பெறுவதை ஐந்நூறு ரூபாய் என்று விலை கூறினால், உடனே தன் பெண்சாதி பிள்ளை காதில் கழுத்தில் போட்டிருக்கும் ஆபரணங்களைக் கழற்றி அடகுவைத்தாவது பணம் சேகரித்து விலைக்கு வாங்கி விடுகிறார்கள். ஆதலால் மண்ணானது பொன்னுக்குள் அடங்கிவிட்டது பற்றி, மண்ணாசை என்னும் ஒரு தனிப்பெயர் இதன் மூலம் நிராகரிக்கப் பெற்றுவிட்டது. அதனாலேயே நாம் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை யென்று முறையாகக் கூறாமல், தீனியாசை, யோனியாசை, திரவிய ஆசை யென்று முறையேற்படுத்திக் கொண்டனம். ஏன்! எனில், ஒரு மனிதனுக்கு அன்னவிசாரம்! அதுவேவிசாரம்!! என்னும் ஓயா விசாரமாகிய தீனியாசை (பசி)யே முதலில் ஏற்படுகிறது. அந்தப் பசியைத் தடுப்பது எவர்க்கும் அருமை. "என் சிந்தை கெட்டு சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே" என்றனர் பட்டினத்தடிகள். "ஒருநாளுணவை ஒழியென்

றால் ஒழியாய்" என்றனர் ஔவைப்பிராட்டி. இப்படி மூற் றத்துறந்த மகான்களை யெல்லாம் பசிப்பிணியானது படாத பாடு படுத்தி விட்டதென்றால், கேவலம் மற்றவர்களைப்பற்றிக் கேட்பானேன். அத்தகைய கொடுந்துன்பமாகிய பசியைப் போக்கிக்கொள்ள ஆரம்பத்தில் பிரயாசைப்படுகிறான். ஆகா ரம் புசித்து தேகத்திற்கு சிறிது தென்பு வந்துவிட்டால் நாம்புகள் முறுக்கேறிவிடுகிறது. அவனைச் சும்மாவிருக்க விடுகிறதில்லை. எந்தப் பெண் அகப்படுவாள் என்று சிந்திக் கிறான். அப்படி அகப்படுவதாகச் செய்தி எட்டினாலோ! அவ ளுக்குக் கொடுக்கவேண்டிய பொருளுக்காக எப்படிச் சம் பாதிப்பது? கூலிவேலை செய்வோமா? அது கேவலமாச்சே! வியாபாரம் செய்வோமா? வியாபாரம் செய்து சம்பாதிப்ப தென்றால் வெகுகாலம் செல்லுமே! எங்காவது நுழைந்து திருடுவோமா? என்று சிந்திக்கிறான். ஆதலால் மூலகாரணம் தீனியாசை. ஆனதுபற்றி தீனியாசையை ஆரம்பமாக எடுத் துக் கூறியது மிகையாகாது.

## 3. சமாதி சட்க சம்பத்து

சமாதி சட்க சம்பத்து என்பது; சமம் - ஆதி - சட்கம் - சம்பத்து என்னும் நான்கு சொற்கள். இவை இலக்கண விதிப்படி சமாதி சட்க சம்பத்து என்று புணர்ந்தது. இது சமம் முதலான ஆறு தொகுதியென்று பொருள் கொள்ளும். அவை, சமம், தமம், உபரதி, திதிட்சை, சமாதானம், சிரத்தை என ஆறுபிரிவினைகளை யுடையது.

சமம்:—(அகக்கரண தண்டம்) அதாவது இச்சை செல்லுமிடமெல்லாம் அகமாயுள்ள கரணங்களிலொன்றாகிய மனதை ஓர் முன்னிலையாக நோக்கி மூடத்தன்மை யுடைய,

ஏ மனமே! நீ வீணாகத் தோன்றி விரிந்து ஊர் வம்புச் சமாச்சாரங்களையும், இனிய சிற்றின்ப கான முதலானவைகளையுங்கேட்டு, முறையே கோளும், மயக்கமும் தருகின்ற செவியின் தொழிலைப்பொருந்தி, சத்தவிடயத்தைத் தேடாநின்ற புத்தியினால் கானமுண்டாக்கப் பெற்ற விடத்தை நாடிப்போய் மரணமடையும் அசுணப் பறவையைப்போல் மயங்கி மாயாதே.

ஏ மனமே! பரிச இன்பத்தைதரும் தோலாகிய சரீரமென்னும் துவக்கின் தொழிலைப் பொருந்தி, மூடத்தன்மையினால், பெண் யானைமேல் மோகமுற்ற ஆண் யானைவிழுந்து மாழ்வதுபோல், மாதர்களது மோகாந்தகாரமான காமப் படுகுழியில் விழுந்து மாளாதே.

குணங்குடி மஸ்தான்.

கொட்டிய கருந்தே னிகர்த்தவிழி மின்னார்
குவித்தவிரு பொற்கொங்கையுங்
கோசமொடு மும்மத மிரைக்கின்ற கர்விதக்
குஞ்சரக் கொம்புதானோ?
கொஞ்சுகிளி மொழியார்க ளவுநல் லரவினது
கொடியநஞ் சுப்பையதோ?
கூரிருட் கூந்தலென் சொல்லுகேன் கோடையிடி
குடிகொண்ட கருமேகமோ?
கோதையிள மின்னார்கள் யோனிப் பெருங்கேணி
குறையாத யானைமடுவோ?
கூறுமுகி லேழும் படர்ந்துவரு டிக்கினும்
குறையறுக் கெடுபள்ளமோ?
கொத்துக் கடங்காத மதகரி தனக்குமது
கொப்பமோ? படுபள்ளமோ?

குருவைத் தொழாமனுக் குய்பைக ளொதுங்குமோர்
குப்பைக் கிடங்குதானோ?
கொலைசெயெம னாிருக் கின்றபடு களமோ?
கொடுஞ்சிங்க மிடிபொதும்போ?
குமுகுமென வதிரசத் தேனொழுகு கனியெனக்
கொண்டுநெஞ் சினைவாட்டுதே
கோளடப் பொன்னிளத் தாசைதரு கின்றதே
கோதையர்கள் காதலாலே
கூளம தரிப்பதே யல்லா திருந்துநான்
குளிர்காய நேரமிலையே
கூர்குணம் சத்துநிற் கின்றபர வெளியலாங்
குடிகொண் டிருந்த குருவே
கொடியநெடு மாயையைக் கூடா திருக்கின்ற
குறியருள்வ தென்றுபுகலாய்?
கோடானு கோடிமறை யாலுமறி யாக்குணங்
குடிகொண்ட கருணைவடிவே
கூலாயி லாகஇல் லல்லாகு வென்பதற்
குரியமகு மூதுநபியே.

ஏ மனமே! நீ பிரகாசம் பொருந்திய உருவத்திரள்களை நோக்குகின்ற கண்ணினுடைய தொழிலைப் பொருந்தி, வெப்பம் தங்கிய தீபத்தை நெருப்பென்றறியாமல் அதிற் போய் விழுந்து மரணமடைகின்ற விட்டிற் பூச்சியைப்போல் வெந்து போகாதே.

ஏ மனமே! நீ பதார்த்தங்களைச் சப்பிச்சப்பி உருசிபார்க்கின்ற நாவினுடைய தொழிலைப் பொருந்தி இரசவிடய வாசனையினால், இரையை மாட்டித் தண்ணீரில்விடப்பெற்ற தூண்டிக்காக வருகின்ற மீன் சிக்கிக் கொள்வதுபோல் சிக்கி நாசமுறாதே.

ஏ மனமே! நீ பசிய தேனின் வாசனையை யுணர்ந்து அதை ஆசித்து, தாமரைப் புட்பத்தில் கட்டுப்படுகின்ற வண்டினது தொழிலைப் பொருந்தி, இருதயத்துள் சுவாச மார்க்கத்தில் சென்று பரிமளத்தை விரும்புதலினால் கட்டுப்படாதே. மேற்கூறப் பெற்ற அசுணப்பறவையும், ஆனையானையும், விட்டிலாகிய பதங்கப் பட்சியும், மச்சமும், வண்டும், சத்த, பரிச, ரூப, ரச, கந்தம் என்று நேர் நிறையாகக் கூறப்பெற்ற ஒன்றினால் ஒன்று மரணம் அடையும். இப்பஞ்ச விடயமும் ஒன்றாகச் சேர்ந்து வருத்துபவர்கட்கு, அக மகிழ்ச்சியாகிய இன்பம் எங்கிருந்து உண்டாகும்? நீ நன்மார்க்கத்திற் செல்லாதபடி கட்டிப் பிடித்துத் தடுப்பதற்கு இந்த விடய வாசனையானது ஒரு வலையாகும். அந்த விடய வாசனையை நீக்குவாயாகில் மேலான வெற்றி பெறுவாய்! என்று மனதுக்கு நற்புத்தி போதித்துக் காத்தல்.

திருவருட்பா

மனமே முன்னர் வழிகாட்டப் பின்னே சென்று மங்கையர்தந்
தனமே யென்னு மலையேறிப் பார்த்தே யிருண்ட சலதி யொன்று
முனமே தோன்ற மதிமயங்கி விழுந்தே னெழுவான் முயலுகின்றே
னினமே யென்னை நீயன்றி யெடுப்பா ரில்லை யென்னரசே.

மனமான வொருசிறுவன் மதியான குருவையு
மதித்திடா னின்னடிச்சீர்
மகிழ்கல்வி கற்றிடான் சும்மாவி ரான்காம
மடுவினிடை வீழ்ந்து சுழல்வான்
சினமான வெஞ்சுரத் துழலுவ னுலோபமாஞ்
சிறுகுகையி னூடுபுகுவான்
செறுமோக விருளிடைச் செல்குவான் மதமெனுஞ்
செய்குன்றி லேறிவிழுவான்

இனமான மாச்சர்ய வெங்குழியி லுள்ளே
யிறங்குவான் சிறிதுமந்தோ
என்சொல்கே ளானெனது கைப்படான் மற்றிதற்
கேழையே னென்செய்குவேன்
தனநீடு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே.

தமம்:—(புறக்கரணதண்டம்) அதாவது துவக்கு, சிங்குவை, சட்சு, கிராணம், சுரோத்திரம் என்பவைக்கு, முறையே, மெய், வாய், கண், மூக்கு, செவி யென்று சொல்லப்பெற்ற ஐம்பொறிகளாகிய ஞானேந்திரியங்களை நோக்கி, மெய் என்னும் சரீரமே! நீ சிற்றின்பமாகிய சர்வ பரிசானந்தங்களையும் விரும்பாதே: நாவே! நீ அறுசுவைகளில் அதிக இச்சை கொள்ளாதே: கண்ணே! நீ பஞ்சேந்திரியங்களில் முதன்மை பெற்று, ஏனைய நான்கு இந்திரியங்களுக்கும் வேலை கொடுக்கும் விஷப்பார்வை யுடையதா யிருப்பதால், நீ கெட்ட காரியங்களைப் பாராதே: மூக்கே! நீ பலவிதமான வாசனைத் திரவியங்களை ஆக்கிராணிக்காதே: காதே! நீ வீண் சம்பாஷணைகளையும் சிற்சுகானந்த பரவசமில்லாத வீண் செய்கைகளிற் சேர்ந்துவரும் கானங்களையும் விரும்பாதே என்று தண்டனை செய்தலும்,

வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்பவை கட்கு முறையே, வசனம், கமனம் தானம், விசர்க்கம், ஆனந்தம் என்னும் வாக்கு, கால், கை, முன்குறி, பின்குறி எனப்பெற்ற ஐம்புலன்களாகிய கன்மேந்திரியங்களை நோக்கி, வாக்கே! நீ கெட்ட வார்த்தைகளையும், அதிக

சம்பாஷணைகளையும் உபயோகிக்காதே; காலே! நீ கெட்ட விஷயங்களுக்கு நடந்து போகாதே; கையே! நீ மனச் சாட்சிக்கு விரோதமான விஷயங்களைத் தொடாதே! முன் குறி, பின்குறிகளே! நீங்கள் விரும்புகிற ஆனந்தங்களி லிருந்து விலகியிருங்கள்; அங்ஙனம் நான் கட்டளையிடுகிற ஆக்ஞையை மீறி நடந்தால் உங்களுக்கு மாறாத் துன்பமுண் டாகத்தகுந்த தண்டனை விதிக்கப்படும் என்று தசேந்திரியங் களையும் கடினமாகத் தண்டித்தலுமாம்.

### சிவஞான சித்தியார்.

நற்செவி துவக்கு கண்வாய் நாசியைந் தினையும் நல்லோர்
புத்தியிந் திரிய மென்று புகன்றன ரிவை தனக்கு
சத்தநற் பரிச ரூப இரதகந் தங்க ளைந்தும்
வைத்தனர் விடய மாக வடைவினின் மருவு நன்றே. 91

வாக்கொடு பாதம் பாணி பாயுவோ டுபத்த மைந்து
நீக்கினர் முன்னே கன்மேந் திரியங்க ளென நினைந்தே
ஆக்கிய வசன கமன தானவி சர்க்கா னந்த
மூக்கமா மைந்து மைந்தின் றொழிலென் வோதி னரே. 62

உபரதி:—(ஆசையைவிட்டு நீங்குதல்) அதாவது, தன் னுடைய குடும்ப விவகாரங்களை சுருங்கச் செய்தல். எவ்வா றெனில், இரவும் பகலும் பற்பல வீண் யோசனைகளையே சிந்தித்து (*) ஆண்டிகள் கூடி மடங்கட்டுவதற்குப் பேசி

(*) ஆண்டிகள் கூடி மடங்கட்டுவதானது:—ஆண்டிகள் பல திசைகளிலுமிருந்து வந்து, பகற்காலத்தில் வெய்யிலுக்கும், இராக் காலத்தில் சயனிப்பதற்கும் மடத்தில் வந்து தங்குவார்கள். தங்கி யிருக்கிற வரையில், இந்த மடத்தை அப்படிக் கட்டிமுடிக்க வேண்

முடிப்பதுபோல், சாப்பிடக்கூட நேரமில்லாதபடி அலையா மலும், வெளியிலிருந்து வீட்டுக்கு வந்தோம், தனக்கு உசித மாகத் தெரிந்தபடி கடவுளை வணங்கினேம், சாப்பிட்டோம், இரவில் மறுபடியும் கடவுளைச் சிந்தித்துக் கொண்டு சயனித் தோம் என்று நடந்துகொள்ளவேண்டுமேயன்றி, ஆடு வந் ததா? மாடு வந்ததா? பொம்மன் வந்தானா? திம்மன் வந் தானா? என்று அட்டகாசஞ்செய்து புலம்பாமலும் நிராசை யோடிருத்தல்.

திதிட்சை:—இது சகித்தலென்னும் பொறுமை. அதா வது வாழ்வு வந்தாலும் மகிழ்ந்து துள்ளாமல், தாழ்வு வந்தா லும் சலித்துக்கொள்ளாமல், சர்வ சுகதுக்கங்களும் கடவுள் கட்டளையின்படி வருவனவேயன்றி தானாக வரமாட்டாது

டும்! இப்படிக் கட்டிமுடிக்க வேண்டுமென்று வாய்க்குப் பிடித்த கேடாகப் பேசிவிட்டு, பொழுது விடிந்தவுடன் ஒருவர் போன திசை ஒருவர்க்கு தெரியாமல் பிச்சை யெடுக்கப் போய்விடுவார்கள். மறுநாள் இரவிலும் வந்து கூடி முன்போலவே பேசுவார்கள். இப் படி பலநாளும் பிதற்றுவதேயன்றி, மடத்தை யொருபோதும் கட்டி முடிப்பதில்லை. அதுபோலவே பிரபஞ்சத்தவர்கள், இத்தனை நாளைக் கிருப்போம்! இன்னார் முந்திச் சாவார்! என்கிற நிச்சயம் தெரியா மல், அறுக்கப்போகிறவரையிலும் ஆடு அசைபோட்டுக்கொண்டிருப் பதுபோல், மரணம் சமீபித்திருக்கும்போதும் கடவுளை வணங்கா மல், அதை இப்படிச் செய்யவேண்டும்! இதை அப்படிச் செய்ய வேண்டும்! என்று வீணான கருமங்களையும், சம்பாஷணைகளையும் செய்து பிதற்றிக்கொண்டிருந்துவிட்டு, மறுநாள் வயிற்றுப் பிச்சைக் காக இரைதேடப் போய்விடுவார்கள்.

"ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல" (குறள்)

என்றெண்ணி, * சுகதுக்கங்களே! வாருங்கள்!! நீங்கள் உங்கள் சுயேச்சையாக வரவில்லை என்பது எனக்குத் தெரியும்; ஆதலால் என்னிடத்தில் நீங்கள் சுகமாய் வாழலாம்! என்ற அபிப்பிராயத்துடன் சமமாக எண்ணிப் பொறுமையோடு அநுபவித்தல்.

சமாதானம்:—இத் சற்குருமூர்த்தியிடத்திலும், ஏனைய நல்லோர்களிடத்திலும் மனமகிழ்ந்து உவந்துகேட்ட உபநிடதமாகிய வேதாந்த சிரவணார்த்தங்களை, சதாகாலமும் மனதானது அதையே இனிய தொழிலாகச் சிந்தித்துக்கொண்டிருக்கும்படி செய்தல்.

சிரத்தை:—இத் குருமூர்த்தியிடத்திலும், அவரது வாக்கியங்களிலும், வேதாந்த சாத்திரங்களிலும், அவற்றின் பதப்பிரயோகங்களிலும் அதிக நம்பிக்கையும், விசுவாசமும் வைத்திருத்தல்.

4 முமுட்சுத்துவம்.

முமுட்சுத்துவம் என்பது ஐக்கிய முத்தியை விரும்புகிற பேராசை. அதாவது; தத்-துவம்-அசி யென்னும் வாக்கியார்த்தப்படி, நான் எப்போது காண்பானும், காட்சியும், காட்சிப் பொருளுமாகிய (திருக்கு திரிசிய விவேக) ஞாதுரு ஞான ஞேயங்களற்று, "அது, நான்" என்கிற சுட்டிறந்த பரிபூரண சாட்சாத் காரத்தில் அபேதமற் சிவப்பிரம்மைக்கிய விதேக முத்திபெறுவேன்! என்று ஓயா விசாரத்தில் அழுந்தி நிற்றல்.

---

* சுகத்தை அழைப்பதற்கு ஒருவர் உபதேசிக்கவேண்டியதில்லை. துக்கத்தை அழைப்பவர்கள் யார்? என்பதுதான் ஆராயக்கிடக்கிறது. காணத்தைக் கண்டால் குதிரை வாயைப் பிளக்கும்; கடிவாளத்தைக் கண்டால் வாயைப் பிளந்து கொடுக்குமா?

ஒல்லதீன-ஆமனூ-அஷத்து
ஹுப்பல்-லில்லாஹ்.  (குர்ஆன்-2-4)

(க-து) ஈமான் கொண்டவர்கள் அல்லாவை யன்றி மற்றொன்றிலும் பற்றுவை யார்.

கைவல்லிய நவநீதம்.

சாதன மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை
ஆதலா லிந்த நான்கும் அடைந்தவர்க் கறிவுண் டாகும்
நூதன் விவேகி யுள்ள நுழையாது நுழையு மாகில்
பூதசன் மங்கள் கோடி புனிதனும் புருட னாமே.

சாதன சதுட்டயமாகிய மோனவித்தானது, சஞ்சலரகிதமாகிய சித்தசுத்தமுடைய மனமென்னும் பூமியில், நித்தியா நித்திய வஸ்து விவேகம் என்னும் பெயருடன் முளைக்கும். இகபரங்களில் உபாதி பெற்று விகசிதமாகும். சமாதி சட்க சம்பத்து என்னும் ஆறு கிளைகளுடன் செழித்தோங்கி வளர்ந்து, மோட்ச விருப்பமென்னும் ஞானமணி விளைந்த மாதுரியமான அழகிய கனிகளைக் கொடுக்கும்.

ஞான (சோபான)ப் படிக்கட்டு

மேற்கூறிய நான்கு சாதனங்களும் ஞானமென்னும் மணிமண்டபத்திற்கு ஏறிச்செல்லுமாறு சோபானங் (படிக்கட்டு) களைப்போல் ஒன்றுக்கொன்று சகாயமுடையவைகள். முதற்படியாகிய நித்தியா நித்திய வஸ்துவிவேகம் எய்தியபின் இகபரபோக விராகம் சித்திக்கும். அதன்பின் சமாதி சட்க சம்பத்து சித்திக்கும். அதன்பின் முமூட்சுத்துவம் எய்தும். இந்த சாதன சதுட்டய நெறிப்படி நடக்காதவர்கள்

ஞானமார்க்கத்துக்குத் தகுதி யுடையவர்களல்லர். இதை அப்பியாசிப்பவர்கள் ஒவ்வொரு நாளும் நாம் சாதனசதுட்டய விதிவிலக்குப்படி நடந்து வருகிறோமா? வென்று கவனித்துவரவேண்டும். அப்படி நடந்து கொண்டபின், சற்குரு மூர்த்தியை யடைந்து, அவர்களுக்கு நம்மீது கிருபையுண்டாகும்படி, மனம், வாக்கு, காயங்களால் தொண்டு செய்து, அவர் மனதுவந்து உபதேசித்தபின் நிட்டை சாதிக்க முயலவேண்டும். இந்த சாதன சதுட்டயத்தை ஆண், பெண் என்ற வித்தியாசமில்லாமல் யாவரும், எம்மதத்தினரும் அநுட்டிக்கலாம்.

### விஞ்ஞான சாரம்.

இந்த நான்கு சாதனமும் இல்லா தவர்கட் கொருக்காலும்
அந்த ஞானம் வெளியாகா தங்கி நயன மொடுதோன்றிப்
பந்த மறவே யுரைத்திடினும் பாழுக் கிறைத்த நீராக்கும்
முந்த நான்கு சாதனமும் முத்தி யடைவோர்க் குறவேண்டும்.

இந்நேர் நெறியிற் சாதனங்கள் இவைநான் கினும்வந் தெய்தியதேல்
தந்நேர் குரவன் றனையடைந்து சாற்றுஞ் சீடா சாரமுறை
அந்நேர் பிசகா தேவல்புரிந் தருள்தன் மீதிற் சுரப்பளவும்
பின்னே திரிந்தும் அவர்கொடுக்கப் பெறவே வேண்டும் விஞ்ஞானம்.

இதுவே நான்கு சாதனமும் இயல்பா யுடையோ ரெய்துநெறி
இதுவே யென்று மாறாத இருளின் திமிரைத் தானறுக்கும்
இதுவே ஞானா னந்தரசம் இரமிக்கச் செய்யும் விஞ்ஞானம் [யே.
இதுவே உனக்கும் உறுதியென இசைத்தா ளெனையா ளருளுமை

# முக்தி மண்டபம்




[படத்திற் காட்டிய இருவரும் படியிலேற முயற்சிக்கிறார்கள்.]

ஆண் பெண் இருபாலரும் அநுட்டித்து ஆன்மலாபம் அடையக்கூடிய ஞானப் படிக்கட்டு.

அப்பியாசிகள் ஒவ்வொரு படியாகத் தாண்டி முத்தி மண்டபத்துள் நுழையவேண்டும்.

## சாதன சதுட்டய சங்கிரகம்.

(1) நித்திய வஸ்துவாகிய ஆன்மாவானது நாசமின்றியது, எவ்விதக் கிரியையுமில்லாதது என்றும்; அநித்தியமாகிய பிரபஞ்சமானது நாசமுள்ளது, கிரியைகளையுடையது என்றும் அறிவதற்கு விவேகம் எனப் பெயர். பிரம்மரூப ஆன்மாவை நான் அறிந்தேன் என்பது ஞானம். நான் அறியேன் என்பது அஞ்ஞானம். இது தத்துவஞானப் பயிற்சியால் நிவர்த்தியாகும். இவ்விதமாக நிவர்த்தியான ஞான விவேகமே சகல சாதனங்களுக்கும் இன்றியமையாத ஆதாரம். ஏனெனில் விவேக முண்டாகாவிடின் ஏனைய சாதனங்கள் மூன்றும் சோபிக்கமாட்டா.

அன்னப் பட்சியானது பாலையும், அதிற் கலந்த நீரையும் பிரிக்கின்ற தன்மைபோல், ஆன்மாவையும், அநான்மாவையும் பிரித்தறிதலே விவேகம். இவ்விவேக மாத்திரத்தால் பிரபஞ்சம் மித்தையென்னும் (*) பரோட்சஞான முண்டாகுமேயன்றி அபரோட்சஞான முண்டாகாது. ஆதலால் மேற்கூறிய மூன்று சாதனங்களும் அவசியம் வேண்டும்.

(*)பரோட்சம் அப்ரோட்சம் என்பது, வேதாந்த நூற்களின் தாற்பரிய நிச்சய ரூபமாகிய சிரவணத்தைக் குருமுகத்தாற் கேட்டும், அதற்கனுசாரமாய் மனனமும்; மனனானுசாரமாய் நிதித்தியாசனமும் செய்தால், பிறகு சச்சிதானந்த பிரம்மமே நான் என்ற ஞானமுண்டாகும்; இதுவே பரோட்சஞானம். இந்தப் பரோட்ச ஞானங்களைப் பற்றிய காரியங்களைச் செய்யாதவனாகியும், நான் கருத்தா முதலாய அபிமானத்தை விட்டவனாகியும், பிரம்மமே நானாக இருக்கின்றேனென்ற அனுபவத்தையும் விட்டவனாகியும், அது விஷயமான பிரயத்தனத்தையும், சுழுத்தி அவத்தையிலிருப்பதுபோல பற்றற்ற சுபாவமாகிய மௌனவத்தையில், நீரில் உப்புக் கரைந்தா லெப்படியோ

வேதமோதுதற்கு வேதியனும், அரசுபுரிவதற்கு சத்திரியனும், வர்த்தகம் செய்வதற்கு வைசியனும், உழவு தொழில் முதலியன செய்வதற்கு சூத்திரனும் எங்ஙனம் அதிகாரியோ! அங்ஙனமே வேதாந்த விசாரத்துக்கு இந்த நான்கு சாதனங்களின் நெறியைப் பூண்டொழுகுபவனே அதிகாரியாவன். ஆனால் கல்வி ஞானமட்டும் உடைய வித்துவான்கள் அதற்கு அருகரல்லர். ஏன்?,

கல்லாத பேர்களே நல்லவர்க ளல்லவர்கள்
கற்றுமறி வில்லாதவென்
கன்மத்தை யென்சொல்கேன் மதியையென் சொல்லுகேன்
கைவல்ய ஞானநீதி

---

அப்படி பிரம்மத்திலிரண்டறக் கலந்துபோன அந்தக் கரணத்தையுடையவனாகியும், நிர்விசேட நிலைமையிலிருக்கின்றவனுக்கு நிர்விசேட ஞானமெதுவோ! அது தானாகவே உண்டாகின்றது. இதுதான் அபரோட்சானுபவம். இந்த அனுபவம் எப்பொழுது உண்டாகின்றதோ அப்பொழுது அவன் சுவானுபவரூபனும், ஆனந்த சொரூபனுமாகிறான். அந்த ஆனந்த வைபவத்தை அவனன்றி ஏனையோர்களாலும், வேதாந்த சித்தாந்த சாத்திரங்களாலும், மனோ வாக்குகளாலும் அறிய முடியா. ஞானத்திற்கு சாதனம் வேதாந்த வாக்கியம். அது அவாந்தர வாக்கியம், மகாவாக்கியமென இருவகை. அவற்றுள்:—பரமான்மாவினது அல்லது சீவனது சொரூபத்தை அறிவிக்கும் வாக்கியம் அவாந்தர வாக்கியமென்றும், சீவ பரமான்மாக்களின் ஏகத்துவத்தை, அதாவது சீவப்பிரம்மைக்கியத்தை அறிவிக்கும் வாக்கியம் மகாவாக்கிய மென்றும் பெயர். அவாந்தர வாக்கியத்தால் பரோட்சஞானமும், மகா வாக்கியத்தால் அபரோட்ச ஞானமும் உண்டாகும். பிரம்மம் வேறே இருக்கிறது என்னும் துவிதஞானம் பரோட்சம். பிரம்மம் நான் என்னும் அத்துவிதஞானம் அபரோட்சம்.

நல்லோ ருரைக்கிலோ கன்மமுக் கியமென்று
நாட்டுவேன் கன்மமொருவ
னுட்டினு லோபழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன் வடமொழியிலே
வல்லா னொருத்தன்வர வுந்த்ரா விடத்திலே
வந்ததா விவகரிப்பேன்
வல்லதமி ழறிஞர்வரி னங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்
வெல்லாம லெவரையு மருட்டிவிட வகைதந்த
வித்தையென் முத்திதருமோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே

என்ற தாயுமான வள்ளலின் கருத்தின்படி, பிறரை வெல்வதிலேயே முழுநோக்கமாயுடைய வித்துவான்களுக்கு ஆன்மாவொன்றே நித்தியம், அதற்கன்னியமான தேகாதி பிரபஞ்சவடிவ அநான்மா அனித்தியம் என்னும் வடிவினதாகிய பேதஞான விவேகம் உண்டாயிருக்கும். ஆனால் அஃதேதன், வைராக்கிய முதலான பிறசாதனங்களுக்கு ஏதுவாகிறதில்லை என்றாலோ! பண்டிதர்கட்கு நூலாராய்ச்சியினால் விவேகஞான முண்டாயினும், அஃது நிட்காம கருமோபாசனைகளால் பரிசுத்தமின்றிய மலின அந்தக்கரண பூமியினின்றும் முளைப்பதாதலால், பாலைநிலத்தில் நடப்பெற்ற கதலிவிருட்சத்தைப்போல் பயனற்றதாகின்றது. சுத்த அந்தக்கரணமுள்ள சாதகனுடைய இருதய பூமியாகிய உரமுள்ள சதுப்புநிலத்தில் நடப்பெற்ற, வேதாந்த விசாரமெனுங் கதலி விருட்சமானது பயனுடையதாகி பரம்பரைக்கு ஏதுவாகின்றது.

(2) விராகமானது மந்தவிவேகம், சங்க விவேகம், இந்திரிய நிக்கிரகம், மனோநிக்கிரகம் என நான்கு வகையாகும். அவற்றுள்:—

மந்தவிவேகம் என்பது அற்பஞானம் உண்டாயிருத்தல். சங்கவிவேகம் என்பது மஹான்களுடைய சற்சங்கப் பழக்கத்தால் துர்க்குணம் நீங்கி, நற்குணங் குடிகொண்டு அதனால் ஏற்படும் உற்சாகம். இந்திரிய நிக்கிரகம் என்பது பஞ்சேந்திரியங்களை அவற்றின் இஷ்டம்போல் எதிலும் தாக்காதபடி தடுத்தல்.

மனோநிக்கிரகம் என்பது மந்தம், தீவிரம், அதிதீவிரம் என மூவகையாகும்:—

பெண்சாதி, பிள்ளை, செல்வம் முதலான நாசத்தால், சம்சார சாகரத்தை வெறுக்கும் புத்தி விருத்தியே மந்தம். பெண்சாதி பிள்ளை செல்வம் முதலானவைகளாலுண்டாகும் சுகத்தை விரும்பாமலிருக்கும் புத்தி விருத்தியே தீவிரம். இராட்டினத்தின் சுழலைப்போல், மாறி மாறித் தொடரும் அயன நோயென்னும் ஆவிருத்தியை யுணர்ந்து இச்சையில்லாததே அதிதீவிரம். இந்த அதிதீவிரமுள்ளவன், பசியிருந்தவன் ஆகாரத்தை தேடுவதுபோலவும், தாகமிருந்தவன் தண்ணீரைத் தேடுவது போலவும் வேதாந்தமாகிய முத்திமார்க்கத்தை ஆசிப்பான். பொன்னாற்செய்து அநேக நவரத்தினங்களும் வைத்திழைக்கப்பெற்ற மாலையை ஒரு ஆபரணமாக மதிக்கப் பெறுவதுபோல், சமம்-தமம் முதலான சட்சம்பத்துக்களை வெவ்வேறாக மதிக்கப்பெற்றாலும், பரஸ்பரம் ஒன்றற்கொன்று சோபானம் போல் உதவிசெய்தலால் அவை ஆறும் ஒரே சாதனமாக மதிக்கப் பெறுகின்றன. அதன் விபரம் பின்வருமாறு:—

(1) அந்தக்கரணதண்டமாகிய மனமடங்குத லென்னும் சமம் இல்லாவிடின், தமம் முதலான புறக்கரணமாகிய தசேந்திரியங்களும் அடங்கமாட்டாவாகையால், சமம் தமத்தை அடக்கியாளுகிறது. ஆதலால் தமம் சமத்தையே விரும்புகிறது.

(2) மனவடக்கமில்லாவிடின், தந்தை, தாய், தமர், தாரம், பிள்ளை, செல்வமாதி விடயானந்தங்களிற் பந்தமுடைய மனதிற்கு உபரதி (நிராசை) வருவது துர்லபம். ஏனெனில், பாலும் சோறுமாகிய உத்தம ஆகாரத்தால் போஷித்துக் கட்டி வளர்க்கப்பெற்ற பூனையானது, எலியைக் கண்டவுடன் அதன்மேல் பாய்வதுபோல், ஈடணைத்திரயங்களில் நிராசைபெற்ற மனதும், தடுத்தல் (நிரோதம்) என்னும் கயிற்றால் கட்டி வளர்க்காவிடின் விடயாதிகளிற் பாய்ந்து திரியும். ஆதலால் சமமானது தமத்தை யடக்கி ஆண்டதுபோல் மூன்றாவதாகிய விடல் என்னும் உபரதியையும் அடக்கி யாளுகிறது. ஆதலால் உபரதியும் சமத்தையே விரும்புகிறது.

(3) இன்பம், துன்பம், பசி, தாகம், சீதோஷ்ணமாதி இருவினைகளைச் சகிப்பதும் சமமாதலால், சகித்தலும் சமத்தையே விரும்புகிறது.

(4) மனவடக்க மில்லாவிடின், தத்துவமசி வாக்யார்த்தத்தின் பிரயோசனமான, பிரம்ம சொரூபமாகிய தமது ஆன்ம சொரூபத் தியானத்தில், சித்தம் ஏகாக்கிரத் தன்மையடையாதாதலால் சமாதானமும் சமத்தையே விரும்புகிறது.

(5) மனவடக்க மில்லாவிடின் வேதாந்த நூற்களிலும், சற்குரு மூர்த்தியினிடத்திலும் பூரணமான அன்பென்னும்

சிரத்தை யில்லாததலால் சிரத்தையும் சமத்தையே விரும்புகின்றது.

சமமானது தம முதலானவைகட்கு உதவியாயிருந்தது போல், தமம் முதலான 5-ம் சமத்திற்கு உதவியாக இருக்கிறது. எவ்வாறெனில், இரசம் பூசாத கண்ணாடியில் நேத்திர விருத்தி தடுக்கப்படாததுபோல, இந்திரிய வாயில்களை தடுக்காவிடின் மனமும் தடுக்கப்படுகிறதில்லை. இவ்விதமாகவே ஒன்றற்கொன்றும், ஒன்றற்கொன்றுமாக உதவியாக இருக்கின்றன. (விரிக்கிற் பெருகும்).

இந்தத் தூலசரீரமாகிய இரதத்திற்கு இந்திரியங்கள் குதிரைகளாகவும், மனம் கடிவாளமாகவும், புத்தி சாரதியாகவும், ஆன்மா எசமானனாகவும், ஏற்பட்டிருக்கின்றது. எந்த எசமானுடைய புத்தியென்னும் சாரதி சரியானவனாயிருக்கிறானோ! அவனுடைய இந்திரியங்களென்னும் குதிரைகள் நன்மார்க்கத்தில் சென்று, எசமானனை மோட்சம் என்னும் பதியில் சேர்ப்பிக்கும். சாரதி தவறுடையவனாயின், இந்திரியங்கள் என்னும் குதிரைகள் தவறான துன்மார்க்கவழியில் சென்று, நரகமென்னும் படுகுழியிற் கொண்டு சேர்ப்பிக்கும். ஒரு வண்டிக்காரனைக் குறித்து, நீ இன்னதெருவு! இன்னார் வீட்டுக்குக் கொண்டுபோய்ச் சேர்! என்று கூறிவிட்டு நாம் வண்டிக்குள்ளிருக்கும்போது, அந்தச் சாரதி அதை யுணராமல் வேறொரு தெருவழியாக ஓட்ட முயலும்போது, ஹே! வண்டிக்காரா! இந்தத் தெருவல்ல! அந்தத் தெருவழியாக் ஓட்டிப்போ! என்று சொல்லிக் குறித்தவிடத்திற்குப்போய்ச் சேர்வதுபோல், துறவாச் சிரமத்தைப் பெற்றவன் (ஏனையோர்களும்) தனது புத்தியாகிய சாரதி தனக்குத் தோன்றியவாறு போகாமலும், இந்தியக் குதிரைகள் சரியான வழி

யில் போகிறதாவென்றும் எசமானன் கவனித்துப் பார்த்துக் கொண்டிருந்து, குறித்த விடத்துக்குப்போய்ச் சேரவேண்டியது. இவ்வாறு தவருமல் செய்பவனே முமூட்சுவாவன்.

சேலத்திலுள்ள ஒரு பெரிய பழவியாபாரி, திருச்சினுப் பள்ளியிலுள்ள ஒரு வியாபாரிக்கு 15.000 கிரேப் ஒட்டு மாம் பழங்களை அனுப்புவதற்காகச் சேகரித்தான். அந்தப் பழங் களில் இரண்டொரு பழங்கள் சற்று அழுகி யிருப்பதாகத் தெரிந்து, அதிக சிரமத்துடன் பன்முறை தேடிக்கொண் டிருந்தான். அதைப் பார்த்துக்கொண்டிருந்த மற்றொருவர், ஏனையா ! சாப்பிடவும் போகாமல் இவ்வளவு சிரமப்படுகிறீர்! போனல் போகிறது எழுந்திரும் என்ருர்.

ஐயா ! சிரமத்தைப் பாராட்டி இந்த இரண்டொரு அழுகிய பழங்களைத் தேடி எடுத்தெறியாமல் அனுப்பி விடுவேனாகில், இந்த இரண்டொரு பழங்களால் 1,5000 பழங்களும் அழுகி நாசமாகி, அவ்விடத்து வியாபாரிக்கு ஏராளமான நஷ்டமுண்டாக்கி, அதனுல் நமது வியாபாரமும் கெடும். ஆகையால், இந்த அற்ப சிரமத்தைப் பார்க்கப்படாதென்று வியாபாரி தேடி எடுத்தெறிந்தானும்.

அதுபோல் ஞானேந்திரிய, கன்மேந்திரியங்களால் ஏற் படும் சேஷ்டைத்திரள்களில், ஓரிந்திரியத்தின் சேஷ்டையை அசாக்கிரதையாக, அல்லது அலட்சியமாக விட்டுவிட்டால், பின்னர் சர்வேந்திரியங்களும் கெடுவதற்கு இடமுண்டாகும்.

பிரபுலிங்கலீலை

இந்திய மொவ்வொன் ருய்விட் டிடின்மற்றை யொன்று சாரும்
முந்திய மனம ழிப்ப முற்றும்போ மணிய பாம்பின்
ஐந்தலை களினு ளொன்றை யரிந்திடின் மற்ரென் ருலஞ்
சிந்திடு மிடற ரிந்தாற் றீர்ந்திடு மொருங்கு மாதோ.

அழுகிய பழத்தை பழவியாபாரி அதிக சிரமப்பட்டுத் தேடி எடுத்தெறிந்ததுபோல், இந்திரியங்களின் சேஷ்டையை அவ்வப்போது கண்டனம் செய்து வருவோமாகில், நமக்கு ஆன்மலாப மோட்ச கைவல்யம் எளிதிற் கிடைக்கும் என்பது சாரம்.

திருக்குறள்

(1) உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

(2) ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

(3) சுவையொளி யூறோசை நாற்றமிவ் வைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.



---

நமது "ஞானயோகரகசியம்" என்னும் நூலின் ஒவ்வொரு அட்சரமும் ஒவ்வொரு இலட்சம் பொன் பெறும் என்று மதிக்கிறார்கள்.

# இரண்டாவது அத்தியாயம்

# பிரமசரியம்

விருத்தம்

சதிரோர் களுக்கும் விதியாகும் பிரம சரியம் கிருகத்தம்
துதிசேர் வானப் பிரத்தமொடு சன்னியாச மெனச் சொல்லும்
சதுராச் சிரமங் களின்மறையோர் சாற்றும் பிரம சரியமெனும்
முதலாச் சிரம நீதிகளை மொழிவாந் தெளிவா யவ்ரவர்க்கே.

பிரமசரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சன்னியாசம் என ஆச்சிரமங்கள் நான்கு. அவற்றுள் முதலாவதாகிய பிரமசரிய விதிகளிற் சிலவற்றை யிங்கு கூறுவோம்.

இக்காலத்தில் நமது குழந்தைகளைப் பாடசாலைகளுக்கு ஐந்தாவது வயது முதல் அனுப்பிவருவதுபோல், முற்காலத்தில் ஒவ்வொருவரும் தத்தம் புதல்வர்களை மஹரிஷிகளிடம் அனுப்பி, கௌமாரப் பருவம் வரையில் இகபரத்திற்கு வேண்டிய கல்விகளைக் கற்கும்படி செய்வார்கள். அக்குழந்தைகள் இளமை தொடுத்து சன்மார்க்கத்திலே பயின்று, சாதன சதுட்டய நெறியைக் கைக்கொண்டு, தக்க வயது வந்தபின்னர் ஆசிரிய ருத்தரவின்படி, அவசியமானல் முறையே ஏனைய ஆச்சிரமங்களிற் பிரவேசிப்பார்கள்.

சாதன சதுட்டயம், இயம நியமாதிகளை நன்குணர்ந்த மாணாக்கன், பிரமசரியத்திற்குரிய அங்கங்களை அவசியமானல் தரித்து, தாய், புத்திரி, சகோதரி முதலிய மாதர்களிடத்தில், அல்லது அந்தந்த முறைமை யுடையவர்களிடத்

தில் தனித்தோரிடத்தில் வசித்தல், (*) கிருட்டிணசனம், மௌஞ்சி, தண்டு இவைகளை அகாரணமாக கைவிட்டிருத்தல், உறவினர் நட்பினர் முதலானவர்களோ டிருந்து உண்டி புசித்தல், ஐம்புல விடய வாசனைகளில் மனதைச் சுழல விடுதல், சீவ இம்சை செய்தல், புல்லர்களிடத்தில் சினேகித்தல், தாம் பூலதாரணஞ் செய்துகொள்ளுதல், மல்லிகை முல்லை முதலிய புட்பங்களைச் சூடுதல், சந்தனம்-அத்தர்-புனுகு முதலான வாசனை திரவியங்களைத் தரித்தல், இலாகிரி வஸ்துக்களிலும், அறுசுவைப் பதார்த்தங்களிலும் விருப்ப மிருத்தல், பால்-தயிர் - மாமிசங்களைப் புசித்தல், காமக்குரோத முதலிய உட்பகையை யனுசரித்தல், எண்ணெய் தேய்த்துத் தலை முழுகுதல், நிலநமிடுதல், குடை-பாதுகை-சூதாடல்-நாடகம் பார்த்தல்-சங்கீதம் பாடுதல் முதலிய எல்லா அலங்காரமான விடயங்களையும், விகட வார்த்தைகளைப் பேசுதல், பிறர் மன வருத்தம் அடையத்தகுந்த காரியங்களை யியற்றல் ஆகிய இவ்வித குற்றங்களையும் செய்யாதிருப்பது பிரமசரியக் கிரமமாகும்.

பிரமசரிய விரதத்தை மேற்கொண்டவன் ஆசிரியருக்கு வேண்டிய காரியா காரியங்களை முடித்துக் கொடுத்து, அவரது திருவடிகளை முக்காலமும் முறைப்படி வணங்கி, குரு நியமித்தபடி வேதாத்தியயனம் செய்து, செப தபங்களை வழுவாது செய்துவரவேண்டும். மூன்று வீட்டுக்குக் குறையாமற்போய் வேண்டிய அளவு அன்னப் பிட்சையெடுத்து,

(*) கிருட்டிணசனம் என்பது மான்தோல். மௌஞ்சி என்பது நாணற்புல்லாற் செய்த அரைஞாண். தண்டு என்பது - தடி. இதற்குச் சிலர் எக்கியம் - உபவீதமென்னும் பூணூல் முதலியவற்றையும் தரிப்பதுண்டு.

அவ்வன்னத்தை ஆசிரியருக்கு நிவேதித்துப் புசிக்கச்செய்து, மீதியான பரிகல சேடத்தை அன்புடன் விரும்பிப் புசிக்க வேண்டுமாம்.

தான் தரித்திருக்கும் மான்தோல், அரைஞாண், தண்டு முதலியவைகள் விலக்கத்தக்க அசுத்தமடைந்தாலும், பின்னமடைந்தாலும், அவற்றை நதிகளில் அமிழ்ந்தும்படி எறிந்துவிட்டு ஒவ்வொன்றையும் புதிதாகச் சேகரித்துக்கொள்ளல் வேண்டுமாம்.

வேதம் ஓதுவித்த ஆசிரியர், துறவிகள், தமையன், மாமன், பிதா, சிற்றப்பன், பெரியப்பன் முதலான வயதில் முதியவர்களைக்கண்டால் எழுந்து வணங்கவேண்டும். உடனே தாய், பிதா, குரு என்னும் மூவரும்; சொர்க்கம் - மத்தியம் - பாதலமென்னும் மூன்றுலகங்களென்றும், பிரமசரியம் - வானப்பிரத்தம் - சன்னியாசம் என்னும் மூன்றுச் சிரமங்களென்றும், அகாரம் - உகாரம் - மகாரம் என்னும் மூன்று பிரணவாட்சரங்களென்றும், இருக்குமுதலான மூன்று வேதமென்றும் பெரியோர்கள் சொல்கிறார்கள். ஆதலால் அவர்களை முக்காலமும் எக்காலமும் வணங்கி வழிபடவேண்டும்.

இப்படி வணங்குவது இவர்களுடைய தோல், மாமிசம், எலும்பு, நரம்புகளுக்காகவல்ல. இவர்களுடைய எதார்த்த வடிவமாகிய துரிய பூமியில் வளரும் பரம்பொருளுக்காகவேயாம். இவ்விதப் பாகுபாட்டை யுணராத சிலர், "வணங்க வேண்டியது கடவுள் ஒருவரைத்தான்" என்று போராடுகிறார்கள். கடவுளை துவைதமாக நினைத்தவர்களுக்கல்லவா? இவர்கள் கூறுவது பொருந்தும், ஏகபாவனையுடையவர்களை இவர்கள் கூற்று எவ்வாறு கட்டுப்படுத்தும், என்பது ஆராயத்தக்கிறது. இன்னும் பிரமசரிய விதிகள் அநேகமுள. அவற்றைப் பல நூல்களிற் காண்க.

## மூன்றாவது அத்தியாயம்

# கிருகத்தம்



### விருத்தம்

திருநே ரழ்குங் கற்புமிவை சேர்ந்த மடமா னொடுசின்னாள்
மருவி யிருந்து *அறத்துப்பால் மார்க்கம் முப்பா னைந்துடனே
பிரம சரிய முதன்மூவர் பிரியத் தொழுகித் துணையாகுங்
கிரகாச் சிரம விதியிதெனக் கிளத்தல் செய்வாம் சிலதேர்ந்தே.

கிருகத்தம் என்பது இல்லறம். இல்லறத்தி லிருப்பவர்கள் தங்கள் பத்தினியுடனே மனமொத்திருந்து, தருமநூற்களில் விதித்த பலபலவாகிய தருமங்களைச் செய்வதற்கு வேண்டிய திரவிய சம்பாதனத்திற்குரிய நல்வழிகளிலே முயன்று, நியாயமான வழியில் பொருளைச் சம்பாதித்தல் வேண்டும். அடாபடியாய் ஏழைகளைத் துன்புறுத்தி, மலிவாகவும், கூடுத

---

(*) அறத்துப்பால் மார்க்கம் 35:—1-அறன் வலியுறுத்தல், 2-இல்வாழ்க்கை, 3-வாழ்க்கைத் துணைநலம், 4-புதல்வரைப் பெறுதல், 5-அன்புடைமை, 6-விருந்தோம்பல், 7-இனியவை கூறல், 8-செய்ந்நன்றியறிதல், 9—நடுவுநிலைமை, 10—அடக்கமுடைமை, 11-ஒழுக்கமுடைமை, 12-பிறனில் விழையாமை, 13-பொறையுடைமை, 14-அழுக்காறாமை, 15-வெஃகாமை, 16-புறங்கூறாமை, 17-பயனிலசொல்லாமை, 18-தீவினையச்சம், 19-ஒப்புரவறிதல், 20-ஈகை, 21-புகழ், 22-அருளுடைமை, 23-புலால் மறுத்தல், 24-தவம், 25-கூடாவொழுக்கம், 26-கள்ளாமை, 27-வாய்மை, 28-வெகுளாமை, 29-இன்னாசெய்யாமை, 30-கொல்லாமை, 31-நிலையாமை, 32-துறவு, 33-மெய்யுணர்தல், 34-அவாவறுத்தல், 35-ஊழ். இவற்றின் விரிவைத் திருக்குறள், நாலடியாரிற் காண்க.

லாகவும் வாங்குபவர்கட்கும், கூலியைக் குறைத்துக்கொடுத்து ஏழைகளை மனநோகச் செய்பவர்கட்கும் பெரும்பாலும் சந்ததிகளற்றுப் போகிறது. பலவிதமான கொடிய ரோகங்கள் தோன்றி, டாக்டர்களுக்கும் பாதகாணிக்கை வைக்க நேரிடுகிறது. பலவிதமான துர்க்கிருத்தியச் செலவுகள் ஏற்பட்டு தலையில் கைவைத் தழும்படிச் செய்கிறது. ஆதலால் நியாயமான (ஹலாலான) மார்க்கத்தில் பொருள் தேடவேண்டும்.

ஒரு பெரிய தனிகன் தனது வயோதிக பருவத்தில் ஒரு விசேடமான சொப்பனத்தைக் கண்டான். அச்சொப்பனத்தில், அவன் மரணமான பின், ஒரு அலங்கார மாளிகையின் பெரிய சபா மண்டபத்திற்குப் போகும் வாசற்படியில் நின்றதாகவும், கதவுமூடியிருந்த அவ்வாசலுக்கு மேல் "தான் ஒருவருக்கும் ஒன்றும் கடன் பட்டிருப்பதில்லை என்று ரூபிக்கும், எவனும் இவ்வாசல் வழியாய் மோட்சத்துக்குள் பிரவேசிக்கலாம்" என்று பெரிய எழுத்தில் எழுதியிருந்ததாகவும் கண்டான். அதை அவன் பார்த்தவுடனே, இதுஎனக்கேற்ற நிபந்தனையே! நான் எவனுக்காவது ஒரு காசு கடன் பட்டிருக்கிறேன் என்று ரூபிக்கக் கூடியவன் யார்? ஆகையால் நான் மோட்சத்துக்குப் போவது நிச்சயம்! என்று ஆனந்த நிர்த்தனம் ஆடினான்.

பின்னர், சொப்பனத்தில் நடந்ததைக் குறித்து அந்த மனிதன் சொல்லுவதாவது:—மேற்கூறிய வாக்கியத்தை வாசித்தவுடனே எனக்கு எதிரிலிருந்த மண்டபத்துக்குள் சன்சந்தடியுண்டாயிற்று. அதன் கதவு திடீரெனத் திறந்தது. அப்பொழுது மெலிந்த தேகமும், வெளுரின முகமுமுள்ள ஒரு மனிதன் என்னிடம் வந்து, நீர் எனக்குக் கொடுக்க வேண்டிய கடனை உமக்கு நினைப்பூட்ட நான் வந்தேனென்றான்.

அதற்கு நான் "உனக்கு ஒன்றுங் கொடுக்க வேண்டியதில்லையே, உனக்கும் எனக்குமிருந்த கணக்கை சரிவா நான் ஒழித்து விட்டதில்லையோ" என்றேன். அதற்கு அவன். நான் சிலவருடங்களுக்கு முன் உமக்கு ஒரு பசு மாட்டை விற்ற ஞாபக மிருக்கிறதா? என்று கேட்க, நன்றாய் ஞாபக மிருக்கிறது. நான் தீர்த்துக்கொண்ட கிரயத்தைச் சரிவாச் செலுத்தி விட்டேனே! என்றேன். அவன் குளிர்காலக் கொடுமையோடு நோய்க் கொடுமையும் கூடிக்கொள்ளவே, நானும் என் பெண்சாதி பிள்ளைகளும் கஞ்சிக்கு வழியற்று, கவலை யேலிட்டு, பசி பொறுக்க மாட்டாமல் எங்கள் பசுமாட்டை விற்க நேரிட்டது. நீரோ! எங்கள் ஆபத்தை உமக்கு ஆதாயமாக்கிக் கொண்டு, அதை ஈனக்கிரயத்துக்கு எடுத்துக் கொண்டீர். அதன் சரியான கிரயத்தில் நீர் கொடுத்தது போக, பாக்கி நீர் எனக்குப் பட்ட கடன் என்று தெய்வக் கணக்கில் பதிவாகி யிருக்கிறது என்றான்.

" இதைக் கேட்டவுடனே என் மனம் திடுக்கிட்டது. என் மனச்சாட்சி என்னைக் குத்திற்று. சபா மண்டபத்தினின்று திரள் திரளான கடன்காரர் வந்து, என்னை மொய்த்துக் கொண்டார்கள். அவர்கள் சொன்னதெல்லாம் உண்மை. அவர்களுக்கு நான் பட்டகடனைச் செலுத்தித் தீர்ப்பது அசாத்தியம் என்றுகண்டேன். அதனால் நான் மனம் வேசாறி வெட்கமும், துக்கமும் நிறைந்தவனாய், என்மார்பில் அடித்துக் கொண்டு, "ஆ என் ஆண்டவனே! நான் என்கடனைச் செலுத்தி தீர்க்கக் கூடாதவன், நான் தப்பிப் பிழைக்க வழியில்லையோ! இரக்கமுள்ள கிருபா சமுத்திரக் கடவுளே! லோக கடன்களை விட்டு நான் நீங்குவது எப்படி யென்று எனக்குக் காட்டியருளும்" என்று விண்ணப்பித்தேன்.

இவ்வாறு நான் தியானித்தவுடன் நான் கண்ட வாசகம் மறைந்து, மற்றொரு வாசகம் தங்கமயமாய்ப் பிரகாசித்தது. அதைக் கண்டவுடன் நான் ஆனந்தபரவசமாகி, இதுவே எனக்குத் தேவை! இதுவே எனக்கு உதவிபுரியும்!! ஆண்டவனுக்கு அநேக கோடி வந்தனம்! என்றேன்.

நான் விழித்தெழுந்த பின் நான் நடக்க வேண்டிய வழியை அறிந்து கொண்டேன். நான் என்னைச் சோதித்துப் பார்த்து, என் கடன்களை யுணர்ந்து புனிதனானேன் என்பதாம். ஆகையால் ஏழைகளைத் துன்புறுத்தலாகாது.

திருக்குறள்

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

இம்மை மறுமை யின்பங்களைப் பெறும்பொருட்டு, அறிவாகரம் பொருந்திய நூற்களைக்கற்று, அவற்றின் சந்தேகார்த்தங்களைத் தக்க பெரியோர்களிடத்திற் கேட்டு, ஐயந்திரிபு நீங்கி, பெரியோர்களையும், கடவுளையும் வணங்கவேண்டும்.

பஸ்அலூ அஹ்லத்திக்ரி இன்குன்தும்
லாதஉலமூன். (குர் ஆன் 14 - 12)

(க - து) நீங்கள் அறியாமை யுடையவர்களாதலால் அறிஞர்களிடம் கேட்டறிந்து நடந்து கொள்ளுங்கள்.

உலகாசாரத்தோடு ஒத்து நடத்தல், நல்லொழுக்கந்தவறாது நடத்தல், தீங்கான காரியங்களைச் செய்யாதொழிதல், தருமங்களைச் செய்தல், பெரியோர் இகழத்தகுந்த காரியங்களைச் செய்யாதொழிதல், சற்கருமங்களைச் செய்தல், குலமுறைமையைத் தவறாது காத்தல், சுற்றத்தாரைப் பாதுகாத்தல்,

விருந்தினரோடு புசித்தல், புத்திரோற்பவத்தை விரும்பி மனைவியுடன் கலவிபுரிதல், குருபணிவிடை செய்தல், பிரமசாரி, வானப்பிரத்தன், சன்னியாசியாகிய இவர்களிருத்தற் கிடமும், பிணிக்கு மருந்தும், பசிக்கு உணவும் கொடுத்து உதவி புரிதல் முதலானவை இல்வாழ்வோனுக்குரிய கடமையாம்.

குலூ வஷ்ரபூ வலா துஸ்ரிபூ ஸின்னஹு
மஸ் ஜிதின் ஒகுலூ ஒவ்ஷரபூ
ஒலா-துஸ்ரிபூ - இன்னஹூ
லாயுஹிப்புல்-முஸ்ரிபீன் (குர் ஆன் 8-11)

(க - து) உங்களுடைய வாழ்நாளில் நீதமான நடையைப் பற்றிப் பிடித்துக்கொள்ளுங்கள். தேவைக்கு மேல் பேராசை கொள்ளாதீர்கள்.

திருக்குறள்

இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை.

புதிதாகத் தம் வீட்டுக்குவந்த பெரியோர்கள், விருந்தினராகிய இவர்களைக் கண்டவுடன் இருக்கைவிட்டெழுந்து மன மகிழ்ச்சியுடன் வருக! வருக!! என்று அன்பார்வமோடு இன்னுரைபகர்ந்து, அருமை பாராட்டி உபசரிக்கவேண்டும். வந்தவர்களுக்கு கால்கழுவ நீர்கொடுத்து, ஆசனம் கொடுத்துத் தம்மாலியன்ற உணவருத்தி, படுக்கை, இருக்கை, தாம்பூலம் முதலிய எல்லா உபசாரங்களையும், இன்னும் நீதிநூற்களிற் கூறிய சகல தருமங்களையுஞ் செய்து தீரவேண்டும். அவ்வாறு செய்பவர்கள் இவ்வுலகத்திலில்லை யென்றே சொல்லவேண்டியதாயிருக்கிறது. ஏனெனில்; இல்லறத்தவர்களுக்கு

கொஞ்சம் திரவியம் அதிகமாகிவிட்டால், கண் தெரிவதில்லை; காது கேட்பதில்லை; காலை மடக்கமுடிவதில்லை; பேச நா எழுவதில்லை; இறு மாப்புப்பேயே பிடித்து ஆடுவார்கள்.

விவேகசிந்தாமணி.

பொருட்பாலை விரும்புவர்கள் காமப்பா லிடைமூழ்கிப்
புரள்வார் கீர்த்தி
யருட்பாலா மறப்பாலைக் கனவிலுமே விரும்பார்க
ளறிவொன் றில்லார்
குருப்பாலக் கடவுளர்பால் வேதியர்பாற் பாவலர்பாற்
கொடுக்கக் கோரார்
செருப்பாலே யடிப்பவர்க்கு விருப்பாலே கோடிசெம்பொன்
சேவித் தீவார்.

பெருத்திடுஞ் செல்வமாம் பிணிவந் துற்றிடில்
உருத்தெரி யாமலே வொளி மழுங்கிடும்
மருந்துள தோவெனில் வாக டத்திலை
தரித்திர மென்னுமோர் மருந்திற் றீருமே.

குறள்

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

செல்வ முண்டானவர்களுக்கு கண்தெரிந்தும் தெரியாதவர்களாய், காதுகேட்டும் கேளாதவர்களாய், வாயிருந்தும் பேச முடியாதவர்களாய், பெரியோர்களையும் ஏழைகளையும் ஏறெடுத்துப் பார்க்க முடியாதவர்களாய், பெரியோர்கள் முன்னிலையிலும் கால்மேல் கால்போட்டு, தன் காலைத் தடவித்தடவி நடுக்குவாதம் வந்தவன்போல் திமிர்வாதம்கொண்டு தொடைகளை ஆட்டியும், அகங்கார மென்னும் பேயால் பீடிக்

கப்பெற்றும் தலையை ஒணானைப்போல் ஓயாமல் அசைத்து அலைசத்து கர்வங்கொண்டு இருமாப் படைகின்றனர்.

1. பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும்

2. 'எல்லார்க்கு நன்றாம் பணிதல் அவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து'

என்னும் தெய்வப்புலவர் திருவாய் மொழியை கவனிக்காமலும் அலட்சியம் செய்கின்றனர்.

ஆ. ரே லோபாக்கியானம்.

சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுள்ளார் மூக ராவர்
பறியணி செவியு ளாரும் பயிறறு செவிட ராவர்
குறிபெருங் கண்ணு ளாருங் குருடராய் முடிவ ரன்றே

திருக்குறள்.

1. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

2. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

செல்வமுள்ளவர்களுக்குப் பித்தம் அதிகரித்திருப்பதாலேயே அவர்களை தரிசிக்கப் போகிறவர்கள் எலுமிச்சம் பழம் கொண்டு செல்கிறார்கள் என்பது சாலவும் பொருந்தும்.

மனிதர்களை நாளுக்கு நாள் நஷ்டப்படுத்திக்கொண்டுவருவது ஆகாரம், மைதுனம், நித்திரை, பயம் என்பவைகள், இந் நான்கிலும் அதிக சாக்கிரதையாயிருக்க வேண்டும். இவற்

துள் முக்கியமானவை ஆகாரம், மைதுனம். ஆதலால், இவ் விரண்டிலும் இன்னும் அதிகசாக்கிரதையோடிருக்கவேண் டும். இந்த இரண்டிலும் முக்கியமானது மைதுனம். ஆதலால் இந்த விஷயத்தில் எல்லாவற்றைப்பார்க்கிலும் அதிக சாக்கிர தையாயிருக்கவேண்டும். அவ்வாறு இராவிடில் தேகம் அதி சீக்கிரத்தில் போய்விடும். முத்தியை அடைவதற்கு இம் மானிட தேகமே தக்கதாயும், வேறு தேகத்தால் அடைவது அரிதாயும் இருப்பதால், எவ்விதத்தாலாயினும் தேகம் நீடித் திருக்கும்படிப் பாதுகாத்தல் வேண்டும்.

மைதுனம், ஊற்றுக்கேணி நியாயத்தை ஒத்திருக்கின்றது. ஊற்றுக்கேணியை இடைவிடாமல் 10-தினம் இறைத்தால் அதின் வருவாய் குறைந்து சலமில்லாமற்போய் பிரயோசனப் படாது. அன்றியும் இறைக்காத ஊற்றுக்கேணியிலுள்ள நீரில் அழுக்கேறி அதின் வருவாய் அடைபட்டு சுரப்பு நின்றுவிடும். பின்னர் அந்தக் கேணியிலுள்ள நீர் சூரிய வெப்பத்தினால் கிரகிக்கப்பட்டு ஒன்றுமில்லாமற் போய் விடும். இது போல் இடைவிடாது மைதுனஞ் செய்தால் இந்திரியத்தின் வருவாய்க் குறைந்து அருமையாகக் கிடைத் திருக்கின்ற தேகம் அதிசீக்கிரத்திற் போய்விடும். மைது னம் எந்தக் காலத்தும் இல்லாதிருந்தாலும் மேற்குறித்த ஊற்றுக்கேணி நியாயத்தாற் கேடுண்டு. அதாவது மைது னம் எந்தக் காலத்திலு மில்லாதிருத்தலினால் இந்திரியத்தின் தன்மைகெட்டு அதனால் அவ்விந்திரியத்தின் வருவாய் அடை பட்டு, மிகுந்திருந்த இந்திரியமும் வெப்பத்தினால் வற்றிவிட, அதனால் தேகம் விழுந்துவிடும்.

மனிதர்களுக்குச் சீக்கிரத்தில் தேகநஷ்டம் உண்டாவ தற்குக் காரணம் அருந்தல் பொருந்தல் என்னும் இருவகையி

னலேயாம். அருந்தலில் ஒன்பது பங்கு நஷ்டமும், பொருந்தலில் ஒருபங்கு நஷ்டமும் ஏற்படுகிறது. பிறந்தது முதல் இறந்து போகும் அளவும் சதா அருந்தலுண்டு. சிசுபருவத்திலும் வாலிப, விருத்த பருவத்திலுந் தவிர, கௌமாரம், யௌவனம் இந்த இரண்டு பருவத்திலும் பொருந்தல் உண்டு. இதனினும் நோய், துக்கம், தரித்திரம், பசி, பயம் முதலிய துன்பங்களால் பொருந்தல் தடைபடும். அதனால் அருந்தல் சதா நஷ்டம், பொருந்தல் ஏக தேச நஷ்டம். அப்படியே ஆகார விஷயத்தில் அக்கிரம அதிக்கிரம, அசாத்திரதை அசாதாரண உணவுகளை நீக்கிச் சுத்த சத்துவ ஆகாரங்களை மாத்திரம் புசித்து ஆயுளை விருத்திசெய்து கொள்வது சுத்த சன்மார்க்க ஏற்பாடு.

இரவில் தீபமில்லாத (வெளிச்சமில்லாத) விடத்தில் இருக்கக்கூடாது. அது ஆயுள் நஷ்டத்தை உண்டு பண்ணும். நாம் வாழ்கிற வீட்டில் தீபத்தைவைத்து ஆயுளை விருத்தி செய்து கொள்ளல் வேண்டும். வீட்டில் எந்த இடத்திலும் தீபம் வைத்திருக்கவேண்டியது. இருள் இருக்கவேகூடாது. ஒரு வீட்டில் தீபம் வைத்தால் வீட்டிலிருந்த இருளெல்லாம் தீபத்தில் அடங்கிச் சேரும். அதுபோல், இந்த சீவனாகிய தீபம் இருக்கிற இடத்தில் விளக்கில்லாவிட்டால் அவ்விடத்திலிருக்கிற இருளெல்லாம் சீவனாகிய தீபத்தைச் சேர்த்து தேகநஷ்டத்தை யுண்டு பண்ணும் என்பது பெரியார்கருத்து.



## நான்காவது அத்தியாயம்

# வானப்பிரத்தம்.



### விருத்தம்

அறமா மில்வாழ்க் கையிலிருந்து ஐம்பா ணண்டு சென்றதற்பின்
நெறியாங் குடும்பந் தனைநீக்கி நீடைம் புலனை நனியொடுக்கி [றிப்
மறைதேர் வனத்திற் போந்திருந்து வழுத்தும் விருப்பு வெறுப்பகற்
பிறழா தொழுகு மெழில்வானப் பிரத்தாச் சிரம முறை யுரைப்பாம்.

இல்லற தருமத்தி லிருப்பவன், மனுதரும நூலிற் கூறிய ஞாயமான விதி தவறாமல் தருமங்களைச் செய்து, பவ மொழிந்து, பரிசுத்தமுடைய புனிதனாகி, பஞ்சேந்திரியங்களை யடக்கி தபோவனத்திற்கு செல்லத்தக்க வானப்பிரத்த ஆச்சிரமத்தை யடைதல் வேண்டும்.

இல்லற வாழ்க்கையில் விருப்பமிருந்தால், 50 வயது வரையினுல் குடும்பத்திலிருந்து, புத்திர பவுத்திரர்களைக் கண்டு ஆனந்தித்து, அதன்மேல் தன் மனைவியை மகனிடத்தில் ஒப்புவித்தாவது, கூடவரப் பிரியமிருந்தால் அழைத்துக் கொண்டாவது, உத்தராயன காலத்தில், பூர்வ பக்கத்தில், ஓர் சுபவேளையில் வனத்திற் பிரவேசித்தல் வேண்டும், தாடி, மீசை, நகம், சடை, முடி இவைகளை வளர்க்க வேண்டும். மாவுரியாடை, மான்தோல் முதலியவைகளைத் தரிக்கவேண்டும். பசிநோய் வந்தால், காய், கனி, இலை, சருகு, கிழங்கு, தேன் ஆகிய இவைகளையே புசித்தல் வேண்டும்.

### தாயுமான வள்ளல்

*'கனியேனும் வறியசெங் காயேனு முதிர் சருகு*
*கந்தமூ லங்களேனும்*
*கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான்*
*கண்மூடி மவுனியாகி'.*

மகனுக்கு விவாகஞ் செய்து, மருமகள் தமது வீட்டில் மகனுடன் வாழும்போது, மாமனுனவர் மருமகள் கையி னல் அன்னமளிக்கப் புசித்தல்கூடாது. அவ்வாறு புசிப்பின் அது ஒரு பெரிய பாவமென்று கூறப்பெற்றிருக்கின்றது.

### பாரதம்

*வினைவலியி ஞலென்மகன் வீயவதைத் தோனை*
*குனிசிலையினுல்...........கோறல்புரி யேனேல்*
*மனைவியுயிர் வீயநன் மகன் மனைவி கையால்*
*தினையளவு வோர்பொழுது சீவித்தவ னவேன்.*

வெய்யில்-பனி-குளிர்-காற்று மழையாதிகளைச் சகித்த லும், ஆன்மாக்களிடத்தில் சீவகாருணியம் பாலித்தலும், தன் னுடைய பலிப்பிச்சை இவைகளை யியன்றவரையில் கொடுத் தலும், தன்னிடத்தில் வந்தவர்களுக்கு காய்-கனி-கிழங்காதி களால் உபசரணை செய்தலும், ஐம்புலன்களைப் பொறிவழிச் செல்லா தடக்கலும், வேதாந்தியயனஞ் செய்து, உபநிடதத் தின் பொருள்களை யுணர்தலும், சற்குரு உபதேசித்தபடி நடத்தலும் வேண்டும். கோபம்-மோகம்-மயக்கம் இவைகளை யொழித்து விடவேண்டும். நகரத்திலிருந்து கொண்டுவந்த தானியங்களைச் சமைத்து கடவுளுக்கு நிவேதித்து, தினம் ஒருவேளை அன்னம் 16 கவளம் கணக்காகப் புசித்தல் வேண் டும். மறுமுறை புசிக்கலாகாது. தானம் வாங்கக்கூடாது கள்ளான்-கள்-அழிஞ்சிற்பழம் - அபின்-கஞ்சா-மாமிசாதிகளைப் புசித்தல், மாதர்போகஞ் செய்தல் இவைகள் குற்றமாகும்.

காய்கனி கிழங்காதிகள் அகப்படாவிடில் வனவாசஞ் செய்கின்ற இருகத்தாச்சிரமத்தோரிடத்தில், தவத்துக்கு இடையூறு நேரிடாமல் யாசகஞ் செய்துகொள்ளலாம். அவர்களு மில்லாதிருந்தால் சமீபத்திலுள்ள கிராமங்களிற் சென்று இரண்டு கையிலாவது, மரப்பாத்திரம், அல்லது தொன்னைகளிலாவது 8 கவள அன்னம் வாங்கிப் புசிக்கவேண்டும்.

இயமம் - நியமம்-சுவத்திகாசனம் முதல் சுகாசனம் ஈறுகச் சொல்லப்பெற்ற யோகாசனங்கள் இவைகளை வேதாந்த பாஸ்கரன் அட்டாங்கயோக அத்தியாயத்தில் விவரித்துள்ளபடி நன்குணர்ந் தனுட்டித்து, பிராணயாம விதிப்படி இரேசகம் பூரகஞ்செய்து, பஞ்சபூதங்களையும், அவற்றின் பாகங்களையும்பகுத்தறிந்து, பிரத்தியாகாரம்-தாரணை-தியானம் சமாதி யென்பவற்றை நன்குபுரிந்து, சகல ஆசைகளும் நீங்கி முற்றத்துறந்து, அதன்பின் சன்னியாசம் பெற்றுக்கொள்ளல் வேண்டும். (இது இந்து தருமம்)

முஸ்லிம்களோ! வானப்பிரத்தம், சன்னியாச ஆச்சிரமங்களுக்காக, ஹஜ்ஜு யாத்திரையை அனுசரிக்கும்படி நபிகள் பெருமான் ஏற்படுத்தியுள்ளார்கள். வானப்பிரத்தமும், சன்னியாசமும், இஸ்லாத்தில் கூறப்பெறவில்லை யென்பார்கள். அவர்கள், ஹஜ்ஜுயாத்திரையின் அந்தரங்க நோக்கத்தை அறியாமல் அவ்விதம் கூறுகிறார்கள். ஹஜ்ஜு யாத்திரை எவ்வாறு செய்யவேண்டும் என்பதை நமது வேதாந்த பாஸ்கரனில் "நிராசையே துறவு" என்ற அத்தியாயத்தில் எழுதியுள்ளவைகளை ஒருமுறை இவர்கள் வாசித்துப் பார்ப்பார்களேயானால் ஹஜ்ஜு யாத்திரையின் நோக்கம் இப்படியாயிருக்கிறது என்று மூக்குமேல் கைவைத்து ஆச்சரியப்பட்டு, இக்காலத்தில் 'ஹாஜி' என்ற பட்டத்திற்காகவும், டம்பத்திற்காகவும் யாத்திரை செய்பவர்களின் தன்மையையும் உணர்வார்கள்.

## ஐந்தாவது அத்தியாயம்

# சன்னியாசம்.



### விருத்தம்

மன்னும் எழுபா னைந்தாண்டில் வானப் பிரத்த மதுநீங்கிச்
சன்னி யாச மதுதாங்கிச் சரிப்போ ரியலுங் குடீசகனற்
சின்ன முடைய பகூதகன்மேற் சிறந்த அஞ்சன் பரமாஞ்சன்
என்னு நால்வர் களினியலு மிஃதென் றினிதா யெடுத்துரைப்பாம்.

வானப்பிரத்த ஆச்சிரமத்தி லிருப்பவன் (*) 75 வயது சென்றபின்பு, அறம் - பொருள் இன்பங்களுக்காக வேண்டிய சகல பிரயத்தனங்களையும் நீக்கி; காம - குரோத-

(*) 75 வயதுக்குமேல் சன்னியாசம் பெறவேண்டு மென்று நியமமிருப்பினும், பாலியத்திற் சன்னியாசம் பெறுவதே காரியாம் சமான நெறி. ஆனால், (75) வயதுக்குமேல் சன்னியாசம் பெறவேண்டுமென்று சுருதிகள் முறையிடுகிறதே யெனின், அது இடிந்து விழுகிற வீட்டுக்கு முட்டுக்கட்டை கொடுக்கமுயன்றதுபோல், ஆன்மலாப சம்பந்தமாக ஒரு பிரயோசனத்தையும் அடையாமல் நரைத்துப்பழுத்துச் சாகப்போகிற வீணர்கள், ஏதோ ஒரு பிரயோசனத்தை அடைந்ததாக நினைத்துக்கொள்ளும்படி வேடம் புனைந்துகொள்வதற்காக பக்குவம் நோக்கி ஆன்றோர்கள் சொல்லிவைத்த ஓர்வித உபாய தந்திரமேயன்றி, அவர்களின் உண்மையான கருத்து அங்ஙன மன்று. அதன் உண்மையைச் செவ்வையாய் உணராமல், இளமைப் பருவத்தைக் கலவிப் பிரியத்தில் போக்கிவிட்டு, 'சாதுநாளையிலே சிவனேயென ஓதினால் விடுமோ தலைமேல் விதி' என்ற ஆன்றோர் வசனத்தைச் சிந்திக்காமல், 75-வது வயதை எதிர் பார்ப்போமாகில், ஒருக்கால் அந்த வயதுவரையிலும் உயிரோடிராமல் ஏமாந்துபோனாலும் போய்விடக்கூடும்அல்லவா? என்பது கவனிக்கத்தக்கது.

ஆயுள் பரிட்சையும் - ஆன்ம இலாபமும்.

## சாயா தரிசனம்.



அப்பியாசம் (1)

298-ம் பக்கம் பார்க்க. PICTURE OF: K. G. P. 1927.

லோப-மோக-மத-மாற்சரியமென்னும் அறுபகைகளையுங்க ளைந்து; தாடி-நகம்-மீசை-தலைமயிர் இவைகளை யழித்து; காவி வஸ்திரம் - கமண்டலம் - தண்டம் - பவித்திரம் - கோவணம் இவைகளைத் தரித்து, துவைதமற்ற மேலான பிரம்மஞான நிட்டை செய்யவேண்டும்.

தனக்காக ஓர் இடம் அமைத்துக் கொள்ளாமலும், ஓரிடத்திலேயே நிலைபெற்றிராமலும், நகரங்களாகிய பட்டினங்களில் ஐந்து இரவும், கிராமங்களில் ஓர் இரவும் வசிக்கவேண்டும். உலக விவகாரமாகிய வீண் வார்த்தைகளையும், அறம் - பொருள் - இன்பங்களைக் குறித்த வார்த்தைகளையும், ஏனைய வார்த்தைகளையும் பேசாமல் மௌன விரதத்துடனே ஏகாங்கியாய் இருக்கவேண்டும். ஒரு காரியத்திலும் மயங்காமல் பிரமசிந்தனை செய்யவேண்டும். ஒருவரிடத்திலும் பகை - உறவு - விருப்பு - வெறுப்பு முதலானவைகளில்லாமல் சாந்த சொரூபியாக விளங்கவேண்டும். துன்பஞ்செய்த பேர்களுக்கும் இன்பமே செய்யவேண்டும்.

திருக்குறள்.

"இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்."

நோய்வந்த காலத்து, எல்லாம் கடவுள் செயலென்றெண்ணி மருந்து புசிக்காதிருக்க வேண்டும், பொன் - வெள்ளி - தாம்பிரம் - வெண்கலம் முதலான உலோகங்களினாலே செய்த பாத்திரங்களை உபயோகிக்காமல் மூங்கில் - மரம் - தேங்காய் - சுரைக்காய் - மண் - இலை இவைகளினாற் செய்த பாத்திரங்களை வைத்துக்கொண்டாலுங் கொள்ளலாம்.

துணைந்தடியார்.

"செட்டு செய்யவேண்டிய தில்லை பரதேசிகள்
சட்டி யெடுப்பதுவுந் தொல்லை பிச்சைக்கஞ்சிக்கு
திட்டமுடன் வேணுமோ கல்லை."

விதிப்படி நண்பகலில் ஊர்க்குட்சென்று அன்னப் பிட்சை வாங்கி ஒருவேளை அளவாகப் புசிக்கவேண்டும். தாகத்திற்கு ஏரி குளங்களிலேயே நீர் அருந்தவேண்டும். பிட்சான்னம் அகப்பட்டால் மகிழ்ச்சியும், அகப்படாவிட்டால் துக்கமுமில்லாமல் எல்லாம் சிவன் செயலென்று பிரம்மத் தியானம் புரிதல்வேண்டும்.

வைராக்கியதீபம்.

(1) உச்சியம் போதின் மிகும் பசிக்கவ்
வூர்வல மாயிலந் தோறும்
பிச்சைக்கை யிடையிற் காடிக்கே ழனும்
பெற்றது பற்றியுள் வெறுப்போ
டிச்சையற் றருந்திப் பொருந்தவே காந்தத்
திடையினுந் தாகம்வந் தடையின்
நச்சிநீ ரூரிற் புகுந்துறு தேரி
யாதியின் அருந்துதல் நன்றே.

(2) மிகுத்திடு முனமிற் படுதழ லவிப்பான்
விடுபவன் கலங்கனீர் தெளிநீர்
பகுத்திடா னதுபோற் காடிசோ றேனும்
பசித்தவன் புசித்திடத் தகுமால்.

திரிகடுகம்.

வைததனை யின்சொல்லாக் கொள்வானும் நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும் ஊறிய

கைப்பதனைக் கட்டியென் றுண்பானு மிம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார்.

ஒரு வீட்டில் பிரமசாரி, ஞானப் பிரத்தன் பிட்சைக்கு வந்திருக்குங் காலங்களில், அவ் வீட்டிற்கு பிட்சை வாங்கப் போகக்கூடாது. தண்ணீரை வடிகட்டிச் சாப்பிட வேண்டும். பூமியிலுள்ள சிற்றுயிர்கள் துன்பமுறாமல் நடத்தல் வேண்டும். சோதிடம் - நிமித்த சாத்திரம் - பட்சி சாத்திரம் - சாசாத்திரம் - மந்திரம் - வைத்தியம் - சாலம் இவைகளைச் சொல்லிக் காண்பித்து வயிறு வளர்த்தல்கூடாது.

திருக்குறள்.

"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்."

நல்லொழுக்கம் - பொறுமை - திட்ஞானம் - மனோ நிக்கிரகம் முதலிய சகல சற்காரியங்களாலும் திருப்தியடைந்து, கருமயோகம் அல்லது ஞானயோகம் என்னும் குற்றமற்ற யோக சாதனை முதிர்ச்சியினால் பிரமசாரியச்சியம் அடைய முயலவேண்டும்.

## நான்கு சன்னியாசம்

(இதுவரையில் சன்னியாசிகள் ஆச்சிரம விதியைச் சொன்னோம். இனிச் சன்னியாசிகளிற் சிறந்த குடீசகன் - பகூதகன் - அம்சன் - பரம அம்சன் என்பவர்களுடைய இலட்சணங்களைச் சொல்லப் போகின்றோம்.)

மேற்கூறிய நால்வரின் ஆச்சிரம விதிகளும்; சன்னியாச ஆச்சிரம விதிகளும் சற்றேறக்குறைய ஒற்றுமையாகவே

யிருக்கும்; அதிக தாரதம்மியம் இராது. ஆயினும் அவர்களின் குணநிசயங்களிற் சிலவற்றைச் சொல்லுகின்றனம்.

மந்தம், தீவிரம், தீவிரதரம் என விராகம் மூவகைப்படும். அவற்றுள், குடும்பத்தில் கொடிய துன்பம் நேரிட்டபோது வெளியேறுவதற் கெண்ணுவது மந்த விராகம்.

இந்தச் சரீரமுள்ளவரையில் மனைவி, மக்கள், மண் பொன் முதலானவைகள் வேண்டாமென்று இயற்கையாகவே எண்ணியிருப்பது தீவிர விராகம்.

பிராமணர்களாகிய வேதியர்கள் அநுட்டிக்கத்தக்க மதாசாரமாகிய கன்மகாண்டச் செயல்கள் பொய்யென்று எண்ணிப் பற்றறக் கைவிடுதல் அதிதீவிர விராகம்.

கொடிய மந்த விராகத்தைச் சார்ந்த சன்னியாச நிலைகளில் ஒன்றேனும் பலிக்காது. தீவிர விராகத்தில் குடீசகம், பகூதகம் என இரண்டு பாகுபாடுகளுள்ளன. அவற்றுள், நடக்க சத்தியில்லாத துறவிக்கு குடீசகன் எனவும், பிரபஞ்சமெல்லாம் சஞ்சாரஞ் செய்யத்தக்க வலியுள்ள துறவிக்கு பகூதகன் எனவும் பெயர்.

தீவிரதர விராகத்தில், தீவிர விராகத்தைப் போலவே அம்சன், பரம அம்சன் என இரண்டு பாகுபாடுகளுள்ளன. அவற்றுள், அம்ச சன்னியாசிக்கு முத்தியானது மறுமையாகிய சத்தியலோகத்தன்றி வாராதென்பார்கள். பரமாம்சனுக்கு இம்மையிலேயே மோட்சமானது ஞானனந்தத்தாற் கிடைக்கும் என்பார்கள்.

பாமரம்சன் என்பவர் சிஞ்ஞாசு, சுஞ்ஞானி என இருவகையாவர். அவர்களுள், சிஞ்ஞாசு என்போன் ஞானபூமி

யேழனுள், முன் மூன்று பூமியுமுண்டாக்கின்ற விவேக வடிவானவன். சுஞ்ஞானி என்பவன் சீவன்முத்தி நிலையையடைந்த பரிசுத்த நெறியிற் சிறந்தவன்.

சிஞ்ஞாசு என்பவனும் இருவகையாவன். பந்தத்துக்கிடமாயுள்ள மனைவியாதிகளைத் துறந்துவிட்டு, சன்னியாசிகளாயிருந்து பிரம்மஞானத்தை யடைவார்கள். சிலர் பலவகைப்பட்ட வருணாச்சிரம தருமத்தை மேற்கொண்டு குடும்பத்திலிருந்து ஞானத்தை யடைவார்கள்.

வேதவியாச மஹரிஷியின் புதல்வராகிய சுகப்பிரமரிஷியானவர், தமது பிதாவிடத்தில் சகல கலைக்கியானங்களையும் நன்குணர்ந்த காலத்து, ஆச்சிரம விதிகளைப்பற்றி பிதாவிடம் சங்கித்தனர். அதற்கு மிதுலாபுரிக் கிறைவனும், தமது சீடனுமாகிய சனகமகாராசனிடஞ்சென்று சங்கையை நிவர்த்திசெய்து கொள்ளும்படி அனுமதி கொடுத்தனுப்பினார். அவ்வாறே சனகரிடம் வந்து, ஓ! சனகரே! வேத விதிப்பிரகாரம் ஒவ்வொரு ஆச்சிரமத் துறையையும் அனுசரித்து, அந்தந்த வித்தியாசங்களைக் கண்டு வெறுப்படைந்து, யதியாச்சிரமஞ் சேர்ந்து, அதனாலே தான் ஞானம் வரவேண்டுமோ? ஒருவேளை நல்ல புண்ணியவசத்தால் முதலாச்சிரமத்திலேயே ஞானம்வந்து விட்டால் அது பிரயோசனப்படாதோ? ஆகாதென்கிற வழக்குண்டோ? நல்வினைப்பயனாற் கிடைத்து தானால் மற்ற மூன்றாச்சிரமத்தையும் அனுசரிக்க வேண்டிய முறையில்லையே? இதனுடைய உண்மையைச் செப்புமென்று சுகர் கேட்டார்.

சனகவரோதயன், சுவாமி! தேவரீர் திருவாய் மலர்ந்தபடியே ஆச்சிரம தருமங்களை யனுசரித்துத் தேறாமல், பிறவி

ஞானம் பெற்ற பெரியோர்களோ அனந்தம். அவ்வாறு நேரிட்டிருந்த மகான்களும், வேதத்தில் விதித்த வண்ணம் ஆச்சிரமங்கள் நான்கையும் கைவிடாமல் அனுசரிப்பார்கள். ஞானம் வந்தவர்கள், நான்காச்சிரமங்களையுந் தழுவவேண்டியது யாது காரணமெனில், தாங்கள் படியேறி விட்டோமென்றும், பற்றில்லாத ஞானவான்களென்றும் அலட்சியமாய் விட்டுவிட்டால், பெரியோர்களெல்லாம் இந்த ஆச்சிரமத்திற் பிரயோசனமில்லை யென்று விட்டுவிட்டார்களே! பலனிருந்தால் விடுவார்களா? ஆகையால் நாம் ஏன் அந்த நான்காச்சிரமத்தையுங் கட்டிக்கொண் டழுவேண்டும் என்று அஞ்ஞானிகள் எண்ணி, தவ விரதங்களை அநுட்டிக்கமாட்டாத சோம்பேறிகளாகிச் சீக்கிரம் கெட்டுப்போவார்கள்.

சர்வேசுரன் சகல ஆன்மகோடிகளுங் கடைத்தேற வேண்டுமென்று, மோட்ச வீட்டுக்கு ஏறிப்போகின்ற படிபோல், சரியை - கிரியை - யோகம் - ஞானம் என்பவைக்கு முறையே, பிரமசாரி-கிருகத்தன் - வானப்பிரத்தன் - சகலமுநாசன் என்பவற்றைச் சோபானக் கிரமமாய் ஏற்படுத்தி வைத்திருக்கின்றனர். ஆகையால் பிறகிஞானம் பெற்றவர்களும் ஆச்சிரமங்களை அலட்சியஞ் செய்யாமல் அனுசரித்தே தீர வேண்டும். அங்ஙனம் அனுசரியாமல் விடும் பெரியோரால் உலகங் கெடும்; அதனால் பாவமிகும். ஞானவான்களுக்கு அக்கரையில்லாமற் போனாலும், உலகத்தாருக்காக தான் நடந்து காட்டி, சிட்டாசாரத் தன்மையாய் செய்விக்கவேண்டும். அதைக்கண்ட பூலோகத்தார் ஓ! பெரியோர்களெல்லாம் அனுட்டிக்கின்றார்களே! யென்று பேய்போற் பற்றிப் பிடிவாதத்தினாற் றேறுவார்கள்.

கைவல்லிய நவநீதம்

*நீராய்ப் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியு முன்னம்*
*வாரமா யிருந்த தங்கள் வருணமாச் சிரமஞ் சொன்ன*
*பாரகா ரியமா னாலும் பலர்க்குப காரமாக*
*நேரதாச் செய்வார் தீர்ந்த நிலைவிடாச் சீவன் முத்தர்.*

சகலமுந் தெரிந்த தானுவே! உமக்கு நான் சொல்ல வேண்டிய தென்ன? வேதத்திற் குரிய தேவரீரே வேத விதியை யிகழாமல் மூன்றாச்சிரமத்தையு மனுசரித்து, படிப் படியாயேறி, நான்காவது ஆச்சிரம நன்னெறி நிலையிலிருப் பதே உத்தமமென்று சொன்னார். அதை சுகப்பிரமம் கேட்டு, அவ்வாச்சிரமங்களை ஓர் எட்டுணையும் அனுசரிக்காமல், உடனே பற்றறத் துறந்து சென்றனர். ஆகையால் இந்த ஆச்சிரமங் களைப் பிறவிஞானம் பெற்றவர்கள் அவசியம் அனுட்டிக்கத் தான் வேண்டுமென்கிற நிர்ப்பந்தமில்லை.

இங்ஙனமே மணிவாசகர், ஞானசம்பந்தர், திருநாவுக் கரசர், சுந்தரர் முதலான மகான்கள், தங்களுக்கு உயரிய பதம் கைவல்யமாகியும், உலகத்தவர்கள் ஈடேறும் பொருட்டே, அவர்கட்குத் தகுந்தபடி தலங்களைப் புகழ்ந்து பாடிச் சென்ற னர். இக்காலத்தவர்கள் அதுகாரணத்தால் ஓர் பைசா பெறாத பட்டிக்காட்டைக்கூட, "இது சம்பந்தர் பாடற்பெற்றவிடம்! இது அப்பர் சுவாமிகள் பாடப்பெற்ற தலம்! என்று கட்டிக் கொண்டழுகிறார்கள். அநேகர் தம் திரவியங்களை சத்திரம், கலாசாலை முதலியவைகட்குக்கூட உபயோகிக்காமல், கருங் கல் வாங்கி கோயில் வெளிமதிளைக் கட்டி முடிக்கிறார்கள்.

லில்புகராயில் முஹாஜிரீன,
உலாயிக ஹுமுஸ் ஸாதிகீன். (குர்-ஆன்)

(க - து) சகலபோக போக்கியங்களையும் துறந்து வெளி யேறி, அல்லாவையும், அவனுடைய தூதரையும் விரும்பின வர்களே உண்மையான உறுதியுள்ளவர்கள்.

### தாயுமான வள்ளல்.

முத்தனைய மூரலும் பவளவா யின்சொலு
முகத்திலகு பசுமஞ்சளு
மூர்ச்சிக்க விரகசன் னதமேற்ற இருகும்ப
மூலையின்மணி மாலைநால
வைத்தெமை மயக்கியிரு கண்வலையை வீசியே
மாயா விலாசமோக
வாரிதியி லாழ்த்திடும் பாழான சிற்றிடை
மடந்தையர்கள் சிற்றின்பமோ
புத்தமிர்த போகம் புசித்துவிழி யிமையாத
பொன்னாட்டும் வந்ததென்றாற்
போராட்ட மல்லவோ பேரின்ப முத்தியிப்
பூமியி லிருந்துகாண
எத்தனை விகாதம்வரு மென்றுசுகர் சென்றநெறி
இவ்வுலகம் அறியாததோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

முன்னொரு காலத்தில் சுலபை யென்ற சன்னியாசினி உலக சஞ்சாரஞ் செய்து வருகையில், மிதிலை அரசராகிய சனகர் மோட்ச சாதனத்தை அனுட்டித்துத் தேர்ந்தவ ரெனக் கேள்வியுற்று அவரிடம் சென்றாள். சனகரும் அவ ளும் மெய்மறந்து வார்த்தையாடினார்கள்.

சனகர் பஞ்சசிகர் என்பவரிடம் உபதேசம் பெற்ற தன் மையையும், அதை அரசிலக்கணத்துடன் அப்பியாசித்து சித்தியடைந்த மார்க்கத்தையும், தனது சித்தம் தாமரை யிலைத் தண்ணீர்போல் இராச்சியத்தில் சம்பந்தமற்றிருப்ப தையும் எடுத்துரைத்தார். அன்றியும், தாம் அரசிலக்கணத்தை யும் விடாமல், மோட்ச சாதனத்தில் பழகுகிறவனென்றும்,

அவள் பெண்பாலானபடியால் மாதர் தருமப்படி, ஒரு கணவனுக்கு அடங்கி வாழாமல் சன்னியாசினியாக சஞ்சரித்து வருவது சரியல்லவென்றும் குறிப்பாகக் கூறினார்.

அதைக்கேட்டு சுலபை மனம் கோணமல் "நானோ பிரதானர் என்ற இராசரிஷி வம்சமாகிய உயர் குடியிற் பிறந்தவள். எனக்கிசைந்த மணாளன் அகப்படாததாலும், மோட்சஞானம் ஏற்பட்டிருந்தபடியாலும், அதையொரு பொருட்டாக எண்ணமலும் பிரம்ச்சாரினியாக சஞ்சரிக்கலானேன். உண்மையாகப் பார்க்கில், மனப்பற்று அற்றிருத்தலே சாலச் சிறந்தது. எந்த நிலையிலிருந்தாலும் பெரியோருக்கு இந்த நிலையிருக்கும். நீர் இராச்சியத்திற்கு அதிபதியாகி, அதையும் விடாமல் சன்னியாசமும் சம்பாதித்தீர். எனக்குத் தகுந்த நாயகன் அகப்படாததால் நான் இருந்தபடியே இருந்து சன்னியாசினியானேன். நம்மிருவருடைய சன்னியாசத்திற்கும் பேதமேயில்லை. ஆனாலும் உமது விவகாராதிகளை நோக்கில், அவைகள் உம்மை அடிக்கடி கலக்க, நீர் தேறுகிறீர். எனக் கேற்பட்டிருக்கும் நிலையோ அப்படியல்ல. எப்பொழுதும் கலங்கா நிலையே ஏற்பட்டிருக்கிறது. ஆதலால் உலகவாழ்க்கை சம்பந்தப்பட்ட வரையில், நம்மிருவருக்கும் சற்று சுகபேதமுண்டு. நம்மிருவருக்கும் மனம் சம்பந்தப்பட்டவரையில் வித்தியாசமே இல்லாததால் நாம் வீண் தர்க்கம் செய்யவேண்டியதேயில்லை" என்று சொன்னாள். அதற்கு சனகர் ஒன்றும் கூறாது அடங்கிவிட்டாராம்.

பிரம்மசரிய, கிரகஸ்த, வானப்பிரஸ்த, சன்னியாச ஆச்ரம தருமங்களை அனுசரிப்பதால் இளமைப் பருவத்தில் தேக வலுவையும், அபரிமிதமான உற்சாகத்தையும் உண்டாக்குவதல்லாமல், வயோதிகப் பருவத்தில் உலகப்பற்றுகளையும், பந்

தங்களையும் போக்கடிக்க ஏதுவாகின்றது. மேலும் இத் தருமங்களைத் தவறாமல் அனுசரிப்பவனுக்கு வேண்டிய அளவு சந்தோஷமும், மனோ திருப்தியும், மனச் சாந்தமும் ஏற்படும். மனக்கவலை யென்பதே யிராது. சுயநலப் பிரியம் என்பதொழிந்து பொது சனத்தியாக குணம் ஏற்படும். இடம் பொருள் ஏவலுக்குத் தகுந்தாப்போல் நடந்துகொள்ளும் சாமர்த்தியம் தன்னை யறியாமலே வந்து பொருந்தும்.



## ஆறாவது அத்தியாயம்,

## கணித சன்னியாசம்

---

விருத்தம்

துன்னுமிவ் வுலகி லுள்ளோர் சுகமிட ரடையுங் காலம்
மன்னிய கிரகம் போன்று வந்தது பலன்று மென்றே
பன்னுவ ரதனால் ஞான பரமசன் னியாச யோகம்
இன்னின கிரகத் தால்வந் தெய்துமென் றியம்பு வாமால்.

சோதிடமானது ஆத்ம கோடிகளின் பலாபலன்களைக் குறிக்கும் இன்றியமையாத ஒருவகைக் கணக்காம். அது பன்னிரண்டு இராசிகளாலும், ஒன்பது கிரகம் முதலான

வைகளாலும் கணிக்கப் பெறுகிறது. சுத்தம் பயிர் பச்சை பலிதப்படுவதற்கும், நினைத்த கருமங்கள் சித்தியாவதற்கும், இன்ப துன்பங்கள் நேரிடுவதற்கும் காரணம், கோள் - கிரகங்களின் இயக்கம் என்பதே இத்தேயத்திற் பெரும்பான்மையோருடைய கொள்கை. எந்த வேலையைத் தொடங்கிச் செய்தாலும், சோதிடர்களைக் கேட்டறிந்து, சுப முகூர்த்தத்திலேயே செய்யத் தொடங்குவார்கள். ஏர் உழுவதற்கும் விதை விதைப்பதற்கும் இன்ன-இன்ன நாள்! இன்ன-இன்ன நட்சத்திரம்! ஏற்றதென்று ஒரு சங்கேதம் ஏற்படுத்தப்பெற்றிருக்கிறது. அன்றியும், தூரப்பிரயாணம் போவதானல், இன்ன கிழமை! இன்ன வேளை! ஆகாதென்று வறையறுக்கப் பெற்றிருக்கின்றது. 'நாள் செய்வது நல்லார் செய்யார்' என்னும் பழமொழியே இதற்குச் சான்று. 'நாளும் கிழமையும் நலிந்தோர்க் கில்லை' என விலக்கு ஏற்பட்டிருந்தும், சில நோயாளிகள் நல்ல நாளிலேதான் ஔடதம் சாப்பிடத் தலைப்படுவார்கள். நல்லநாள் பார்த்துத் தலையைச் சிறைப்பினும் உள்ள மயிர் முளைத்தே தீரும் என்பதை உணரார்கள். சிலர் சோதிடர்களைக் கேட்டுப் பொருத்த நிமித்தம் பார்க்காமல் விவாகங்களை நடத்தவேமாட்டார்கள். பொருத்த நிமித்தம் சரிப்படாவிட்டால், கூடிவந்த கலியாணங்கூடக் கலைந்துபோகும். படிக்கத் தெரிந்தவர்கள்பக்கத்திலேயே பஞ்சாங்கம் ஒன்று தயாராக இருக்கும். இக்காலத்தில் படிக்கத் தெரியாதவர்கள்கூட ஒரு பஞ்சாங்கம் வாங்கி வைத்துக்கொண்டு, அதைப் பிறரிடம் காட்டியாவது தெரிந்து கொள்கிறார்கள். திதி-வாரம் - நட்சத்திரம் - யோகம்-கரணம் என்னும் ஐந்து அங்கங்கள் கூடியிருப்பதால் அதற்குப் பஞ்சாங்கமெனப் பெயர் உண்டாயிற்று. அதில் சுபாசுப தினங்கள், இராசிகள், இலக்கினங்கள், கிரகங்கள் குறித்திருக்கும்.

## இராசிகள் பன்னிரண்டு.

பன்னிரண்டு இராசிகளும், ஒன்பது கிரகங்களும் சோதிடத்திற்கு அத்தியாவசியம். ஆதலால், இரண்டு படத்திலும் அவைகள விளககப்பெற்றிருக்கிறது.




### இராசிகள் (புரூஜ்)

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | மேடம் | சித்திரை | (ஹம்லு) | ஆடு |
| 2 | இடபம் | வைகாசி | (தௌறு) | மாடு |
| 3 | மிதுனம் | ஆனி | (ஜௌஸா) | புணர்ச்சி |
| 4 | கடகம் | ஆடி | (ஸர்தான்) | நண்டு |
| 5 | சிங்கம் | ஆவணி | (அசது) | சிம்மம் |
| 6 | கன்னி | புரட்டாசி | (சுன்புலா) | பெண் |
| 7 | துலாம் | ஐப்பசி | (மீசான்) | தராசு |

| | | | | |
|---|---|---|---|---|
| 8 | விருச்சிகம் | கார்த்திகை | (அக்றபு) | தேள் |
| 9 | தனுசு | மார்கழி | (கௌசு) | வில் |
| 10 | மகரம் | தை | (ஜத்தி) | சுறு |
| 11 | கும்பம் | மாசி | (தல்வு) | கலசம் |
| 12 | மீனம் | பங்குனி | (ஹூத்து) | மச்சம் |

இதன் முழு விபரங்கள் சோதிட நூற்களில் பார்த்து காண்பதால் இங்கு விவரிப்பது மிகையாகுமெனக் குறிப்பிடவில்லை.

கிரகங்கள் ஒன்பது.




நவக் கிரகங்கள்

| | |
|---|---|
| அத்தாரிது | புதன் |
| ஸுஹறா | சுக்கிரன் |

| | |
|---|---|
| ஷம்ஸ | சூரியன் |
| மிர்றீக் | செவ்வாய் |
| முஷ்தரீ | வியாழன் |
| ஸல்ஹறு | சனி |
| கமர் | சந்திரன் |
| தன்பு | இராகு (கருநாகம்) |
| ரஹ்ஸ | கேது (ஐந்தலை நாகம்) |

அக்கணிதத்தைச் சரிவர கவனித்துக் கூறுதல் சாமானியர்கட்கியலாத காரியமாகும். "அகப்பட்டுக் கொண்டவனுக்கு அட்டமத்தில் சனி, ஓடிப்போனவனுக்கு ஒன்பதாமிடத்தில் குரு" என்பதுபோல சிலர் சோதிடம் சொல்வார்கள். ஆகையினாலேயே சோதிடம் சிற்சில சமயங்களில் பொய்யாக மதிக்கும்படி மாறுதலடைந்து போகின்றது. இதுபற்றியே குடந்தைபம்பதி ஆதிசங்கராச்சாரியார் பீடமேறும்போது, நான், பாத-பண்டித-சோதிடமாகிய மூன்றிலும் வல்லவனல்லன் என்று கூறினாராம்.

அகஸ்தியர் மதி வெண்பா

போற்றுகின்ற சோதிடங்கள் பொய்யா தொருநாளும்
சாற்ற வகையறியா தார்க்கதுபொய்—நேர்த்தியுள்ள
ஆசானைத் தேடி யவர்பதத்திற் றெண்டுசெய்து
பேசானைப் போலே பிழை.

சன்னியாச பலன்.

சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி யென்னும் ஏழு கிரகங்களில் நான்கு-ஐந்து-ஆறு-ஏழு கிரகங்கள் கூடியிருக்க, இவைகளில் வலிதுபெற்ற கிரகத்தினாலே சன்னியாச யோகம் ஏற்படும்.

## சுக்கிரயோகம்.

ஒரு இராசியிலிருக்கும் கிரகங்களில் சுக்கிரன் வலிதாயிருக்கில், அந்த சுக்கிரனாலே ஏற்பட்ட சன்னியாசமானது, அரசனைப்போல வாத்தியங்கள் - யானைகள் - குதிரைகள்-பல்லக்குகள், பல விருதுகளையு முடையவனாகிய இராச சன்னியாசமுண்டாக்கும்.

## குருயோகம்.

ஒரு இராசியிலிருக்கும் கிரகங்களில் குரு வலிதாயிருக்கில், அந்த குருவினால் ஏற்பட்ட சன்னியாசமானது, காவித்துணி, தண்டம், கமண்டலம், விபூதிப் பூச்சு, உருத்திராக்க மாலை இவைகளை அணிந்துகொண்டு, உலகமறியப் பிரம்ம நிலையையறியும் சன்னியாசம் செய்விக்கும்.

## சூரியயோகம்.

ஒரு இராசியிலிருக்கும் கிரகங்களில் சூரியன் வலிதாயிருக்கில், அந்த சூரியனாலே கொடுக்கப்பெற்ற சன்னியாசமானது, காடு-மலை-வனங்களிலிருந்து, காய் - கனி - கிழங்கு - சருகாதிகளைப் புசித்துக்கொண்டு தனியாயிருந்து பிரம நிலையை யுணரும் வண்ணம் செய்யும்.

## சனி-புதன்-சந்திரயோகம்.

ஒரு இராசியிலிருக்கும் கிரகங்களில் சனி வலிது பெற்றிருந்தால், அந்த சனியினால் கொடுத்த சன்னியாசமானது, சுகம்-தனம்-மனைவி-மக்கள் மானமிமான முதலியவைகளையும் விட்டுநிருவாண சன்னியாசியாகவும், புதன் வலிதாயிருக்கில், ஒரு தடிக்கொம்பு கையில் தரித்து, எங்கும் சஞ்சரிக்கின்ற சன்

னியாசியாகவும், சந்திரனுகில் விருத்தாப்பிய காலத்தில் மனைவி மக்கள், வீடு வாசல் முதலான சம்பத்திருந்தாலும், அதை விட்டு, சிவவேடமாகிய கவசகுண்டலம், உருத்திராக்கம், விபூதி காஷாய முதலியவைகளைத் தரித்து, சலமிருக்கும்படியான பாத்திரத்துடனே,பற்பல தேச யாத்திரை, தீர்த்த யாத்திரைகளுஞ்செய்து பிச்சையெடுத்துண்டு திரியவுஞ் செய்யும்.

## செவ்வாய் யோகம்.

ஒரு இராசியிலிருக்கும் கிரகங்களில் செவ்வாய் வலிது பெற்றிருந்தால், அந்த செவ்வாயினுல் கொடுக்கபெற்ற சன்னியாசமானது, சிவந்த வஸ்திரம் அல்லது காஷாயம் தரித்து, வேதசாத்திரம், கலைக்கியானம்,பல காவியங்களையு முணர்ந்து, தத்துவஞானப் பிரசங்கமும், சாத்திரப் பிரசங்கமுஞ் செய்து மனக்களிப்புடனே யிருக்கச்செய்யும்.

## சன்னியாச விபரம்

ஒரு இராசி யெதிலாவது அடைந்த கிரகங்களில் எத்தனை கிரகம் வலிதாக விருக்குமோ, அத்தனைவித சன்னியாசங்களையும் அடைந்து, அறம், பொருள், இன்பமென்னும் குடும்ப வாழ்வை வெறுக்கச் செய்யும்.

## சன்னியாச யோக முறை

அதிக பலவந்தனை கிரகத்துக்கு பிரவற்சை யென்னும் சன்னியாசத்தை முதலில் அடைந்து, பின்பு அதற்கடுத்த கிரகத்தின் சன்னியாசமும் கிரமமாய் இந்தச் சன்னியாச யோகங்களை முன்பின்னுக அடைவான்.

## சன்னியாசமில்லை

எந்த இராசியிலாவது நான்கு, ஐந்து, ஆறு, ஏழு கோள்கள் கூடியிருக்க, அவைகளில் நட்பு, ஆட்சி, உச்சம் பெற்றிருந்தால் அவைகளுக்குரிய சன்னியாசங் கிடைக்கும். பகை, நீசம் அஸ்தமானங்களில் இருந்தால் சன்னியாச மின்றி கீர்த்தியுள்ளவனாயிருப்பான்.

## சன்னியாசமும், மாறுதல்களும்.

கிரகங்கள் சேர்ந்திருப்பதில் செயமடைந்த கிரகத்தின் சன்னியாசத்தை யடைவான். செனன காலத்தில் எந்த இராசியிலாவது அடைந்த கிரகத்தின் சன்னியாச யோகத்தை யுண்டாக்குங் கிரகம் நட்பாயிருக்கில், அதற்குள்ள சன்னியாசத்தை யடைந்து அநுபவித்து, பின்பு கிரகஸ்தனாகி பெண்டு பிள்ளைகளுடனிருப்பான்.

செனனகாலத்தில் பல கிரகங்கள் ஒரு இராசியில் கூடிவரில் நட்பு பெற்றிருக்கிற கிரகத்துடன் கூடியிருக்கிற கிரகம் எத்தனை யானாலும், அவற்றிற்குள்ள சன்னியாசங்களை யெல்லாம் அநுபவித்து பின்பு விட்டுவிடுவான்.

## சன்னியாசிகள்.

சென்மகாலத்தில், பகை, நீசம், ஆட்சியுச்சமில்லாது நட்பாகவே நாலு ஐந்து கிரகங்களிருக்க, அப்படி நட்போடிருக்கும் கிரகத்துக்குள்ள சன்னியாசத்தை மரணகாலம் வரையிலும் அநுபவித்திருப்பான்.

இடபராசியில் சனி, செவ்வாய், புதன், குரு இவர்கள் கூடினாலும், கன்னிராராசியில் சுக்கிரன், சனி, சந்திரன், குரு,

செவ்வாய் கூடினாலும், கும்பராசியில் புதன், செவ்வாய், சுக்கிரன், குரு கூடினாலும் சன்னியாச யோகம் ஏற்படும்.

சன்னியாச யோகம் கொடுக்கப்பெற்ற கிரகம் அஸ்தங்கதமானாலும், அல்லது சூரியனைத் தவிர மற்றோருடன் கூடியாவது இருந்தாலும், அன்னிய கிரகம் இந்த கிரகத்தை நோக்கினாலும் சன்னியாச முண்டாகும். சூரியனுடனே சம்பந்தப்பட்டவர்கள் அஸ்தமானவர்கள். அதற்கே அஸ்தங்கதமெனப் பெயர். ஆனால் பலமுள்ள கிரகமான பிறவற்றை புருடனுக்கு தள்ளப்படும். ஏகராசியிலடைந்த சதுராதிக் கிரகங்களில் பலயுக்த கிரகங்கள் சன்னியாசத்தைக் கொடுக்கும். அந்த பல்யுக்த கிரகங்களில் எத்தனை கிரகம் அஸ்தங்கத மாகியிருக்கிறதோ, அத்தனையும் தங்கள் தங்கள் சன்னியாசத்தைக் கொடுக்காது.

சென்மகாலத்தில் சனியும், சென்மாதிபதியும், இந்த இரண்டில் எது பலவந்தனாக விருக்குமோ அதனுடைய திசைபுத்தி, யந்திரங்களில் அந்தவிதமான சன்னியாசங்கள் ஏற்படும்.

### திகம்பர (நிருவாண) சன்னியாசம்

சென்மகாலத்தில் சந்திரன் இருந்த இராசிக்கு அதிபதியாரோ அதுவே சென்மேசன். அதை நோக்கின கிரகத்துக்குள்ள சன்னியாசம் ஏற்படும். அதாவது சென்மாதி பதியை சனி நோக்கப் பிறந்தவன் சகல கலைக்கியானங்களையும் நன்குணர்ந்து, முற்றத் துறந்து நிருவாண சன்னியாசம்பெறுவான். அன்றியும், கும்பம், மகரம் என்னும் இரண்டு இராசியின் திரேகாணத்திலிருந்த சந்திரனை, குசன், சனி இவைகளின் நவாங்கிசையிலிருந்த இதர கிரகங்கள் பார்க்காமல் சனியினால்

பார்க்கப்பெற்றால் சாதாரண நிருவாண சன்னியாசம் ஏற்படும்.

## இராச சன்னியாசம்.

சென்மலக்கினம் சந்திரன், குரு இவைகள் சனியால் பார்க்கப்பெற்று, குரு 9-ல் இருந்தால் சங்கரைப்போல் அரசு புரிந்து ஞானத்தை யடைவர். சென்மலெக்கினத்திற்கு 9-ல் சனியிருக்க, அதை மற்றக் கிரகங்கள் நோக்கப் பிறந்தவர், இராசாதி ராசனாகவிருந்து ஞானத்தை யடைவர். இவ்விருவரும் அநேக வேதாந்த நூலாசிரியராக விளங்குவர்.

### மச்சமுனிவர் (800.)

குடும்பத்தா னத்தினுக்கு வுடையோ னாட்சி
குருவான வியாழனுச்சம் பெற்று அஞ்சில்
விடும்பத்தில் சந்திரனு மிருந்தால் நன்று
விருட்சகத்தில் சேயிருக்க வாக்கில் புந்தி
அடும்புந்தி மேடத்தில் அரியில் ஆதித்
தவனிருக்கத் தனித்திருக்கத் துலாத்தில் வெள்ளி
இடும்பத்தில் இத்தனையு மிருக்கு மாகில்
என்னசொல்வேன் இவன்ஞானி சோதி பாரே.

சோதிட மென்பது கலைஞானம் அறுபத்து நான்கனுள் ஒன்று. சோதிடம் எனினும், சாதகம் எனினும் பொருள் ஒன்றேயாம். ஆதலால் சாதகம் என்பது சாதகத்தை அதாவது காரியசித்தி, துணைக்காரணம் இவைகளைக் காட்டுகிறது. சோதிடமானது ஒருவனுடைய முழு அந்தரங்கத்தையும் காட்டிவிடாது. ஒருவனுக்குள்ள பலாபலன்களின் கோடியை, அதாவது ஊதியம் உண்டாகுமென்று குறிப்பித்திருந்தால், அந்தக் குறிப்பிலிருந்து சோதிடன் தனது கற்பனாசக்தியினால் இடம், பொருள், காலம்

முதலானவைகளுக்குத் தக்கவாறு, நிலம் உழுபவனுக்கு விளைவு அதிகமாகுமென்றும், படிப்புள்ளவனுக்கு பெரிய உத்தியோகம் கிடைக்குமென்று இங்ஙனமே அவரவர் தொழிலுக்குத் தக்கபடி பொருள் அமைத்து விருத்தியுரை செய்து கூறவேண்டும்.

## இந்நூலாசிரியர் சனனம்.

| | | | |
|---|---|---|---|
| புதன் | சூரியன் செவ் | சுக்கிர | சனி |
| கேது சந்திர | இராசிச் சக்கரம் | | இலக்கினம் |
| | | | இராகு |
| | | வியாழ | |

கலி, 4988, சருவசித்து, சித்திரை 7வ சோமவாரம் பகல் நாழிகை 16, விநாடி 16-க்கு சனனம். சென்ம நட்சத்திரம் சதயம். சென்ம லக்கினம் கடகம். சனன காலத்தில், இராகு மகாதிசையில் குருபுத்தியில் இருப்பு வருடம் 1, மாதம் 5, நாள் 23, நாழிகை 22, விநாடி 31. (இது பெருநாழி, சோதிடம், திருவாளர் ந. சிவஞானம் பிள்ளை அவர்களால் கணிக்கப்பெற்றது.) சென்னை அமிர்த குணபோதினியின் பிரமோதூத வருடப் பஞ்சாங்கத்தில் "மானிடர் சனன கால பலாபலன்" என்ற மகுடத்தில் குறித்திருந்ததிலிருந்து, இந்நூலாசிரியர் சனன காலத்தின் விசேடங்களைக் காண

பிக்கும் சில குறிப்புகளை இதனடியில் எடுத்தெழுதப் பெற்றுள்ளது.

நூலாசிரியர் சனன பலன்

(1) சருவசித்து வருடம்:—இவ்வருடத்திற் பிறந்தவர், நல்ல வார்த்தை, நல்லொழுக்கம், நேசம் உள்ளவர், பல நீதிகளுரைப்பவர், நேசித்தவரை ஆதரிப்பவர்.

(2) உத்தராயனம்:—இவ்வயனத்திற் பிறந்தவர், சண்டையில் எதிரிகளை செயிப்பவர், நூற்களைப் பரிசோதிப்பவர், வசிகரமுள்ளவர்.

(3) சித்திரை மாதம்:—இம்மாதத்திற்பிறந்தவர், நான்கு வேதங்களையும் கற்றவர், பெற்றோர்களை ஆதரிப்பவர், சன்மார்க்கர்.

(4) சதய நட்சத்திரம்:—இந்த நட்சத்திரத்திற்பிறந்தவர், காலத்திற்குத் தக்க முயற்சி செய்பவர், விஸ்தாரபுத்தியுள்ளவர், விடாமுயற்சி யுடையவர், பொறுமையாய் நடந்துகொள்பவர், பிறருக்கு உபயோகமான செயல்களைச் செய்கிறவர்.

(5) கடகலக்கினம்:— இந்த லக்கினத்திற் பிறந்தவர்,

பாடப் படிக்கப் பலதொழிலுங் கற்கத்
தேடச் சுகிக்கச் செலவழிக்க—மேடங்
கற்கடகஞ் சிங்கங் கன்னிதுலா னுக்கல்லான்
மற்கடகத் துக்கேது மற்று.

என்றபடி, கவிபாடுந் திறமையும், கற்கும் ஆற்றலும், பல தொழில்களைப் பயிலும் வன்மையும், பொருளீட்டி, அதை நன்மார்க்கத்திற் செலவு செய்யு மனமும், வாய்ந்தவர்.

(6) சோமவாரம்:—இந்தவாரத்திற் பிறந்தவர், விரத கருமங்களை நடத்துபவர், தருமசிந்தனையுள்ளவர், கீர்த்தியையுடையவர்.

# ஏழாவது அத்தியாயம்.

# குண்டலி சத்தி.

விருத்தம்.

தொட்டவர்க் கிசையயில் சுருதி யாழதின்
வட்டமும் மாசுண வடிவு மார்தருஞ்
சட்டகக் குண்டலி சத்தி தன்மையும்
அட்டமா சித்திகள் அணியு மோதுவாம்.

## குண்டலியின் இலக்கணம்

குண்டலியானது மூலாதாரத்திலுள்ள சதநாடிகளென்னும் நூறு(100) நாடிகளின் மத்தியில் மகத்துவந் தங்கிய ஆந்திரவேட்டனிகையென்னும் பெயருடைய ஒரு நாடியானது, வீணை வாத்தியத்தின் அங்கத்திலுள்ள விருத்த வடிவத்தைப் போலவும், நீர்ச்சுழியைப்போலவும், வட்டவடிவமாக சருவ ஜீவ ராசிகளின் சரீரங்களிலும் பொருந்தியிருக்கும்.

இந்த நாடியானது, குளிர்ச்சியை சகிக்கமாட்டாமல், தன்னுடலைச் சுருட்டிக்கொண்டு நித்திரை செய்கிற பெண் சர்ப்பத்தின் வடிவம்போல் கெட்டியாக வளைந்து, சதாகாலமும் அசையாமல் பிராணவாயுவினுல் நிலைபெற்றிருக்கும். வாழை மரத்தில் தலைகீழாய்த் தொங்கிக்கொண்டிருக்கும் பூவைப்போலிரானின்ற ஆந்திரவேட்டனிகை யென்னும் நாடியினிடத்தில், குண்டலி சத்தியானது பரிசுத்தமுடையதாய், ஏனைய சத்திகட்கெல்லாம் வெற்றியைக் கொடுத்து நிற்கும். கோபமிகுந்த பெண் சர்ப்பத்தைப்போல் பெருமூச்சு

விடும். சதாகாலமும் மேல்நோக்கிய வதனத்துடனிருக்கும். நமக்குச் சஞ்சல முண்டாகுவதற்குக் காரணமாயிருப்பது இந்தக் குண்டலி சத்தி தான். மனமென்னும் பேழையைச் சேர்ந்திருக்கின்ற எல்லா நாடிகளும் இந்தக் குண்டலி சத்தியினிடத்தில் இணைக்கப் பெற்றிருக்கின்றன.

## குண்டலியின் செய்கை

இத்தன்மையான குண்டலி சத்தியானது சிந்தனையினால் கலையாகும். சேதனத்தினால் சித்தாகும். மனனத்தினால் மனமாகும். சங்கற்பத்தால் சங்கற்பமாகும். நிச்சய அறிவினால் புத்தியாகும். அகங்காரத்தால் அகங்காரமாகும். இந்தக் குண்டலி சத்தியே புரியட்டகமென்னும் சூக்கும சரீரமும் ஆகும். புரியட்டக சரீரமானது இலிங்க சரீரமென்னும் சூக்கும சரீரம். இது ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, பிராணுபான வாயுக்கள் 5, மனம் புத்தி 2, ஆக இந்தப் பதினேழு அவயவங்களுடன் கூடியது. இந்தச் சரீரம் கண்களுக்குப் புலப்படாமலும், காசாணுதிகளால் பரிசிப்பதற்கு சாத்தியப்படாமலும் தூல சரீரத்திற்குள் இருப்பது.

## கைவல்லிய நவநீதம்

ஆதிமூக் குணமிப் பூதம் அடங்கலும் தொடர்ந்து நிற்கும்
கோதில்வெண் குணத்தி லெந்து கூறுணர் கருவி யாகும்
ஓதிய பின்னை ஐந்து உளம்புந்தி யிரண்டாம் ஞான
சாதன மாமிவ் வேழும் சற்குணப் பிரிவி னலே.

இராசத குணத்தில் வேறிட் டெடுத்தகூ றைந்தும் ஐந்தும்
பிராணவா யுக்க ளென்றும் பெருந்தொழிற் கன்ம மென்றும்
பராவிய பெயரா மிந்தப் பதினேழு மிலிங்க தேகம்
சுராசுரர் நரர்வி லங்காய்த் தோன்றிய உயிர்கட் கெல்லாம்.

இந்தச் சூக்கும சரீரம் 8 தத்துவம் அல்லது 8 கொத்து கொண்டதாதலால் புரியட்டகமென்று பெயர் வந்தது.

8 தத்துவங்களாவன:—சத்த முதலான தன்மாத்திரைகள் 5, மனம் - புத்தி - அகங்காரம் 3, ஆக தத்துவம் 8. எட்டு கொத்தின் விபரம்:—பூதம் ஒரு கொத்து, தன்மாத்திரை ஒருகொத்து, கன்மேந்திரியம் ஒரு கொத்து, ஞானேந்திரியம் ஒரு கொத்து, அந்தக்கரணம் ஒரு கொத்து, சத்துவாதி முக்குணம் ஒரு கொத்து, பிரபஞ்ச மூலமாயிருக்கும் மாயப்பிரகிருதி ஒரு கொத்து, கலாதி ஒரு கொத்து ஆக கொத்து 8 என்று சிவஞான சித்தியார் முதலிய நூற்கள் கூறுகின்றன.

மதயானை புசித்த விளாங்கனியானது, மலத்துடன் விழும் போது முன்போல் உண்மையான பழம்போலவே தோன்றினும், அதன் மாதுரியமான சத்துக்களெல்லாம் கிரகிக்கப்பெற்றிருப்பதுபோலும்; அக்கினியில் வெந்த காகிதம், வஸ்திர முதலியவைகள் பழைய எதார்த்த வடிவம்போல் புலப்படுவதுபோலும்; சூக்கும சரீரிகளான முமுட்சுக்களானவர்கள், பார்வைக்குத் தூலதேகியைப்போற் காணப்படினும், அவர்கள் சூக்கும சரீரிகளேயாவார்கள்.

குண்டலிசத்தி யென்னும் சீவசத்தியானது சரீரத்துட் கலந்திருக்கும் பிராண அபான வாயுக்களினது ரூபமாகி, கீழிலும் மேலிலும் போக்குவரவாகி நிற்கும். தானே சமஸ்தமுமாகி ஊர்த்தமுகத்திற் சென்றாலும் செல்லும். அதோமுகத்தில் திரும்பினாலும் திரும்பும். இஃதே சீவனாகி, முடிவில் மரணத்தையடைகிற பிராண வாயுமாகும். இந்தக் குண்டலி பிராண சலனமின்றி, போக்கு வரவின்றி அசைவற்று நிலைபெற்று நிற்கில், பிராண வாயுவானது அகத்திற் சேர்ந்து சீவர்கட்கு வியாதி யென்பதே வாரமற் காக்கும்.

## குண்டலி விழிப்பு.

விடய இச்சையைத் தரும் சகல போக போக்கியங்களையும் அசத்தென்றறிந்து, பஞ்சேந்திரியங்களை யொடுக்கி, ஏகாந்தமான இடத்தில் சுகாசனத்திலிருந்து இரேசக பூரகமாக இயங்கிக்கொண்டிருக்கும் வாயுவை மேல்நோக்குமாறு, குருமூர்த்தி மனங்கனிந்து உபதேசித்தருளிய மார்க்கப்படி அப்பியாசித்து, நிரோதனஞ்செய்து, கும்பித்திருந்து, லிங்கைப் பங்கஞ் செய்யாமல் மடித்து, மேல்வீட்டு வாயலில் காக்கவைத்து, குதமுதலாய நவத்துவாரங்களிலும் வாயுவைப் போகவிடாமல் அடைத்து, ஓசைமணி மண்டபத்தில் யோகநித்திரை செய்துகொண்டிருக்கும் கமலசத்தியினது வீட்டுத் தலைவாசற் கபாடத்தை தாலமென்னுந் திறவுகோல் கொண்டு திறந்து, பிராணவாயுவைச் சுழிமுனையில் நிறுத்தி, முக்கோண வடிவமாக இருக்கின்ற மூலாதார முதலான ஆறாதாரங்களை யறிந்து, அந்தந்த ஆதாரங்களுக்குரிய பதும தளங்கள், அத்துவா மூர்த்திகள், அக்கரங்கள் முதலியவற்றை வேதாந்த பாஸ்கரனில், ஆறாதாரமென்னும் சத்த சக்கர அத்தியாயத்தில் கூறியிருக்கின்ற விபரப்படி நன்குணர்ந்து தியானித்து, குண்டலி சத்தியை விழிப்பித்து, மூலக்கனலை மதிமண்டலத்திற் செலுத்தி, இடகலையிலிருந்து ஒழுகும் சந்திர புட்கரணி யென்னும் மதியமிர்த பானஞ் செய்து, ஏனைய ஆதாரங்களில் அதோமுகமாகத் தொங்கிக் கொண்டிருக்கும் பதுமங்களைப் பேதித்து, மேலேசென்று விந்துத்தானத்தின் வழியாக இறங்கி, மதியமிர்த தாரையை சரீரமுழுவதும் நிறையச் செய்த யோகானுபவிகட்குக் கைவல்லியமாவதன்றி, யேனையோர்கட்கு ஒருபோதுஞ் சித்தியாது. யோகிகள் அரிய பெரிய முயற்சியெடுத்துச் சரீரத்தை வருத்திப் பிரயாசைப்படுவதெல்லாம் குண்டலி சத்தியை

விழிப்பித்தற் பொருட்டேயன்றி வேறல்ல. ஆகையால் குண்டலியை நித்திராபங்கம்பண்ணி விழிக்கச் செய்தவர்களுக்கே சகல சித்திகளின் வல்லமையு முண்டாகும்.

ஒரு பெரிய ஆலவிருட்சம் நிலைபெற்று நிற்பதற்கு, அதன் வேர் ஆதாரமாயிருப்பதுபோல், சகல யோகாப்பியாசங்களுக்கும் குண்டலிசத்தியே ஆதாரமா யிருக்கின்றது. குண்டலி விழித்தாலன்றி, சகல யோகோபாயங்களும் வியர்த்தமாகும். குண்டலி விழித்தவுடன் ஆருதாரமுதலிய சகல சக்கரங்களிலுமுள்ள பதுமங்கள் பேதத்தை யடைகின்றன. பூட்டிய வீட்டைத் திறவுகோல் கொண்டு திறப்பதுபோல், தாலாப்பியாசத்தால் மோட்சத் துவாரமென்னும் பிரமரந்திரத்தின் சுழிமுனை மார்க்கத்தைத் திறக்கவேண்டும்.

* கந்தத்தின் மேற்பாகத்தில் குண்டலியானது யோகிகளுக்கு மோட்சத்தின் பொருட்டும், சாமானியர்களுக்கு பந்தத்தின் பொருட்டும் தூங்குகின்றது. யோகிகள், பிரம்ம ரந்திரத்தை அடையப் பெறுகின்ற சுழிமுனை மார்க்கத்தின் துவாரமாகிய மேல்வாசலைத் திறக்காதபடி, தனது முகத்தால் மூடிக்கொண்டு தூங்குகிற சர்ப்பவடிவமுள்ள குண்டலி சக்தியை வாலைப்பிடித்து எழுப்பவேண்டும். இந்த இரகசியத்தைக் குருமுகமாகக் கேட்டபடி தினந்தோறும் காலை மாலை இரண்டு வேளைகளிலும், சுமார் அரைச்சாம (1-30 மணி) நேரம் சாலனம் செய்யவேண்டும். அதனால் காசம், சுவாசம், சுரம் முதலிய வியாதிகள் நிவர்த்தியாகின்றன. அதன்பின் புஸ்திரிகை யென்னும் கும்பகத்தை அப்பியாசித்துக் குண்டலி சத்தியை விழிப்பிக்க வேண்டும். இப்படிச் செய்வதால்

* கந்தத்தின் முழுவிபரம் நமது வேதாந்த பாஸ்கரன் இரண்டாவது பதிப்பில், தசநாடிகள் என்ற அத்தியாயத்தில் விபரமாகக் கூறப்பெற்றுள்ளது.

ஒரு மண்டலத்தின்மேல் பிராணாயாமம் சித்தியாகின்றது. சத்தி சாலனமென்னும் குண்டலியப்பியாசத்தால் எழுபத் தீராயிர நாடிகளும் மலசுத்தி யடைகின்றன.

## பஸ்திரிகை.

வேதாந்த பாஸ்கரன் அட்டாங்க யோக அத்தியாயத்தில் குறிப்பித்திருக்கிறபடி பதுமாசனமிட்டு, வாயை மூடி, சரீரத்திலுள்ள வாயுவை ஒரு நாசியின் வழியாகக் கொல்லன் துருத்தியைப்போல் வேகமாக இரேசித்துப் பூரகம் செய்ய வேண்டும்.

பீர்முஹம்மது அவுலியா-ஆனந்தக் களிப்பு.

இல்லென் றெழுத்ததைப் பற்றி - இரு
வாசலைப் பூட்டி யடைத்துப் பிடித்துக்
கொல்லன் றுருத்திகொண் டூதி - நல்ல
கோலமாய் மூலக் குகையை யெழுப்பி
வில்லின்மேல் நாணம்பை யேற்றி - வெகு
வேகமா யொன்பது வாச லடைத்து
அல்ஹம்தி லொன்றாகி நின்ற - நந்தம்
ஆதியை நன்றாகக் கண்டுகொண் டேனே. (தீன்)

இடதுநாசியை வலதுகையின் மோதிரவிரல் - சுண்டு விரல்களால் அடைத்து, வலதுநாசியால் துருத்தியைப்போல் விரைவாக இரேசக, பூரகம் செய்யவேண்டும். சிரம மேற்படின் அந்த நாசியினாலேயே பூரகஞ்செய்து. அங்குட்ட விரலால் வலது நாசியை நிரோதித்து, இயன்றவளவு கும்பகம் புரியவேண்டும். அதன்பின் இடது நாசியினால் இரேசிக்க வேண்டும் இவ்வாறே வலது நாசியையும் அடைத்துச் செய்யவேண்டியது.

இவ்வாறு செய்வதனால் வாத-பித்த சிலேத்துமங்களை யடக்கி, சரீராக்கினியை விருத்திசெய்து சுகத்தைக்கொடுத்து,

சீக்கிரத்தில் குண்டலிசத்தியை விழிப்படையும்படி செய்கின்றது. இந்தக் கும்பகம், சீதோஷ்ணமாகிய எல்லாக் காலங்களிலும் செய்யத்தகுந்த தாதலால் இதையே அவசியம் செய்யவேண்டும்.

* சோடச முத்திரைகளில் முதன் முத்திரையாகிய மஹா முத்திரையான தானங்களில் குறிப்பிக்கப்பெற்ற கிரிகைகளின் முறைமையினாலும், சத்துவாம்ச குணத்தைத் தரும் மேன்மையான ஆகாரங்களினாலும், இயமம், நியமம் முதலியவைகளிற் கூறியிருக்கும் பரிசுத்தங்களினாலும், யோக சித்திகளை விஸ்தரிக்கும் நன்மையான சாத்திரங்களைப் பார்ப்பதாலுண்டாகும் ஆனந்த பரவசத்தினாலும், மேலான சத்துக்களாகிய சாதுசங்கப் பழக்கத்தாலுண்டாகும் வைராக்கிய விவேகத்தினாலும், சில பக்குவிகட்கு குறித்தகாலத்தில், நீங்காத பற்றுதலும் விடுதலும் நீங்கியசமயத்தில் பிராணன்கள் தேவவடிவமாகின்றன. அந்த வாயுக்களின் தன்மையை கரதலாமலகம்போல் செவ்வனே உணர்ந்தவர்கட்குத்தான் யோக சித்தியுண்டாகும்.

முற்கூறிய புரியட்டகசரீரம் என்னுஞ் சீவனுக்கு, பிராணவாயுவென்னும் குண்டலி சத்தியானது, வாழைப் பூவைப்போல் எட்டிதழ்களுடன் தலைகீழாய்த் தொங்கிக் கொண்டிருக்கும். அந்த வடிவத்தை குண்டலி சத்தியின் யோக நித்திரையென்றும், ஊர்த்துவ முகமாக மேல்நோக்கியிருக்குமாகில் குண்டலி சத்தியின் விழிப்பென்றும் மேலான சத்துக்கள் சொல்வார்கள்.

இந்தக் குண்டலி சத்தியின் விழிப்பானது யுக்தமான பிராணாயாமத்தினால், அல்லது இடைவிடாத கேவல கும்பக

* இந்த சோடச முத்திரைகள், நமது ஞானயோக ரகசியத்தில் விளக்கமாகக் கூறப்பெற்றுளது.

(இராசயோக)த்தால் அனேகமாக ஒருவருடத்தில் கைவல்ய மாகிறது. நபிகள் பெருமான் அவர்கள், தங்கள் பத்தினி கதிஜா நாயகம் அவர்களுடன் இல்லற தருமத்திலிருந்து கொண்டே, அருகிலிருந்த ஹிறுமலைக்குச் சென்று, ஏக மாய் மூன்று நாள், நான்கு நாள் தனித்திருந்து, பின்னர் பர வசத்துடன் வீட்டுக்கு வருவார்கள். அவ்வாறு சில மாதங் கள் நிகழ்ந்து கொண்டே வர, அவர்களுக்கு அட்டமாசித் திகளின் உன்னத கிரீடமாகிய பற்பல நிலைகள் கைவல்ய மானது. முன் கண்டதூரமே பின்னும் காணப்பெற்றது. கர்தவழி தூரத்திற்குச் சுற்றி கஸ்தூரிவாசனை அவர்கள் திரு மேனியிலிருந்து கமழ்ந்தது. ஏழு பூமிக்கும், ஏழு வானத்திற் கும் ஒரே வடிவமாக,

சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர விண்மணி யாயுறை

என்றபடி *விசுவரூபமென்று சொல்லாநின்ற அடிமுடி காண முடியாத மகாரூபம் உண்டாகும் ஆற்றலிருந்தது. அவர்கள் திருமேனியில் வெய்யில் தாக்காத வண்ணம் மேகம் குடைப் பிடித்தது. 160 வருடம் அரசு புரிந்த திமஸ்கு தேசத்து அரசனுக்குப் பிறந்த ஒரு தசைக்கட்டியைப் பெண் ணுருவாகும்படி செய்தார்கள். பாலைவனத்தில் தங்கள் காலை அழுத்தி, பாலினும் வெண்மையாய், தேனினும் இன்பமாய், பனியினுங் குளிர்ச்சியான தண்ணீர் ஊறும்படி செய்தார்கள். பாம்புடனும், ஒட்டகையுடனும், புலியுடனும், மானுடனும் பேசினார்கள்.

குண்டலி சத்தியின் இத்தகைய விழிப்பினாலேயே அடி யிற் கூறியிருக்கிற அட்டமாசித்திகள் உண்டாகின்றன.

---

*விசுவம் என்பது பூமியின் சமரேகையும், சூரியனின் பாதை யும் சந்திக்குமிடம்.

## குண்டலி சத்தியின் விழிப்பு.




இந்தக் குண்டலி சத்தியின் சித்திரமானது,
யோகிகளுக்கு மோட்சத்தைக் கொடுக்கும் பொருட்டு
மேல்நோக்கிய வதனத்துடன்
விழித்துக் கொண்டிருக்கிற பாவனையாய்
அமைக்கப் பெற்றுளது.

## அட்டமா சித்திகள்.

அட்டமாசித்திகள் என்பது எட்டுச் சித்திகள். அவை, அணிமா, மகிமா, இலகுமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பவைகள்.

1. அணிமா:—இது பரமஅணுவிலும், சருவசீவராசிகளிலும்பேதம் தோன்றாமல். மிகவும் நுண்ணிய அணுவளவாய்ச் சென்றிருக்கும் படியான சரீரத்தை யுடைத்தாயிருத்தல்.

2. மகிமா:—இது உயர்ந்த மகாமேரு கிரியைப்போல் ஆகவேண்டுமெனினும், அவ்வண்ணமே பெரிய சரீரத்தோடிருத்தல். தனக்கிஷ்டப்படி விசுவரூபமெடுக்கவும், அண்டபிண்ட சராசரங்களில் நிறையும் பெருமையும் உடைத்தாயிருத்தல்.

3. இலகுமா:—இது மகாமேரு பருவதம் போற் கனமாக இருக்கும் யோகியை மற்றவர்கள் தூக்கினல்; லகுவான பரம அணுவைப்போல் எடுக்கற் கெளிதாயிருத்தல். சீக்கிர வேகியாய், சேற்றிலும், பூமியிலும் அடி அழுந்தாமல் செல்லும் இலேசான சரீரமாகவிருத்தல். முகம்மது நபி (சல்) அவர்களது பாதங்கள், எப்பொழுதும் பூமியில் தடமுண்டாகும்படி அழுந்துவ தில்லையாம். கல்லில் மிதித்தால் தடமுண்டாகுமாம்.

4. கரிமா:—இது இலகுவாயுள்ள பரம அணுவைப்போலிருக்குஞ் சிவயோகியை மற்றவர்கள் தூக்கினல் மகாமேருவிலும் அதிகபாரமாயிருத்தல்; சண்டமாருதத்தினலும் அசைக்கப்படாதிருத்தல்.

5. பிராத்தி:—இது சர்வலோகங்களிலும் தடையின்றி ஓர் விநாடிப் பொழுதில் சஞ்சரித்தல். நபிகள் பெருமான்

அங்ஙனமே எழு வரணத்தையுங் கடந்து கடவுள் சமுகம் சென்றார்களாம்.

6. பிராகாமியம்:—இது ஒரு சரீரத்திலிருந்து மற்றோர் சரீரத்திற் பிரவேசித்தல். (கூடுவிட்டு கூடுபாய்தல், பரகாயப் பிரவேசம்) ஆகாய கமனம் பண்ணுதல். சகல லோகங்களி லுஞ் சென்று தனக்கு இச்சையாயுள்ள போகபோக்கியங்களை அனுபவித்தல். ஆகாயத்திற் சஞ்சரிக்குஞ் சூரியன் தனது பிரகாசத்தால் எப்பொருள்களுங் கட்புலனுக்குப் புலப்பட விளக்குவதுடன், தன்னையும் பிறருக்கு உணர்த்துவதுபோல், இந்நிலவுலகிலுள்ள பொருள் முழுவதையும், திரிகாலங்களை யும், வானலோகத்திலுள்ள பொருள் முழுவதையும், தனது சரீரத்தின் ஒளியால் பிறருக்கு விளக்குவதுடன், தானும் இருந்தவிடத்தி லிருந்தறிதல். ஆகாயம், பூமி இவற்றிலுள்ள சகல வஸ்துக்களையும் தானிருக்குமிடத்தில் வரவழைத்தல். முக்காலங்களையும் தனது சரீரத்திற்குள் அறிதல்.

தணிகைதுடியார்

"அல்லும் பகலும் சுகானந்த நிட்டையில்
அண்டமும் பிண்டமும் தெரியும்."

7. ஈசத்துவம்:—இது கடவுளைப்போல், ஆக்கல், காத் தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில் களைச் செய்யவும், சூரியன் முதலான நவக்கிரகங்களும் தனது ஏவல் கேட்டு நடக்கும்படிச் செய்யவும் வல்லமை பெற்றிருத்தல். முகம்மது நபி (சல்) அவர்கள் மஹா சனங் கள் வேண்டுகோளின்படி, இருட்டமாவாசையில் பூரண சந் திரனை வரவழைத்திருக்கிறார்கள்.

8. வசித்துவம்:—இது கந்தருவர், கிம்புருடர், இந்தி ராதி தேவர்கள், திக்குப்பாலர்கள், பறவைகள், மிருகங்கள்,

பூதங்கள், மனிதர்கள் முதலிய சகல சீவகோடிகளையும் தன் வசமாகக்கொண்டு ஆளுதல்.

சற்குரு மூர்த்தியினிடத்தில் உபதேசங்கேட்டு, அவர் ஆக்ஞைப்படி இடைவிடாமலும், வழுவாமலும் அப்பியாசித்துவரில், மேற்சொல்லிய அருமையான எண்வகையான சித்திகளும் ஒருவருடத்திற் கைகூடும்.

திருமந்திரம்.

முடிந்திட்டு வைத்து முயங்கிலோ ராண்டினில்
அணிந்த அணிமாகை தானு மிவனும்
தணிந்தவப் பஞ்சினுந் தானொய்ய தாகி
மெலிந்தங் கிருந்திடும் வெல்லவொண் ணாதே.

ஔவைக்குறள்.

அட்டமா சித்தி யடையுமோ ராண்டினில்
இட்ட மிதனைத் தெளி.

அட்டமாசித்திகள் உண்டாவதின் காரணம்.

முன் சொல்லிவந்த குண்டலிசத்தியைப் பூரகப் பழக்கத்தினால் பரிபூரணம்செய்து பிரகாசிக்கும்படி நின்றால், மகாமேருகிரிக் கொப்பான வலிமையுண்டாகும். சரீரமும் அதிகமாகப் பெருக்கும். பூரகத்தின் பிராணவாயு நிறைந்திருக்கின்ற சரீரத்தை அறிவானது மேல்நோக்கினால், ஒரே தடவையில் ஆகாய கமனஞ் செய்விக்கும். குண்டலி சத்தியானது சர்ப்பத்தைப்போற் சீறி, தண்டைப்போல் உயர்ந்து மேல் நோக்கிச் செல்லும். கயிற்றைப்போல் கட்டியிருக்கா நின்ற நாடிகள் முழுவதையுந் தான் கிரகித்து, சரீரம் இளைக்காதபடி, காற்று நிறைந்த தோற்பையைத் தண்ணீரில் அமிழ்த்தினால் மேற் கிளம்புகின்ற தொடர்புபோல் சரீரத்தை உயரத்

தூக்கும். குண்டலி சத்தியானது சுழுமுனைக்குள் சென்று, பிரமரந்திரத்தின் மேலாகப் புறப்பட்டு, 12 அங்குலத்தின் அளவில் சென்று, நாடிகள் முழுவதையும் நிரோதனம் செய்கின்ற இரேசகத்தில் இரண்டு நாழிகை அடைந்திருந்தால் ஆகாயகமனஞ் செய்பவர்களை தரிசிக்கலாம். அணிமா முதலிய அட்டமா சித்திகளைச் செய்யாநின்ற சித்தர் குழாங்கள் சொப்பனவத்தையில் தோற்றுவதுபோல், ஞானதிருஷ்டியினால் ஆகாயத்தில் நிலையாகத் தோற்றுவிக்கும். வதனத்தின் முன்பு 12 விரல் அளவு சென்று, இரேசகத்தினுடைய அப்பியாசத்தினால் நிலைபெற்ற பிராணனானது நீண்டகாலம் நிலைத்திருக்குமாயின் பாகாயப் பிரவேசம் செய்யும்.

அணிமாதி சித்திகளையும், எவ்விதச் செய்கையுமில்லாத முத்தியையும் சிவராச யோகிகளே அடைவார்கள். சிலர் சித்திகளைச் செய்து ஆனந்தித்திருப்பார்கள். சில மகானுபாவர்கள் முத்தியைமட்டிலும் விரும்பி, தனது எதார்த்த சொரூப பாவனையில் நிலைபெற்று நிற்பார்கள். ஆதலின், சித்திகளைக் கருதிச் செய்யும் தவத்திற்கு காமியத்தவம் என்றும், முத்தியொன்றையே விரும்பிச் செய்யுந் தவத்திற்கு நிட்காமியத் தவம் என்றும் பெயர்.

நிட்காமியத் தவத்தைப் புரிந்தவர்கள் சித்திகளைச் செய்ய வன்மை பெற்றிருந்தும், அந்தக்கரணங்களின் செய்கையாகிய சித்திகளைச் செய்தால், கைகூடிவந்த தவமானது செலவாகிக் குறைந்துபோகுமென்று ஏற்கனவே உணர்ந்து வெறுத்திருப்பதனாலும், இப்போது அந்தக்கரணங்களின் செய்கையற்று, பிரம்ம சைதன்யத்தில் சதா விருப்பமுற்றுக் கலந்தவர்களா யிருப்பதனாலும், சனகாதி நால்வர்களும், மாபலி, பகீரதன் முதலிய சீவன்முத்தர்களும் சித்தியை

விரும்பினரில்லை யென்றறிந்திருப்பதனாலும், காமியமாகிய சித்திகளைச் செய்யாமல், எவ்வித வல்லமையும் இல்லாதவர்கள்போ லிருப்பார்கள். சித்திகள் காலம்போக்குதல்; முத்தி காலாதீதமாகுதல்.

கூர்மபுராணம்.

*அரும்பெறல் யோகம் நன்கிற் கைவந்தோ ரவற்றின் போகம்*
*விரும்புறின் முத்தி யெய்தார் வெறுவெளி யதனிற் றோன்றும்*
*பரம்பொரு ளாகு மென்னைப் பாவித்தோர் முத்தி சேர்வர்*
*விரிந்திடு பிரமம் யானே யெனமறை விளம்பு மன்றே.*

பிரபுலிங்கலீலை.

*சித்தியும் ஆயுளும் சிறப்புங் காமியப்*
*புத்திய ரடைவரப் புத்தி நீங்கினோர்*
*முத்தியை யடைவரெம் முதல்வன் பூசையால்*
*சத்தியம் சத்தியம் தளர் மருங்குலாய்.*

சர்க்கரையை நாவில் வைக்காமல், ஒருவன் தன் உதட்டில் தடவிக்கொண்டால், அதனால் அவனுக்கு யாதொரு சுவையுந் தோன்றாது; வெளியிலுள்ள ஈ எறும்புகளே வந்து உண்ணும். அந்த ஈ எறும்புகளால் அவனுக்கு உபத்திரவமும் நேரிடும். அதே சர்க்கரையை உதட்டில் வைக்காமல், நாவின் மத்தியில் வைப்பானேயானால், ஈ எறும்பு மொய்க்கப் பெறாமல், அதன் மதுரத்தைப் பானம் பண்ணுவான். அதுபோல், காமியத்தவஞ் செய்பவர்களெல்லாம், உலகத்தார் மயங்கித் தன்னைப் புகழ்வதற்காக மணலைச் சீனியாகவும், கடலையாகவும் சாலம்போன்ற வேடிக்கைகளைச் செய்து காட்டுவதால் சனங்கள் கும்பல்கூடி உபாதிக்கத் தொடங்கி விடுகின்றனர். அதனைச் சகிக்கமாட்டாமல் தம்முடைய தவ வலிமையையுமிழந்து வாலிழந்த நரியைப்போல், எங்காகினும்

ஓடிப்போய் மறைந்துகொள்ளப் பார்ப்பார்கள். நிட்காமியத் தவமுடையவர்களோ! பயித்தியம் பிடித்தவர்களைப்போலும், இல்லறத்தாரைப்போலும் காலங்கழித்து வருவார்கள். எவர்க்கேனும் ஆபத்து நேர்ந்த விடத்து, அபூர்வமாய் எவராலுஞ் செய்வதற்கரிய உபகாரஞ் செய்வார்கள்.

ஞானமணிமாலை.

பேறுபெற்ற பேர்களொன்றும் பேசிடார் புவிக்குளே
ஆறுபத்துக் கந்தையு முடுத்திமே லழுக்குமாய்
நீறுமெத்தப் பூசியே நினைவில்லாத பேயர்போ
லூறுகுத்தி கண்டெல்லோரும் உற்றிடா தகற்றுவார்.

ஒரு மணமகன், மணமகள் சமேதனாய் மாதுலன் கிரகத்திற்கு மருவுண்ணச் சென்று, தனது நண்பர்களுடன் வீற்றிருக்கையில், சில பெண்கள் மணமகளை நோக்கி, அவளது நாயகனல்லாதவர்களைக் குறிப்பித்து, இவரா! நினது காதலர்? இவரா! நினது நாயகர்? என வினவுந்தோறும், இவரல்ல! இவரல்ல!! என்று சொல்லிக்கொண்டே வந்து, தனது நாயகனைக் காண்பித்து இவரா! நினது பதி? யெனக் கேட்டபோது மௌனமுற்று வெட்கித் தலைகுனிந்தாள் என்பதைப்போல், பிரஞ்ஞையோடு கூடிய சவிகற்ப சமாதியைப் புரிந்தவர்கள் சிற்சில அநுபவங்கள் கைவந்தவுடன் (காமிய மனத்தோடு) தனக்கு அது தெரியும்! இது தெரியும்! என்று பிதற்றுவார்கள். தன்னிலை யென்றும், நிருத்தமென்றும் கூறுநின்ற ஐந்தாவது யோகபூமியில் நின்று ஆரம்பித்து, நிருவிகற்ப சமாதிபுரிந்த முமுட்சுக்கள், சித்திகளைச் செய்து கும்பல் கூட்டாமல், சர்வ சங்க பரித்தியாகராகவும். * மௌன

* மவுனம் என்பது - வாக்கு மவுனம், காரணமவுனம், காட்டமவுனம், சுழுத்தி மவுனம் என நான்கு வகையாகும். ஆனல் பிராண

விரதம் பூண்டவராகவும் இருப்பார்கள். ஆனால், மௌன விரதம் என்பது வாயைமட்டிலும் மூடி, காடு மேடுகளை நினைத்துக்கொண்டு, ஊர் வம்புச் சமாச்சாரங்களை யெல்லாம் ஒரு வார்த்தையில் சொல்லவேண்டியதை (10) தடவையில் கைக்கோரணி காட்டியும் கேட்பவர்க்கு விளங்காமையால், மேலும் மேலும் கைக்கோரணி காட்டிக்கொண்டு மனதைப் புறம்பிலே விட்டுத் திரிவதல்ல. வாயை மூடியதுபோல், ஓடுகின்ற மனதையும் விடயாதிகளில் பற்றவிடாமல் அடக்கி, எதார்த்த வடிவத்தில் நிலைக்கச்செய்து, தன் வசமற்றிருப்பதுவே மௌனமாகும்.

ஓதுகுரு ரப்பக பீ நப்விக தலர்றுஅன் ஒகிபதன்
ஓதுனல் ஐஹ்ரி மினல்கௌலி பில் குதுவ்வி ஒல்ஆஸால். (குர்-ஆன்)

(க-து) அல்லாகுத்த ஆலாவை காலையிலும் மாலையிலும் இடையறாது பயபக்தியுடன் நினைவால் செபித்துக்கொண்டு மௌனம் சாதியுங்கள்.

தாயுமானவள்ளல்

சொல்லான் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
சும்மா விருக்க வருள்வாய்.

சிவஞான வள்ளல்

ஊமைகண்ட சொப்பனம்போன் றுள்ளே யறிவதன்றி
நாமிதெனச் சொற்றிடவு நண்ணுமோ—தாமதம்போல்
ஆங்கதுவரய்ப் போவதலா லன்றிதா மென்றுரைத்த
வீங்கொருவ ருண்டோ விசை.

---

யாம அடயோகத்தாற் சிறந்த காட்டத்தபசி யென்றும், தனது ஆத்மாநு சந்தான ஆனந்த அநுபூதியிற் சிறந்த சீவன் முத்தர்க ளென்றும் தபசிகள் இரண்டு விதம். அதில் வாக்கு மவுனம், காரணமவுனம், காட்ட மவுனம் என்கிற மூன்று மவுனங்களும் காட்டத் தபசிக்குச் சுபாவமாகும். சுழுத்தி மவுனம் சீவன் முத்தர்கட்குச் சுபாவமாகும்.

அத்துவிதச் செல்வர்களாகிய சனக மகாராசனும், பகீரதராசனும், மாபலி சக்கிரவர்த்தியும், ஏனைய சான்றோர்களும், ஞானம் ஒன்றையே சாதனமாகக் கருதி யடைந்தனரே யன்றி, சித்திகளை விரும்பவில்லை. அவ்வித மிருக்க, சில மகானுபாவர்கள் அணிமாதி சித்திகளை விரும்பி, பசி தாகமில்லாமல் ஒற்றைக்காலால் கழுத்தளவு நீரிலும், பஞ்சாக்கினியின் மத்தியிலும், ஊசி முனையிலும் நின்று, பசியெழுந்தால் இலை, சருகுகளையும், சலத்தையும் நிரப்பி வாயுபட்சணஞ் செய்து, மலைக் குகை முதலானவைகளிற் பிரவேசித்து, இன்னும் இவைபோன்ற பல அரிய இடுக்கண்களிலும் புற்றாகி, மரமாகிப் பலநாளிருந்து சரீரத்தை வருத்துவது யாது காரணத்தாலெனின், அவர்கள் செய்த இச்சா பிராரத்துவ கன்மங்களை அனுபவித்தான பிறகுதான் அவர்கள் முத்தியை யடைவார்கள். அங்ஙன மின்றேல் முத்தியை யடைய முடியாதென்னுங் கருத்தை யடக்கி,

கைவல்லியநவநீதம்

அனக மைந்தனே முத்திஞா னத்தையே அடைந்தன ரல்லாமற்
சனகன் மாபலி பகீரதன் முதலினோர் சித்திகள் படித்தாரா
இனிய சித்தியை விரும்பினர் சிலர்சில ரிரண்டையு முயன்றார்கள்
முனிவர் சித்திகள் விநோதமாத் திரந்தரும் முத்தியைத் தாராவே.

யோக ஞானமே முத்தியைத் தருமெனில் ஒழிந்தசித் திகள்வேண்டி
மோக மாயுடல் வருந்தினர் சிலசில முத்தர்க ளேனென்றால்
போக மாய்வரும் பிராரத்துவ கன்மங்கள் புசித்தன்றோ நசித்தேகும்
ஆகை யாலந்தச் சித்திகள் பிராரத்துவ மாகுமென் றறிவாயே.

# எட்டாவது அத்தியாயம்
# அஞ்ஞான சத்த பூமிகள்



விருத்தம்

அருந்துவோர்க் கமுத மேய்ப்ப அளப்பறு நலனுண் டாக்கித்
திருந்துமெய்ஞ் ஞான பூமி ஏழையுஞ் செப்பு வான்முன்
பொருந்துமஞ் ஞான பூமி ஏழையு மதன்கட் போந்த
பெருந்துனி களையு நன்கு பேசியே யாசு தீர்ப்பாம்.

அஞ்ஞான சத்த பூமிகள் என்பது ஏழுவித அறிவில்லாத பூமிகள். இந்த ஏழு பூமிகளும் மெய்ஞ்ஞான சப்த பூமி களுக்கு எதிர்மறையானவைகள். அவை 1-வது, வித்து (பீச) சாக்கிரம். 2. மேற்சாக்கிரம், 3. மகாசாக்கிரம், 4. சாக்கிர சொப்பனம், 5. சொப்பனம், 6. சொப்பன சாக்கிரம், 7. சுழுத்தி என்பவைகள். இவற்றை முறையே, வித்து நனவு, நனவு, மகாநனவு, நனுக்கனவு, கனவு, கனுநனவு, சுழுத்தி என்றுங் கூறலாம்.

அகண்டமாகிய சத்திலுதித்த ஒருணர்வே வித்து நனவு. வித்தாகிய உணர்வில் முன்பில்லாத அகந்தையானது முளை போல உண்டானதே சாக்கிரம். யான்! எனது! என்கின்ற விருட்சம் வளர்தலே மகா சாக்கிரம். அகந்தைகொண்டு சாக் கிரத்தில் மனோராச்சியஞ் செய்தலே சாக்கிர சொப்பனம். அறிவு, அறியாமை என்பதின்றி, அறிவாக விளங்குகின்றதன் னிடத்தில் எதிரிட்டறிய உதித்த போதமே, சகசீவபாத்துக்கு மூலமான பிரகிருதியாகிய முதலிலுண்டான வித்துநனவு. இவ்வறிவில் பிரதி பலனமாக வெளிப்படுஞ் சாயையாகிய

யானென்னு மறிவே சக சீவ பர உற்பத்திக்கு அடையாள மான மகதத்துவமாகிய நனவு, அச்சக சீவ பரங்களை யான், எனது என்னும் மமதாகங்காரத்தினால் வெளிப்படும் அறிவே அகங்கார தத்துவமாகிய மகா நனவு, அச்சக சீவ பரங்களின் உருவமே நானென வியாபித்து, அதுவாக நின்று அறிதல் போலத் தோற்றுவதே நனைக்கனவு.

நித்திரையில் *மனோராச்சியஞ் செய்தல் கனவு. சாக்கிரத்திற் பார்த்து மறந்துவிட்டதை, திரும்பவும் ஞாபகப் படுத்துதல் கனா நனவு. இருள் மயமாக மூடிக்கொள்வதுவே சுழுத்தி. அன்றியும்,

சகசீவபரங்களின் யதார்த்தம் இஃதெனத் தோன்றாது அதனில் வியாபிக்கும் அறிவே மனோராச்சியமாகிய சொப்ப னம். அவ்வறிவு சகசீவபரங்களை மறந்து நினைப்பதே சொப் பன நனவு. சகசீவபரங்களே தானாகி நின்று, தன்னை முழுது மறந்து அறியாமையே மீளாத மகா சுழுத்தி. இருள் மூடு வது சுழுத்தி. அன்றியும்,

வித்துநனவு, நனவு, மகாநனவு ஆகிய இம்மூன்றும் அறிவு பரிணமித் தாகாரமாய் எதிரிடுதலால் சாக்கிரம் என வும், சாக்கிர சொப்பனம், சொப்பன சாக்கிரம் ஆகிய இம் மூன்றும் எதிரிடுகின்ற ஆகாரங்களின் அறியாமை யோடு விவகாரங்கள் செய்தலினால் சொப்பனம் எனவும், சிருட்டி முதல் இதுகாறும் தன் எதார்த்தந் தெரியாமல் விடயானந்தகாரமாக உறங்குதலின் சுழுத்தியெனவுங் கூறப் பெற்றுள்ளது.

---

* மனோராச்சியம் என்பது, மன நினைவினால் தான்மகிமை யடைந்து அனுபவிப்பதாக இல்லாததை எண்ணி மகிழ்தல்.

நாமக்கிரியைகளுக்கு ஆதாரமாகியும், பீசரூபமாகியும் விளங்குதலால் முதற் பூமிக்கு வித்து சாக்கிரமென்றுபெயர். ஆதி மத்தி யந்தமில்லா அகண்ட பரிபூரணமாக விளங்கும் சுத்த சுயஞ் சைதன்னியத்தில் முதலில் தான் மாத்திரமாக எழுந்த அறிவெதுவோ! அதுவே வித்து சாக்கிரம். இவ் வித்து சாக்கிரமே பிரம்ம ஞானத்துக்கு முதன்மையான அவத்தையாகும்.

இத்தகைய அறிவில் முன் எப்போது மில்லாமல், இப் போது, யான்! எனது! என்னும் ஆணவச் செருக்கானது அற்பமாக முளைத்த, அதாவது, பொதுவாயுண்டான அறி வுக்கு முன்னெப்போது மில்லாத பேதமானது சூக்குமமா யுண்டான விடமே சாக்கிரம்.

அந்த ஆணவச் செருக்கென்னும் வாசனையால், யான்! எனது! என்னும் மமதையானது நாட்கு நாள் வளர்பிறை போல் வளர்ந்த விடமே மகா சாக்கிரம்.

அப்படி வளர்ந்துகொண்டிருக்கும் முன் வாசனை மம காரமேலிட்டால் சாக்கிரத்தில் முன் பார்த்ததையும், பாராத தையுங் கற்பித்து, வீணாக மனோராச்சியம் செய்வதே சாக் கிர சொப்பனம். இதன் முழு விபரம் ஞானவாசிட்டம் காதி கதையிலும், உற்பத்திப் பிரகரணம் இலவணராசன் கதை முத லானவைகளிலும் பார்த்துணர்க.

கானலில்-நீரும், கட்டையில்-கள்வனும், கயிற்றில் பாம் பும் போன்ற அளவில்லாத வேற்றுமைகளை, பார்த்துணர்ந் தோமென்னும் சொப்பனம் நீங்கி, உண்டுறங்கி மனோராச் சியஞ் செய்தலே சொப்பனம்.

முன் பார்த்த பொருளை, வெகுகாலங்கழித்து பின்பு அப் பொருளை மறந்தவனாக, வெகு நேரம் அறிவுதயமாகும்படி, அதாவது முன்கண்டு மறந்ததை திரும்பவும் நினைப்பது போல் பார்க்கின்ற சொப்பனமானது, சாக்கிரத்தைப்போல் சாக்கிரத்திற்கே தோன்றுவது சொப்பன சாக்கிரம்.

மேற்கூறிய அறுவிதமான அவத்தைகளை நீக்கிய சீவனவன், தான் நன்றாக தூங்கும்போது மிகுந்த இருள் மூடிக்கொண்டதுபோல அறிவு காண்பதே சுழுத்தி. இவற்றின் விபரம் அடியிற் காட்டப் பெற்றுளது.

---

## அஞ்ஞான சத்த பூமிகள்.

இம்மூன்று பூமிகளும் ஆரம்பமாகிய கீழ்ப்பூமிகள்.



1 வித்து சாக்கிரம்.



2 மேற் சாக்கிரம்.



3 மகா சாக்கிரம்.

இ ஃ து

மத்திய



பூமி

4 சாக்கிர சொப்பனம்.

இம்மூன்று பூமிகளும் முடிவாகிய மேல் பூமிகள்.



5 சொப்பனம்.



6 சொப்பன சாக்கிரம்.



7 சுழுத்தி.

## அஞ்ஞான பூமியின் சங்கிரகம்.

பிரதமத்தில் நாமரூபரகிதமாக வுண்டான அறிவே சகல சிருட்டிக்கும் ஆதாரமாகையால், அதுவே வித்து சாக்கிரம். பொதுவான அறிவுக்கு பேதம் சூக்குமமாகவுண்டான விடமே சாக்கிரம். அவ்வாசனை வளர்ந்த விடமே மகா சாக்கிரம். சாக்கிரத்தில், முன்பார்த்ததையும், பாராததையும் மனோராச்சியஞ் செய்வதே சாக்கிர சொப்பனம். நனவிற் கற்பித்த வடிவைக் காண்பது சொப்பனம். மறந்ததை மீண்டும் நினைப்பது சொப்பன சாக்கிரம். ஆன்மப் பிரதிவிம்பமாக எதிரிட்ட விடயத்தை சுகமென்று கருதி அதில் அழுந்திப் போவது சுழுத்தி.

இந்த அஞ்ஞான பூமிகள் ஏழும், பேதைமை அவத்தையைத் தரும் அத்தியாரோபமானதால், இதைக்கடந்து ஞான பூமிகளை அடைந்தவர்களே மகான் என்பவர்கள்.

## ஞானவாசிட்டம்.

நானெனும் பிரிவும் பேதமு மற்று நல்லறி வாயசை யாத
மானதனிலேயேசொருபமாமுன்சொன் மடமையாம்புவிபதங்கேட் பா
யீனமாம் வித்து கனவு மேனனவு மியன்றமா நனவுமந் நனவி
லானதோர் கனவுங் கனவுமிக் கனவி லடர்சஞ வஞ்சுழுத் தியுமே.

**கைவல்யம்**

*வினவுமிடத் தஞ்ஞான பூமிகளேழ் ஞானபூ மிகளே ழென்பா*
*ரினியவற்று ளஞ்ஞான பூமிகளே ழைபுமுந்தி யியம்பக் கேளாய்*
*தனிவித்து சாக்கிரஞ்சாக் கிரமகா சாக்கிரஞ்சாக் கிரத்தைச் சார்ந்த*
*கனவுகளுக் கனவுசாக் கிரஞ்சுழுத்தி யென்றெழுபேர் கணித்தார்*
*[மேலோர்.*



## ஒன்பதாவது அத்தியாயம்

# ஞான சத்த பூமிகள்.

——()——

**விருத்தம்.**

*மானலமுடையதவத்தர்களடையும் மாசிலாஞான வழ்பூமி*
*யானதில்முதன்முப்பூமியையடைந்த அப்பியாசிகளிலக்கணமும்*
*மோனமார்பெயரும் சத்துவாபத்தி முதலொருநான்கு பூமியையும்*
*ஆனுறுதடைந்தமுத்தர்கள்பெயரும்அழகுறவிரித்தெடுத்துரைப்பாம்.*

ஞானசத்த பூமிகள் என்பது எழுவித யோகபூமிகள். முதலாவது ஞானபூமியின் பெயர் சுபேச்சை, இரண்டாவது விசாரணை, மூன்றாவது தனுமானஸி, நான்காவது சத்துவாபத்தி, ஐந்தாவது அசம்சத்தி, ஆறாவது பதார்த்த பாவனை, ஏழாவது துரியம் என்பனவாம். இவற்றை முறையே, சுபம் விரும்பல், விசாரஞ்செய்தல், மனஞ் சிறுத்தல், உண்மையிலேயே நிலைபெற்று நிற்றல், சங்கற்பம் அறல், பதார்த்த எண்ணம் அறுத்தல்; துரியம் என்று கூறுவதும் பொருந்தும்.

மனம் திறமடைந்து, பொய்மைகளை மறந்துவிடுவது (சங்கற்பம் அறலாகிய) அசம் சத்தி. அத்துவிதானந்த முண்டாதலும் திரிபுடி நீங்குதலும் (பதார்த்த எண்ணம் அறுத்திடலாகிய) பதார்த்த பாவனை. பிரம்ம வஸ்துவின் நிச்சயம் இருந்த வண்ண மிருக்கின்ற மோனத் தன்மையே துரியம். சாதன சதுட்டய முதித்து விஷய தோஷ திருஷ்டி யுண்டாகித் தன்னைத் தரிசிக்க விரும்புவதே சுபேச்சை. விருப்பத்தால் அவனுகிய சித்துருவமும், தானல்லாத சடவுருவமும் இஃதெனை விசாரித்தல் விசாரணை. அவ் விசாரத்திலுள்ள சித்தில் வாசனை உண்டாகி, சட வாசனை விட்டு மனமடங்குதலே தனுமானசி; அச்சித்து வாசனை மிகுந்து, அது அனுபவமாக வெளிப்படுதல் சத்துவா பத்தி; அச்சித் துதயத்தினுல் சடபாவ நீங்குதல் அசம் சத்தி; அச் சித்தில் ஆனந்தோதயமாய் இரண்டற, யாவுந் தானே தானுயிருத்தல் பதார்த்த பாவனை, இவ்வனுபவம் எப்போதும் உள்ளதாக விளங்குதல் துரியம். முதற்கட் கூறிய பூமிகள் மூன்றிலும் சகத் தோன்றுகின்றபடியால் அம்மூன்று பூமியும் நனவாகும்; நான்காவது பூமி கனவாகும்; அக்கனவு மெள்ள நீங்குகின்ற ஐந்தாம் பூமியே சுழுத்தியாகும்; அதி சய மாகிய சுவானுபவ மிகுந்த ஆறும்பூமியே துரியமாகும். ஏழாம் பூமி ஒரு கற்பனையும் அற்றவிடமாதலால் அதுவே துரியா தீதமென்று கூறுவார்கள்.

சுபேச்சை, விசாரணை, தனுமானசி ஆகிய இம்மூன்றில் சகம் விடயரூபமாகத் தோற்றுதலின் அவை சாக்கிரம் எனவும், சத்துவாபத்தியில் சகம் நினைவுருவாகத் தோற்றுதலின் அது சொப்பனம் எனவும், அசஞ்சத்தியில் சகந்தோன்றாமையின் சுழுத்தி எனவும், பதார்த்த பாவனையில், சகம் சின் மாத்திரமாகத் தோன்றுதலின் அது துரியம் எனவும், துரி

யத்தில், காண்பானும், காணப்படுஞ் சகத்தும் சத்தாமாத்திரமாக விளங்குதலின் அது துரியாதீதம் எனவுங் கூறினதாம். அனுபவிக்கும் பூமிகள் ஐந்தவத்தையானதெனக் கொள்க.

இவ்வேழாம் பூமியைத் துரியம் எனவும், துரியாதீதம் எனவுங் கூறின் ஐயம் உண்டாம் எனக் கருதி அதனைச் சீவன் முத்தியின் திறமான துரியம் எனவும், இது நீங்கிய விதேக முத்தியைத் துரியாதீதம் எனவுங் கூறுவர். அங்ஙனங் கூறுமிடத்து, ஐந்தாம் பூமியாகிய சுழுத்தியில் சகந் தோன்றாமல் தான் தோன்றி நிற்றலே துரியம்.

இந்த ஏழு பூமிகளில் ஞானத்தை முதன் முதல் வளரச் செய்வதற்கு (துர்ச்சங்கச் சார்பகன்று ஞானமடைய விரும்பும்) சுபேச்சையே முதற்பூமி சற்சங்கப் பழக்க முண்டாகி, அவருரையைக் கேட்டு அதற்கிணக்கமாக ஞான நூற் பழக்கத்தால் ஆன்ம விசாரணை செய்வதே இரண்டாம் பூமி. ஈடணாத்திரயங்களை வெறுப்பதாகிய விரத்தியென்னும் மனஞ் சிறுத்தலாகிய அசங்க பாவனையே மூன்றாம் பூமி. வாசனையை வளராமல் பற்றறக் கெடுப்பதற்கு அறிவோதயமாவதே விலாபினி யென்னும் நான்காம் பூமி உண்மையிலழுந்தி, மித்தை யென்பவைகளை மறந்து விடுவதாகிய ஞானமயமான ஆனந்த சொரூபமே ஐந்தாம் பூமி. திரிபுடியற்றுச் சுழுத்தி அவத்தையைப்போல் விளங்குவதே ஆறும் பூமி. பிரம்ம வஸ்து இருந்தநிலையில் தானுமிருக்க, அதனால் எய்தும் மௌன சுபாவமாகிய நன்மையும், உபசாந்தமும், துரியமுமா யிருக்கின்றதே அதீதமாகிய ஏழாவது பூமி. இவற்றுள் சுபேச்சை, விசாரணை, தனுமானசி யென்னும் மூன்று பூமிகளும் முதற்பூமிகள். அசம் சத்தி, பதார்த்தபாவனை, துரியம் என்னும் மூன்று பூமிகளும் மேற்

பூமிகள். சத்துவாபத்தி நடுப்பூமி. முதன் மூன்று பூமியை யடைந்தவர்களுக்கு சிஞ்ஞாசு எனவும், ஏனைய நான்கு பூமியை யடைந்தவர்களுக்கு. சுஞ்ஞானி யெனவும் பெயர்.

## முதல் ஞான பூமி (சுபேச்சை)

இப்பூமி விவேக வைராக்கியங்களோடு சமாதி பூர்வ மாகிய தீவிர முமூட்சுத்துவ முடையது. இப்பூமியை அடைந் தவருக்கு நிவர்த்தன் என்று பெயர். ஆனால், இதில் பிரவர்த் தன் நிவர்த்தனென ஆன்மாக்கள் இருவகையாவர், அவர் களில்,

1. பிரவர்த்தன், பிரபஞ்ச ஒழுக்கங்களை மேலானதென் றும், மோட்சமடைவது சாமானியமன்று; மகா அருமை யான காரியம்; அது நமக்கு கைவல்லியமாகாதென்றும் எண்ணி, பிரபஞ்ச கருமங்களாகிய ஈடணைத்திரய வாழ்க்கை யை விரும்பி அவற்றின் வழியே நடப்பான். சுவர்க்காதி போகங்களில் ஆவலுண்டாகி அதற்கேற்ற சாதனங்களையும் புரிவான்.

2. நிவர்த்தன், இவன் மேலானசாதுக்களால் அங்கீகரிக் கப்படும் சற்கருமங்களை முயற்சித்து அகமகிழ்ந்து அதையே ஆனந்தமாக உடையவன்; குற்றமாக எண்ணப்படுங்காரியங் களில் அருவருப்புள்ளவன்; புண்ணிய கருமங்கள் வினைக்கு மூலமென்றஞ்சி உபாயமாகச் செய்பவன; தான் செய்த நற் கருமங்களை இடம்பத்தி னிமித்தம் பிறரிடத்தில் சொல்லாத வன்; இருவினைகளாகிய கன்மங்களைப் புரிந்து கொண்டிருப் பதனால் நல்வினையும், தீவினையும் பகலும், இரவும்போல் மாறி மாறி வருகின்றனவே! அதனால் வாணளெல்லாம் வீணாகப் போகின்றதே! ஆதலால், கன்மங்களின் மிகுதியற்றுத்

துன்பம் நீங்கி மேலாகும் மார்க்கம் எதுவென்று மனோாச்சியஞ் செய்பவன்.

பிரபுலிங்கலீலை.

கலையைமதிக்கும்புலவர்தமைச் சித்தர் குழாத்தைக்கடவுளரை
நிலையைமதிக்கும்முனிவரரைத் திசைமாமுகனை நிறைவனையாச்
சிலையைமிதிக்கும்நெடியோனை விழுங்கியுமிழாத்திறன் மாயை

என்று ஆன்றோர்களாற் கூறப்பெற்ற, நீங்காத மாயா விலாச மோக சனன சாகரத்தை யெவ்வாறு தாண்டுவோமென்று சதா ஆன்ம விசாரணைசெய்து நிராசையாக இருக்க முயலுபவன்; விரத்தியென்னும் துறவு முகூர்த்தங்களையே மனதில் சிந்திப்பவன்; சுவர்க்காதி போகங்களில் வெறுப்படைபவன்; தீவினைக்கு அஞ்சுபவன்; எவரிடத்திலும் அன்புநிறைந்த உபசாரத்துடன் தேசகாலங்கட்குத் தகுந்த விதமாய் மிருதுவான குரலுடன், இனிய வசனங்களைப் பிரயோகம் செய்பவன்; அடியார்களுக்குத் திரிகரண சுத்தியுடன் வந்தனை வழிபாடு செய்து ஆதரிப்பவன்; எங்கேனும் ஞானசாத்திரங்கள் இருப்பதாகத் தெரிந்தால் அதில் அதிக விருப்புற்று வாங்கி வாசித்து, அதில் சொல்லியபடி அப்பியாசிக்க முயலுபவன்; வைதீக விருத்தியில்விருப்பும், இலௌகீக விருத்தியில் வெறுப்பும், சாதுசங்கப் பழக்கத்தில் ஆனந்தமும், முத்தியில் அவாவுமுள்ளவன். மேற் சொல்லிவந்த குணங்குறிகள் எவனிடத்தில் காணப்படுகிறதோ! அவனே! சுபேச்சையாகிய ஞான பூமியை யடைந்த நிவர்த்தன்.

இந்த முதற் பூமி முதல் தனுமானசி இறுதியாயுள்ள மூன்று பூமிகளையும் அறிந்து அடைந்தவர்கட்கு அப்பியாசி அல்லது சாதகர் என்று பெயர்.

## இரண்டாம் பூமி விசாரணை.

இப் பூமி வேதாந்த சிரவண மனன இலட்சணமுடையது. அறியாமையென்னும் அந்தகாரம் நீக்கி ஆன்மவிசாரம் செய்யப்பெற்றவர்களே விசாரணை யென்னும் இந்த இரண்டாம் பூமிக்கு உரித்தானவர்கள். வேதங்கள், புண்ணிய நூற்கள், தாரணை, தியானம் முதலியவைகளையும், சற்கருமங்களையும் பரிபக்குவர்கள் கேட்டுய்யும்பொருட்டு, மாசில்லாத இனிய வாக்கியங்களில் கலந்து பிரகாசிக்கச் செய்யும் சாதுக்களது சங்கத்திற் சேர்ந்து, நித்தியாநித்திய வஸ்து விவேகமெய்தி, ஆகாயமானது மகாவாயுவை அபின்னமாகத் தன்னுள் அடக்கிவைப்பதுபோல், சர்வ கலைக்கியானங்களையும் வாசித்து அறிந்து உணர்ந்து அடங்குவார்கள். சர்ப்பமானது தனது சட்டையைக் கழற்றியபின் திரும்பத் தரித்துக்கொள்ளாதது போலவும், மதுரமான தீங்கனிகளைப் புசித்திருந்தாலும் வமனம் செய்த பின்னர் அருவருப்பது போலவும், சாப்பிட்ட இலையைத் தவிர்ப்பது போலவும், காமக்குரோதாதிகள் அறிவின்மையின் வசத்தினாலாவது, துர்ச்சகவாசத்தினாலாவது நேர்ந்தால் உடனே தவிர்த்து விடுவார்கள். இவ்விதமான புத்தி சாதுரிய முடையவர்கள் ஞான சாத்திரங்களினாலும், சற்குரு தரிசனத்தினாலும், பரம இரகசியமாகிய சர்வார்த்தங்களினது நிச்சயத்தை யுணர்வார்கள்.

கைவல்லிய நவநீதம்.

காமமா திகள்வந் தாலுங் கணத்திற்போ மனத்திற் பற்றார்
தாமரை யிலைத்தண் ணீர்போற் சகத்தொடுங் கூடி வாழ்வார்
பாமர ரெனக்காண் பிப்பர் பண்டிதத் திறமை காட்டார்
ஊமரு மாவா ருள்ளத் துவகையாஞ் சீவன் முத்தர்.

## மூன்றாம்பூமி-தனுமானசி

அநேக அர்த்தங்களை கிரகிக்கும் மனமானது, அந்த அனேக அர்த்தங்களை விட்டு, சத்து என்னும் ஒரே அர்த்தத்தின் விருத்திப் பிரவாகமாகுங் காலத்தில் சூக்குமமாகின்றது. அவ்வித சூக்குமமான மனதையுடைய நிதித்தியாசனமென்னும் சிந்திப்பானது தனுமானசியாகும். இந்த தனுமானசியும் முன்சொல்லிய சுபேச்சை, விசாரணையாகிய மூன்று பூமிகளும் சாதன பூமிகள், அல்லது அப்பியாச பூமிகள் என்று பெயர்பெறும். ஆகையினால் இம்மூன்று பூமிகளில் ஏறியவர்களுக்கு அப்பியாசிகள், அல்லது சாதகர்கள் என்று மேற்சொல்லி யிருக்கின்றனம்.

மூன்றாம் பூமியை அடைந்தவன் ஞானசாத்திரார்த்தங்களின் ஆசாரத்தைக் கைக்கொண்டு, தத்துவ ஞானங்களைத் தெளிவாகச் சொல்லுகின்ற சரிதங்களை கேட்பதில் அதிக் ஆவல் அடைவான். பூமி பஞ்சணையாகவும், ஆகாயம் விதானமாகவும், காற்று சாமரமாகவும், சந்திர சூரியர்கள் விளக்காகவும், நிராசையே மனைவியாகவும், கேவலம் இன்பமாகவும் சுகதுக்காதிகளைச் சமமாக நினைப்பான்.

### மூன்றாம் பூமியின் நான்கு பற்றின்மைகள்.

மேற்கூறியபடி மூன்றாம் பூமியை யடைந்தவன், அனுபவிக்கின்ற பற்றின்மையானது இரண்டுவிதம். அவை சாமானியப் பற்றின்மையென்பது ஒன்று ; சிரேட்டப் பற்றின்மை என்பது மற்றொன்று. இவ்விரண்டு பற்றின்மையில் ஒவ்வொன்றும் இரு பிரிவினையுடையதாக இருக்கின்றன. அவை சாமானியப் பற்றின்மை யென்பதில் சாமானியத்திற் சாமானிய பற்றின்மையென்றும், சிரேட்டப் பற்றின்மையென்ப

தில் சிரேட்டத்திற் சிரேட்ட பற்றின்மை யென்றும் ஆக நான்கு பற்றின்மைகள்.

1. சாமானிய பற்றின்மை:—வஸ்துக்களிடத்தில், "நான் கர்த்தாவுமல்லேன், போக்தாவு மல்லேன், சந்தேகங்களை ஐயந்திரிபறத் தெளிவோனாகிய சீடனுமல்லேன், சந்தேக விபரீதங்களை நிவர்த்திக்கும் ஆசிரியருமல்லேன், சுகதுக்கங்கள் அனைத்தும் நியதி யென்னும் பண்டை வினையால் வரும், ஆகையால் சகலமும் கடவுள் ஆதீனமேயன்றி யாதொன்றும் நமதல்ல" என்னும் பற்றற்ற குணமே சாமானியப் பற்றின்மை.

2. சாமானியத்தில் சாமானியப் பற்றின்மை:—போக மிருதிகள் யாவும் கொல்லத்தகுந்த வியாதியாகும். சம்பத்துக்கள் யாவும் ஆபத்துக்கு உறைவிடமாகும். இன்பம்-துன்பத்துக்கே ஆதாரமாகும். நன்மையான புத்திக்கு கவலையே நெடிய வியாதியாகும். கருமங்களினாலும், கடவுள் கட்டளையினாலும் வருகின்ற சுக துக்கங்களில் நமக்கு விருப்பு, வெறுப்பு எதற்காக உண்டாகின்றது என்று நினைந்து, அவைகளில் பற்றற்றவனாகி, முன் ஆன்ம விசாரணை செய்து வாசித்தறிந்த வேதாந்த மகா வாக்கியார்த்த நிச்சயத்தில் அழுந்துதல்.

சிரேட்டப் பற்றின்மை:—சுயஞ் சைதன்னியத்தை அகத்தில் தெளிந்த தெளிவினாலும், ஞான சாத்திரங்களிற் பயின்ற அப்பியாசத்தினாலும், சனனசாகரத்தின் தீரமானது தெளிவாய்க் காண்கின்றன. ஆதலால், நான் கர்த்தாவல்ல, ஈசனே கர்த்தா என்றெண்ணாமல், என்து ஊழே கர்த்தா என்றது போன்ற வசனார்த்தங்களின் சங்கற்பங்களனைத்தும் உண்மை

யாகப் பற்றுமல் வெகு தூரத்தில் தள்ளிவிட்டு, திடசாந்த மவுன நிச்சயத்தோடிருத்தல்.

சிரேட்டத்தில் சிரேட்டப் பற்றின்மை:—ஆகாயத்திலும் பூமியிலும் - அகத்திலும் - புறத்திலும் - மேலிலும் - கீழிலும் திசைகளிலும் - பொருள்களிலும் - பொருளல்லாதவற்றிலும் சட - சித்துக்களிலும் பிரித்து நினையாமல் உபசாந்தத்திற் கூடி, எண்ணமற்று - செய்கையற்று - கோபமற்று - பிரியமற்று - அளவிறந்த பவங்கள் நசித்து - ஆதிமத்தியந்த மில்லாதிருத்தல்.

களிப்பென்னும் பரிமளமும் மாதுரியமும் பொருந்திய சற்கிருத்திய மென்னும் தளிரைப்பெற்று, நிர்மலமான மனமென்னும் தண்டினது நுனியிற் சேர்ந்து, விக்கினமாகிய முட்கள் நிறைந்திருக்கும் ஞானமாகிய ஒப்பற்ற தாமரை அரும்பானது, விவேக மென்னும் ஞான சூரியனால் விகசிதம் பெற்று, தனுமானசி யென்னும் மூன்றாம்பூமியை, சிரேட்டப் பற்றின்மையானது பிரயோசனமாகக் கொடுக்கும்.

## முதற்பூமி விசேடம்.

மயக்கம் நீங்கிய சத்துக்களினது சங்கத்தினாலும், நிட்காம கருமத்தின் சங்கத்தினாலும், (*) காகதாலீய ஞாயம் போல் சுபேச்சை யென்னும் ஞான பூமியானது மனதில் உண்டாகும், அகத்தில் அமிர்தமுளைக்கு இணையாக உதயமாகும். விவேகமாகிய நீரைப்பாய்ச்சி முயற்சித்துக் காத்து இரட்சிக்கப்பெறும் பற்றின்மையால், முதற் பூமியானது வளமிகுந்து செழிக்கும். விசாரணையினால் அந்தந்தப் பற்றின்மையை களங்கமற்ற உழவர்கள், தங்கள் பூமியில் நெல்

(*) காகதாலீயம் என்பது, காக்கை ஏறப் பனம்பழம் விழுதல்.

மூளையை வளர்ப்பதுபோல் நாடோறும் வளரச்செய்ய, அடுத்த பூமிகட்கு இந்த முதற் பூமிதான் சன்ன பூமியாக முடிவில் வெளிப்படும். அதிலிருந்து இரண்டாம் பூமியாகிய விசாரணையையும், மூன்றும் பூமியாகிய தனுமானசியையும் பெறலாம். ஆதலால் சகல பூமிகளையும் பெறுவதற்கு முதற் பூமியே காரண பூமியாகும்.

ஞான பூமிகளில், கீழ்ப்பூமிகளை சுவாதீனப் படுத்தாமல் மேற்பூமிகளிற் பிரவேசித்தல் இயலாது. ஒருக்கால் ஆயினும் பிரகாசம் நிகழாது. கீழ்ப்பூமிகளின் சித்திகளில் ஆசைப் பட்டு அவைகளை அப்பியாசிக்கிறவன், தூர தரிசனம் தூரக் கேள்வி முதலானவை யேற்படுகிற மேற் பூமிகளில் ஏற இயலான். ஆகையால் கீழ்ப் பூமியின் பிரவிருத்திகளை விட்டு மேல் நோக்க வேண்டும். ஒரு பூமிக்குமேல் இன்னபூமி யிருக் கிறதென்பது யோகிக்குத் தனக்குத்தானே புலப்படும்; அதன் தன்மைகளும் தெரியவரும்.

சிரேட்டமென்னும் பற்றின்மையை அடைந்தால் அதுவே மூன்றும் பூமியாகும். இப்பூமியைச் சம்பாதிக்கிற வன் எவ்விதச் சங்கற்ப விகற்பமும் இல்லாதவனாக இருக்க வேண்டும். முதன்மையான பூமி கிடைக்கிற பரியந்தம் பாவம் நீங்காது. காகதாலீய ஞாயத்தைப்போல் சன்மார்க்கம் கூடினால் அதனாலும், சாது சங்கப் பழக்கத்தினாலும் நிராசை யுண்டாகும். அதன்பின் ஞானபூமியைச் சேர்வது ஒரு போதுந் தப்பாது. ஞானபூமியைச் சேர்ந்து விட்டால் பவங் கள் நீங்கிவிடும். அப்போது மரணமானால் ஞானபூமி மூன்றி னுடைய அம்சத்தை விடாமல் அடைதலினால் பழைய தீவினைகள் நசிக்கும். அதன்பின் சம்பத்தும், சற்குணமும், பரிசுத்தமும், தயாள சிந்தையும், சிறப்பும் பொருந்திய சத்

துக்களினது இல்லத்தில் நிறைந்து, முன் செய்த தபோ பலத்தால் கிருட்டின பக்கத்துத் தேய்பிறையானது, தான் இழந்த கலைகளைத் திரும்பவும் சுக்கிலபக்கத்து வளர் பிறையில் தானே அடைந்து மிளிர்வதுபோல், மாட்சிமை தங்கிய பூர்வ ஞானத்தால் ஞானஞேயமாகி, சோடச கலைகளையுடைய பூரணச் சந்திரோதயம்போல் வழுவாமல், நிறைந்த மெய்ஞ் ஞான சுவானுபவ நிலையில் நிலைத்து நிற்பார்கள்.

கூர்ம புராணம்.

யோகமிடை விட்டுயி ருவந்தவர் விசும்பிற்
சோகமறு மின்பநனி துய்த்தவை தொலைந்தால்
வாகைபுனை மன்னர்மறை யோர்மரபி னெய்திச்
சேகறுமவ் வியோகமுற முத்தியிடை சேர்வார்.

கைவல்லிய நவநீதம்.

நாலாம்பூமியில் வருமுன் மூன்று பூமியுமடைந்து நடந்துமாண்டோர்
மேலானபதமடைந்து பிறந்துமெள்ள மெள்ளவந்து வீடு சேர்வார்
மாலான பவத்தில் விழார் முதற்பூமிகிடைப்பதுவே வருத்தமைந்தா
காலான முதற்பூமி கைவந்தால் முத்தியுங்கை வந்த தாமே.

மூன்று பூமியின் பயனும்—சாதகர்க ளிலக்கணமும்.

சுபேச்சை யென்னும் முதலாவது யோகபூமியை அடைந்தவர்களுக்கு ஞானமென்னும் வித்தானது முளைக் கும். இரண்டாவது பூமியில் மலர்தலென்னும் விகசிதம் பெறும். மூன்றாவது பூமியில் ஆசிரியர் என்னும் சற்குரு மூர்த்தியைச் சேர்ப்பிக்கும். இந்த மூன்று பூமிகளையும் அடைந்தவனே ஞானமார்க்கத்தில் நிலைபெற்று வாழ்வான் இந்த மூன்று பூமிகளிலும் சிவயோகிகளுக்கு உலகந்தோன் றிக்கொண் டிருத்தலால், இப்பூமி சாக்கிராவத்தை யாகும்.

இம்மூன்று பூமிகளும் முடிவாகிய மேல் பூமிகள்.





5. அசம்சத்தி. 6. பதார்த்த பாவனை. 7. துரியம்.

இஃது

மத்திய  பூமி.

4. சத்துவா பத்தி.





1. சுபேச்சை. 2. விசாரணை. 3. தனுமானசி.

இம்மூன்று பூமிகளும் ஆரம்பமாகிய கீழ் பூமிகள்.



### நான்காம் பூமி சத்துவா பத்தி.

இப்பூமியை அடைந்தவர்கள் சகல போக போக்கியங்களையும் இராக்காலத்தில் நித்திரையிற் காணும் கனவைப் போல, அவைகளைப் பகற்காலத்தில் கண் விழித்திருக்கும் போதே காணும் பகற் கனவாகக் கருதுவார்கள். ஆகையால் இந்த பூமி இராசயோகிகளுக்கு சொப்பனாவத்தையாகும்.

### ஐந்தாம்பூமி அசம்சத்தி.

இந்தப் பூமியை அடைந்தவர்கள், துவைத மென்னும் பேதம் நீங்கப்பெற்று. அகத்திற் பிரகாசிக்கும் பூரண ஞானமுடன் சுழுத்தி நிலையைப் பொருந்தி, சதாகாலமும் அந்தர் (உள்) முக நாட்டத்தில் பகிர் (வெளி) முகமாகிய புறத்திற் கிரியாகாரியங்களைப் புரிந்தாலும் உபசாந்தம் பெற்று, நித்திரை அதிகரித்தவர்களைப்போல் காணப்பெறுவார்கள். விசேடமான சற்பாவமே மிஞ்சினதெனவெண்ணுவார்கள். அதிக வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் மனமானது அடங்கிப்போவதினால், விகற்ப சங்கற்பங்கள் தோன்றாமல் விசேடங்களெல்லாம் கெடும்படி ஏகமாகிய சிவப் பிரமைக்கிய நிலையில் வைராக்கியமாய் நிற்பார்கள். இந்தப்பூமி இராச யோகிகளுக்குச் சுழுத்தி அவத்தையாகும்.

### ஆறாம்பூமி பதார்த்த பாவனை.

இந்தப் பூமியை அடைந்தவர்கள், நான் என்பதும் நானல்ல என்பதும், பெரிது, சிறிது, உள்ளது, இல்லாதது, உறவு, பகை என்பவைகள் நீங்கி அகங்காரக் கிரந்தியாகிய முடிச்சும், சந்தேகமுமில்லாமல், சீவன் முத்தத் தன்மையினால் நிருவாணமல்லாதவனும், நிருவாணமென்னும் வீட்டின்ப மில்லாதவனுமாய் காற்றில் அசையாத சித்திர தீபத்

திற்குச் சமானமானவர்களா யிருப்பார்கள். இந்தப்பூமி யோகிகளுக்கு துரியாவத்தையாகும்.

கைவல்லிய நவநீதம்.

[பால்
முற்புவிமூன் றினுமுலகந் தோன்றுதலாற் சாக்கிரமா மூன்றற்கப்
சொற்பனமா மதுவுமெல்ல நழுவுமைந்தாம் பூமியே சுழுத்தியாகும்
அற்புதமாஞ் சுவானுபவ மிகுமாறும் புவிதுரிய மதற்கப்பாலோர்
கற்பனை யிலாதவிடம் அதீதமென மௌனமாக் காட்டும்வேதம்.

## ஏழாம் பூமி துரியம்.

இப்பூமியை அடைந்தவர்கள் ஏதேனும் உள்ளவர்களைப் போலவும், ஏதுமில்லாதவர்களைப்போலவும் தோன்றுவார்கள். ஆறும் பூமியை அடைந்தவர்கள் ஏழாம்பூமியை அடைவது மிக்க எளிதாகும். ஏழாம் பூமியை அடைந்தவர்களை விதேக முத்தர்கள். எவர்களாலும் இத்தன்மையுடைய தென்று பிரித்தறிய முடியாத பகாப்பதமாகிய இந்த விதேக பூமியைப் பெற்றவர்கள் மிக அருமையே. விதேக பூமியை அடைந்த மகான்கள்தான், இவ்வுலகில் எப்போதும் மலைமேலிட்ட தீபத்தைப்போலும், சந்திர சூரியர்களைப் போலும் விளங்குகிறார்கள். நாலாம் பூமி, ஐந்தாம் பூமி இவைகளை அடைந்த மஹான்களது சமாதியாகிய சன்னி தானம், அதாவது தர்கா, மடம் முதலானவைகள் சிலகாலம் வரையில் விளக்கமா யிருக்கும். ஆறும் பூமி ஏழாம் பூமியை அடைந்தவர்கள் சன்னிதானம் ஊழிகாலங்கள்தோறும் பிர பலமாய் விளங்கிப் பேரேறி நிலைபெற்று நிற்கும்.

இந்த ஏழு பூமிகளில் முதன் மூன்று பூமிகளைத் தூலம் என்றும், நான்காவது பூமியைச் சூக்குமம் என்றும், ஐந்தா

வது பூமியைக் காரணம் என்றும், ஆறாவது பூமியைச் சைதன்னியம் என்றும், ஏழாவது பூமியை அதீதம் என்றும் சொல்லப்பெறும். இக்கப் பூமிகளை அடைவதற்கு நிராசையே உபபலமாகிய பற்றுக்கோடாகும். ஆசையே விரோதியாகும். ஆகையால், விடய வாழ்க்கைகளில் கிஞ்சிற்றேனும் ஆசை யில்லாதவர்களுக்கே மெய்ஞ்ஞான சுகம் உதயமாகும் என்பது நிச்சயம்.

ஞானவாசிட்டம்.

(1) இஞ்ஞான பதமேழு மிகவும் புந்தி
யெய்தினர்க்கல் லதுதோன்றா விவற்றை யெய்தி
லஞ்ஞான மிலேச்சனே யெனினுந் தேகி
யதேகியெனி னும்முத்த னைய மில்லை
மெய்ஞ்ஞான மென்பதுதான் மனத்தின் கட்டு
விடுதலிது பெறிலிதுவே வீடு பேறாம்
பொய்ஞ்ஞான கானலினீர் முதலா மோகம்
பொய்யெனப்போ மடமையும்பொய் யென்னிற் போகும்

(2) உளமொடுங்கு முபாயமே யோக மாகு
முணர்வுறுபூ மிகளிந்த வுபாய மாகும்
வளமிகுமிப் பூமிகளா லன்றி யிந்த
மாதேவ: பெரியபத மருவ லாகா
வளவறநீ நான்மூன்வே றொன்று மின்றி
யபேதமா யநாமயமா யமல மாகிக்
கிளர்சுகமாய்ச் சாந்தமா யறிவா யொன்றாய்க்
கேடின்றிப் பெயரின்றிக் கீழ்மே லின்றி.

# சீவன் முத்தி



## பத்தாவது அத்தியாயம்

கலி விருத்தம்.

பூவை யர்க்கிடை போந்தங் கிருப்பினும்
மாவ ழுங்கு வனத்தி லிருப்பினும்
யாவு மொன்றென் றியம்பிடு நான்கியற்
சீவன் முத்தர் செயலை விளக்குவாம்.

சீவன் முத்தர்கள் நான்கு வகைப் பெயருடையவர்கள். அவர்கள், முதலாவது பிரமவித்து, இரண்டாவது பிரம வரன், மூன்றாவது பிரமவரியான், நான்காவது பிரமவரிட்டன் என்பவர்கள்.

குறிப்பு:—ஞான சப்த (ஏழு) பூமிகளில், முதன் மூன்று பூமிக ளின் அதிகாரிகளாகிய சாதகர்கள் விபரம் முன் அத்தியாயத்திற் கூறி விட்டபடியால், இந்த அத்தியாயத்தில், நாலாம் பூமிமுதல் ஏழாம் பூமி வரையிலுள்ள நான்கு அதிகாரிகளாகிய சீவன் முத்தர்களைப் பற்றிச் சொல்லப் போகின்றோம். இவர்கள் ஞானசத்த பூமிகளின் நான்காம் பூமிக்கு முறையே, பிரம வித்தும், ஐந்தாம் பூமிக்குப் பிரம வரனும், ஆறாம் பூமிக்குப் பிரமவரியானும், ஏழாம் பூமிக்குப் பிரம வரிட்டனும் அதிகாரிகளாவார்கள்.

### 1. பிரமவித்து

சத்துவாபத்தி யென்னும் நான்காவது பூமியிலேறிய வருக்குப் பிரமவித்து என்று பெயர். இப்பூமியானது பிர பஞ்சத்தைச் சொப்பனத்தைப்போல் தோற்றுவிக்கும் குண

முடையதாதலால், சொப்பனவத்தை யென்றும், தியானிக்கப்படுகிற பொருள் பிரமவித்தினால் செவ்வையாக அனுபவிக்கப்பெறுவதால் * சம்பிரஞ்ஞாத யோக பூமி யென்றும் பெயர் கொள்ளும்.

இனிச் சொல்லப்போகின்ற 5, 6, 7-வது பூமிகளாகிய மூன்று பூமிகளில் தியானிக்கப்படுகிற பொருள் செவ்வையாக அனுபவிக்கப்படாததால் அசம்பிரஞ்ஞாத யோக பூமிகளென்று சொல்லப்பெறும்.

முன் அத்தியாயத்திற் கூறப்பெற்றுள்ள முதன் மூன்று பூமிகளால் சுத்த சத்துவமாகிய அந்தக் கரணத்திலுண்டாகும் "நான் பிரம்மம்" என்னும் சொரூபத்தையுடைய அபரோட்ச ஞான விருத்தியே சத்துவாபத்தியாகும். இந்தப் பூமியிலேறிய பிரமவித்துக்கள்தான், முன் குண்டலி சத்தி அத்தியாயத்திற் கூறிய அணிமாதி அட்டமாசித்திகளைச் செய்ய முயல்வார்கள்.

அபரோட்ச ஞானம்

‡ தத் என்பது என்ன? துவம் என்பது என்ன? என்று உபநிடத சிரவண மனனாதிகளால் மகானுபாவர்க

* சம்பிரஞ்ஞாத யோகபூமியிற் புரியும் தவத்திற்குச் சவிகற்ப சமாதி யென்றும், சம்பிரஞ்ஞாத சமாதி யென்றும்; அசம்பிரஞ்ஞாத யோக பூமியிற் புரியுந் தவத்திற்கு நிருவிகற்ப சமாதியென்றும், அசம்பிரஞ்ஞாத சமாதியென்றும் பெயர். இவற்றின் விரிவை வேதாந்த பாஸ்கரன் (2-ம் பதிப்பு) சமாதி பேதத் தலைப்பிற் காண்க.

‡ தத் - துவம் - அசி = தத்துவமசி. தத் என்பது அது என்னும் பிரம்மம். துவம் என்பது நீ என்னுங் கூடஸ்தன். அசி என்பது ஆகியிருக்கிறாய். தத் துவம் அசி = அது நீ ஆகியிருக்கிறாய் என்று பொருள். தத் என்பது தற்பதம். துவம் என்பது தொம்

னாகிய தக்கோரிடத்தில் விசாரணை செய்து, அவ்வவற்றி லுள்ள சகல சந்தேகங்களும் நீங்கி, அசி யென்னும் பதத்தி னால் அத்துவிதமாகிய ஐக்கிய நிலையைத் தானாக விளக்குத லே அபரோட்ச ஞானம்.

திருமந்திரம்.

சீவ துரியத்துத் தொம்பதஞ் சீவனார்
தாவு பரதுரி யத்தினிற் றற்பதம்
மேவு சிவதுரி யத்தசி மெய்ப்பதம்
ஓவி விடுந்தத் துவமசி யுண்மையே.

---

பதம். இவ்விரண்டும் இலக்கியார்த்தம். அசி என்பது அசிபதம். இது வாக்கியார்த்தம். தற்பதம், தொம்பதம், அசிபதம் இம்மூன்று பதங் களையும் அ. உ. ம. என்னும் பிரணவம் என்றும் கூறுவார்கள். தசேந்திரிய வியாபாரங்களை யறிகிற சீவனே வாக்கியார்த்தம். அந்தக் கரணத்தையும், அதன் விருத்திகளையும், தேகேந்திரியாதி வியாபாரங்களையும் நீக்கிக் கூடத்தனானதுவே இலக்கியார்த்தம்.

இதன் முழுவிபரம், சாமவேதம் சாந்தோக்கிய உபநிடதத்தி லும்; ஏனைய மூன்று மகா வாக்கியங்களில் பிரஞ்ஞானம் பிரம்மம் (சகலமும் உணர்கின்ற பிரக்ஞை அறிவென்னும் பிரத்தியகாத்மாவே பிரம்மம்) என்னும் வாக்கியத்தை இருக்குவேதம் ஐதரேய ஆரணி யக உபநிடதத்திலும், அகம் பிரமாஸ்மி (நான் பிரம்மமா யிருக் கின்றேன்) என்னும் வாக்கியத்தை எசுர்வேதம் பிரஹதாரணியக உபநிடதத்திலும்; அயமாத்மா பிரம்மம் (இவ்வாத்மா பிரம்மம்) என்னும் வாக்கியத்தை அதர்வண வேதம் மாண்டூக்கிய உபநிடதத் திலும் விபரமாகக் காணலாம்.

இவ் வாக்கியங்கட்கு பாஷியத்திலும், ஆனந்தகிரி வியாக்கியா னத்திலும் சங்கை சமாதான பூர்வமாக அதிக அர்த்தமுளது. அவற் றின் விரிவஞ்சி இங்கு விடுத்தனம்.

## பரோட்ச ஞானம்.

தேவலோகம், இந்திராதி தேவர்கள், அரம்பையர் முதலியவர் இருக்கிறார்கள் என்னும் புராணக் கூற்றைக் கேட்டு, இப்படித்தான் இருப்பர்கள், அப்படித்தான் இருப்பார்கள் என்று உத்தேசமாய் மதித்துக்கொள்வதுபோல், ஞானாசிரியரது உபதேச வாக்கியத்தால், தனது உண்மை வடிவம் இவ்வாறுதான் இருக்கும், அவ்வாறுதான் இருக்கும் என்று குறியாது குறித்துக்கோடலே பரோட்ச ஞானம்.

பிரமவித்து என்பவர் யாதோருபாயங்கட்கும் கலங்காத தீரமுடையவராகவும், ஐயந்திரிபின்றித் தன்னை நன்குணர்ந்து தெளிந்தவராகவும், தெளிந்துணரு முன்னரே, தமக்கு உரிமையாக ஏற்பட்ட வருணாச்சிரம தருமம் கன்மிகளுக்காகச் சொன்ன காரியமா யிருப்பினும், அவற்றைப் பிரபஞ்சத்தார்க்கு முன்னடையாகக் காணும்படி, விதி-விலக்கு என்னும் ஏவல் விலகலின் ஒழுங்குக் கிணங்கச் செய்து காட்டுபவராகவும் விளங்குவார். இவருக்கு காமக்குரோதாதிகள் எவ்விதச் சங்கற்பத்தாலேனும் வந்துவிட்டால், அவைகள் மின்னொளியைப் போலவும், நீர்மேற் குமிழியைப்போலவும் உடனே நீங்கிவிடும்.

சிவஞான வள்ளல்.

"பற்றறத் துறந்த ஞானப் பட்டினத் தடிகள் போலப்
பற்றறத் துறந்தே னில்லை"

கண்ணுடைய வள்ளல்.

"பட்டினத்துப் பிள்ளையைப் பத்ரகிரி யப்பரவி
விட்டுவிட மாட்டார் வெறுவீடர்"

தாயுமானவள்ளல்.

"பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல்
ஆருந் துறக்கை யரிதரிது"

"ஓட்டுடன்பற் றின்றி உலகைத் துறந்தசெல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ"

என்று ஆன்றோர்களால் வியந்து கூறப்பெற்றவரும், இவ்வுலகப் பிரபஞ்சமெல்லாம் அநித்தியமென் றறிந்து, தனது நவகோடி திரவியங்களையும் தெருவில் சூறையாடிவிட்டு, பற்றறத் துறந்து போய் அத்துவிதச் செல்வத்தை அடைந்தவரும், சீவன் முத்தருமாகிய திருவெண்காட னென்னும் பட்டினத்தடிகள் நாலாம்பூமியை அடைந்து, சஞ்சார சமாதி கொண்டெழுந்துலாவும் காலத்திலொருநாள், ஒரு தாசியை வீதியிற் கண்டு, அவளை ஆலிங்கனம் பண்ண விரும்ப, அவ்வுருத்திர கணிகை அந்தக் கருத்துக் கிணங்காமல் விரைந்து சென்றனள். அதை யுணர்ந்த அடிகள்,

வாய்நாறு மூழன் மயிர்ச்சிக்கு நாறு மையாடிடுங்கண்
பீநாறும் அங்கம் பிணவெடி நாறும் பெருங்குழிவாய்
சீநாறும் யோனி அழல்நாறும் இந்தியச் சேறுசிந்திப்
பாய்நாறு மங்கையர்க் கோவிங்ங னேமனம் பற்றியதே.

என்னும் பாசுரத்தை ஓதிவிட்டு அவ்விடத்தை நீங்கிச் சஞ்சரித்துக்கொண்டிருந்தனர்.

இங்கிவ்வாறிருக்க, பட்டினத்தடிகள் அபிப்பிராயத்திற்கு இணங்காமற் சென்ற தேவதாசியானவள் தன்து கிரகத்திற்குச் சென்று வழியில் தனக்கும் பட்டினத்தடிகளாகிய பரதேசிக்கும் நிகழ்ந்த சம்பவங்களைத் தாய்க்கிழவியிடத்தில் ஆதியோடந்தமாகச் சொன்னாள். அதைக் கேட்ட தாய்க்கிழவி, நெருப்பிலிட்ட புழுவைப்போல் மனம்

பதைத்து, அடி! பேதாய்! குளிக்கப் போனவள் சேற்றைப் பூசிக்கொண்டு வீட்டுக்கு வந்ததுபோல், நீ கோவிலுக்குச் சென்று, சுவாமி தரிசனஞ்செய்து. பிராரத்துவ கன்மமூட்டை கரையும்படி புண்ணியந்தேடச் சென்றவள், அறியாமையால் மகானுடைய கருத்துக்கிணங்காத மாபாதக மென்னும் பெரிய மூட்டையைக் கட்டிச் சுமந்து வந்துவிட்டனையே! சூரியனது வெப்பத்தைச் சகித்துக் கொண்டாலும், அத னுஷ்ணமடைந்த மணற்சூட்டைப் பொறுக்க முடியா ததுபோல், கடவுளுடைய கோபத்தைச் சகித்துக் கொண் டாலும், அவரது திருவருள் நிறைந்த மெய்யடியார்களு டைய கோபத்தை எவராலுஞ் சகிக்க முடியாதே? இனி இக் குடும்பத்திற்கு என்ன தீங்கு நேரிடப்போகிறதோ? இதற்கு என் செய்வேன்? என்று வாய்விட்டரற்றி, கீழே விழுந்து புரண்டழுவதைக்கண்ட அவ்விளங்கணிகை, விரை ந்து சென்று, பட்டினத்தடிகளை யெங்குந் தேடியுங் காணப் பெருமல் திகைத்து மனம் வருந்தும்போது, அடிகள் ஒரு திருவாசலில் அமர்ந்திருப்பதாகக் கேள்வியுற்றுச் சென்று கண்டு, பன்முறை பிரதட்சணம் வந்து நமஸ்கரித்து நின்று, ஞானமணி விளக்கே! கருணையங் கடலே! முத்திக்கரசே! பத்தரிதயத்தில் தித்திக்கும் அமுதே! சிவானந்தச் செல் வமே! குணக்குன்றமே! தேவரீரது பெருமையை அறியா மல் அடியாள் செய்த பெரும் பிழையைப் பொறுத்து சுவா மிகள் மனோரதத்தைப் பூர்த்தி செய்து என்னைக் காத்திரட் சிக்க வேண்டுமென மன்றுடிவருந்துவதைக் கண்ட அடிகள்,

தோடவிழும் பூங்கோதைத் தோகையுனை யிப்போது
தேடினவர் போய்விட்டார் தேறியிரு—நாடிநீ
என்னை நினைத்தால் இடுப்பில் உதைப்பேனுன்
உன்னை நினைத்தால் உதை.

என்னும் பாசுரத்தைக் கூறிவிட்டு, உடனே கிட்டையி லமர்ந்து விட்டனர் என்பதைக் கற்றவரும் மற்றவரும் அறிந்த விஷயம். ஆகலால் சீவன் முத்தர்களுக்கு காம இச்சையானது ஓர் காலத்தில் அபூர்வமாய்த் தோன்றிடினும், இந்திர தனு வைப்போல் உடனே மறைந்து போகுமேயன்றி நிலைபெற் றிராது.

கைவல்லிய நவநீதம்.

காமமா திகள்வந் தாலுங் கணத்திற்போம் மனத்திற் பற்றார்
தாமரை யிலைத்தண் ணீர்போற் சகத்தொடுங் கூடி வாழ்வார்
பாமர ரெனக்காண் பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்
ஊமரு மாவா ருள்ளத் துவகையாஞ் சீவன் முத்தர்.

இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் முக் காலங்களின் பலனாகிய சென்றகாரியத்தையும், அப்போது நடைபெறுஞ் சுகாசுகங்களையும், இனிக் கிடைக்கப்போவ தையும் கருதாமல், விருப்பு வெறுப்பற்று நிராசையாக இருப்பவரும், அவ்வப்போது கிடைத்த உணவைக் (காட் டாக்கினி தன்னுள் அகப்பட்ட பொருள்களை யெல்லாம் தகித்துவிடுந் தன்மைபோல்) இது வேண்டும்! இது வேண் டாம்! என்னுங் கருத்தின்றி விளங்குபவர்களே பிரம வித்து என்னும் சீவன் முத்தர்கள்.

கைவல்லிய நவநீதம்.

சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்
நின்றது புசிப்பார் வெய்யில் நிலவாய்விண் விழுது வீழ்ந்து
பொன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையா யொன்றும் பாரார்
நன்றுதீ தென்னுர் சாட்சி நடுவான சீவன் முத்தர்.

## 2. பிரமவரன்.

அசம் சத்தியென்னும் ஐந்தாவது பூமியிலேறியவருக்குப் பிரமவரன் என்று பெயர். இவருக்கு முன்பூமியிலுதயமான ஞானோதயத்தால் மனோநாசமாகித் தூக்கத்தில் நிர்ச்சலனமாகிய சுழுத்தி அவத்தையைப்போல் பிரபஞ்சமானது விகாரமின்றிச் சுகமாகத் தோன்றுதலால், இப்பூமிக்குச் சுழுத்தி அவத்தை யென்று பெயர் வந்தது. அட்டமாசித்திகளாலேயே இப்பூமியை அசம் சத்தி யென்னப் பெறுகிறது. இப்பூமியில் நிற்கும் யோகியானவர் பிறர் எழுப்பாமல் தானே சமாதியிலிருந்து விழிக்கின்றனர். தன் பசியைத் தன்னாலேயே அறிந்து உச்சிப் பொழுதில் ஊர்க்குட் சென்று யாசித்து ஓர்வேளையேனும் புசிப்பவர்.

## பிரமவரியான்.

பதார்த்த பாவனை யென்னும் ஆறுவது பூமியிலேறியவருக்குப் பிரமவரியான் என்று பெயர். இப்பூமி பரப்பிரமத்திற்கு அந்நியமாகிய அர்த்தங்களைப் பாவிக்கச்செய்யாது. இதில் நிற்கும் யோகியானவர் பிறர் எழுப்பினால் தான் சமாதியினின்றும் விழிப்பார். தன் பசியைப் பிறர் அறிந்து அவரிருக்குமிடந் தேடிவந்து வலிந்தூட்ட உண்பவர். இது காரணம் பற்றியே,

"இருக்கு மிடந்தேடி என்பசிக்கு அன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்—பெருக்க
அழைத்தாலும் போகேன் அரனேயென் றேகம்
இளைத்தாலும் போகேன் இனி. என்றும்

வாசற் படிகடந்து வாராத பிச்சைக்கிங்
காசைப்-படுவதில்லை அண்ணலே."

என்றும் பட்டினத்தடிகள் திருவாய்மலர்ந்தருளி யுள்ளனர்.

## 4. பிரமவரிட்டன்.

துரியம் என்னும் ஏழாவது பூமியிலேறியவருக்குப் பிரமவரிட்டன் என்று பெயர். இவர் சமாதியினின்று தானும் விழியார். பிறராலும் விழிப்பிக்கப்படார். சிறிய குழந்தையானது நித்திரையில் வலிய எழுப்பிச் சோறூட்டிய மாதாவை நோக்கி (தான் உண்டதை யுணராமல்) ஏன் எனக்கு இராத்திரிச் சோறு ஊட்டவில்லை? யென்று விழித்த பின் கேட்கும் மழலைப் பிள்ளையைப்போல் தானுண்டதை யுணராமற் சொக்கியிருப்பவர்.

இந்த நான்கு வகைத்தான சீவன் முத்தர்களும், தண்ணீருடன் சம்பந்தப்பட்டிருந்தும் சம்பந்தப்படாத தாமரையிலையைப்போல், பிரபஞ்ச வாழ்க்கையாரோடு பிரபஞ்ச வாழ்வுடையவராக வாழ்ந்தாலும் வாழ்வார்கள். மூடரைப்போலவும், ஊமைகளைப் போலவும் குற்றேவல் புரியும் பணிவிடைக்காரர்களைப்போலவும் பாவனை காட்டித் தனது மகத்துவத்தைப் பிறர் அறியாத வண்ணமும், அங்ஙனம் அறிந்தவவர்கள் வந்து தன்னை இம்சிக்காத வண்ணமும், பாலரைப்பேலவும், பித்தரைப்போலவும் பிதற்றித் திரிவதுடன், தன் மனமானது பகிர் முகத்திற் செல்லாதபடி மனத்துடன் பேசிப் புன்னகையுடன் சஞ்சரித்தாலும் சஞ்சரிப்பார்கள்.

சிவஞானவள்ளல்:

மூடனைப்போ லேயிருப்பன் முத்தனெனச் சொற்றால்
ஈடு பொருந்துமே எங்கோவே—சீடாகேள்
துக்க விடயம் சுகவிடயம் துய்த்தாலும்
பொய்க்குதிரை யேறுவான் போல்.

ஒரு பெண் நீண்டகாலமாக மலடாயிருந்து, பின்னர் அருமையாகப் பெற்ற குழந்தையானது, பிள்ளைகளுடன் விளையாடப் போயிருந்தபோது தவறிப்போய் வீட்டுக்கு வாராதிருந்தால், அதன் தாய் கண்ட கண்ட விடங்களிலெல்லாந் தேடியலைந்து அழுதும் கிடைக்காமல், எங்கேனுமிருந்து தெய்வகதியாய் வந்து சேர்ந்தால், அக்குழந்தையைக் கட்டியணைத்து அழுது, முன்னர் அவனைப் பெறாத காலத்தையும், இப்போது அவனைப் பெற்றதையும், தவறிப்போய் வந்து சேர்ந்ததையும் நினைந்து நினைந்து, தவறிப்போய் விடப்பார்த்தானே! யென்று புன்சிரிப்புக் கொள்வாள். அதுபோல் ஞானிகள், முன் அதிதீவிர பக்குவியாயிருந்தபோது நெடுநாளாகச் சற்குருவைத் தேடி யலைந்தும் கிடைக்கப் பெறாமல், தெய்வ எத்தனத்தால் மூடவனுக்கு கொம்புத்தேனும், தரித்திரவானுக்குப் புதையலும் வலியக் கிடைத்ததுபோல் சற்குரு மூர்த்தியானவர் எதிர்ப்பட்டுத் தத்துவ ஞானத்தை உபதேசிக்கப் பெற்றுத் திருவருட் பிரகாசத்தைக் கண்டபின், தான் சற்குருகிடைக்குமுன் திருவருளைப் பெறாமல் நெடிய வாணாளானது வீணாளாகக் கழிந்ததையும், இப்போது அக்காலங்களுள் ஓர் காலத்திலாவது கண்டுங் கேட்டு மிராத திருவருளைக் கண்டுகொண்டதையும் நினைந்து களித்து, இந்தத் திருவருளிருந்தவாறென்னே! யென்று ஆனந்த நிர்த்தனஞ் செய்து, அத் திருவருளைத் தோத்திரம் பண்ணி ஆனந்தக் கண்ணீர் விட்டு, இத்தன்மையான திருவருளைப் பெறுவதற்கும் நமக்குப் பிராரத்துவம் இருந்ததே! யென்று ஆனந்த மேலீட்டால் அழுகையுடன் சிரித்துக் கொண்டு மிருப்பார்கள்.

பிரபஞ்சத்தவர்கள் ஞானிகளைப் பார்த்து உலகநடை தெரியாத பேயொன்று சிரித்துப் பரிகாசம் பண்ணிக்கொண்

டிருக்க, ஞானிகள் அப்படிச் சிரித்துப் பரிகாசஞ் செய்பவரை, ஞானநெறி இன்னதென்றறியாத மும்மலப் பேயரென்று கருதித் தானும் சிரிப்பார்கள். ஆதலால் ஞானிகள் நடைக்கு உலகர் நடை மாறுபாடாயும், உலகர் நடைக்கு ஞானிகள் நடை மாறுபாடாயும் இருப்பது சிந்திக்கத்தக்கது.

## சீவன் முத்தரும் செகப்பித்தரும்.

பள்ளிக்கூடத்தில் முதற்பாட புத்தகம் வாசிக்கும் பிள்ளைகள், ஏற்கனவே முதற்பாடமும் - இரண்டாம்பாடமும் மூன்றும்பாடமும் வாசித்து, இப்போது நான்காம்பாட புத்தகம் வாசிப்பவனை நோக்கி, 'நீ ஒன்றுந் தெரியாத பேயனுயிருக்கிறாய்? எங்களைப் போல் முதற்பாட புத்தகத்தை வாசிக்காமல் எங்களுக்குப் பிரயோசனமாகாத ஏதோ ஒரு புத்தகத்தை வாசிக்கிறாயே? இனிமேல் அதை விட்டுவிட்டு எங்கள் வகுப்பில் வந்திருந்து முதற்பாட புத்தகத்தைப் படிக்காவிட்டால் நாங்கள் நிந்திப்போம்' என்று இகழ்ந்தனவாம். அதுபோல் ? சரியையும் - சமயமுமாகிய முதற்படியிலேயே இருந்து, கடவுளின் உண்மையான தியானமின்றி தூங்கி விழுந்து கொண்டிருக்கிற சிற்சிலர், நாம் கெட்டுப் போவதுபோல் பிறருங் கெட்டுப்போக வேண்டுமென்று நினைக்கும் வாலிழந்த நரியைப்போல் எண்ணியோ! வேறெந்தக் காரணத்தை உத்தேசித்தோ! சரியை, கிரியை, யோகம் என்பவைகட்கு முறையே ஷரீஹத்து, தரீக்கத்து, ஹக்கீக்கத்து என்பவற்றைக் கடந்து மஹ்ரிபத்தென்னும் ஞான வீட்டிலிருக்கும் சமயாதீதராகிய மெஞ்ஞானிகள் நடையைப் பார்த்து ஆசாரமில்லாதவனென்றும், தொழுகாதவனென்றும், வணங்காதவனென்றும் பற்பல விதமாக வாய்க்கு வந்தபடி பயித்தியம் பிடித்தவர்களைப் போல் பிதற்றுவார்கள்.

இவர்களிவ்வாறு பிதற்றிக் கொண்டிருக்க, விவேகிகள் அறிந்துணர்ந்து போற்றிப் புகழ்ந்து வணங்குவார்கள்.

### ஞானிகள் சிரிப்பு.

உலக நடைக்கும் ஞானிகள் நடைக்கும் இவ்வளவு ஏற்றத்தாழ்வு இருப்பதனாலேயே பொய்யை மெய்யென்று கருதித்தான் கெட்டுப்போவதுமன்றி, பிறருந் தன்னைப்போல் கெட்டுப்போகவில்லையே யென்று நினைத்து மகான்களை நிந்திக்கும் மதப்பேயர்களைப் பார்த்து, இவ்வுலகத்தில் இப்படியும் நிர்மூடர்களிருக்கிறார்களே! இவர்களுக்கு எந்தக் காலம் உண்மை விளங்கப்போகிறதென்று ஞானிகள் சிரிப்பார்கள்.

### தாயுமானவள்ளல்.

"பாலரொடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே.

### குணங்குடிவள்ளல்.

"வேசைய ராசையை வேரோ டறுக்கவும்
வெற்றிக் கொடிகட்டி மீசை முறுக்கவும்
பேசறி யாவூமர் போல்நா னிருக்கவும்
பேயரைப் போலும் பிதற்றிச் சிரிக்கவும்."

### திருவிளையாடற்புராணம்.

ஒழித்த நோன்பினர் ஆடலர் பாடலர் உலகம்
பழித்த செய்கையர் அழுகையர் நகையினர் பாசங்
கழித்த கண்ணினொ லானுருக் கண்டுகொண் டுலகில்
விழித்த கண்குரு டாத்திரி வீரரும் பலரால்.

### மூத்தர் மனம் மோனத்தே.

ஓர் மட்டமங்கையானவள் தனது காவு புருடனைச் சையோகித்து மதன் சுகத்தை யடைந்த பின் அவள் மன

மானது வீட்டிலுள்ள பல தொழில்களைச் செய்து கொண்டிருக்கும்போதும் அந்த இன்பத்தையே ஆர்வத்துடன் நினைந்து நினைந்து சிந்தித்துக்கொண்டிருப்பாள். அதுபோல் சீவன் முத்தர்களாகிய முமுட்சுக்கள் உலக வியாபாரத்திற் கலந்து விவகாரம் பேசிக்கொண்டிருந்தாலும்.

பிரபுலிங்க லீலை.

ஆடுநர் தம்முட னாடு நல்லிசை
பாடுநர் தம்முடன் பாடு மென்மலர்
சூடுநர் தம்முடன் சூடும் வாள்விதிர்த்
தோடுநர் தம்முட னோடு மல்லமன்

என்று கூறியதுபோல் சங்கீதம் பாடிக்கொண்டிருந்தாலும், ஆடையாபரண அலங்கிருதராய்ப் பரிமள களப கஸ்தூரிகள் திமிர்ந்து, குதிரை முதலிய வாகனங்களில் ஆரோகணித்தும், பொற்சிவிகை முதலிய வாகனங்களில் ஊர்ந்தும் விநோதங்கள் புரிந்தாலும், வேறு எவ்விதக் கிருத்தியங்களைப் புரிந்தாலும் அவ்வமயங்களினும் தனது எதார்த்த சொரூபத்தில் மனதைச் செலுத்திக் கொண்டிருப்பார்கள்.

பட்டினத்தடிகள்.

எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கு மோனத்தே—வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
தாதிமன நீர்க்குடத்தே தான்.

சோரநாயகனைக் கூடிப் புணர்ந்தனுபவித்த சுகமானது அங்ஙனம் புணர்ந்தவளுக்கே தெரியுமன்றி ஏனைய மனிதர்களுக்குத் தெரியாது. அதுபோல் சீவன் முத்தர்கள் எத்

தொழிலைச் செய்துகொண்டிருந்தாலும் அவர்களது சமாதி நிலை கெடாது என்பது அவ்வித அநுபவிகட்கே தெரியுமன்றி மற்றவர்கள் அறிந்துகொள்வது மிக்க அருமை. ஏனென்றால், 'கிணற்றுத் தவளை நாட்டு வளப்பம் அறியாது' என்பது போல், மாயாந்தகாரத்தில் மூழ்கிக் கிடப்பவர்கட்கு ஞானிகளின் நடை ஒருபோதும் தெரியாது.

தாயுமானவள்ளல்.

"பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை
பெறாப்பேதை யறிவாளோ."

விஞ்ஞானசாரம்.

மருளை யுடைய பித்தனையும் மருளில் லாத சுத்தனையும்
மருளை யிலரே துணிவாக மதிக்கு மதுபோ லீதன்றே
தெருளை யுடைய ஞானியையும் தெருளில் லாவஞ் ஞானியையும்
தெருளை யுடையோ ரேதுணிவாய்த் தேறு மவர்சொல் நடையிலு
[மே.

சிவஞான வள்ளல்.

அரியணையி லிருந்துலக வரசாட்சி புரிந்தாலும்
அங்கை யேற்றுத்
தெருவுதொறுந் திரிந்திரந்து தின்றாலு மிளம்பருவத்
தெரிவை மாரைப்
பிரியாம லிருந்தாலும் பிரிந்துதவம் புரிந்தாலும்
பேசிற் றெல்லாம்
விரிசீவன் முத்தனுக்கிங் குடன்பாடே யன்றியொன்றும்
விரோத மின்றே.

மாணிக்கப் பெருமை மழலை யருமை.

மாமரமானது குளக்கரையின்மேல் ஆகாயத்தை நோக்கி நின்று கொண்டிருக்க, அம்மரத்தின் நிழலானது தண்ணீரில்

கீழ்முகமாகத் தோன்றுகின்றது. அது போல், இல்லற ஞானிகள் மெய்ப்பொருளாகிய பிரம்ம நிலையையே சிந்தித்துக் கொண்டிருந்தாலும் பார்வைக்கு குடும்பத்தாரைப் போல் தோற்றப் பெறுவார்கள்.

இரத்தினப் பரீட்சை அறியாத ஒருவன் வயிர மணியைக் கூழாங் கல்லென்று நினைத்துக்கொண்டால் அது வயிரத்துடைய குற்றமாகுமா? அதுபோல், மகான்களுடைய இலக்கணங்களைச் சவித்தாரமாகச் சொல்லும் நூற்களையும், சாது சங்கத்தையும் ஒரு காலத்திலாவது பார்த்தறியாதவன் இல்லற ஞானிகளைச் சாதாரண இல்லறத்தானென்று நினைத்துக் கொண்டால் அது மகான்களுடைய குற்றமாகுமா?

பிரபுலிங்கலீலை.

யாக்கை தாமென் றிருந்தழி கின்றவர்
ஊக்கி லாவறி வாகி யுடம்பொடு
தாக்கி லாதவர் தம்மையுந் தாமென
நோக்கு வாரவ ருண்மையை நோக்குறார்.

கூத்த ளுடகக் கோல நடிப்பினைப்
பார்த்து வாய்மையென் றெண்ணிலர் பாருளார்
ஏத்து ஞானிதன் யாக்கை நடிப்பினை
யோர்த்து மாதவ ருண்மையென் றுன்னுறார்.

வீரியம் பேசினும் காரியத்திற் கண்.

வீணை, பிடில், ஹார்மோனியம் முதலான வாத்திய (இசை)க் கருவிகள் தன்னை இயக்குவோன் இய(வாசி)க்கும் போது பாடகனுடைய பாட்டுக்குத் தக்கபடி பேசிவிட்டு வாசிப்பதற்கு முன்னும் வாசித்த பின்னும் பேசாமலிருக்கும்.

அதுபோல், இல்லற ஞானிகள் தமது காரியக்காரர்கள் வந்து ஏதாவது காரியங்களைப் பற்றிப் பேசும்போது மாத்திரம் பேசிவிட்டு இதர சமயங்களில் தனது நிலையிலிருந்து நீங்காமல் மௌனமாக இருப்பார்கள்.

ஆகாயம் (வெளி) எல்லாப் பொருள்களுக்கும் இடங் கொடுத்து நின்றும், தான்மாத்திரம் அவற்றோடு தாக்கற்று நிற்கும். அதுபோல், குடும்ப ஞானியானவர் குடும்பத்திற்குத் தான் பிரதானமாயிருந்தும் சதாகாலமும் சேற்றிலே வசிக்கிற பிள்ளைப்பூச்சி சேற்றாடிருந்தும் சேறொட்டா திருப்பதுபோல், குடும்ப பாரத்தில் தாக்கற்றிருப்பார்.

அத்துவிதவுண்மை.

சொரூபநாமே யெனத்திடமாய்த் துணிந்தபேர்க ளில்லறத்தை
மருவிநீங்கா திருந்திடினும் மற்றோர்குறையு மவர்க்கில்லை
சொரூபநாமே யெனத்திடமாய்த் துணியாதவர்க ளில்லறத்தை
ஒருவிநீங்கி னதுகொண்டே யுளதோமுத்தி பவமதுவே.

விரதமும் - வேடமும்.

புலாலையே அதிகப் பிரியமாகப் புசிக்கும் பூனையானது இனிப் புலாலைப் புசிப்பதில்லை, கொல்லா விரதத்தை யனுசரித்திருக்கின்றேன் என்று உருத்திராக்கம் கட்டிக்கொண்டாலும், அதன் இயற்கையான தொழிலை ஒருபோதுங் கைவிடாதென்பது யாவரும் அறிந்த விஷயம்.

முன்னொரு காலத்தில் ஒரு பூனையானது எலிக்குஞ்சுகளை நிர்மூலம் பண்ண நினைத்து தாயெலியிடத்திற் போய், இதோ! பார்! உருத்திராக்கம் கட்டியிருக்கிறேன். 'இனி

சீவவதை செய்யமாட்டேன்' என்று சத்தியஞ் செய்து கொடுத்து, தாயெலியில்லாத சமயம் பார்த்து நாளுக்குநாள் ஒவ்வொரு குஞ்சாகப் பிடித்துத் தின்றுவிட்டதென்று பற் பல கதைகளுண்டு. ஆகையால் பூனையின் விரதம் வெளி விரதமேயன்றி உண்மையான விரதமல்ல.

சாகபட்சணியாகிய ஆடு-மாடுகள் மாமிசத்தினிடையே நிற்பினும் அதை ஒருபோதும் புசிப்பதில்லை. பன்றியானது மலம் புசிப்பதை விட்டிருந்தாலும் மேல் நிலைமைக்கு வாராது. பசுவானது, மலம் முதலியவைகளைத் தின்றாலும், விக்கிரக ஆராதனையுடையவர்களால் பூசிக்கப்பட்டு பெருமை வாய்ந் திருப்பதுடன் இனிய பாலைத் தரும் காமதேனு என்று சொல் லும்படியான தெய்வப் பசுவாக விளங்குகின்றது. அவை போல், கடவுளிடத்தில் அன்பில்லாத பூசாண்டிகளாகிய வே சாண்டிகள் வனிதாதி போகபோகபோக்கியங்களை வெறுத்து, (புலியானது புல் மேய வருகிற பசுக்களைப் பிடித்துத் தின்ன, தானும் பசு வேடம் போட்டு நிற்பதுபோல்) காவி வஸ்திர தண்டு கமண்டல தாரியாய்மட்டும் நிற்பதில் பிரயோசன மில்லை. அறிவின் மிக்கோர் வனிதாதி போகங்களுக்கிடையே செறிந்திருப்பினும் அறிவுடையோர்களால் பூசிக்கப் பெற்று வாழ்வார்கள்.

சிவஞான வள்ளல்.

நல்லாரைப் போன்றிட் டிருப்பினும் வஞ்சகர் நல்லரல்லர்
பொல்லாரைப் போன்றிட் டிருப்பினும் நல்லவர் புண்ணியரே
இல்லாச மாய்மலர் கொண்டெறிந் தானன் றுருவழிந்தான்
கல்லா லெறிந்தவன் முத்தி பெற்றான்கச்சி யேகம்பனே.

நீதி வெண்பா.

கற்பூரம் போலக் கடலுப் பிருந்தாலுங்
கற்பூர மாமோ கடலுப்பு—பொற்பூரும்
புண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியரா வாரோ புகல்.

மூதுரை.

அட்டாலும் பால்சுவையிற் குன்ரு தளவல்ல
நட்டாலு நண்பல்லார் நண்பல்லர்—கெட்டாலும்
மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு சுட்டாலுந்
தான்மிக்க வெண்மை தரும்.

மகாவிட்டுணுவும் - மண்டூகமும்.

பிருதிவி முதல் நாதமீருயுள்ள ‡ முப்பத்தாறு தத்துவங்களின் மேற்பட்டிருக்கும் பிரம்ம சைதன்னியத்தில் திருவருளை யடைந்த மெய்ஞ்ஞானிகள் குடும்பிகள்போ லிருப்பதை பஞ்சேந்திரியங்க ளென்னும் அதிகாரியின் கட்டளைப்படி ஊழியஞ்செய்யும் அடிமைகளாகிய சில பிரபஞ்சத்தவர்கள் கண்டு, இவரும் நம்மைப்போன்ற குடும்பத்தர்தான். அவரும் மனிதன், நாமும் மனிதன். அவரும்

‡ ஆன்ம தத்துவம் 24. வித்தியா தத்துவம் 7. சிவ தத்துவம் 5, ஆக தத்துவங்கள் 36, இந்த முப்பத்தாறு தத்துவங்கட்கும் மேற்பட்டு (அதீதமாய்) இருப்பதுவே ஆன்மா என்னும் பிரமம். தத்துவம் 36-ம், ஆன்மாவுக்கு விடய ஞானம். ஆன்ம தத்துவம் நட்சத்திரங்களைப்போலும், வித்தியாதத்துவம் சந்திரனைப் போலும், சிவதத்துவம் சூரியனைப்போலுமுள்ளது. காட்சி கண்ணை யறியாததுபோல் இக்கருவிகள் 36-ம் ஒன்றையொன் றறியாமலும், தத்தங்குணங்களைத் தாமே யறியாமலும் ஆன்மாவை யறியாதிருக்கின்றன. ஆகையினலேயே இத்தத்துவங்கள் ஆன்மாவுக்குப் புறம்பாக விருக்கின்றன.

குடும்பியாகத்தானிருக்கிறார். நாமும் குடும்பியாகத்தானிருக்கிறோம் என்றெண்ணி, அவர்கள் சில கிரியைகளைச் செய்யாவிட்டால் நிந்திப்பது எப்படி யிருக்கிறதெனில்; திருப்பாற்கடல் நடுவில் பன்னக சயனத்தில் யோக நித்திரை செய்து கொண்டிருக்கும் மகாவிட்டுணுவை நோக்கி, அக்கடலில் வசிக்கும் தவளையானது 'ஏ! பெருமாளே! நீரும் இந்தப் பாற்கடலிலே மிதந்து துயில்கின்றீர். நானும் இந்தக் கடலிலே மிதந்து துயில்கின்றேன். உமக்கும் (*) அரி என்று பெயர்; எனக்கும் அரி என்று பெயர். ஆதலால் நாம் இருவரும் ஒரே தன்மையுடையவர்களாயிருந்தும், நீர் என்னைப்போல் ஓடி ஆடித் திரியாத காரணமென்னவென்று கேட்டதை நிகர்க்கும். அன்றியும் மெய்ஞ்ஞானிகளும்-சாதாரண மனிதனும் சம்சாரமென்னும் சாகரத்தில் விழுந்து விட்டாலும், மெய்ஞ்ஞானிகள் ஒரு மரத்துண்டைப் பிடித்துக் கொண்டு சமுத்திரத்தில் நீந்துபவர்களை நிகர்ப்பார்கள். சாதாரண மனிதனோ! தன்மீது கட்டிய கல்லுடன் சமுத்திரத்தில் விழுந்து இறந்து போகிறவனையும் நிகர்ப்பான்.

### அத்துவிதானுபவம்.

சகலமறிந் தாசையில்லா மெய்ஞ்ஞானி எத்தொழில்கள்
தான்செய் தாலும்
மிகசாம்பி ராச்யமுதற் பரமபதத் துள்ளசுக
மெல்லாஞ் சேர்வான்
அகல்கருமம் ஒன்றுண்டோ இரண்டுண்டோ பிறவியுண்டோர்
அவித்தை யுண்டோ
சுகமயமோ மெய்யறிவோ சற்குருவோ அவன்மகிமை
சொல்லொண் ணாதே.

(*) அரி என்பது—விஷ்ணுவுக்கும், தவளைக்கும் பெயர்.

## ஆனந்த நித்திரை.

பூமியின்கண் ஒரு பொருளைப் புதைப்பதற்கும், புதைத்த பொருளை யெடுப்பதற்கும் பூமியையே தோண்டுவார்கள் ஒரு குழந்தை தூங்குவதற்கும், விழிப்பதற்கும் தொடையையே தட்டுவார்கள். அவைபோல், குடும்பத்திலிருக்கிற மெய்ஞ் ஞானி, தன் மனைவி முதலிய குடும்பத்தினர்கள் வந்து எழுப் பும்போது அகமுகமாய்த் தற்போத ஒழிவில் நிலை நின்று ஆனந்த நித்திரை பண்ணுவார். அஞ்ஞானிகள், தன் மனைவி முதலிய குடும்பத்தினர்கள் வந்து சருவுந்தோறுஞ் சகமுக மாய் நின்று மதுவுண்ட வண்டைப்போல் மயங்கிக் கிடப்பார் கள். ஆகையால், படிகமணியிற் பற்றுகின்ற பஞ்சவர்னம் மாணிக்க மணியிற் பற்றாத பான்மைபோல், குடும்ப வாசனை யில் அஞ்ஞானிகளுக் கிருக்கும் மயக்கம் மெய்ஞ்ஞானிகளுக் கிருக்கமாட்டாது. இதை நிதானித்து ஆராய்ந் துணர் பவர்களுக்குத் தெரியாமலும் போகாது.

## ஞானிகள் கோலம்.

மதமேறுதற்கு முன்னும் சிறப்புவாய்ந்த யானையா னது, கன்னமதம் - கபோலமதம் - கைமதம் என்னும் மும் மதங்கள் ஏறினபின் தடை கடந்து சஞ்சரித்தாலும், மேன் மேலும் அதிக சிறப்பேயன்றி அதை இழிவாகச் சொல்லு பவரில்லை. அதைப்பார்த்து, எப்போதுமே கீழ்வகுப்பாக எண் ணப்பட்ட நாயானது, தானிருக்கவேண்டிய வரன் முறை யைக் கடந்து தடைமீறினால், இந்த நாய் பயித்தியம் பிடித் திருக்கிறதென்றெண்ணப்பட்டு பலபேர்களாலும் அடி உதை பெற்றுச் செத்துப்போகும். அதுபோல், மெய்ஞ்ஞானி யானவர்கள் வரன்முறை கடவாதிருந்தபோதுஞ் சிறப்புப் பொருந்தினவர்களாதலால், அவர்கள் ஆனந்த மேலீட்டால்

வரன்முறை கடந்தபோதிலும், இன்னும் மாட்சிமையாகக் கொண்டாடப்படுவரேயன்றி, ஒருவராலும் இழிவாகச் சொல்லப் பெறார் என்பது, அறிவுள்ளோர் நன்கறிந்த விஷயம். அதைப் பார்த்து, பிரபஞ்ச வாழ்க்கையைப் பொருந்திய கன்மியானவன், நிலைகடவாத முன்னும் ஞானிகளுக்கு இழிவாயுள்ளவனாயிருந்தும், தற்போதச் சேட்டையினால் தானிருக்க வேண்டிய வரன்முறையைக் கடந்து நின்றால், இன்னும் அதிக இழிவைப் பெற்றுப் பலராலும் நிந்திக்கப்படுவானே யன்றி மாட்சிமை பெறமாட்டான். ஆதலால், ஞானிகள் தடைமீறினாலும், குடும்பத்தன் தன்னுடைய நிலையிலிருந்து மீறி நடக்கக்கூடாதென்னுங் கருத்தையடக்கி,

கண்ணுடைய வள்ளல்.

ஆனை மதப்பட்டால் அலங்கார மன்றிநாய்
தானு மதப்பட்டாற் சரியாமோ—ஞானி
தடைமீறி னாலுஞ் சதிராகுங் கன்மி
கடைமீற லாகாது காண் என்றனர்.

எவரும் வாகனமாகக் கருதப்படாத இழிவுதங்கிய நாய், கழுதை முதலியவற்றில் ஒருவன் ஆரோகணித்து, கண்டோர் நகைக்கும்படி சவாரி செய்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அவன் அந்த வாகனத்திலிருந்து கீழே விழுந்தாலும், அல்லது அதை நடாத்திச் சென்றாலும் அவனுக்கு இகழ்ச்சியும் புகழ்ச்சியும் தோன்றாது. அது போல், ஞானிகள் "ஆனாலுமிந்த வுடம்போடிருப்ப தருவருப்பே" என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கையும்,

"எல்லாப் படியாலும் எண்ணினால் இவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய் புன்குரம்பை—நல்லார்
அறிந்திருப்பார்" ...

என்னும் ஔவைப்பிராட்டியார் திருவாக்கையும் நன்குணர்ந்தவர்களானதால், ஆன்றோர்கள் இகழ்ச்சி செய்யா நின்ற, இந்தத் தூலசரீரத்தை தனக்குத்தானே வெறுத்திருப்பார்கள். அத்தன்மையான கேவலந்தங்கிய இந்தத் தூல சரீரத்தைப்பார்த்து ஒருவர் இகழ்ந்தாலும் புகழ்ந்தாலும் தோலையும் தசையையுந் தானே இகழ்கிறார்கள், நாமாகிய ஆன்மாவைப்பார்த்து அவர்கள் இகழவும் புகழவுமில்லை; ஆகலால் இகழ்ச்சியும் புகழ்ச்சியும் நமக்கல்லவென்று நிர்ச்சலனமா யிருப்பார்கள்.

## எல்லாம் ஒன்றே!

திருவெண்காடரென்னும் பட்டினத்தடிகள், எல்லாச் செல்வங்களையும் நீத்து வெளியேறிப் பல விடங்கட்கும் போய், ஆங்காங்கே பல அற்புதங்களை யியற்றி, ஒரு சமயம் கொங்குநாடு சென்றிருந்தபோது, அங்குள்ள பேரையூர் அவிநாசி, முருகன்பாண்டி முதலிய திருப்பதிகட்குச் சென்று வாய்பேசா மௌன விரதத்துடன் சஞ்சரிக்கையில் ஒரு நாள் நள்ளிரவில் அவருக்கு வடவைக் கனல் போலப் பசித்தீ யெழுந்து வருத்தியது. இதைத் தாங்க முடியாமல் ஒரு மூர்க்கனுடைய வீட்டுத் தலைவாயிலில் நின்று கையைத் தட்டி தமக் கேதாவது கொடுக்கும்படி சாடை காட்டினார்.

அதைக் கண்ட அம்மூர்க்கன் அவருடைய பெருமையை யுணராமல், தன் மனைவிபால்வந்த காமக் கள்வனென்றெண்ணி, உடனே ஒரு தடியை யெடுத்துக்கொண்டு ஓடி வந்து, அவர்மீது மாறி மாறி யடித்துத் தீங்கு செய்தான். அப்போது பட்டினத்தார் நின்ற நிலை பெயராமல் சிவ! சிவ!! என்று செபித்துக்கொண்டு நின்றார். இச்செய்கையை

அடுத்த வீட்டுப் புறந்திண்ணையிற் படுத்துப் பார்த்துக் கொண்டிருந்த அவ்வீட்டுக்காரன், பட்டினத்தடிகளை மகானென்று நினைத்து ஓடிவந்து அம்மூர்க்கனை விலக்கி, 'அடா! அறிவிலியே! அவர் சிவயோகத்திற் சிறந்த பெரியவரன்றோ? இவர்க்கேன் இந்த தீங்கு செய்தனை ? யென்று அவனை நிந்தித்துப் பேசிவிட்டு, அடிகளை வணக்கத்துடனே அழைத்துச் சென்று தன் வீட்டில் அவருக்குத் திருவமுது படைத்து, பசிப்பிணியைத் தணிவித்து உபசரித்தான். இங்ஙனம் இருவர் செய்கைகளையுங் கண்டும், ஒருவனை இகழ்ந்தும், ஒருவனைப் புகழ்ந்துங் கூறாமல் பொதுவாகச் சிவபெருமானுடைய திருவருளைமாத்திரம் நினைத்து

பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர் சற்றல்லவே.

என்றார்.

## ஞான சமரசம்.

மெய்ஞ்ஞானிகள் குடும்பத்தோடு கூடியிருந்தும் தாசிகளைப் போலும்; பொன் முதலிய பொருள்களைப்போலுமிருப்பார்கள். தாசியானவள், தன்மீது மோகங்கொண்டு தேடிவந்த இளைஞர்கள்மீது தானும் மோகங் கொண்டவள் போல் வாக்கு, காயங்களில் மாத்திரம் பாவனைகாட்டி, மனத்தில் அவர்மீது ஆசையே யில்லாமல் எள்ளுக்குத் தக்கபடி எண்ணெய் அளந்து காட்டுவதுபோல், பொருளுக்குத் தக்கபடி போகத்தை அளவாய்க் கொடுத்து, மேன்மேலும் பொருள் வாங்குவதிலேயே கண்ணும் கருத்துமாயிருப்பாள். அதுபோல் தன் மனைவி முதலிய குடும்பத்தார் தன்

மீது பிரியம் வைத்திருக்க, தானும் அவர்கள்மீது அதிகப் பிரியமுள்ளவர்போல் வாக்கு, காயங்களில் பாவனை காட்டி, மனதில் கிஞ்சிற்றேனும் பிரியமில்லாமல், பேசுவதற்குத் தகுந்தபடி அளவாய்ப் பேசிவிட்டு, நித்திய வஸ்துவாகிய மெய்ப்பொருள்மீதிலேயே கண்ணுங் கருத்துமா யிருப் பார்கள்.

பொன் முதலான பொருள்களை; அங்களை எவரொவர் தன் பணம், தன்பொருள் என்று உயிர்போல் அபிமானித்து வைத்து பாதுகாப்பினும், காப்பாற்றுவர்மீது கிஞ்சிற்றும் அபி மானமில்லாமலிருப்பதுபோல்; என் புருடன், என்மகன், என் சகோதரன், என் தகப்பன், என் மாமனென்று அபிமானிக் கும் சுற்றத்தார்கள்மேல் குடும்ப ஞானிகள் அணுவளவும் அபிமான முற்றிரார், ஆதலால் குடும்பத்தோடிருந்தஞானிகள் அறிவினால், குடும்பமின்றித் துறவியாயிருந்த ஞானிகளுக்கு ஒப்பாவார்கள். ஆனால் நடை, உடை, பாவனை மட்டிலும் பேதமாயிருக்கும். அதுபோல், குடும்பஸ்தனுக்கும் குடும்ப ஞானிக்கும் நடை, உடை, பாவனை மட்டிலும் ஒன்றுபோ லிருக்குமேயன்றி, அறிவிலும் அனுபோகத்திலும் ஒப்பாக மாட்டார். நிராசை, தவம், பொறுமை, கிருபை, சந்தோடம், வாய்மை, அறிவுடைமை, அடக்கமுடைமை யென்னும் எண் வகைச் சாத்வீக குணத்தோடு இருப்பவர்களை ஞானியென் றும், அவ்விதக் குணங்குறிகளில்லாதவர்களை குடும்பியென் றும் தெரிந்து கொள்ளலாம்.

### பட்டினத்தடிகள்

பொருளுடை யோரைச் செயலினும் வீரரைப் போர்க்களத்தும்
தெருளுடை யோரை முகத்தினும் தேர்ந்து தெளிவதுபோல்
அருளுடை யோரைத் தவத்திற் குணத்தில் அருளில் அன்பில்
இருளாறு சொல்லினுங் காணத் தகுங்கச்சி யேகம்பனே.




சிவஞான[illegible]

ஐம்பொறியா லைம்புலன்க [illegible]
அறிவான் மிக்கோர்
உம்பர்பிரான் றிருவடிக்கீ ழுள்ள[illegible]
யுறங்கா திற்பர்
நம்பனைநீத் தொருசோர நாயகனை விருப்புற்ற
நாரி வேண்டும்
அன்பவன்றன் பாற்கிடக்கும் ஆக்கையிவன் பாற்கிடக்கும்
அதுபோ லன்றே.

திருவிளையாடற்புராணம்

கள்ளக் காதல னிடத்தன்பு கலந்துவைத் தொழுகும்
உள்ளக் காரிகை மடந்தைபோ லும்பரைக் காப்பான்.

கைவல்லிய நவநீதம்

விவகார வேளையெல்லாம் சமாதி யென்றால்
விகற்பமன்றோ மனமலைந்து விடாதோ விட்டால்
அவதானம் நழுவுமன்றோ என்று யாகில்
அதற்கொருதிட் டாந்தங்கேள் ஆசை கொண்டு
நவமாகப் பரபுருடன் றன்னைக் கூடி
நயந்துசுகம் அனுபவித்த நாரி நெஞ்சம்
தவமாக மனைத்தொழில்கள் செய்யும் போதும்
தழுவியனு பவித்தசுகந் தனைவி டாதே.

அலங்கார ஞானம்.

குடும்பத்தோடு கூடியிருந்தும் பற்றற்றிருப்போரை ஞானிகள் என்று சொல்லுவது நியாயம்? சிவிகை, கவிகை, வெண்சாமரை முதலான அலங்காரங்களோடு அரசர்

போல் வாழ்க்கையிலிருந்தாலும் ஞானி யென்று சொல்வது நியாயமோ என்று கேட்கப்பெறுமாயின்; ஒரு இராசியில் சுக்கிரன் இருந்தால் அந்த சுக்கிரனால் ஏற்பட்ட சன்னியாசமடைந்த அரசனைப்போல் பல்லக்குகள், யானைகள், குதிரைகள், இரதங்கள், வாத்தியங்கள், பற்பல விருதுகள், கொடிகளுடன் (இராச சன்னியாசம் என்னும் சோதிடக் கருத்தின்படி) பிராரத்துவத்தால் வந்த பெரிய வாழ்க்கையினிடத்துப் பற்றின்றி, அவ்வாழ்க்கையில் தற்போதத்தை முன்னிட்டு எல்லாவற்றையும் தான் அனுபவிப்பதாக எண்ணாமல், எல்லாச் செய்கைகளையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்கின்றோரும் ஞானிகளேயன்றிச் சாமானியரல்ல. இதற்குத் திருட்டாந்தம், தீர்க்கதரிசிகளாகிய அநேக நபிமார்களும், அநேக ஒலிமார்களும், சுந்தரமூர்த்தி நாயனார் முதலிய அறுபத்துமூன்று நாயன்மார்களும், சனக வரோதயர், திருவள்ளுவநாயனார் முதலானவர்களும், ஏனைய பல அடியார்களும் இல்லறத்திலிருந்தே முத்தி யடைந்திருக்கிறார்கள் என்பது வெளிப்படை.

## தையல் நேசமும்—சன்னியாசமும்

சுந்தரமூர்த்தி நாயனார் என்னும் ஆலால சுந்தரர் திருநாவலூரில் ஆதிசைவர் என்னும் சிவப்பிராமண குலத்திலே சடையனார் என்னும் சிவாச்சாரியருக்கு புத்திரர். அவருக்குப் புத்தூரிலிருந்த சடங்கவி சிவாச்சாரியருடைய புத்திரியை விவாகம் செய்வதாக முகூர்த்தம் நிச்சயித்து கலியாண கோலத்துடன், சடங்கவி சிவாச்சாரியார் வீட்டில் திருக்கலியாணப் பந்தருக்குமுன் சென்று குதிரையினின்றும் இறங்கி உள்ளேபோய் ஆசனத்தில் அமர்ந்தார்.

அப்பொழுது, ஊரும் பேரும் உருவு மில்லாதவ ராகிய கடவுள், சுந்தரமூர்த்தியை பிரபஞ்ச வாழ்க்கை யிலே மயங்க விடாமல் தடுத்தாட் கொண்டருளும் பொருட்டு, ஒரு வயோதிகப் பிராமண வடிவத்துடன் கலியாணசபை வந்துசேர்ந்து, சபையோரிடம் நாயனு ருடைய அடிமை ஓலையைக் காட்டி அவரைத் தடுத்தாட் கொண்டு, "பித்தா பிறைசூடி" என்பது முதலான பல்லா யிரம் திருப்பதிகங்களைப்பாடி உய்யும்படிச் செய்தனர். சடங்கவி சிவாச்சாரியாருடைய புத்திரியும் வெகுகாலம் சுந்தர மூர்த்தியையே தியானஞ் செய்துகொண்டிருந்து மறைந்தனர்.

சுந்தர மூர்த்தி நாயனுர் சில காலத்திற்குப் பின், திருவாரூரில் உருத்திர கணிகையர் குலத்திலே பிறந்து கமலினி யென்னும் பெயர் தாங்கிய பரவை நாச்சியா ரையும், ஞாயிறு என்னும் ஊரில் வேளாளரில் சிறந்த ஞாயிறு கிழவர் என்பவர் புத்திரியாகிய அனிந்திதையார் என்னும் சங்கிலி நாச்சியாரையும் விவாகஞ் செய்து சுகித் திருக்கையில், ஒருநாள் சிவபெருமான் சுந்தர மூர்த்தி நாய ஞரை நோக்கி, 'நீ பரவையாருடனும், சங்கிலியாருடனும் அனுபவித்த சுகம் எவ்வாறிருந்தது? என்று வினவ, அதைக் கேட்ட சுந்தர மூர்த்தி 'சுவாமி! அடியேன் சுகமென்ப தொன்றையுந் தெரிந்திலேன். தனத்தை சிவலிங்கம் என்று மதித்தேனேயன்றி வேறு விதமாக நினைக்கவில்லை எல்லாம் உம்முடைய திருவிளையாடலாகவே மதித்தேன்' என்றனர். இது அக்மல் ஷஹுதின் அந்தரங்கம். இக்காரணத்தி னலேயே சிவபெருமான் பரவை நாச்சியாரின் ஊடல் தணிப்பான் பொருட்டுத் தூது சென்றுள்ளார்போலும்.

### சிவஞான வள்ளல்.

பொல்லாத மாதர் மயக்கத்தி லாழ்ந்து பொருந்துகினும்
வில்லார் மணிச்சிலம் பேறித் தவங்கள் விரும்புகினும்
நல்லார் தொழுமுன்றன் பாதார விந்தத்தி னூட்டம்வைத்தி
டெல்லாமு நின்செய லென்றிருப் பேன்கச்சி யேகம்பனே.

### திருவருட்பா

ஒருமடந்தை வலிந்தணைந்து கலந்தகன்ற பின்ன
ருளம்வருந்தி யென்செய்தோ மென்றயர்ந்த போது
பெருமடஞ்சேர் பிள்ளாயென் கெட்டதொன்று மிலைநம்
பெருஞ்செயலென் றெனைத்தேற்றிப் பிடித்தபெருந் தகையே
திருமடந்தை மாரிருவ ரென்னெதிரே நடிக்கச்
செய்தருளிச் சிறுமையெலாந் தீர்த்ததனிச் சிவமே
க்ருமடந்தீர்ந் தவரெல்லாம் போற்றமணி மன்றிற்
காட்டுநடத் தரசேயென் பாட்டு மணிந் தருளே.

### வைராக்யமும் மவுன ஞானமும்.

அகமென்னும் மனத்தினிடத்தில் பரிபூரண ஞான மில்லாதவர்கள் புறத்திற் செய்யும் பலவித வைராக்கியங் களினால் எவ்விதப் பிரயோசனமும் உண்டாக மாட்டாது. ஆரணியங்களில் வசிக்குங் கிராதகர்களாகிய வேடர்களைப் போல், தழை, மரவுரி முதலியவைகளை ஆடையாகத் தரித் தலும்; கிழங்கு, கனி, தேன் முதலியவைகளை உணவாகப் புசித்தலும்; இராப்பகல் வன சஞ்சாரம் செய்தலும்; வெய்யில், காற்று, மழை, பனி முதலியவைகளைச் சகித் தலும்; ஆகிய இவை அனைத்தும் கானவர் வைராக்கியம். வனிதாதி விடய போகங்களைத் துறந் திருத்தல், விடா நோயினர் வைராக்கியம். பகைவர், நாய் நரி முதலியவை

களுக்கு அச்சமின்றி இராக்காலங்களில் சஞ்சரித்தல் கள்வர் வைராக்கியம். கடுகு, நல்லெண்ணெய், புளி, உப்பு மஞ்சள் முதலியவற்றைப் புசிக்காதிருத்தல் ஒளடத முண் போர் வைராக்கியம். ஆதலால்; அகத்திற் பரிபூரண முடைய ஞான யோகிகள் மேற் சொல்லிய வைராக்கியங்க ளைச் செய்து கொண்டாலும், செய்யாம லிருந்தாலும் எல் லாம் ஒன்றுதான்.

இரத, கச, துரக, பதாதி யென்னும் சதுரங்க சேனைக ளுடன் சிவிகை, கவிகை, ஆடல், பாடல் முதலியவைகளுடன் அடிமைக் குழாங்கள் சூழ்ந்து நின்று வந்தனை வழிபாடு செய்து உபசரிக்க, மகாபோகங்களை அனுபவித்தாலும், அத னுள் தாக்கற்று நின்று சொரூப வின்பத்திற் கேதுவாய தற் போத விழுப்பைச் செய்து அவ்வின் பங்களை அனுபவிக்குந் தோறும் நான் என்னும் அகங்கார மின்றிச் சகலமும் கடவு ளுக்கு அற்பிதமென்று புசிப்பதால் தாமற்ற விடத்துண்டா கும் பேரின்பம் மேலிடுமே யன்றி, அவ்விடய வின்பங்கள் ஒரு பொருளாகத் தோன்றாது. ஆதலால், அவர்களுக்கு இன் னது ஆகும் என்றும், இன்னது ஆகாது என்றும் பிரபஞ்சத் தவர்களால் நிச்சயிக்க முடியாது.

ஞானவாசிட்டம்

மிகவருகா மாதிகளாம் விகாரமடைந் தும்விண்போல்
மிகநொய் தாரோர்
அகமெனலின் றிச்செயல்கள் செய்தாலுந் தவிர்ந்தாலும்
அழுத்தம் அற்றோர்
சகநெறிகள் செய்திடினும் அன்னியர்போற் கண்டுகுளிர்
தன்மை சான்றோர்
திகழ்மனமும் நினைவுமிருந் துஞ்சிறிதும் இல்லாதோர்
சீவன் முத்தர்.

பிரபுலிங்கலீலை

வேண்டிய வடிவங் கொண்டு வேண்டிய வாறு செய்யும்
ஆண்டருள் அல்ல மற்றீ தாமென்றும் ஆகா தென்றுங்
கோண்டரு நினது நெஞ்சாற் குறித்திடப் படுவ துண்டோ
பூண்டிக ழிளமென் கொங்கைப் பொற்றொடி யென்று சொன்னான்.

பசுபதிபாச விளக்கம்

மன்னிய சோரன் றன்னை மனமதில் நினைந்து கொண்டு
தன்னுறு கணவ னோடு தழுவிய வாறு போலத்
தன்மனஞ் சிவத்தில் வைத்துத் தானவ னான ஞானி
பின்னையும் உலகில் நின்று பேசுவான் மாசொன் றில்லான்.

ஞானப்பிரகாசம்

மாணிக்க மணியானது, தன்னை யடுத்த வன்னங்களை படிகமணிபோற் கவராமல், செந்தீயைப்போன்ற தனது பிரகாசத்தை ஏனைய மணிகளின்மேல் வீசி நிற்கும். அதுபோல், இல்லற ஞானிகள் மாயா போகங்களுக்கெல்லாம் அரசனாகி அந்தப் போகங்களை அனுபவித்து வாழ்ந்தாலும், இல்லறத்தாரைப்போல் அப் போகங்களில் தோயாமல், அவற்றின் மேல் தனது ஞானப்பிரகாசத்தை வீசி, சர்வமும் பிரம்மமயமாய்த் தோன்றும்படி செய்வார்கள்.

நான்கு மாணிக்கங்கள்

கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்னும் நவரத்தினங்களில், மாணிக்க மணியானது ஒன்று. இதற்கு கவுத்துவம், பதுமராகம், செம்மணி, கெம்பு, மாமணி என்று பெயர். இது பிரம்ம, சத்திரிய, வைசிய, சூத்திர என்னும் நான்கு

சாதிகளுக்கு முறையே சாதரங்கம், குருவிந்தம், சௌகந்திகம், கோவாங்கம் என்று பெயர். இந்த நான்கு சாதி மாணிக்கங்களுள்

முதற்சாதியாகிய சாதரங்கத்திற்கு தாமரை, கருநெய்தல், சூரியப் பிரகாசம், நெருப்பு, மின்மினி, மாதுளம்பூ, மாதுளம் வித்து, மேகம், தீபம், இந்திரகோபம் என்னும் பத்துவகையான நிறங்கள். இரண்டாஞ் சாதியாகிய குருவிந்தத்திற்கு குன்றிமணி, முயலிரத்தம், வெள்ளலோத்தம்பூ, முண் முருக்கம்பூ, மஞ்சாடிப்பூ, செவ்வரத்தம்பூ, முள்ளிலவம் பூ, செம்பொன் என்னும் எட்டு வகையான நிறங்கள். மூன்றும் சாதியாகிய சௌகந்திகத்திற்கு இலவம்பூ, குயிலின் கண், அசோகத்தளிர், பொன், செம்பஞ்சு, மருதோன்றி என ஆறு வகையான நிறங்கள். நான்காஞ் சாதியாகிய கோவாங்கத்திற்கு குராமலர், குசும்பைமலர், செங்காவிக்கல், கொவ்வைக்கனி என நான்கு வகையான நிறங்கள். இவையனைத்தும் திருவிளையாடற்புராணக் கருத்துக்குச் சரியானவைகள். இவைகளுக்குச் சில நிறங்கள் சிறிது வேறு படும்படி கல்லாடமும், சிலப்பதிகாரமும் பின்வருமாறு கூறுகின்றன.

கல்லாடம்

சாதகப் புட்கண் டாமரை கழுநீர் கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு, வன்னி மாதளம் பூவிதை யென்னப் பன்னுசாதரங்க வொளிக்குணம் பத்தும்; செம்பஞ் சாத்தம் திலக மலோத்தம் முயலின் சோரி சிந்துரங் குன்றி, கவிரல ரென்னக் கவர்நிற மெட்டும்; அசோகப் பல்லவம் அலரிசெம் பஞ்சி கோகிலக் கண்ணீ ளில்வலர் செம்பொனத் தருசௌ கந்தி தன்னிற மாறும்; செங்கல் குராமலர் மஞ்சள் கோவை குங்கும வமர்தின் கோவாங்கு நிறமும்,

### சிலப்பதிகாரம்.

தாமரை கழுநீர் சாதகப் புட்கண் கோப மின்மினி கொடுங் கதிர் விளக்கு, மாதுளம் பூவிதை வன்னியீ ரைந்தும் ஒதுசாதரங்க ஒளியா கும்மே. குருவிந் தத்தின் குறித்தன நிறமும் திலக மலோத் தஞ் செம்பருத் திப்பூ, கவிர்மலர் குன்றி முயலுதி ரம்மே சிந்துரங் குக்கிற் கண்ணென வெட்டும் எண்ணிய குருவிந்த மண்ணிய நிறமே. கோகிலக் கண் செம்பஞ்சி கொய்மலர்ப் பலாசம், அசோ கப் பல்லவ மணிமலர்க் குவளை இலவத் தலர்க ளென்ற றுகுணமும் சௌகந் திக்குச் சாற்றிய நிறனே. கோஙவநற் செங்கல் குராமலர் மஞ்ச ளெனக் கூறிய நான்குங் கோவாங்கு நிறனே.

தேவேந்திரனால் வேள்வியில் மாய்க்கப்பெற்ற பசு வடி வாய் வந்த வலாசுரன் உதிரத்தில் இந் நான்கு வகையான மாணிக்க மணியும்; அவனது பல், மயிர், எலும்பு, பித்து, நிணம், தசை, கண், கபம் இவைகட்கு முறையே முத்து, வயிடூரியம், வயிரம், பச்சை, கோமேதகம், பவளம், நீலம், புட்பராகம் தோன்றிற் றென்றும்; மாணிக்க மணியானது முதலாவது கிரேதாயுகத்தில் நபிகள் நாயகம் அவதாரஞ் செய்த அறபி நாடாகிய மக்கமா நகரத்திலும் திரேதாயுகத்தில் காளபுரத்திலும், துவாபர யுகத்தில் தும்புரத்திலும், கலியுகத் தில் சிங்களத்திலும் முறையே தோன்றிற்றென்று பல சாஸ் திரங்கள் முழங்கிக்கொண்டிருக்கின்றன.

இவைகளை அணிபவர்கள் அடையும் பலா பலன்களை யும், இவற்றின் அதிதேவதைகளையும், 16 குற்றம், 12 குணம், உத்தமம், மத்திமம், அதமம் முதலானவைகளையும், திருவிளையாடற் புராணம் மாணிக்கம் விற்ற படலத்திலும், கல்லாடம், சிலப்பதிகாரம் முதலிய நூற்களிலும் பார்த்து கிடக்கக் காணலாம் ]

ஒருவன் மலையை வில்லாக வளைத்தாலும், மரித்தவனை உயிர்பெறச் செய்தாலும், ஆணைப் பெண்ணாகவும் பெண்ணை ஆணாகவும் செய்தாலும், சந்திர சூரியர்களைப் பூமியில் வந்து விளையாடும்படி செய்து காண்பித்தாலும் வியப்பாக எண்ணாமல், தனது எதார்த்த வடிவத்தைக் கவனித்துக் கொண்டிருப்பவர்கள் எவர்களோ! அவர்களே சீவன் முத்தர்.

## சீவன் முத்தர் செயல்.

சமுத்திரத்தின் ஆழமும், ஊமை கண்ட கனவும், ஆகாயத்தின் நிறைவும், (வஞ்சக) மாதர்கள் நெஞ்சமும் இவ்வளவென்று வரையறுத்துச் சொல்ல முடியாததுபோல், சீவன் முத்தர்களின் குணநிசயங்களை இத்தன்மைத்தென்று ஒருவராலும் மதித்தற் கியலாது. அணிமாதி அட்டமா சித்திகளைச் செய்யும் சித்தர் கணத்திலும் பல்லாயிர மடங்கு வல்லமையுடையவர்களா யிருப்பினும் இருப்பார்கள். எவ்வித வல்லமையு மில்லாத் வீணரைப்போல் இருப்பினும் இருப்பார்கள். கண்டோர் இகழும்படி அற்பரைப்போல் இருப்பினும் இருப்பார்கள். நல்லொழுக்கம் உடையவர்களைப்போல் இருப்பினும் இருப்பார்கள்.

சரியை - கிரியை - யோகம் என்னும் இம்மூன்று பதத்தை அனுட்டிப்பவர்களை அவரவர்கள் செய்யும் செய்கையைக்கொண்டு, இவர்கள் இன்ன தன்மை யுடையவர்களென்று அறியலாம். ஒருவிதச் செயலுமின்றி சும்மாயிருக்கும் மெய்ஞ்ஞானியை எவராலும் அறிவதரிது.

பாவனை நீங்கி, சனன மரண மென்னும் துக்க சாகரத்தை ஞானமென்னும் மாக்கலத்தின் சகாயத்தால் கடந்து, மோட்ச கைவல்லியம் என்னும் பட்டினத்தை யடைந்த

மெய்ஞ்ஞானிகள், சீவத்தன்மையோ டிருந்தாலும், சிவத் தன்மையோ டிருந்தாலும், குடும்பத்திற் பொருந்தி யிருந் தாலும், தனிமையான துறவடைந் திருந்தாலும், சுருதி களின் பிரமையிற் கட்டுப்பட் டிருந்தாலும், எதைச் செய் தாலும், எதைத் தவிர்த்தாலும், அவை யாவும் ஞான நெறியே யன்றி இதர நெறியன்று. இக்கருத்தை உணராமல் சில மனிதர்கள் மகான்களைப் பார்த்து, குடும்பத்தில் தானே இருக்கிறார்! வியாபாரந் தானே செய்கிறார்! கேவலம் இவர் எப்படி ஞானியாவார் என்று அறியாமல் இகழ்ந்து, பாவம்! பாரமான மூட்டையைக் கட்டிக் கொள்ளுகிறார்கள், அவர் கள் எப்படி யிருந்தால்தான் நமக்கென்ன? நாம் தாங்கிய இல்லற தருமத்திற்குத் தக்கவாறு, ஞானிகளைக் கண்டால் வணங்கவும், அவர்கட்கு அமுதளிக்கவும், அவர்கள் கேட்ட வஸ்துக்களில் நம்மால் கொடுக்கக் கூடியதைக் கொடுக்கவுந் தானே நமது கடமை யென்றெண்ணுபவர், கோடியில் ஒரு வரையாவது காணுவது அருமையாக விருக்கின்றது.

## மகான்கள் தரிசனப் பலன்

மகானுபாவர்களாகிய மெய்ஞ்ஞானிகளைத் தரிசித்த மாத்திரத்திலேயே, தலைமுறை தலைமுறையாகச் செய்த அநேக கொடிய பாவங்களெல்லாம் நெருப்புப்பட்ட பஞ்சு மூட்டையைப்போல் ஒரு கண நேரத்தில் நசிக்குமென்றும், அளவற்ற நன்மைகளுண்டாகு மென்றும் உபநிடதங்கள் பேரோலமிட்டு முழங்கிக் கொண்டிருக்கின்றன.

சிவஞான வள்ளல்.

"பெரியவர்தந் தரிசனத்தாற் பெறுதபொரு ளொன்றுண்டோ"?

## கும்ப முனிவரும் குமாரக் கடவுளும்

ஒரு காலத்தில் ஸ்ரீ அகத்திய மகாமுனிவர் தமது குரு மூர்த்தியாகிய முருகக்கடவுளை நோக்கி, 'சுவாமி! மகான்களைத் தரிசிப்பதற்காக அநேக கோடி சனங்கள் பல திசைகளிலு மிருந்து வருகின்றார்களே! மகான்களைத் தரிசிப்பதனால் அவர்களுக்கு என்ன பலன் கிடைக்கும்? அதை அடியேனுக் குத் திருவாய் மலர்ந்தருள வேண்டும் என்று கேட்டார். அப்போது சுப்பிரமணியர் அகத்தியரை நோக்கி, 'இதோ! மலத்தை உருட்டி யிழுத்துச் செல்கின்ற வண்டினிடத்திற் போய் உன் அபிப்பிராயத்தைச் சொன்னால் அதற்குப் பதில் அவ்வண்டு சொல்லும் என்றனர். மலத்தை உருட்டிப் போகின்ற வண்டினிடத்திற் கேட்கச் சொன்னது தனக்குச் சமாதானமா யில்லாவிட்டாலும், குரு வாக்காகிய திருவாக் குக்கு மறுவாக்கின்றி அங்ஙனமே சென்று 'ஏ! வண்டே! மகான்களைத் தரிசிப்பதனால் என்ன பலன்' என்று கேட்க, அது மறுமொழி சொல்லாமலே இறந்து விட்டது. இஃ தென்ன ஆச்சரியமா யிருக்கிறது! நாம் கேட்ட வினாவிற்கு விடை பகராமல் உயிர் துறந்துவிட்டதே! யென்றெண்ணி, தனது குருபிரானிடத்தில் நடந்தவைகளைச் சொன்னார். அதைக் கேட்ட வேலவர், அது இறந்துபோனால் போகட் டும். அதோ தெரிகிற பசு மந்தையில் ஆயிரம் பசுக்களுக்கு மேலானதும், விசேட அழகு பொருந்தியதுமாகிய ஓர் பசு நிற்கிறது. அதனிடத்திற் போய்க் கேள்' என்றார். அப்படியே போய்க் கேட்க, பசுவும் பதில் கூறாமல் இறந்து விட்டது. பின்னர், ஓர் அரச குமாரத்தி கையிலிருக்கும் கிளிப்பிள்ளையைக் கேட்கச்சொன்னார். அதனிடத்திற்போய்க் கேட்க கிளியும் விடை தாராமல் இறந்துவிட்டது. அதன் பின், ஓர் அரசனுக்கு வெகுகாலமாக குழந்தை யில்லாம

லிருந்து அநேககோடி அடியார்களுக்குச் செய்த தருமங்க ளின் புண்ணியத்தினுலும், காசி, இராமேச்சரம் முதலிய புண்ணிய தல யாத்திரையும், மூர்த்தி தரிசனமும் செய்த தபோ பலத்தினுல், கோடி சூரியன் ஒன்று சேர்ந்து ஒரு சூரியனுகப் பிறப்பதுபோல் ஞான சூரியனுக ஓர் குழந்தை அவதரிக்கப்போகிறது ; அந்தக் குழந்தை பிறந்தவுடன் தாம் பாளத்தில் ஏந்திவரச் செய்து கேட்பாயாகில், உன் வினுவிற் குச் சரியான விடை பகருமென்று உறுதி கூறினுர். அங் ஙனமே சென்று குழந்தையை நோக்கி, குழந்தாய்! மகான் களைத் தரிசிப்பதால் என்ன பலன்?' என்று கேட்டார். அதற்குக் குழந்தை முநீச்சுரரை நோக்கி, முக்காலங்களு முணர்ந்த தேவரீருக்குத் தெரியாத தொன்றில்லை. ஆயினும், தேவரீர் வினுவிற்கு அடியேன் விடைசொல்ல வேண்டிய கடமை இருப்பதால் சொல்லுகிறேன் கேளும்:—

### நல்லாரைக் காண்பதுவும் நன்றே

'முன் மலத்தை உருட்டி யிழுத்துச் சென்ற வண்டா னது நான்தான்; அந்த சென்மத்தில் மகானுகிய தேவரீ ருடைய தெரிசனம் எனக்குக் கிடைத்தது ; அதனுல், அந்த இழிவான சனனம் நீங்கி அதற்கு மேலான சிறந்த பசுவாகப் பிறந்தேன் ; அந்த சென்மத்திலும் தங்களைத் தெரிசித்தேன்; அதனுடைய பலனுல் இராச குமாரத்தி கையில் தாங்கி யிருக் கப்பெற்ற பசிய கிளியாக அவதரித்தேன்; அந்த சென்மத் திலும் தங்களுடைய தெரிசனம் எனக்குக் கிடைத்தது ; அதனுல் பூலோகத்தை அரசாட்சி செய்யும் அரசர்களுக்கு அதிபதியான ஓர் சக்ரவர்த்தி வீட்டில் செனித்தேன் ; இந்த சென்மத்திலும் தங்களுடைய தெரிசனம் கிடைக்கப்பெற் றேன் ; இனி ஆதியந்த மில்லாத கடவுளாகிய பரப்பிரம்ம

சைதன்யத்தில் இரண்டறக் கலத்தலாகிய சிவயோக மென்னும் அத்துவைத மோட்ச கைவல்ய விதேக முத்தியை அடையும் பாக்கியத்தைப் பெற்றேன் ; இனி என்னை நிகர்ப்பவர் யாவர் ? ஒருவருமே யில்லை ; இதுதான் மகான்களைக் காணுவதின் பலன்' என்று சொல்லி சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து வழிபாடு செய்தது என்று கூறுவது கர்ண பரம்பரை.

பெரிய காடாக்கினியில், (காளவாய் நெருப்பில்) உலர்ந்த விறகுகளும் உலராத விறகுகளும் தகித்துச் சாம்பலாகிப் போகும். அதுபோல் மகான்களை அடைந்தவர் செய்த நல்வினையும், தீவினையும் அவர்களது கிருபா வீட்சணியத்தால் நீங்கி சிற்சுகோதய முண்டாகும்.

மூதுரை

நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவு நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவு நன்று.

சுக துக்க மென்னும் சலதியில் சிக்கினாலும், அத்துக்க சமுத்திரத்தில் அழுந்தலு மிதத்தலு மில்லாமலும் ; களிப்பும், துக்கமும், வீரமும், பயமும், செல்வமும், தரித்திரமும் பொறுமையும், கோபமுமாகிய (*) பிராரத்துவத்தால்

(*) ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்துவம் என கன்மம் மூவகை. அவற்றுள், பிராரத்துவம் என்பதும் மூன்று வகைப்படும். அவை பௌதிகம், ஆத்மீகம், தெய்வீகம் என்றும்; இச்சா பிராரத்துவம், அனிச்சா பிராரத்துவம், பரேச்சா பிராரத்துவம் என்றும் சொல்லப்படும்.

அடையுமிவ்வகளில் விருப்பு வெறுப்பில்லாத மனதுடையவர்களே சீவன் முத்தர்கள்.

கைவல்லிய நவநீதம்.

பேதகன் மத்தால் வந்த பிராரத்துவம் நானு வாகும்
ஆதலால் விவகா ரங்கள் அவரவர்க் கான வாகும்
மாதவஞ் செயினுஞ் செய்வர் வாணிபஞ் செயினுஞ் செய்வர்
பூதலம் புரப்பர் ஐயம் புகுந்துண்பர் சீவன் முத்தர்.

நரை, திரை, மூப்பு, மரணம் ஆகிய இவைகள் நேரிட்டாலும், அவைகள் சரீரத்திற்கேயன்றி, ஆன்மாவுக் கில்லையென்று நிர்ப்பயமாகி, இருவினையிற் சிக்காமல், சத்துச் சித்தானந்த பிரம்ம சொரூபத்திற் கலப்பவர்களே சீவன் முத்தர்கள். ஆகையால், அவர்கள் தனியே வந்தாலும், பல கூட்டங்களுடன் வந்தாலும், கண்டவுடன் எழுந்து எதிர்சென்று உபசரித்து, நவ புண்ணியத்துடன் வழிபடவேண்டும்.

நவ புண்ணியமாவன:— மகான்களைக் கண்டவுடன் எழுந்து எதிர்கொள்ளல், வணங்குதல், ஆசனத்திருத்துதல், பாதங் கழுவுதல், நறுமலர் கொண்டருச்சித்தல், தூபங் கொடுத்தல், தீபங்காட்டல் தோத்திரஞ்செய்து புகழ்தல், அமுத மேந்தல் ஆகிய இந்த ஒன்பது வகைப் புண்ணியங்களும் மெய்ஞ்ஞானிகளுக்குச் செய்யவேண்டிய வழிபாடுகளென்று ஆன்றோர் கூறுவர்.

ஒழிவிலொடுக்கம்.

பூசி முடிப்பனவும் பூண்பனவும் பொற்றுகிலும்
ஆசை மிகுந்த அரசியற்காம்—காசிற்ற
முண்டையர்க்கா காசீவன் முத்தருக்குப் போகமல்லாற்
குண்டை யொப்பார்க் கேனிதுவா கும்.

சிவஞானவள்ளல்.

பெண்ணுடை யாபரணம் பெய்தயிலந் தாம்பூலம்
உண்ணலணை சந்தனத்தோ டோரெட்டும்—விண்ணவர்க்காய்
ஆகாத நஞ்சுண்ட அண்ணல் அடியவர்க்கிங்
காகாது சொன்னோம் அறி.

கரும்பினு மின்பங் காண்பான் கட்டறத் துறந்த மேலோர்
அரும்பொன்னால் வெள்ளி யாற்செய் யணிகலன் பூணல் செய்யார்
விரும்பிய கொழுநர்த் தீர்ந்த மெல்லியல் போல நாளும்
இருந்தவஞ் செய்தி யாக்கை யிளைப்பதே கரும மன்றே

என்றபடி மடமாதர்கள், அலங்காரமான வஸ்திரம், மோதிரம் முதலிய ஆபரணங்கள், வாசனைத் தைலம், தாம்பூலம், அதிக உணவு, பஞ்சணை மெத்தை, களப கஸ்தூரிகள் கலந்த பரிமள வாசனைச் சந்தனம் ஆகிய இந்த எட்டு விடயங்களும் மகான்களுக் காகாதென்றும்; நாயகனை யிழந்த அமங்கிலிய மாதைப்போல் இருக்கவேண்டு மென்றும் பெரியோர்களால் சொல்லப்பட் டிருந்தாலும், அவை ஆரம்ப அனுட்டானிகளுக்கே யன்றி, எவ்விதச் செய்கையு மற்று, தன்னை மறந்து சஞ்சரிக்கும் மனன சமாதியுடைய முமூட்சுக்களுக்குச் சொன்ன தன்று.

திருமந்திரம்.

ஞானிக்குச் சுந்தர வேடமும் நல்லவாம்
தானுற்ற வேடமுந் தற்சிவ யோகமே
ஆனவவ் வேடம் அருள்ஞான சாதனம்
ஆனது மாமொன்றும் ஆகா தவனுக்கே.

தாயுமான வள்ளல்.

உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போற்றிரியுந்
தொண்டர்விளை யாட்டே சுகங்காண் பராபரமே.

## மின்னுவதெல்லாம் பொன்னா?

சிலர் இரண்டொரு சாஸ்திரங்களில் நாலைந்து வரிகளைப் படித்த மாத்திரத்திலேயே, எல்லா அனுபவங்களும் தமக்கு வந்து விட்டதாகக் கருதி, சரீரப் பிரயாசையின்றி, ஊர் ஊராய்ச் சென்று வயிறு வளர்ப்பதற்காக மகான்களைப்போற் பாவனைசெய்து, அவர் வந்தார்! இவர் போனார் என்பதற்குப் பதிலாக (கஞ்சா முதலிய லாகிரி வஸ்துக்களைக் குடித்து வெறிகொண்டு பிதற்றுபவர்களைப்போல்) அது வந்தது! இது போனது! என்று சொல்லி, உயர்திணையாகிய மனிதனை அஃறிணையாக, அதாவது மிருகங்களை ஆடு வந்தது! மாடு போனது! என்று சொல்லுவதுபோல் சம்பாஷணை செய்கிறார்கள்.

சிலர் தமது சரீரத்தினவை நீக்கிக்கொள்ளும் பொருட்டு அடாத காரியங்களைச் செய்து சரீரத்தில் அருவருப்பான வியாதிகள் சம்பவிக்க அதற்குத் தன்னால் இயன்ற வைத்தியங்களாலும், பிரபல பண்டிதர்களிடத்திலும் சுக்கு, சிற்றரத்தை யென்றால் தெரியாத சில வைத்தியர்களிடத்திலும் மருந்து சாப்பிட்டு வியாதி சௌக்கியப்படாமல் அலைகிறார்கள். இவர்கள், இதற்குமுன் மகான்களை நிந்தித்த குற்றத்திற்கு கடவுளால் தண்டிக்கப்பெற்று அநுபவித்து வருகிற துன்பங்களை உணர்ந்து, கடவுளே! நான் என்ன பாவஞ் செய்தேன்? எதற்காக இவ்வளவு துன்பங்களை அனுபவிக்கிறேன்? இனி யென்னால் பொறுக்க முடியாது; உனது திருவருள் அடியேனுக்கு எப்போது கிடைக்கும்? என்று வருந்தி கடவுளை நினைந்து முறையிடாமலும்; அவ்வித பாப ரோகங்கள் விமோசனமாவதற்கு வேண்டிய சற்கிருத்தியங்களைச் செய்யாமலும் பிதற்றிக் கொண் டுழல்கிறார்கள்.

சைவசமய குரவர்களில் ஒருவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் தனக்கு நேர்ந்த சூலை நோயைப் பொறுக்க முடியாமல் கடவுளை நோக்கி ஆனந்த பரவசத்துடன் "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்ற பாசுரம் முதலான பதிகத்தைப்பாடி நோயை நிவர்த்தி பண்ணிக் கொண்டதைப்போல் இவர்களும், தமக்கு நேர்ந்திருக்கிற பிணியை நிவர்த்திக்க வேண்டி, பல அரிய தோத்திரப் பாக்களை ஆனந்த பரவசத்துடன் பாடி மன்றாடாமலும்; நொந்த புண்ணில் குச்சியை எடுத்துக் குத்தினதுபோல் சில அடியார்களைச்சுட்டிக்காட்டி, இவர் சரியைக் காரர்! இவர் கிரியைக்காரர்! இவர் யோகப் படியிலுள்ளவர்! அதனாலேயே அவர் பத்தியமாகச் சாப்பிடுகிறார்; இவர் என்னிலும் தாழ்ந்தவர்; நான் அவரிலும் மேலான இராச யோகமாகிய ஞான நெறியிலிருக்கிறேன்; எனக்கு பத்திய பாகங்கள் அவசியமில்லை; நல்லெண்ணெய் கடுகு, புளி, உப்பு, மஞ்சள் முதலிய எல்லாப் பொருள்களும் எனக்குத் தயிர் சாதம் போன்றது என்று மகான்களை நிந்தித்து, ஏற்கனவே! கட்டிய மூட்டை போதாதென்று இன்னும் பாவ மூட்டைகளைக் கட்டிச் சுமையாகச் சுமக்க எண்ணுகிறார்கள். இவர்கள் மகான்களைப்போல் ஆகவேண்டுமானால், நிராசை,மனமடங்குதல் முதலிய எண்வகைக் குணங்களும் இயம நியமாதிகளும் பொருந்தி யிருக்கவேண்டுமென்பதை எவர்பாலும் கேட்டறியவில்லை போலும்.

கொடிய விடத்தையும் அமிர்தமாக்கிச் சாப்பிடக்கூடிய மகான்கள் மடந்தையரோடு கூடி யிருப்பினும், அல்லது சையோகமே புரியினும், தற்போத விழுப்பைப் பெற்றிருப்பதால் அந்தக்கரண சேஷ்டை தவிர்ந்த மெய்யோகமேயன்றி ஒரு போதும் சையோகமாகாது. இங்ஙனமே நபியுல்லாவும்,

சுப்பிரமணியரும், கிருட்டினமூர்த்தியும் அநுட்டித்திருக்கிறார்கள். இதை எட்டுணையும் உணராமல், அவர்கள் காதலினால், இந்திரியத்தை விட்டதாக தூர்த்தர்கள் கருதி, தானும் முண்டையைச் சேர்ந்து கெடுவார்கள்.

மாயை என்னும் மான் கூட்டங்களைக் கொல்லும் ஞான வீரம் பொருந்திய துறவிகளாகிய வரி வேங்கைப் புலியை, வஞ்சகர்களாகிய பூனைகள் பார்த்துத் தனது சரீரமெங்கும் புலி வரியைப்போல் சூடுபோட்டுக்கொண்டால் என்ன கதியாகும் என்பது தெரியாததல்ல.

## திருமந்திரம்.

மாத ரிடத்தே செலுத்தினும் அவ்விந்து
காதலி னால்விடார் யோகங் கலந்தவர்
மாத ருயிராசைக் கைக்கொண்டே வாடுவர்
காதலர் போற்றங்ஙன் காதலாஞ் சாற்றிலே.

## பிரபுலிங்கலீலை.

மாதர்கள் தமை யகன்ற மலிதுற வினரொண் ணில்லார்
கோதைய ருடனி ருந்துங் கொடுமய லிலரொண் ணில்லார்
மேதைகொள் அருச்ச னைக்கு வேண்டுவ முழுதுங் கொண்டு
போதுகள் வழாம லீசன் பூசைசெய் பவரொண் ணில்லார்.

செஞ்சா ணிறைஞ்சி நல்குஞ் செழுந்துகில் கிழித்துக் கீழ்க்கொண்
டெஞ்சிய மிகையென் றெண்ணி யிட்டவ ணகன்று போவார்
அஞ்சுடர் மணிப் பசம்பொன் அணிதுகில் அலங்கல் சாந்தம்
வஞ்சியர் தமக்க ளிப்பத் தருகென வாங்கிச் செல்வார்.

விரதங்கள் வேறு வேறு மேவிநிற் பவரொண் ணில்லார்
(*) பாதஞ்செய் மதா ரிக்கட் பரத்தையர் மனைக டோறுஞ்
(†) சுரதஞ்செய் பவரொண் ணில்லார் தூயநன் னந்தி நாம
வரதன்றன் அன்பின் வாழும் வழுவின்மா கேச ரம்மா.

---

(*) பாதம்—கேளிக்கை. (†)சுரதம்—புணர்ச்சி.

மவுன மணி.

பெரும்பாலும் ஐசுவரியத்திற் குறைந்தவர்களும், அகங்காரப் பேய் பிடித்தவர்களுமே இக்காலத்தில் பகட்டான வத்திரங்களையும், 3 முழ அகலமுள்ள கிளாஸ்கோ மல் முதலிய மெல்லிய உடைகளையும், முனிசிபாலிடியார் தெருக்கூட்டும் கூலிகளுக்குச் சகாயமாக வேட்டி பூமியி விழும்படி தொங்கவிட்டுக் கட்டிப் பலவித ஆடம்பரத்துடன், பிறர் அறியும்படி இடையில் இரண்டொரு ரூபாய்களைச் சொருகிக்கொண்டு உல்லாசமாகத் தலையை ஆட்டி ஆட்டி நடக்கிறார்கள். சம்பத்துள்ளவர்களோ! பெரும்பாலும் சாதாரண வத்திரத்துடன், தன் பெருமையைப் பிறர் அறியக் காட்டிக் கொள்வதால் பிரயோசன மில்லை யென்றெண்ணி, அடக்கமாகவே சஞ்சரிக்கிறார்கள். அதுபோல், அத்துவிதத்தின் உண்மையை அறியாதவர்களே கற்பம் உண்கிறேன்! காய சித்தி பண்ணுகிறேன்! மாயையைக் கடந்து விட்டேன்! இனிச் சாக மாட்டேன்! என்று பிதற்றுவார்கள். மெய் கண்ட தேசிகர்கள், நாவற்ற ஊமை மணிபோல் ஒடுங்கிச் சாதாரண மனிதரைப் போன்றே உண்டுடுத்து வாழ்வார்கள்.

குடும்பத்தி லிருந்தால் ஒன்றிலும் தாக்கற் றிருத்தலும், துறவியாகி விட்டால் சகல ஆசைகளையும் வெறுத்துப் பற்றறுத்தலு முடையவர்களே மெய்ஞ் ஞானிகளாகிய சீவன் முத்தர்கள். ஆகையால் அவரவர்கள் பிராரத்துவத்திற்குத் தக்கபடி வெவ்வேறு விதமா யிருப்பார்கள்; அவர்கள் தவஞ் செய்தாலும் செய்யலாம், வியாபாரம் செய்தாலும் செய்யலாம், மனைவியோடிருந்தாலும் இருக்கலாம்.

இல்லறம் பெரிதா? துறவறம் பெரிதா?

கூத்தில் அரச வேடம் புனைந்தவன், உண்மையில் தான் அரசனல்ல வென்பது அவனுக்குத் தெரிந்திருந்தும், அணிந்

திருக்கிற வேடத்துக்குத் தக்கவாறு சனங்களுக்காகநடித்துக் காண்பிப்பான். அதுபோல், சீவன் முத்தர்கள், தாம் பற்றற் றிருக்கிறோம் என்பது தமக்குத் தெரிந்திருந்தும், பிரபஞ்ச வேடம் புனைந்திருப்பதை யுத்தேசித்து, உலகத்தாருக்குப் பற்றுள்ளவர்போல் நடித்துக் காட்டுவதேயன்றி, வாஸ்தவத் தில் அவர்கள் பற்றில்லாதவர்களே. ஆயினும், அவரவர்கள் பிராரத்துவத்திற்குத் தக்கபடி வெவ்வேறு கருமங்களைப் புரிந்து கொண்டிருந்தாலும், துறவாச்சிரம முடையவர்களே சிரேட்டமானவர்கள். ஏனெனில், இல்லற தருமத்தோடு செய்யுந் தவமானது இரும்பினாற் செய்த ஆபரணத்திற் பதித்த இரத்தினத்தைப் போலவும், துறவறத்திலிருந்து செய் யுந் தவமானது பொன்னினாற் செய்த ஆபரணத்திற் பதித்த இரத்தினம் போலவும் பிரகாசிக்கும். ஆகையால் துறவறமே எல்லா ஆச்சிரமங்களுக்கும் மேலான ஆச்சிரமம். துறவற மென்றால் காவி வேட்டித் தரித்துக் கொள்வதல்ல! காட் டுக்கு ஓடிப் போவதுமல்ல! பற்றற்றிருத்தலே துறவறம்; பற்றுடைமையே இல்லறம்.

ஞானநிட்டையைப் பொருந்திய சீவன் முத்தர் களுக்கு விருப்பு, வெறுப்பில்லை; தான் தேடியறியவேண்டிய பொருள் ஒன்றில்லை; ஆசாரமாய் நடக்கவேண்டும் என்னும் நியமமுமில்லை; வேறுவிதமான தவ வழிபாடுமில்லை; விரதங்க ளுடன், பிரமசரிய முதலான ஆச்சிரமச் செயல்களுமில்லை; மூர்த்தி தியானமு மில்லை; இன்னபடியிருக்கவேண்டும் என் கிற கோலமு மில்லை; விடயங்களில் ஒழுகுவது மில்லை; அந்தக் கரண வாதனையில்லை; முக்குணங்களின் செயலில்லை, இன்ன சாதி யென்னும் வரையில்லை; காசி முதலிய புண்ணிய சேத்திரங்களில் வசிக்க வேண்டும் என்னும் நியமமும்;

கங்கைக்கரை முதலிய இடங்களி லிருந்து இன்ன திக்கை நோக்கி செபம் முதலிய கிருத்தியங்கள் செய்ய வேண்டு மென்னும் நியமமும், பதுமாசன முதலிய ஆசனங்களில் இருக்கவேண்டும் என்னும் நியமமுமில்லை. ஒரு தொழிலைச் செய்வதுபோல் காட்டி, மற்றொரு தொழிலைச் செய்து, ஊசலைப்போல் அலையும் மனத்தை நிரோதனம் செய்து உலாவல் - நிற்றல் - நித்திரை - விழிப்பு - புசித்தல் - இலங்கணம் - படுத்தல் - இருத்தல் - சுத்தம் - அசுத்தம் - வறுமை - வாழ்வு - ரோகம் - அரோகம் - புணர்ச்சி - ஊடல் முதலானவைகளை விரும்பாமல், சீவப் பிரம்ம ஐக்கிய நிலையையே பொருளாக நினைந்து, அந்த சாயுச்சிய பதத்தில் அழுந்தி நீக்கமற வாழ்வார்கள்.

### சிவஞான வள்ளல்.

சாத்திரம் சமயம் வேண்டார் தத்துவக் கத்து வேண்டார்
கோத்திரங் குலங்கள் வேண்டார் கூறும்ா விரதம் வேண்டார்
மூர்த்தி சேவைகளும் வேண்டார் முன்னவன் பூசை வேண்டார்
தீர்த்தமும் வேண்டார் ஞானச் சின்மய மான மேலோர்.

உம்பர்வா முலகம் வேண்டார் உலகர சாட்சி வேண்டார்
பொன்புனை மகளிர் வேண்டார் புண்ணிய பாவம் வேண்டார்
இன்பொடு துன்பு வேண்டார் இறப்பொடு பிறப்பு வேண்டார்
ஐம்புலப் பகையை வேண்டார் அறிவினை அறிந்த மேலோர்.

### விஞ்ஞான சாரம்.

மனன சமாதி யுடையோர்க்கு வகுத்த இயம நியமமுமில்
சனன மரண வித்தான தருநீ டிருளும் நிவிர்த்தியில்
தனாநற் பரமா னந்தமதுங் கைகூடாது தான்வானா
மனன மதிலே மகிழ்வெய்தி வசனஞ் செயுமுன் படிமயங்கும்.

இல்லறத்தை நீத்து துறவறமா யிருப்பதே மேலான சத்துக்களின் அபிப்பிராயம். அதன்படி, இல்லறத்தை தணந்து துறவறமா யிருத்தலே நன்மை. ஏனெனில், கிணற்றருகிலும், துஷ்ட மிருகங்கள் சஞ்சரிக்கின்ற வனத்திலும் நித்திரை செய்பவன் எச்சரிக்கையாய், கண்ணில் எண்ணெய் விட்டுத் தூங்கிக்கொண்டிருக்க வேண்டுமேயன்றி, அசாக்கிரதையாகத் தூங்கமுடியாது. ஆனால், சனங்கள் நெருங்கிய ஒரு நகரத்திற்குள் இருப்பவன், எவ்வித கலக்கமுமின்றி நிர்ச்சலனமாய் ஆனந்த நித்திரை செய்வான் அல்லவா? அது போல் நிதம்பத்தானமாகிய பாழுங் கிணற்றருகிலும், ஆடவர்களது உயிரைச் சையோக வழியாகக் கொள்ளைகொண்டு, எள்ளிலிருந்து எண்ணெயைப் பிரிக்குந் தன்மைபோல் உடலிலிருந்து உயிரைப் பிரிக்கும் மாயாவிலாச மோக மடந்தையர்கள் என்னும் துஷ்ட மிருகங்கள் நெருங்கிய குடும்பம் என்னும் ஆரணியத்திலும் வசிப்பவர்கள், எப்போது என்ன நேர்ந்திடப் போகிறதோ! என்னும் உள்ளச்சம் ஜெனித்து பக்குவம் முதிரும் வரையில் எச்சரிக்கை யுடனே தான் இருக்க வேண்டும்.

இளந் தென்னம்பிள்ளையை ஆடு மாடுமுதலானவை கடிக்காதபடி காப்பாற்ற அதுமரமாகி ஓங்கிவளர்ந்துபிராணிகளுக்கு எட்டாமற் போய் விடுவதுபோல், அப்பியாசம் முதிரும் வரையில் சாக்கிரதையாக இருந்து காப்பாற்றிக் கொண்டால்தான் சிறப்படையலாம். பக்குவம் முதிரு முன்னர் ஞானம் என்னும் பயிரை இருதனக் கேட்டு வனிதையாகிய மிருகங்கள் கடித்துவிட்டால், அந்த ஞானப்பயிர், முத்தி யென்னும் மணி வாங்குவது மிக அருமை. அங்ஙனம் கதிர் வாங்கினும் பூரணமாக விளையும் என்பது சந்தேகம். இதுவே பிரபல மகான்களின் கருத்து.

## கல்லெல்லாம் மாணிக்கமா?

சனக மகாராசனும், திருவள்ளுவ நாயனர் முதலியவர்களும் குடும்பத்திலிருந்து ஞானம் அடைய வில்லையா? அதுபோல், நாமும் குடும்பத்திலிருந்து ஏன் அடையக்கூடாது? என்று சங்கிக்கக்கூடாது. சனக மகாராசனுக்கும், திருவள்ளுவ நாயனருக்கும் இருந்த அகத்துறவானது சாமானியமானதல்ல. அவர்களுக்குள்ள வன்மை மற்ற அப்பியாசிகளுக்கு இருக்குமானல், தினம் பதினயிரம் அக்கிரமங்கள் செய்ய முயல்வார்களே யன்றி, ஆன்ம லாபம் என்கிற பெயராவது அவர்கள் காதில் நுழையச்செய்ய மாட்டார்கள். அன்றியும், இல்லறத்திலிருந்து ஞானம் அடைந்தவர்கள் சிலரே யன்றித் துறவற முடையவர்களைப்போல் பலரல்ல.

இல்லறத்திலிருந்து குடும்பக் கவலையை வகித்துக் கொண்டு துறவறத்தையும் அடைய முயல்வது இரவில் கூத்துப் பார்த்துவிட்டு வீட்டுக்குத் திரும்புகையில் நடந்து கொண்டே தூங்கி விழுவதையும்; சகல பற்றுகளையும் ஒழித்துப் பேரின்பத்தைப் பெற முயற்சிப்பது, அன்றலர்ந்த மிருதுவான புட்ப சயனத்தில் மனேல்லாசமாக நித்திரை செய்வதையும் நிகர்க்கும்.

### மகாராசா துறவு.

தென்றிசை நடப்போர் கங்கை சென்றுதோய்ந் திடுவ ரோதான்
அன்றியும் அவனி வாழ்க்கைக் கன்மச்சார்க் ளுடனே காந்தம்
ஒன்றியே யூகஞ் செய்வோர் உலகவேந் தாயி னோர்கள்
நின்றிதை நோக்கா யில்லில் இறப்பவர் முத்தி சேரார்.

பாசந்தான் பகைய தாகப் பார்வைபெற் றிடிற்பா சத்திற்
பாசந்தான் வைத்துப் பின்னும் பற்றவுங் கூடு மோதான்
பாசந்தான் பகைய தென்றே பகருநூல் மட்டே கற்றோர்
பாசந்தான் விடவு மாட்டார் பரமெலா மெனவாய்ப் போக்கும்.

இல்லற ஞானிகள் ஒன்றிலும் பற்றாமல் சாக்கிரதை யாக இருக்க வேண்டுவதுபோல், துறவிகள் அதனினும் சாக்கிரதையாக இருக்கவேண்டும். ஏன்?

ஒரு பெண் வேண்டாமென்று கொள்வோம் சன்னியாசம்
ஊரிலுள்ள பெண்கள்மீதெல்லாம் நேசம்

என்பதுபோல் மனம்போன போக்காய்த் திரியக்கூடாது.

திருக்குறள்.

(1) வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

(2) தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

(3) நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

குடும்பஞானியும் கோட்டையும்.

குடும்ப ஞானி கோட்டைக்குள் ளிருந்து சத்துருக்களை எதிர்க்கும் வீரனை நிகர்த்தவன். துறவற ஞானியோ! வெளியில் நின்று சத்துருக்களோடு யுத்தம் செய்பவனை நிகர்த்தவன். ஆகையால் துறவிகள், நெருப்பாற்றில் போடப்பெற்ற மயிர்ப்பாலத்தின் வழியாகச் செல்லுபவனைப்போல் அதிக சாக்கிரதையோடு இருக்கவேண்டும். அங்ஙனம் இருக்க

வேண்டியதிருக்க. சிலர் ஞானிகளென்றும், துறவிகளென்றும் பேர் வைத்துக்கொண்டு, வாயில் வந்தபடி யெல்லாம் புரட்டும், உருட்டும் பேசி, ஏழைகளையும், ஏமாந்த செல்வர்களையும் பகற்கொள்ளை அடிக்கிறார்கள். இவர்கள்,

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு

என்னும் பொய்யா மொழியின் கருத்தை நன்குணராதவரன்றோ? இவ்வாறு இரண்டுங் கெட்டவராக அலைகின்றனர். என்ன பரிதாபம்!

மகாராசா துறவு.

இல்லற மதனி லுறைந்துளோ ரிடத்தி
விருப்பினும் ஞானங்கி ழிரும்பிற்
புல்லிய மாரத் தினமென விளங்கும்
போக்கியில் வினைத்துற வென்னும்
நல்லற மடைந்தோ ரிடத்துறை ஞானம்
நற்றங்க மிசையிரத் தினம்போல்
எல்லையி லொளியாய் விளங்கிடு மாயின்
இல்சிறப் பன்றுஞா னிகட்கே.

விஞ்ஞானசாரம்

ஞான முடையோர்க் கேதறினும்
நஞ்சா குற்ற மெனத்துறவோர்
ஊன மினையோ ருரைத்திடின்மற்
றொன்றே குற்ற மனையுடையோர்க்
கீன முடைய துறவியர்க்கே
யிரண்டாங் குற்றம் பாப்பிரட்டும்
ஆன துறவி விழிவுமென
அறையும் அகன்ற பெரியோரே.

சீவன் முத்தர்கள், தனுவாதிகளோடு கூடியுங் கூடாமல் நேயத்தழுந்தினோர். பரமுத்தர்கள் தனுவாதிகளை நீக்கி நேயத்தழுந்தினோர்.

தணங்குடி வள்ளல்.

பரமுத்தன் குணங்குடித் தெருவில் வரும்பவனி
பார்த்து வருவோம் வாருங்கள்

சிவஞான சித்தியார்.

சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்க ளுலகிற்
சர்வசங்க நிவிர்த்திவந்த தபோதனர்க ளவர்கள்
பாக்கியத்தைப் பகர்வதுவென் னிம்மையிலே யுயிரின்
பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றோ
ஆக்குமுடி கவித்தரசாண் டவர்களரி வையரோ
டனுபவித் தங்கிருந்திடினு மகப்பற்றற் றிருப்பர்
நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற் றாலு
நுழைவர்பிறப் பினின்வினைகள் நுங்கி டாவே.

## விதேகமுத்தி.

விதேகமுத்தி என்பது ஐந்தவத்தைக்கும் அதீதமான பரவெளியாகும். அந்தப் பரவெளியிற் கலந்தவர்கட்கே விதேக முத்தர்கள் என்று பெயர். விதேக முத்தர்கட்கு தூல—சூக்கும சரீரங்கள் நசித்து அதன்மே லெழுந்த ஞானக்கினியினால் காரண சரீரம் நசிக்கும்; தூல சரீரமும் காலநியமப்படி பிரேதமாகும்; அப்போது சாதனத்துக் குரித்தான சூக்கும தேகமானது கொல்லன் உலையிற் காய்ந்த இரும்பானது கிரகித்த சலத்தைப்போலத் துரியமாகவும் வியாபகமாகவும் இருந்த பிரம சொரூபத்தில் நசிக்கும்.

சஞ்சிதவினையுங் காரண சரீரமும் பரஞானத்தினால் கெடுதலும், ஆகாமிய வினையுஞ் சூக்கும தேகமும் அந்த ஞானத்தில் லயமாகுதலும், பிராரத்த கன்மமுந் தூலதேகமும் நியமித்த கால அளவில் நீங்குதலும் ஏற்படும்.

குடமென்கிற உபாதி நீங்கினால் கடாகாய முதலிய நான்கும் ஏகமானதுபோல, மூன்று தேகமென்கிற உபாதி நீங்கினவுடனே சீவன் முத்தரானவர் ஆதிமத்தியாந்த ரகிதமாய், உட்புறமின்றி எப்போது மிருந்தவண்ணம் விளங்குகின்ற விதேகமுத்திப் பதத்தைப் பெற்றிருப்பார்.



# பதினோராவது அத்தியாயம்.

# கடவுளும் சீவன்முத்தரும்.

---

கலி விருத்தம்.

மேவருமெழுபூமியுமேவிய
சீவன்முத்தர்செயலுந்திரிபிலாத்
தேவர்தஞ்செயலுமிவையாமென
ஓவலின்றியுணரவிளக்குவாம்.

சர்வ வல்லமையுள்ள கடவுளானவர், எவராலுஞ் செய்தற்கரிய சிருட்டி, — திதி, — சங்காரம், — திரோபவம், அனுக்கிரகம் என்பவைகட்கு முறையே, ஆக்கல்,—காத்தல்,— அழித்தல்,-மறைத்தல், - அருளல் என்பவைகளைத் தாமறிந்து பாரபட்சமின்றிக் கொடுத்தருள்வதே யன்றி, அப் புண்ணிய பாவங்களில் ஓர் சிறிதும் தான் அடையமாட்டார். அது போல், மெய்ஞ்ஞானிகள் புரியும் நன்மை தீமையெல்லாம் உலோகோபகாரமாய்ச் செய்வதேயன்றி, அவர்களுடைய சுகா சுகத்திற்காகச் செய்து கொள்வதல்ல. ஆதலால், கடவுளும் மெய்ஞ்ஞானியும் ஒரே தன்மை யுடையவர்களேயன்றி வெவ்வேறு தன்மை யுடையவர்களன்று.

கடவுளும் மெய்ஞ்ஞானியும் எப்படிச் சரிசமானமாவார்களென்று சிலர்க்கு ஆட்சேபந் தோன்றுமாகில்,

பிரமகீதை

ஈசனு ஞானி யிருந்துள வீடத்தே யிருப்பதுமுத்திதான் அந்தத்
தேசிக னேவல் செய்பவன் காலென் சென்னியி லிருப்பது மன்றி

மாசிலாப் பரம ஞானியா முனிக்கு மகேசனு மொப்பலன் மதிக்கில்
ஆசிலா அரியும் ஒப்பலன் யானு மொப்பலன் எவரொப் பாரே.

என்பதனாலும்,

"ஆல முண்டவன் அடியர்பின் றிரிகுவன்
அவரடித் துகட்கன்றோ?" என்பதனாலும்,
"அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதுகைச் சீட்டு"

என்னும் நடராசப்பெருமான் திருவாக்கியத்தாலும்,

வண்டறை கொன்றை யான்முன் வந்துநீ யாரை யென்றான்
பண்டரு விபஞ்சி பாண பத்திர னடிமை யென்றான்
முண்டக மலரோன் மாயோன் புரந்தரன் முதல்மற் றேனை
அண்டருந் தன்குற் றேவல் அடிமையாக் கொண்ட வம்மான்.

என்னும் திருவிளையாடற்புராணக் கருத்தினாலும்,

பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமா லுந்தி வந்தோன்
கரியமாலோ அலைகடற் றுயின்றோன்
அலைகடல் குறுமுனி அங்கையி லடக்கம்
குறுமுனியோ கலசத்திற் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறுமண்
புவியோ அரவுக் கொருதலைப் பாரம்
அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்
உமையோ இறையவர் பாகத் தொடுக்கம்
இறையவரோ தொண்டர் உள்ளத் தொடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே.

என்னும் ஔவைப் பிராட்டியார் அமுதவாக்கியத்தாலும் அபேத பாவனையினால் கடவுளும் சீவன்முத்தர்களும் ஒன்றுதானெனை வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றது.

பாலானது பசுமாட்டின் சரீரமெங்கும் விரவியிருப்பினும் முலைக்காம்பின் வழியாகவே வெளிப்படுதல்போல், சர்வ பரிபூரண அகண்ட தத்துவமாகிய கடவுளானவர், அங்கு இங்கு என்று சுட்டிச் சொல்லாத விதமாய் எங்கும் வியாபித்திருந்தாலும் மெய்ஞ்ஞானிகளின் இதய கமலாசனத்தின் மிசையே அதிகமாக வீற்றிருப்பார்.

சீறப்புராணம்

சிறந்தமெய்ப் பொருளை அழிவில்லா மணியைத்
தெரிந்துமுக் காலமு முணர்ந்து
துறந்தவ ரிதயா சனத்திருந் தவனைத்
தொடரின்ப துன்பமற் றவனை.

சிவஞானவள்ளல்

ஒருகண மிருப்பன் றெய்வ வுருவினில் ஈசன் றூன்மற்
றிருகணஞ் செங்கோ லோச்சும் இறையவர் பாலி ருப்பன்
அருமறை யவர்கு ழாத்துள் அம்புவீ ழளவி ருப்பன்
துரியயோ கிகளு ளத்தில் தூங்குவன் இருந்தெப் போதும்.

கடவுளுக்கும், சீவன் முத்தருக்கும் ஆணவம், மாயை, காமியம் என்னும் மும்மலாதி கருவிகாணச் சேட்டைகளற்று இருப்பதனாலும், கடவுளை ஞானியாகவும், ஞானியே கடவுளாகவும் சர்வ சீவகோடிகளிலும் ஏனைய சராசரப் பொருள்களிலும் அபின்னமாய்க் * கலந்திருப்பார்கள்.

---

* சுத்தத்தில் இருக்கையும், அசுத்தத்தில் பார்வையும் என்று சொல்வது முண்டு.

ஞான சொரூபமாக அவதரித்த முகியித்தீனிபுனு அறபி (றவி) அவர்கள் ஏதோ இஸ்லா மார்க்கத்துக்கு விரோதமான வார்த்தைகளை வெளியிட்டதாக அவர்களை வெட்டி விடும்படி அரச ஆக்கினை பிறந்தது. அப்போது அவர்கள் நம்மை வெட்டினால் மற்றவர்கட்கும் இடுக்கண் விளையுமே! என்று பரிதாபமடைந்து அவர்களை நோக்கி, என்னை வெட்டிவிட வேண்டுமென்றால் வெட்டி விடுங்கள்! ஆனால் எனக்கு சவரம் செய்துகொள்ள மட்டிலும் உத்திரவு கொடுங்கள் என்று கேட்டுக்கொண்டார்கள். அதற்கரச னிணங்க, நாயக மவர்கள் சவரம் செய்து கொள்ளும்போது மயிர் வினைஞனை விளித்து, 'நீ எனது விரலில் நகங்களையும்போது, இரத்தம் வரும்படியாகச் சிறிது அறுத்து விடு'' என்று கட்டளையிட்டார்கள். அங்ஙனமே அவன் செய்தலும், நாயகம் அவர்கள் விரலிலிருந்து இரத்தம் ஒழுகவே, அது சமயம் அரசன் முதல் மயிர் வினைஞனிறுதியாயுள்ள எல்லோர் விரல்களிலு மிருந்து இரத்தம் வடிந்து வருத்தம் அதிகரித்தது. அதனுண்மையை மயிர்வினைஞன் மூலமாக வுணர்ந்த அரசன், இவர் தேகத்தில் ஏதாவது பின்னம் நேர்ந்தால் இங்குள்ள எல்லோருக்கும் தீங்கு விளையும்போ லிருக்கிறதே யென்று அஞ்சி, அவர்களை அதுமுதல் ஒன்றும் வருத்தாமலும், அவர்கள் விஷயத்தில் தலையிட்டுக் கொள்ளாமலும் விலகிக் கொண்டனனும்.

மதுரைமா நகரத்தின் வைகையாறு உடைப்பெடுத்த காலத்தில், பிட்டுக்கு மண்சுமந்த சொக்கேசர் பாகம் அடைக்கப் பெறுததால் அரசன் அவரைப் பிரம்பினால் அடிக்க, அவ்வடியானது அரசன் முதலிய எல்லோருக்கும் ஏற்பட்டதுடன், கர்ப்பத்திலுள்ள சிசுக்களுக்கும் ஏற்பட்டிருந்ததென்று சரித்திரங்கள் கூறுகிறது. இதனால் நமக்கென்ன

விளங்குகிறதென்றால், ஆன்மாக்கடோறும் கலந்து விளங்கு கின்ற பரம்பொருளாகிய கடவுளும், கடவுளது பூரண அருள் பெற்ற சீவன் முத்தர்களும் ஒன்றுதான் என்பது இனி மேலுமா சந்தேகம்?

சர்வ சீவராசிகளும் ஞானிகளின் அம்சமேயன்றி வேறில்லை. சகல உயிர்களும் ஞானிகளின் சொரூபமென்றால், ஞானிகள் முத்தியடைய சகல சீவன்களும் முத்தியடைய வேண்டுமே! அவ்வாறில்லாததால் ஞானிகள் வேறு சீவர்கள் வேறுதானேயெனக் கேட்கப்படுமாயின்:—

நான் என்னும் ஆன்மாவானது பரிபூரணமாக விளங்குவதால் அஃது ஏகம். நான் என்னும் அந்தக்கரண வுபாதிகள் எண்ணிறந்தன வாதலின் சீவனானது அநேகம். ஆகாயத்திற் பிரகாசிக்கும் சந்திரன் ஏகம்; அந்தச் சந்திர பிம்பமே நீரில் பிரதிபலித்துத் தோன்றுவது அநேகம். தன்னைத் தானேயாய்ப் பிரகாசித்தல் என்னும் சொப்பிரகாசமாகக் காணுதல் ஆன்மா; தன்னை உபாதியாகக் காணுவது சீவன். சீவனானது வார்த்தையையும், ஆன்மாவானது அவ்வார்த்தையினது இனிய பொருளையும் நிகர்க்கும்.

ஞானவாசிட்டம்

சீவனென் கின்றசொல்லும் பொருளுமாய்ச் செறிந்த ஆன்மா
பாவனை மனனத்தாலே பருத்தெழு மனமதாகும்
மேவரும் பிரமந்தன்னில் வேலையில் அலைபோல் வந்து
தாவுறு முள்ளந்தானே நினைந்தவா சகங்கற் பிக்கும்.

வானத்திற் பிரகாசிக்கும் வெள்ளிய சந்திரன்போல்வது ஆன்மா; சந்திரிகையால் தோன்றும் சலசந்திரன் போல்வது

ஜீவன். வானமண்டலத்திலுள்ள சந்திரன் எதார்த்தமாகவும், ஏகமாகவும், பிம்பமாகவும் விளங்குவது போன்றது ஆன்மா; சலசந்திரன் கற்பிதமாகவும், அநேகமாகவும், பிரதிபிம்பமாகவும் விளங்குவது போன்றது ஜீவன்.

பாத்திரங்களிற் சலமிருக்கப் பிரதிபலித்துக் காணப் பெறுகிற சந்திரபிம்பமானது, அப்பாத்திரம் உடைந்து அதிலுள்ள நீர் கொட்டுண்டு போனபின், தனக்கு முதன்மையாக ஆகாயத்தின்கண் ணுள்ள சந்திரனுடன் கலந்து ஏகமாகிவிடும்; சலசந்திரன் முழுவதுஞ் சேர்ந்து ஒரு சந்திரனது வடிவமாகாது. அதுபோல், உபாதி நசிக்கச் செய்த ஜீவன் எல்லா உயிர்கட்கும் முதற்காரணமான பெருமை தங்கிய ஆன்மாவிற் கலந்து ஒன்றாகிவிடும்; உபாதியை நசிக்கச் செய்யாத ஏனைய ஜீவர்கள் அந்த ஆன்மாவிற் கலக்க முடியாது.

ஜீவன் முத்தர்களை அகண்ட பரிபூரணானந்த முழுமுதற் கடவுளர்க்கு நிகராகச் சொல்வதாகில்: கடவுள் ஆக்கல், காத்தல், அளித்தல், திரோபவம், அநுக்கிரகம் என்னும் ஐந்தொழில்களைச் செய்ய வன்மை பெற்றிருக்கிறாரே? ஜீவன் முத்தர்கள் அவ்வைந்து தொழில்களையும் புரியாமல் சிற்சில அற்புதங்களை மட்டிலுந் தானே செய்கிறார்கள்? எனக் கேட்கப் பெறுமாயின் :—

## குளத்து நீரும் குடத்து நீரும்.

ஓர் தடாகத்திலுள்ள சலமும், பெரிய காந்தவிளக்கும் ஓர் சிறு கிராமத்தைப் பாதுகாக்கும், தடாகத்திலிருந்து அள்ளிய குடத்து நீரும், சிறிய தீபவொளியும் ஓர் குடும்பத்தை மட்டிலும் காக்கும். ஆனால், குளத்திலுள்ள சலமும், குடத்தி

லுள்ள சலமும், பெரிய தீபவொளியும், சிறிய தீபவொளியும் அதனதன் சத்திக்குத் தக்கவாறு காப்பதுபோல், தடாகத்தின் சலத்தையும், பெரிய தீப வொளியையும் நிகர்த்த கடவுள் எவராலுஞ் செய்வதற்கு அருமையான பெரிய பஞ்ச கிருத்தியங்களைச் செய்வார், குடத்து நீரையும் சிறிய தீபவொளியையும் நிகர்த்த சீவன் முத்தர்கள், ஏனையோர்களால் செய்வதற்கரிய அணிமாதி அட்டமாசித்திகளைச் செய்ய வன்மை பெற்றிருப்பார்கள். ஒருகால் பஞ்சகிருத்தியங்களையே செய்தாலும் செய்வார்கள்.

குளத்து நீரும், அக்குளத்திலிருந்து முகந்துகொண்டு வரப்பெற்ற குடத்து நீரும் ஒன்றென்று கருதுவதுபோல், கடவுளும் சீவன் முத்தர்களும் ஒன்றென்று கைவல்லிய நவநீதக் கருத்து விளக்குகின்றது.

சாதாரண மனிதர்களில் அரசனும், அரசனில் சித்து புருடனும் அதிகாரத்தாலும், மகத்துவத்தினாலும் எப்படி உயர்ந்தவர்களோ, அப்படியே சனங்களில் மாயா வல்லபமுடைய தேவாதிகளும், தேவர்களில் அணிமாதி, அட்டமா சித்திகள் செய்யும் யோகீஸ்வரர்களும், யோகீஸ்வரர்களில் நானே பிரம்மம் என்றுணர்ந்த சீவன் முத்தர்களும் உயர்ந்தவர்கள். தற்போதமின்றித் தன்னையே பிரம்மமாகக் கருதி, தனது எதார்த்த வடிவமாகிய ஆன்ம சொரூபத்தைத் தியானிக்கிற பாவனை யுடையவர்களில் இவர் மானிடர், இவர் தேவர் என்கிற பேதாபேதம் சிறிதுமில்லை. ஆகையால் கடவுளும் சீவன் முத்தரும் ஒரே தன்மை யுடையவர்கள் என்பது உணரப்பெறும்.

---

# பன்னிரண்டாவது அத்தியாயம்

# அடியாரிலக்கணம்.

கலிவிருத்தம்.

மறங்கள் யாவு மடிந்து நசித்திடக்
கறங்கு போலுழல் சிந்தையைக் கட்டியே
பிறங்கு மெய்யடி யார்கள் பெருமையின்
திறங்கள் யாவையும் தேர்ந்துரை செய்குவாம்.

அடியாரிலக்கணமாவது பொதுவிலக்கணம், சிறப்பிலக்கணம் என இருவகைப்படும்.

## பொதுவிலக்கணங்கள்.

கொல்லாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, பிறர்மனை நயவாமை, இரக்கம், வாய்மை, பொறை, அடக்கம், கொடை, தாய் தந்தை முதலிய பெரியோரை வழிபடுதல் முதலானவைகளாம்.

## சிறப்பிலக்கணங்கள்.

இது புறத்திலக்கணம், உடலிலக்கணம் அகத்திலக்கணம் என மூவகை. இவற்றுள் புறத்திலக்கணம் 10, உடலிலக்கணம் 10 அகத்திலக்கணம் 3 ஆக 23 வகையாகும்.

புறத்திலக்கணம்:—விபூதி, உருத்திராக்கம் அல்லது திருமண், துளபம் அல்லது தஸ்பீகு மணி முதலிய சின்னங்களைத் தரித்தல், சற்குருவை வழிபடல், கடவுளைத் தோத்திரம் செய்தல், கடவுளது திருநாமங்களை உச்சரித்தல், கடவுளை

வணங்குதல், சற்கருமங்களைச் செய்தல், புண்ணிய சரிதங்க களைக் கேட்குதல், ஆலயங்களைத் தரிசித்தல், அடியாரிடத் தன்றிப் பிறரிடத்துப் போசனம் பண்ணுதிருத்தல். அடியார் விரும்பியதைக் கொடுத்தல் என்பவைகளாம்.

உடலிலக்கணம்:—கடவுளுடைய பெருமையைச் சிந்திக்குந்தோறும், பேசுந்தோறும் கண்டம் விம்முதல், நாக்குத் துடித்தல், உதடு துடித்தல், சரீரம் நடுங்குதல், உரோமம் சிலிர்த்தல், குறு வேர்வை கொள்ளல், நாத்தழுதழுத்தல், ஆனந்தக் கண்ணீர் சொரிதல், வாய்விட்டழுதல், பரவசமாய்த் தன்னை அயர்த்தல் என்பவைகளாம்.

அகத்திலக்கணம்:—அவ்வுற்கலிமா இருபத்து நான்கு எழுத்தில் ஒரு எழுத்தையாவது, பஞ்சாக்கரத்தையாவது, அட்டாக்கரத்தையாவது, மானதமாகச் செபித்தல், மானதமாக கடவுளை வணங்குதல், கடவுளைத் தன்னோடு பிரிவறக் காண்டல் என்பவைகளாம்.

மிட்டாய்க் கடைக்காரன் கருப்பஞ்சாற்றின் திரட்சியாகிய சீனியினால் கருப்பங் கழியைப்போலவும், வேப்பமரம் போலவும், கழுதை, குதிரை, நாய், நரிகளைப்போலவுஞ் செய்து விற்பனை செய்வதில் அந்தப் பல வுருவங்களும் குற்றமற்ற சீனிதான் என்று விலை கொடுத்து வாங்கி, தமது சிறுவர் சிறுமிகட்கு மகிழ்வாகக் கொடுப்பார்கள் அல்லவா? இதுபோல் கடவுளின்து மெய்யடியார்கள் எந்தச் சாதியிற் பிறந்தவர்களானாலும் சாதி மத வித்தியாசம் பாராட்டி உருவங்களைக் கொள்ளாமல் அந்த அடியார்களைக் கடவுளாகவே பாவிக்கவேண்டும்.

வேடத்தைக் கண்டு நாடு மருண்டன.

நபிகளுயகம் அவர்களது இயற்கையும் செயற்கையு மாகிய சீறாப்புராணத்தைச் செய்யுள் ரூபமாகப் பாடுவதற்குக் கீழக்கரை சீதக்காதி (செய் கப்துல்காதிறு) மரைக்காயர், சதக் கத்துல்லா ஆலிம் சாகிப் அவர்களிடம் உரை வாங்கும் பொருட்டு எட்டையாபுரம் இராச சமஸ்தான வித்துவானும், கடிகைமுத்துப் புலவர் சீடருமாகிய உமறுப்புலவர் அவர்களை அழைத்துச் சென்றனர். ஆனால் புலவர் அவர்கள், பாளயப் பட்டு இராச சமஸ்தானப் பழக்கம்போல் கிருதா மீசை வைத்து, தாடியை ஒட்ட வெட்டியிருப்பதோடும் தந்த பந்தி களில் காவியிட்டும், கைகால்களிலுள்ள நகங்களுக்கு மரு தோன்றி யிட்டும், இடையில் பொன்னரைஞாணும், தலையில் சரிகை முறுக்குத் தலைப்பாகை கட்டியும், மாறுதார்ப்பாச்சி உடை யுடுத்தும் இருப்பதை சதக்கத்துல்லா ஆலிம்சாகிபு ஒலியுல்லா அவர்கள் கண்டு கோபாவேசமடைந்து, காபிரீன் (இஸ்லாம் அல்லாதவர்) களின் உடை உடுத்திருக்கிற இவரா? நமது நபிநாயகம் அவர்களின் சரிதமாகிய சீறாவைப் பாடு வார்! என்று கடுகடுத்த வார்த்தையாகச் சொன்னார்கள். அது கேட்டு மறைக்காயர் அவர்கள், நம்மால் புலவர் அவர்களுக்கு அவமரியாதை உண்டாயிற்றே! யென்று விசனமடைந்து, சொல்லிக்கொள்ளாமல் புலவர் அவர்களுடன் வெளியேறி ஒருவரை யொருவர் சந்திக்காமல் சென்றனர்.

உமறுப்புலவரும் நபியுல்லாவும்

அன்றிரவு நபிநாயகம் அவர்கள், சதக்கத்துல்லா சாகி அவர்கள் கனவில் தோன்றி (ஹாலிராகி) "சதக்கே! நீர் எமது உமறுடைய அந்தரங்க விசுவாசத்தை யறியாமல் அவரது நடை உடையைக் கண்டு கோபித்துப் பேசி

விட்டனர். அவர், காபிரீன்கள் இராசரீகத்தில் இருப்பவராதலால், அந்தப் பாவனையாக உடை தரித்திருக்கின்றனர். அவர் காலையில் நம்மிடத்திற்கு வருவார். அதைக் குறித்து விவரிக்காமல், சீறாவைப் பாடுதற்கு உரை கொடும்" என்று கூறி மறைந்தார்கள். அவ்வாறே அன்றிரவு புலவர் அவர்கள் கனவிலும் பிரசன்னமாகி "உமறே! எமது சதக்கு உமது உண்மையை அறியாமல் உடுபாவனையைக் கண்டு கோபங் கொண்டதே யன்றி வேறல்ல. நான் உம்மைப்பற்றி அவரிடம் சொல்லியிருக்கிறேன். ஆதலால் நீர் நாணாமல் காலையில் அவரிடத்தில் செல்லும். உமக்கு மரியாதையுடன் சீறா உரை யெழுதித்தருவார். நீர் பாடும்" என்று சொல்லக்கேட்டு அவ்வாறே சென்று அவர் அனுமதியின் மேல் பரங்கிப் பேட்டை (மகுமூதுபந்தர்) மாமுநயினார் லெப்பை ஆலிம் சாகிப் அவர்களிடத்தில் உரைவாங்கி சீறா புராணத்தைப் பாடி முடித்தனர்.

இஸ்லாம் மதத்தில் மாறாத விசுவாசமுடைய உமறுப் புலவர் அவர்களின் உண்மையான அந்தரங்கக் கருத்து இன்னதென, ஒலித்தனம் பெற்ற சதகத்துல்லா சாகிப் அவர்களே அறியாமற் போனபோது, ஏனைய முஸ்லிம்கள், ஆரிபீன் (மெய்ஞ்ஞானி)களது வெளி வேடத்தைக் கண்டு நிந்திப்பதற்கு என்ன தடை. ஆகையால் ஒருவருடைய வெளி வேடத்தை மாத்திரம் கண்டு, உண்மையை அறியாமற் பிதற்றுவதால் அவர் செய்த பாவங்களை மூட்டை மூட்டையாகக் கட்டுவார்கள். இவர்கள் அடியிற்கண்ட முது மொழியைக் கேட்டறியார்கள் போலும்.

லிபாசுல் மூமினீன் குலூபுல் காபிரீன்
குலூபுல் மூமினீன் லிபாசுல் காபிரீன்.

திருக்குறள்.

(1) எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(2) உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.

அங்க சுத்தியும் சித்த சுத்தியும்.

கை பழகிய மட்பாத்திரத்தை வேறொருவர் தொட்டு விட்டால் அதைத் தீட்டான பாத்திரமென வெளியிலெறிந்து விடுவதே யன்றிப், பொற்பாத்திரம், பொன்னுபரண முதலியவைகளை நீசன் என்பவர்கள் தொட்டு விட்டாலும் அதைத் தீட்டென்று சுத்தஞ்செய்ய ஒருவரும் முயலுவதில்லை; வெளியில் எறிந்து விடுவதுமில்லை. அதுபோல் சித்தசுத்தியற்ற இல்லறத்தார்கட்கே தீட்டு முதலிய அசுத்தங்கள் நேரிடுவதன்றி, துறவற முடையவர்கள் ஒருக்கால் மாதர் சங்கமம் முதலான எந்தக் கிருத்தியங்களைச் செய்தாலும் அவர்கட்கு சித்த சுத்தியிருப்பதால் அங்க சுத்தி செய்ய வேண்டியது அவ்வளவு அவசியமில்லை. இது காரணம் பற்றியே குருபாத தாசர் அருளிச் செய்த குமரேச சதகத்தில்,

... ... ... "சித்த சுத்தன்
பூசைக்கு நவிலங்க சுத்தியில்லை" எனவும்,

"மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்"

(க-து) உள்ளத் தழுக்கறக்க உடலழுக்கைக்
கழுவுவார் பலர்

என்னும் பொருள் தோன்ற பெருநாவலரும் கூறி யிருக்கின்றனர்.

ஒரு பாத்திரத்தின் உட்புறத்தைச் சுத்தி செய்யாமல் வெளிப்புறத்தை மட்டிலும் பிரகாசமாய்க் கழுவி விட்டுச் சமையல் செய்து சாப்பிட்டால், அந்த போசனம் நன்மையாக இராதல்லவா? வெளிப்புறத்தைக் கழுவாமல் உட்புறத்தைக் கழுவிச் சமையல் செய்தால், பிறருக்குப் பாத்திரமட்டிலும் அசுத்தமாகத் தெரியுமேயன்றி, அந்த போசனம் கெடமாட்டா. அகமும் புறமும் சுத்திசெய்து சமையல் செய்தால் மிகவும் நன்மையே. ஆகிலும் உட்புறத்தையே அவசியம் கழுவவேண்டும். அதுபோல் ஒருவன் சித்த சுத்தியில்லாமல் அங்கசுத்தி மட்டிலும் செய்துகொண்டு, கடவுளை வழி படுவதால் ஒருபோதும் நன்மையுண்டாகாது. அங்கசுத்தி யில்லாமல் சித்த சுத்தியுடன் வணங்கினும் நன்மை யுண்டாவது திண்ணம். ஆனால் அங்கசுத்தி செய்ய வேண்டாமென்று சொல்லவில்லை. அங்கசுத்தி இருந்தாலும் இல்லாவிட்டாலும் சித்த சுத்தியே அவசியம் வேண்டும் என்பது கருத்து.

### திருநாவுக்கரசு சுவாமிகள்.

கங்கை யாடிலென்? காவிரி யாடிலென்?
கொங்கு தண்கும ரித்துறை யாடிலென்?
ஓங்கு மாகடல் ஓதநீ ராடிலென்?
எங்கும் ஈசனெ ன் னாதவர்க் கில்லையே.

### ஒழிவிலோடுக்கம்.

உடலா லுழைத்தால் உடலொழியு மென்று
கெடுவீர் இதையெங்கே கேட்டீர்?—உடலே
நடையாடிய பிணம்போல் நான்போய்த் திரியக்
கிடையாதோ வென்று கேளீர்.

பல தீட்டுக்கு ஒரு முழுக்கு.

வைதிக நிட்டாபரனை ஒரு வேதியன், ஒருநாள் ஒரு குளத்தில் இறங்கி நீர்வேட்கையாற் கையினால் தண்ணீர் மொள்ள, கரைமேலுள்ள நாவல் மரத்தின் மீதிருந்து ஓர் எச்சிற் கொட்டை அதில் விழுந்தது. தாகத்தின் கொடுமையால் அதை அவன் நன்கு பாராமல் தண்ணீருடன், பருகிவிட்டு, பிறகு 'இக்கொட்டை இங்கென்னமாய் வந்தது? பறவையோ! குரங்கோ! இன்னும் ஏதேனும் செந்துவோ போட்டது' என்று யோசித்து அண்ணாந்து அம்மரத்தை உற்றுப் பார்க்கையில் அதில் ஒரு சிறு பையனைக் கண்டு, 'நீ யார்?'' என்று கேட்க, அவன் 'ஐயா! நான் பறைப் பையன். இதிலேறிப் பழந் தின்று கொட்டைகளை உமிழ்ந்தேன்' என்றான். அதைச் செவியுற்ற அந்தணன் மிக்க வெறுப்பும் விசனமும் அடைந்து "பறையன் எச்சிலைத் தின்ற யான் எவ்வாறு புனிதனாவேன்" என்று தவித்துக்கொண்டே வந்து ஊரிலுள்ள சாஸ்திரிமாருக்கு இதனை விளம்ப, அவர்கள் "ஏக வாராசனத்தோடு கங்கைக்குச் சென்று ஸ்நானம் செய்து வருவையாயின் அப்பாவம் தீர்ந்து நீ பரிசுத்தனாகுவை" என்று புகன்றனர்.

அதைக்கேட்டு மறையோன், அங்ஙனமே செய்வலெனத் துணிந்து பிரயாணப்பட்டு, மூன்று நாளானபின் ஒரு கிராமத்தில் ஒரு விப்பிரன் வீட்டுத் திண்ணையில் இரவில் படுத்திருந்தனன். அப்போது பகலில் நல்லுணவில்லாமையால் தூக்கம் பிடியாமல் அங்கிருந்த மாடத்திற் கையிட, அதில் ஒரு பாக்கு அகப்பட்டது. அதனை அவன் வாயிற் போட்டுக் கொண்டு சற்று நேரம் குதப்பி நறுக்கென்று கடித்தனன். வீட்டுப் பார்ப்பனி அவ்வோசையைக்

கேட்டு, ஓ! ஐயரே! நீர் படார் என்று கடித்தீரே! அது யாது?' என்று வினவ, அந்தணன் ' அம்மாடத்தில் இருந்த தோர் பாக்கு' என்றான். அவள் ஆச்சரியப்பட்டு, ஐயா! உம்முடைய பல் உரப்பை என்ன சொல்வேன்? நான் வீட்டிற்குப் போகக் கூடாமையால் நேற்றிரவு இங்கு படுத்துக் கொண்டு இப்பாக்கை நெடுநேர மளவும் வாயிற் போட்டு ஊறவைத்துக் கடித்துப் பார்த்தும் கடிக்கக் கூடாமல் இம் மாடத்து உமிழ்ந்துபோனேன். அதை எடுத்துக் கடித்தீரே! உமதெயிற்றின் திண்மை எனது கண்திருஷ்டி படாமல் நெடு நாள் வாழ்க! என வாழ்த்திப் போயினள்.

## தீட்டுக்குமேல் தீட்டு.

பின்பு மறையோன், 'அந்தோ! நமக்குப் புண்ணின் மேற் பூச்சியுங் கடித்ததே! என்று வியாகூலப் பட்டுக் கொண்டே எழுந்துபோய், உதயமாகி ஐந்தாறு நாழிகைக்கு மற்றோர் ஊரில் ஒரு பூசுரன் வீட்டுத் தெருத் திண்ணையில் உட்கார்ந்தனன். குளத்துக்குப் போயிருந்த அவ்வீட்டு விதவை வந்து பார்த்து, 'ஐயா! இன்றைக்கோர் பிராமண னுக்கு அன்னமிடவேண்டும்; யாரையும் காணோம் என்றிருந் தேன். தெய்வாதீனமாக உம்மைக் காணச் சந்தோஷமா யிற்று. நீர் இங்கேயே அமுதுகொள்ளும்; எழுந்து குளத் துக்குப்போய் ஸ்நானமுதலியன முடித்துக்கொண்டு வாரும்' என்றனள். அதுகேட்ட விப்பிரன், சோறு அகப்படுகிறதாயி னும் எச்சின் மேலெச்சில் நேரிட்டதிற்கு என்ன செய்யலா மென்று சிந்தித்துப், பல தீட்டுக்கு ஒரு முழுக்கு ஆதலின் கங்கா ஸ்நானமே எல்லாவற்றிற்கும் பிராயச்சித்தமென்று தேறி, முழுகி வந்து சாப்பிட உட்கார்ந்தான். அவ்வமங்கலி, சோறு கறி முதலியன பரிமாறி உபசரித்துப் புசிப்பித்து

'ஐயா! நான் உங்களுக்குப் போதுமானபடியே சமைத்து வைத்துத் தண்ணீர் கொண்டுவரப் புழக்கடை வாய்க்காலுக்குப் போனேன். அதற்குள் ஏதோ ஒரு நாய் வந்து அதிற் கொஞ்சம் தின்றுபோயிற்று. என் செய்வேன்? பொறுத்துக் கொள்ளுங்கள்' என்று உபசார வார்த்தைகள் சொல்லினள்.

பார்ப்பானோ, 'முதலிற் பறையன் எச்சில்! இரண்டாவது உதகி யெச்சில்! மூன்றாவது சுணங்கன் எச்சில்! இப்படி ஒன்றின் மேலொன்றாக அசுத்தமே நேரிட்டு வருவதனால், இனியெங்கும் உணவு கொள்வதுமில்லை, சயனிப்பதுமில்லை என்று மனவுறுதிகொண்டு, நேரே கங்கைக் கரைக்கேகிக் கங்கையைத் தரிசித்து, மணிகர்னிகா கட்டம் முதலான துறைகளிற் பிராமணர் அநேகர் ஸ்நானம் செய்வதும், பூசை நடத்துவதும், புராணம் படிப்பதுமா யிருந்ததனால் அவ்விடங்களிற் சென்று தன் பாவங்களுக்குச் சங்கற்பஞ் செய்துகொண்டு ஸ்நானஞ் செய்ய வெட்கப்பட்டு, இவைகளுக்குச் சிறிது தூரத்தி லிருந்ததோர் துறையில் முழுக எத்தனித்தனன்.

பார்ப்பனர் துறையும்—பறையர் முறையும்

அத்துறை, பறையர் தங்கள் தங்கள் இனத்தாருடைய பிரேதங்களின் எலும்புகளைக் கொணர்ந்துபோட்டு மூழ்கிப் போகும் இடமா யிருந்தது. ஐயோ! இப்பேதைப் பார்ப்பான் அதையறியாமல் ஆழமான நீரிலிறங்கி அமிழ்ந்து * அகமர்ஷண சூக்தம் சொல்லிக் கொண்டிருக்கையில், சில புலையர் கடத்தில் எலும்பைக் கொணர்ந்து அதில் எறிந்துவிட்டுத் தாங்களும் முழுகி யெழுந்தனர். இதற்குள் அவ்வேதியனும்

* இது பரிசுத்தத்திற்காக சலத்திற்குள் நின்று செய்யும் செபம்.

மந்திரமுடித்து எழுந்திருக்க, இச்சண்டாளர் அவனைக் கட்டிக்கொண்டு, 'எங்கள் அப்பனே! வீட்டிற்குவா போவோம், என்று வலிமை செய்தார்கள். இவன், 'நான் பிராமணன், உங்களவனல்லேன், என் மார்பிற் பூணூலைப் பாருங்கள்' என்று கூவினான். அவர்கள்விடாமல், "உங்கள் அப்பன் இறந்தால் அவன்எலும் புகளைக் கங்கையாற்றில்எறியுங்கள். உடனே அவன் நல்ல செனன மெடுத்துக் கரையேறுவான் என்று நம்முடைய குருக்கள் சொன்னார். அப்படியே நீ பிராமண சென்மமெடுத்துக் கரையேறினாய், உன்னை விடமாட்டோம், நம்முடைய வீட்டிற்கு வந்து, சேகரித்து வைத்த நல்ல உணவுகளைப் புசித்துப் பின்பு தனித்திரு" என்று நிர்ப்பந்தப் படுத்தினர். பார்ப்பான் குய்யோ! முறையோ! என்று கூவித் தன் தலையில் அடித்துக்கொண்டு அழுதான். அப்போது கரையிற் போகாநின்றவர்களும் அதிகாரிகளும் வந்து விசாரித்து, அவனை விடுவித்து, இச்சண்டாளரை நோக்கி 'அடே! புத்தியீனர்களே! உங்கள் குருக்கள் சொன்னது மறு சனனத்திற்காம், கரையேறுவது என்பது பாவத்தினின்றும் நீங்குவதற்காம்' என்று சொல்லி அனுப்பிவிட்டனர்.

வேமன்ன பத்தியம்

1. மலமூத்திர இரக்தாதி மாம்ஸயுக் தம்பைன
முட்டுகுண்ட நீள்ள முன்ச னேமி
பைமுறுகி போவுனு லோமுரிகி போதையா
விஸ்வதா பிராம வினுர வேமா.

(இதன் பொருள்) மலம், மூத்திரம் இரத்தம், மாமிசம் முதலானவைகளைச் சேர்ந்திருக்கிற தீட்டு ஒரு மிடா சலத்தினால் போகுமா? தேகத்தின்மேல் படர்ந்திருக்கும் அழுக்குகள் போகுமேயல்லாது உட்புறமாயிருக்கிற தீட்டுகள் ஒழி

யாது. ஆதலால் உட்சுத்தியாகிய சித்தசுத்தி செய்தாலன்றி, உள்ளழுக்குகளான தீட்டுகள் இந்தச் சரீரத்தை விட்டு ஒரு போதும் நீங்குகிறதில்லை.

2. முட்டுலோனே முட்டுலோனே புட்டிமுட்டண்டு னகுரோசி
வட்டி தீர்த்தமு காடுவாரு காணி
முட்டுகுண்ட நீள்ள முன்சின சுத்தவுனே
விஸ்வதா பிராம வினுர வேமா.

(இதன் பொருள்) சுக்கில சுரோணிதம் என்னும் நாம தேயங்களுடைய இரத்தத்தால் நாம் சனித்து, அந்த இரத்தம் மாதாமாதம் வெளிப்படும்பொழுது அது துச்சமென்றும், தீட்டென்றும், தொடப்படாதென்றும், தீர்த்தமாடிய பின் தொடலாம் என்றும் வீணாகப் பைத்தியம் பிடித்துச் சொல்லுகிறீர்களே! இந்த உபதேசத்தை எந்தக் குருவிடத்தில் கேட்டீர்கள் என்று கூறுகின்றது.

மடியில் பூனை—வழியில் சகுனம்

ஆதலால் மேற்கூறிய பல கருத்துகளையும் ஆலோசித்து உணருமிடத்து தீட்டு என்பதே கிடையாது என்று தோன்றப்படினும், அது மகான்களுக்குக் கிடையாதேயன்றி, மடியிற் பூனையைக் கட்டிக்கொண்டு வழிப்பூனைக்குச் சகுனம் பார்த்து, தொட்டதற்கெல்லாம் சந்தேகமும் விபரீதமும் எண்ணக்கூடிய அந்தகாரமான பிரபஞ்சத்தவர்கட்கு அஞ்ஞானம் நீங்காதிருப்பதால், அவர்கட்கு எப்போதும் தீட்டுண்டு.

இப்பூவுலகத்தில் வசிக்கும் சர்வ ஜீவராசிகளும் உயிர் பெற்று வாழ்வதற்கு இன்றியமையாததாகிய ஆகாரம், வாயு முதலிய பொருள்களுள் தண்ணீரும் மிக்க அவசியம் என்

பது. அனைவரும் நன்கறிந்த விஷயமே. அத்தகைய தண்ணீருக்கு முக்கிய ஆதாரம் மழை. அந்த மழையானது,

வேத மோதிய வேதியர்க் கோர்மழை
நீதி மன்னர் நெறியினுக் கோர்மழை
மாதர் கற்புள மங்கையர்க் கோர்மழை
மாத மூன்று மழையெனப் பெய்யுமே

என்ற ஆன்றோர் வாக்கியப்படி ஒவ்வொரு மாதத்திலும் மும்மூன்று மழை பெய்து வந்தால் உலகத்திற்கு அளவிறந்த சேமகர முண்டாகும். அப்படிப் பெய்யா தொழிந்தால் சேமகால மின்றி சாமகால முண்டாகும். இதனாலேயே,

"மாரி யல்லது காரிய மில்லை" என்றும்,
"வானஞ் சுருங்கின் தானஞ் சுருங்கும்"

என்றும் நமது ஔவைப்பிராட்டியார் திருவாய்மலர்ந்திருக்கின்றனர்.

மழையானது சகல சீவகோடிகளுக்கும் உணவுப் பொருளை யுண்டாக்கி, அவ்வுயிர்கள் அருந்துவதற்கு அமிர்தம் போன்றிருப்பதென்றும், காலந்தோறும் தவறாமல் மழை பெய்தால் பயிர் பச்சைகள் செழித்து வளர்ந்தோங்க, அதனால் உலகம் நல்வாழ்வைப் பெற்று மகிழுமென்றும், ஆகாயமும் பரிசுத்தமாகுமென்றும், அத்தகைய சிறப்புப் பொருந்திய மழையானது காலந்தவறிப் பெய்தால் சத்திரம், ஆலயாதிகளில் நடந்துவரும் *முப்பத்திரண்டு தருமங்களும்

* முப்பத்திரண்டு அறங்களாவன:—1. ஆதுலர்க்குச் சாலை, 2. ஓதுவார்க்குணவு, 3. அறுசமயத்தார்க்கு உண்டி, 4. பசுவுக்கு வாயுறை, 5. சிறைச்சோறு, 6. பிச்சை, 7. தின்பண்டம் நல்கல், 8. அறவைச்சோறு, 9. மகப்பெறுவித்தல், 10. மகவு வளர்த்தல், 11. மகப்பால் வார்த்தல், 12. அறவைப்பிணம் எடுத்தல், 13. அறவைத்

நடைபெறுதென்றும் எவ்வகை மேம்பாடுடையோர்க்கும் தண்ணீர் இல்லாமல் ஒரு காரியமும் நடவாதென்றும், விசாலம் பொருந்திய சமுத்திரமும் வளங்குன்றி விடும் என்றும், சுருக்கிச் சொல்லுமிடத்தில் பூமியிலுள்ள சர்வ சீவகோடிகளும் உயிர்பெற்று வாழ்வது அரிதென்றும், மரம், மலை முதலிய அசரப் பொருள்களும் நிலை குன்றிவிடுமென்றும், சகல வளங்களுக்கும் மழையே காரணமென்றும் சொல்லப் பெறுகின்றது.

திருக்குறள்

(1) சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.

(2) விசும்பிற் றுளிவீழி னல்லால்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

திருமந்திரம்

அமுதூறு மாமழை நீரத னாலே
அமுதூறும் பன்மரம் பார்மிசை தோற்றும்
கமுகூறு தெங்கு கரும்பொடு வாழை
அமுதூறுங் காஞ்சிரை ஆங்கது வாமே.

இவ்விதமாக ஆன்றோர்களால் வியந்து சொல்லப் பெற்றதும், நமக்குப் பிரத்தியட்சமாய்த் தேவாமிர்தம்போன்றிருப்

துரியம் (வஸ்திரமளித்தல்), 14. சுண்ணம் ஈதல், 15. நோய்க்கு மருந்து, 16. வண்ணான், 17. நாவிதன், 18. கண்ணாடி, 19. காதோலை, 20. கண் மருந்து, 21. தலைக்கெண்ணெய், 22. பெண் போகம், 23. பிறர்துயர் காத்தல். 24. தண்ணீர்ப்பந்தல், 25. மடம் கட்டுவித்தல், 26. தடம் (குளம்) வெட்டுவித்தல், 27. சோலை வளர்த்தல், 28. ஆவுறிஞ்சுதறி, 29. விலங்கிற்கு உணவு, 30. ஏறு விடுத்தல், 31. விலைகொடுத்து உயிர்காத்தல், 32. கன்னிகாதானம்.

பதுமாகிய மழையானது, நல்லோர்களாகிய மகான்கள் எந்தத் தேசங்களில் வசிக்கின்றார்களோ! எந்தத் தேசம் பெரியோர் களை நன்கு மதிக்கிறதோ! அந்தத் தேசத்தில் மாதம் மும் முறை பெய்து செழிப்பாக இருக்குமென்பது நாம் சொல் லாமலே விளங்கும்.

திருமந்திரம்

திகைக்குரி யாரொரு தேவனை நாடும்
வகைக்குரி யாரொரு வாதி யிருக்கிற்
பகைக்குரி யாரில்லை பார்மழை பெய்யும்
அகக்குறை கேடில்லை அவ்வுல குக்கே.

மூதுரை

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டால்
எல்லார்க்கும் பெய்யு மழை.

## பரிகலச் சேட மகிமை

இத்தகைய மகத்துவம் வாய்ந்த மகான்களுக்கு ஒரு வன் அன்புடன் ஒருவேளை அமுது படைத்து உபசரிப்பானே யானால், அதனாலுண்டாகும் பிரயோசனம் இவ்வளவு அவ் வளவு என்று எவராலும் வரையறுத்துச் சொல்லுவதரிது.

திருமந்திரம்

தண்டறு சிந்தைத் தபோதனர் தாமகிழ்ந்
துண்டது மூன்று புவனமும் உண்டது
கொண்டது மூன்று புவனமும் கொண்டதென்
றெண்டிசை நந்தி யெடுத்துரைத் தானே.

உலக முழுவதையும் போர்த்திருந்த பனிப்படலமானது, விண்மணியாகிய சூரியப் பிரகாசத்தைக் கண்டவுடன் வெளி வாங்கி மறைவதுபோல், மெய்ஞ்ஞானிகளாகிய சத்துக்கள்

உண்ட மிச்சிலெனும் பரிகலச் சேடத்தை ஒருவன் பெறுவ தரிது. அவனது தபோபலத்தினால் கிடைக்கப்பெற்று, அதைப் புசித்த மாத்திரத்தில் அவனது தீவினைகளெல்லாம் நசித்து, உதிர்ந்துபோன இலைகள் திரும்பவும் மரத்திற் போய்ச் சேர்ந்து வாழாததுபோலவும், கறந்தபால் மீண்டும் முலைக்கண் வழியே புகாததுபோலவும் அந்தத் தீவினைகள் திரும்பவும் இவனை வந்து அணுகாது. இதற்குத் திருட்டாந் தம் பின்வருஞ் சரித்திரத்தால் அறியலாம்.

தெட்சணாமூர்த்தியும்—தாசில்தாரரும்

பொன்னிமாநதி மன்னி நீழலிற் பன்னலந் தரும் சென்னி நாட்டில் நிலவள முதலிய பல வளங்களும் நிறைந்த செல்வத் திருவாரூரின் கண் ஓடம்போக்கி யாற்றின் கரைக்கு வடபாலில் நபோமணியைப்போல் விளங்கும் மடப்புரம் என்னும் புண்ணிய பூமியில், கலியுகாதி (4937)-ல் மன்மத வருடம் ஆவணி மாதம் உத்தர நட்சத்திரமாகிய சுபதினத்தில் சச்சிதானந்த பரிபூரண வியோமாதீத பிரம சைதன்னிய கைவல்லியத்தை யடைந்த கருணாநிதியாகிய ஸ்ரீ குரு தெட்சணாமூர்த்தி வள்ளற்பெருமான் உலக சஞ்சாரஞ்செய்து வருங்காலத்தில், ஒருநாள் இரவில் விராலிமலைக்குச் சென்றிருந்தபோது பெருமழை பெய்ய, அதற்காக சுவாமிகள் ஒரு தாசி வீட்டுத் திண்ணையில் ஒதுங்கி யிருந்தது. சுவாமிகள் பசியோடிருப்பதை விராலிமலை*முருகக்கடவுள் அறிந்து, அர்த்த சாமத்தில் தனக்கு நிவேதனமாகிய சர்க்கரைப் பொங்கலைத் தாம்பாளத்தோடு எடுத்துக்கொண்டு ஒரு சிறிய பிராமணப் பிள்ளையைப்போல் வந்து, அப்பா! என்று கூவி, இவ்வன்னத்தைப் புசியென்று கொடுத்து விட்டு மறைந்

* ஓங்காரத்துள்ளொளிக்குள்ளே முருகனுருவம்.

தருளி; சுவாமிகள் அவ்வன்னத்திற் சிறிது புசித்து எஞ்சி யதை புதுக்கோட்டை தாசில்தாருக்குக் கொடுக்க, கிறுகிறு என்றிழுத்துக் கொண்டிருந்த காச நோயும், ஒரு தலைநோயும் நீங்கிற்றாம்.

சித்தூர் சில்லாவிலுள்ள சோமநாத முதலியார் என்னும் தனவந்தர், பல ஔடதங்களாலும் நீங்காத குன்ம வியாதியால் பீடிக்கப்பெற்று, சிதம்பரம் நடராசா சன்னதியில் அர்த்தசாம வேளையில் பிராணத் தியாகஞ் செய்ய எத்தனிக்கும்போது, நடராசப் பெருமான் அசரீரியாக 'இக்குன்ம நோய் திருவாரூர் தெட்சணாமூர்த்தியால் நீங்கும்' என்று கூற, அங்ஙனமே சோமநாத முதலியார் திருவாரூருக்கு வந்து சுவாமிகளைத் தேடிக் கண்ணுற்று அடியற்ற மரம்போல் விழுந்து நமற்கரித்து பயபத்தியுடன் கை கட்டி வாய்பொத்தி நின்றாராம்.

அதுகண்ட சுவாமிகள் முதலியாரை நோக்கி, 'உன்னை நடேசன் அனுப்பினானோ!' எனத் திருவாய் மலர்ந்தருளி, ஒரு வீட்டு வாயலிற் கிடந்த பரிகலத்திலுள்ள அன்னத்தை ஞமலிகளோடு தானும் புசித்துக் கொண்டிருந்ததில் சில அன்னத்தை முதலியார் வாயிலிட்டு உட்கொள்ளும்படி செய்தனர். உடனே நீண்ட காலமாய் முதலியாரை வருத்திக் கொண்டிருந்த குன்ம நோய் நீங்கப் பெற்றதாம். இதனை ஸ்ரீ குரு தெட்சணாமூர்த்தி சுவாமிகள் சரித்திரத்தில் விரிவாய்க் காணலாம்.

பிரபுலிங்கலீலை.

(1) தொழிலான் முயன்று நுகர்வமெனிற்
றுயரோன் றுயிர்க்கு விளையுமென
வொழியா வமல சாமூர்த்தி
யுண்ட மிச்சில் நுகர்வமெனிற்

பழியா துயிலே யகன்றுபோம்
 பவமு மென்னப் பிரசாதக்
குழியா னதனை யகலாமற்
 கொண்டிங் கிருந்தான் குணமிக்கான்.

(2) தாய்க்கு வழுவின் மகளிர்க்குத்
 தந்தை தனக்குட் பசுவிற்குச்
சேய்க்கு மறையோர் தமக்கிடர்செய்
 தீர்வில் கொடிய பாதகமும்
போக்கு மிமைப்பிற் கரணத்தைப்
 புனித மாக்கிச் சிவமாக
ஆக்கும் அரன்றன் பிரசாத
 மாயி னதற்கு நிகருண்டோ.

### திரியம்பகரும்-கூத்தாடிப் பெண்ணும்

முன்னொரு காலத்தில் கும்பகோணத்துக் கடுத்த மத்தியார்ச்சுனம் என்னும் திருவிடைமருதூருக்கு அருகாண்மையிலுள்ள ஒரு தோப்பில் சந்திரசேகர சுவாமிகள் தம்து சீடராகிய திரியம்பகருடன் ஒரு சமயம் அமர்ந்திருந்தனர். அவர் திரியம்பகருக்கு ஏற்கனவே வேத முடிவிற் சிறந்த உட்பொருளாகிய உபநிடத மகா வாக்கியத்தை உபதேசித்திருந்தார். அவ்விதமிருக்கத், தான் ஒருநாள் பரிபூரணம் அடையுஞ் சமயத்தில் திரியம்பகரை ஒரு ஓலையும் எழுத்தாணியும் கொண்டுவரச் செய்து, பின்னர் தாகத்துக்கும் சலங்கொண்டு வரும்படி ஆக்ஞாபித்து அனுப்பிவிட்டு, சந்திர சேகர சுவாமிகள் திரியம்பகர் வாசித்துணரும் பொருட்டு அவ்வோலையில் ஒரு செய்யுளை எழுதிவைத்து அவர் வருவதற்குள் பரிபூரணம் அடைந்து விட்டார். அந்த ஓலையை அவ்விடத்தில் நின்று தமது சாமான்களை யேற்றிச்செல்லும் கழுதைகளை மேய்த்துக்கொண்டிருந்த ஒரு கூத்தாடிப் பெண் எடுத்தும்

பார்க்கப் புதிதாயும், அழகாயுமிருந்ததால், முற்காலத்தவர்கள் வழக்கப்படி அதைச் சுருட்டி தன் காதில் ஆபரணமாக அணிந்து கொண்டாள். அதைக் கொஞ்சதூரத்தில் வரும் போதே பார்த்துக் கொண்டுவந்த திரியம்பகர், சமீபத்தில் வந்து, தமது குருநாதன் பரிபூரணமடைந்ததைக் கண்ணுற்று அடங்காத துக்கமடைந்து, அவருக்குச் செய்ய வேண்டிய கிரியைகளைச் சரிவரச்செய்து முடிவானபின் தனக்கு முடிவாகச் சொல்ல வேண்டிய இரகசியங்கள் அடங்கிய ஓலையைக் கூத்தாடிப்பெண் எடுத்துப் போய் விட்டனள் எனவுணர்ந்து, அடடா! இந்த ஓலையில் நமக்காக என்ன இரகசியார்த்தத்தை யெழுதிவைத்துப் போயினரோ! தெரியவில்லையே! அந்த ஓலையை நாம் எவ்விதத்திலாவது வாங்கிப் பாாக்கவேண்டும்; ஆனால் அவளுடைய மன வருத்தம் வராதபடி நன்மையாக நடந்து வாங்கிப் பார்க்க வேண்டுமே யன்றிப், பலாத்காரமாகவாவது, அவளை வஞ்சித்தாவது நாம் வாங்கினால், அதில் எழுதியிருக்கும் விஷயங்கள் நமக்குச் சித்திக்காதென்றெண்ணி, அவளிடம் கழுதைமேய்க்கும் ஊழியத்தைப் பெற்று, அவள் கூடவே கூத்தாடுமிடங்களுக்கும் போய்க்கொண்டிருந்தனர்.

## கோடி பிராமணர்கட்கு கோதானமும் பூதானமும்

அக்காலத்தில் அந்த நாட்டையாளும் அரசனுக்கு புத்திரப்பேறு இல்லாதிருந்ததால் வேதியர்களை வரவழைத்துத் தன்னுடைய குறையைச் சொல்லிக் காட்டி, இதற்கென்ன செய்யலாம்? என்று கேட்டான். அதற்கு வேதியர்கள், கோடி பிராமணர்களுக்கு அன்னதானமும், கோதானம் பூதானம், சொர்ன தானம், கன்னிகாதானம், வஸ்திர தானம் முதலியவைகளையும் செய்தால் புத்திரப் பேறு உண்டாகும்

என்றனர். அதைக் கேட்ட அரசன் பிராமணர்களுக்கு மாத்திரமே தானம் செய்ய வேண்டுமா? மற்ற வருணத்தார்களுக்குஞ் செய்யலாமா? என்றனன். அதற்கு சுயநலப் புலிகளாகிய பார்ப்பனர்கள், பிராமணர்களுக்கு மாத்திரந்தான் செய்யவேண்டும். மற்றவர்களுக்குச் செய்ய வேண்டிய அவசியமில்லை. ஆனாலும் மறைபவர்களுக்குத் திருப்திவரச் செய்தபின் செய்தாலுஞ் செய்யலாம்' என்றனர். அது கேட்டு அரசன், சத்திரத்தில் வருகிற பார்ப்பனர்களுக்கு (*) பிராமணம் போஜனப் பிரியம்' என்பதற் கிணங்க வடை பாயசத்துடன் திருப்திகரமான பூரண போசனமும், ஆதுலர்களுக்கு ஆடை யாபரணம் முதலியவைகளும் கொடுக்கும்படி கட்டளை யிட்டனன்.

இப்பழமொழிக் கிணங்க "சில பார்ப்பனர்கள் அடி வயிற்றில் வாழைநாரைக் கட்டிக்கொண்டு, அது தெறிக்கும்படி பந்தி போசனஞ் செய்பவர்கள்" என்று சொல்லுவது கர்ன பாரம்பரை இதைப்பற்றி ஒரு சிறிய கதையுண்டு.

### பிராமணு போசனப் பிரியா

சில வருடங்களுக்கு முன் ஸ்ரீரங்கத்தில் ஐயங்கார்ப் பிராமணர்களுக் கெல்லாம் சமாராதனை நடந்தது. அப்போது கறிவகைகளெல்லாம் ஈளபாகமாக இருந்தபடியால் ஒவ்வொருவரும் அளவு கடந்து புசிக்க நேரிட்டது. அவ்வாராதனைக்கு ஓர் வைஷ்ணவப் பிரபல ஆச்சாரியார் தமது சிஷ்ய குழாத்துடன் வந்து நிரம்பப் புசித்து வெளியேறித் தமது வீட்டுக்குப் புறப்படும்போது குனிய முடியாமல் தமது பாதரட்சையைக் கால் நிதானமாகவே தேடிப் பார்த்தார். அவ்விடத்தில் பலபேர்களுடைய பாதரட்சைகளும் இருந்தபடியால் தன்னு

(*) பிராமணம் போஜனப் பிரியம் என்பது பழமொழி.

டைய பாதரட்சை இன்னதென்று கண்டுபிடிக்க முடியாமல் சீடர்களை நோக்கி, 'என்னுடைய பாதுகைகளை எடுத்துவை யுங்கள்' என்றார். அதற்குச் சீடர்களும் குனியமுடியாமல், 'சூரியமண்டலம், சந்திரமண்டலம், நட்சத்திரமண்டலம் முழு வதும் தேடிப் பார்த்தோம்; ஒரு விடத்திலும் காண்கிலேம்' என்றனர். அப்போது ஆச்சாரியர் கால் நிதானமாகவே தன்னுடைய பாதுகை யென்று மற்றொருவருடைய பாது கையை மாட்டிக் கொண்டு அகத்துக்குத் தெய்வப் பிரயத் தனமாய் வந்து சேர்ந்தும், மூச்சுப் போய் வர வழியில்லாமல் முட்டுவதால், ஓரிடத்திலும் இருக்கமுடியாமல் உலாவிக் கொண்டே யிருந்தார். அப்படி உலாவிக் கொண்டிருந்தும் சகிக்க முடியாமல் மனைவியை விளித்து, 'அடியே! இந்தச் சங்கடத்துக்கு என்னடி செய்கிறது? நீயாவது ஒரு மார்க்கம் சொல்லப்படாதா? சும்பத் தேவடியாள் கொஞ்சமேனும் மனமிரங்காமல் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாளே என்றனர். அதற்கவள் 'ஒரு விரலைவிட்டு வாந்தி பண்ணி விடுங்களேன்' என்றாள். 'ஒரு விரல் போவதற்கு இடமிருந் தால் ஒரு வடையும் கொஞ்சம் பாயசமும் விட்டு நிரப்பி யிருக்க மாட்டேனா? விரல் போகத்தானே வழியைக் காணோ மென்று அழுதார். அவ்வழுகுரலைக் கேட்டு ஜனங்கள் கும்பல் கூடினர் என்பது கர்ன பரம்பரை. பிராமணர்கள் வடை பாயசத்துடன் சாப்பிடும் போசனத்தைப் பசிக்குண வெனக் கருதாமல், அதையே தெய்வமாக வெண்ணி,

"அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு,"

என்னும் திருவள்ளுவரின் கருத்தையும்,

"நீபெருக்கத் தின்றக்கால் நித்திரையுங் கோபமதாம்
நீசுவர்க்கத் தேகாம லேகிறுத்தும்"

என்னும் ஞானமணி மாலையின் கருத்தையும் உணர்ந்து, அரை வயிறு போசனமும், கால் வயிறு உதகமும் கொள்ள வேண்டியதிருக்க, அது சோறு கிடைக்காதவனுக்குச் சொன்ன சாஸ்திரமென்று தூஷித்துவிட்டு அளவுக்குமேல் சாப்பிடுகின்றார்கள். ஆதலாலேயே பார்ப்பனர்களில் அதிக மகான்களில்லை, ஆனால் இக்காலத்தில் மிதபோசனமும், சமரசப் பொது நோக்கமும் பொருந்திய பிராமணர்கள் சிறு பான்மையோர் இருக்கின்றனர். இத்தகையோர் பெரும்பாலும் இராசசேவை யுடையவர்களாகவும், மிகச் சிறுபான்மையோர் வைதீகர்களாகவும் காணப் பெறுகின்றனர்.

திருவருட்பா.

சோற்றிலே விருப்பஞ் சூழ்ந்திடி லொருவன்
றுன்னுநற் றவமெலாஞ் சுருங்கி
யாற்றிலே கரைத்த புளியெனப் போமென்
றறிஞர்க ளுரைத்திடல் சிறிதும்
போற்றிலே னின்னைப் போற்றிலேன் சுவையிற்
பொருந்திய காரசா ரஞ்சேர்
சாற்றிலே கலந்த சோற்றிலே யாசை
தங்கினே னென்செய்வே னெந்தாய்.

பதஞ்சலியார்.

அரைவயி றொருபொழு துணுமவர் மவுனமும்
அவர்களும் அறிவாரே.

அரசன் தான தருமஞ் செய்வதைக் கேள்வியுற்ற கூத்தாடிப் பெண், தன் வித்தையைக் காட்டி அதிக பரிசுபெற எண்ணி திரியம்பகருடன் போய் ஒரு தோப்பில் தங்கி யிருந்தாள். அவர்களுக்குப் பசியாக இருந்தபடியால் அவள் திரி

யம்பகரைப் போய்ச் சோறு வாங்கி வரும்படி அனுப்பினாள். அவர் மேற்படி சத்திரத்தை யடைந்து சுவாமிகளே! அதிக பசியா யிருக்கிறது! கொஞ்சம் அமுது படையுங்கள்! எனக் கேட்க, அங்கிருந்த பார்ப்பனர்கள், 'ஆரடா! இந்த அகாலத்திற் சோறு கேட்கின்றவன், சோறுமில்லை, கறியுமில்லை, அதிலும் பிராமணர்களைத் தவிர மற்றவர்களுக்குப் போடுகிற வழக்கமுமில்லை இங்கு நில்லாதே ஓடிப்போ! என்று

"கன்மனப் பார்ப்பார் தங்களைப் படைத்துக்
காகத்தை என்செயப் படைத்தாய்"

என்னும் பழமொழியும் "மூட்டிபுகும் பார்ப்பார் அகத்தை யெட்டிப் பாரோமே" என்னும் கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் வாக்கியமும் நிச்சயமாகும் வண்ணம் கர்ன கடூரமாகச் சொன்னார்கள்.

## சத்திர நியமம்.

தருமத்திற்காக சத்திரங்கட்டி அன்னதானஞ் செய்வதில், பிராமணர்களுக்கு மாத்திரம் அன்னம் போட்டால்தான் புண்ணியம்; மற்றவர்களுக்குப் போடுவது பாவம் என்று எண்ணினால், குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொண்டு வந்ததுபோலாகும். பசியுடையவர்கள் கொலை புலை புரியும் பாதகர்களா யிருப்பினும் அவர்களுக்கு அன்னமிடுதல் அவசியம் என்று வடலூர் இராமலிங்கவள்ளல்,

"உயிர்க்கொலையும் புலைப்புசிப்பு முடையவர்க ளெல்லா
முறவினத்தா ரல்லரவர் புறவினத்தா ரவர்க்குப்
பயிர்ப்புறுமோர் பசிதவிர்த்தன் மாத்திரமே புரிக
பரிந்துமற்றைப் பண்புரையேல் நண்புதவே லிங்கே."

என்று திருவாய்மலர்ந்தருளி யிருக்கின்றனர். பசித்தவன் நொந்தால் எல்லாப் புண்ணியங்களும் நாசமாய்விடும். பசித்தவர்க்கிடும் அன்னமே தருமமாகும். உயர்ந்தோர், தாழ்ந்தோர், பெரியோர், சிறியோர் என்கிற பாகுபாடுகளை நீக்கி, எவராயிருப்பினும் பசித்தவர்க்கே முதலில் அன்னமிட வேண்டும். பசியில் தாழ்ந்தோர் பசி யென்றும், உயர்ந்தோர் பசி யென்றும் பேதமில்லை. "ஏழை அழுத கண்ணீர் கூரிய வாளுக்கொக்கும்" என்றனர் முதியோர்.

திருமந்திரம்

ஆர்க்கும் இடுமின் அவர்இவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை யுண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணுங் கால மறிமினே.

தன்னை யறியாது தானல்லா னென்றிங்
கின்மை யறியாது இளையரென் றோராது
வன்மையில் வந்திடுங் கூற்று வருமுன்னம்
தன்மையு நல்ல தவஞ்செய்யும் நீரே.

அற்றுநின் றாருண்ணு மூணே யறனென்னும்
கற்றன போதங் கமழ்பவர் மானிடர்

சத்திரமாவது ஞானிகள் துறவிகள் முதலிய பெரியோர்களுக்கும், தொழில்செய்து ஜீவனஞ் செய்யச் சத்தியில்லாதவர்களாகிய குருடர் முடவர் வியாதியாளர் வயோதிகர் சிறுபிள்ளைகள் என்பவர்களுக்கும், அன்னதானம் நடத்துவதற்கும், வழிப்போக்கர்கள் தங்குவதற்கும் உரிய இடமாம்.

கல்வியறிவும், நற்குண நற்செய்கைகளும், ஈசுரபத்தி அடியார் பத்திகளும் உடையவர்களை அதிகாரிகளாக நிய

மித்தால் சத்திரம் நன்றாக நடக்கும். பேராசையும், வன்கண்மையும், பொறாமையும், துரபிமானமும் உடையவர்களை நியமித்தால் நன்றாக நடவாது. ஆதலினாலே, சத்திரங் கட்டுவித்தவர் யோக்கியர்களையே அதிகாரிகளாக நியமித்து, சத்திர தருமங்களைச் சிரத்தையோடு விதிப்படி நடத்திவைக்கவும். காலந்தோறும் தாம் பிறிது வேடந் தரித்துக்கொண்டு சென்று அந்தச் சத்திர தருமங்களை ஆராய்ச்சி செய்யவும் வேண்டும்.

பசிதாகங்கள் எல்லாச் சாதியாருக்கும் உள்ளதாயிருக்க, பிராமணருக்கு மாத்திரம் அன்னதானஞ் செய்வதே தருமமென்றும், மற்றைச் சாதியாருக்கு அன்னதானஞ் செய்வது தருமமன்றென்றும் பலர் எண்ணுகின்றார்கள். இவ்விபரீத சிந்தனத்தினாலன்றோ பெரும்பான்மையும் சத்திரத்திலே பிராமணருக்கு மாத்திரமே அன்னதானஞ் செய்கின்றார்கள்.

வறியவருக்குக் கொடுப்பதே தருமம். செல்வருக்குக் கொடுப்பது தருமமன்று; "வறியார்க்கொன்றீவதே யீகை" என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார். வறியவருள்ளும், நல்லொழுக்கமுடையவருக்கும், தொழில் செய்து சீவனஞ் செய்யச் சத்தியில்லாதவருக்குங் கொடுப்பதே தருமம்; தீ யொழுக்க முடையவருக்கும் தொழில் செய்து சீவனஞ் செய்யச் சக்தி யுடையவருக்குங் கொடுப்பது தருமமன்று. பிராமண ரெல்லாரும் வறியவரு மல்லர், மற்றைச் சாதியா ரெல்லாருஞ் செல்வரு மல்லர். பிராமண ரெல்லாரும் நல்லொழுக்க முடையவரு மல்லர், மற்றைச் சாதியாரெல்லாருந் தீயொழுக்க முடையவருமல்லர். பிராமண ரெல்லாருந் தொழில்செய்து சீவனஞ் செய்யச் சத்தியில்லாதவருமல்லர், மற்றைச் சாதியா ரெல்லாருந் தொழில் செய்து

சீவனஞ்செய்யச் சக்தியுடையவருமல்லர், வறுமை செல்வங்களும், நல்லொழுக்கம் தீ யொழுக்கங்களும், தொழில் செய்யுஞ் சத்தியினது இன்மை உண்மைகளும் எல்லாச் சாதியாரிடத்தும் உண்டு. இப்படி யிருக்க, பிராமணருக்கு மாத்திரங் கொடுப்பது தருமமென்றும், மற்றைச் சாதியாருக்குக் கொடுப்பது தருமமன்றென்றுங் கொள்வது பேதைமையே.

பிராமணர்கள் விளைநிலந் தோட்ட முதலியவை யுடையவர்களே யாயினும், வட்டிக்குப் பணம் கொடுத்திருப்பவர்களேயாயினும், வேளாண்மை, வாணிகம், இராச சேவை முதலிய தொழில்கள் செய்பவர்களே யாயினும், சத்திரங்களில் அவர்களுக்கே மிக்க உபசாரத்தோடு அன்னங் கொடுக்கின்றார்கள். மற்றைச் சாதியார்களோ வறியவர்களாயும், தொழில்செய்து சீவனஞ் செய்யச் சத்தியில்லாதவர்களாயும் இருப்பினும், அவர்கள் பசியினாலே மிக வருந்திச் சத்திரத்து வாயிலிலே வந்தபோது, அவர்களுக்குக் கஞ்சியாயினும் கொடாது, அவர்களை வன்கண்மையோடும் துர்வார்த்தைகளினாலே வைதும், பிடர் பிடித்துத் தள்ளியும் ஓட்டி விடுகின்றார்கள்.

ஈசுரத் துரோகம், சந்தியாவந்தனஞ் செய்யாமை, கொலை, களவு, மதுபானம், மாமிச பட்சணம், வியபிசாரம், பொய்ச்சான்று சொல்லல், பொய் வழக்குப் பேசல், சூதாடல் முதலிய பாவங்களையே செய்பவர்களாயினும் பிராமண வருணத்தார்களே யாயின், சத்திரங்களில் அவர்களுக்கு நெய், தயிர், பாயசம், வடை முதலியவற்றோடு விலாப்புடைக்க அன்னங் கிடைக்கின்றது. இப்பாவங்கள் இல்லாதவர்களாய், அறிவொழுக்கங்களினாற் சிறப்புற்றவர்களே யாயினும், பிராமண ரல்லாத மற்றைச் சாதியார்களாயின், அவர்களுக்குச்

சத்திரத்திலே இரசமுஞ் சாதமுமாயினும் கிடைப்பது அரி தரிது.

ஒருவர் அறிவினால் உயர்ந்தவரேயன்றி சாதியினால் எங் ஙனம் உயர்ந்தவராதல் கூடும். இதை யறியாமல் பல இந்துக் கள் செம்மறியாடுபோல், எங்களப்பன் செய்ததை நாங்களும் செய்கிறோம் என்று மதிகெட்டவராக தானம்செய்கிறார்களே யன்றி, அவர்கள் அப்பன் காலத்தில் பிராமணர்கள் எத்தன் மையுடனிருந்தார்கள், இக்காலத்தில் எத்தன்மையுடனிருக் கிறார்களென்று பகுத்தறியாமல் கண்மூடித்தனமாகக் காலம் கழித்து வருவதும் அறியாமையின் தன்மையேயாகும்.

சிவதருமோத்தரம்.

புலையரே யெனினு மீசன் பொலங்கழ லடியிற் புந்தி
நிலையரே லவர்க்குப் பூசை நிகழ்த்துத னெறியே யென்றுந்
தலையரே யெனினு மீசன் றமரைத் தாளி னேச
மிலரெனி னியற்றும் பூசைப் பலந்தரு வாரே யாரே.

குரவன் றனக்கு நிதிமுதலுங் கொடுக்கக் குன்றாக் குணமொழுக்கம்
விரத முடைய வேதியர்க்கும் விழைவாற் பதமு மிசைவிக்க
பரம னடியா ரவர்தமக்கும் பங்கு காலர் பாலருடல்
விரவு நோயர் விழியிழந்தார் விருத்தர் தமக்கும் விருப்புறவே.

என்னும் இச்செய்யுட்களின் கருத்தைச் சற்றும் உணராது, அப்பார்ப்பனர்கள் கர்னகடூரமாகச் சொன்னதைக் கேட்டு அருகிலிருந்த காராள குல திலகர் ஒருவர் மனமிரங்கி, ஐயோ! பாவம்! இவன் எப்போது சாப்பிட்டானோ தெரிய வில்லை. ஏதாவது கரிப்பற்றிருந்தாலும் பார்த்துப் போடுங் கள் என்றனர். அதன் பின் சுயநலப் புலிகள் தங்களுக் குதவாத அடிப்பற்றுக் கரிச்சோற்றையும், ஊசிப்போன பழைய கறிகளையும் இட்டனர். அதை வாங்கிப் போய்

கூத்தாடிப் பெண்ணுக் கிட்டு எஞ்சியதைத் தானும் புசித்தார். இலட்சம் உண்மைப் பிராமணர்கள் சாப்பிட்டான பின் தெய்வீகமாய் ஓர் அடி அடிக்கிற ஆராய்ச்சி மணியானது, நடை, உடை முதலிய பாவனைகளில் பிச்சைக்காரனைப் போன்றிருந்த மகானாகிய திரியம்பகர் சாப்பிட்டவுடனே மூன்றே முக்கால் நாழிகை, அதாவது ஒன்றரை மணி நேரம் வரையில் விடாமல் கணீல்! கணீல்!! என்று முழங்கிக்கொண்டிருந்தது. அவ்வோசையைக் கேட்ட அரசன், மந்திரி, பிரதானி முதலிய சகலரும் போசனம் பரிமாறப்படாத இந்த அகாலத்தில் என்ன காரணத்தினால் இப்படி ஓயாமல் மணி அடித்தது? என்று பேராச்சரிய மடைந்து, "இப்போது இவ்வளவு மணி அடிக்கக் காரணம் என்ன? இந்த அகாலத்தில் யாராவது சாப்பிட்டார்களா?" என்று சத்திரத்தில் கேட்டு வரும்படி ஒரு சேவகனை அனுப்பினர். அவன் அங்ஙனமே போய் சத்திரத்தில் விசாரித்தான்.

அதற்கு அங்கிருந்த பிராமணர்கள், ஒருவருமே சாப்பிடவில்லை. ஆனால் ஒரு பிச்சைக்காரனுக்கு அடிப்பற்றிய கரிச்சோற்றையும், ஊசிப்போன பழங் குழம்பையும் போட்டோம் (அதைச் சொல்லவேண்டிய நிமித்தமேயில்லை) அதற்காகவா? மணி அடித்திருக்கப் போகிறதென்று இழுத்தாப் போல் தாழ்ந்த குரலுடன் கேவலமாகச் சொன்னார்கள். அதைக் கேட்ட சேவகனும், மணி அடித்ததற்குக் காரணம் அவனாக இராதென்று சொல்லிவிட்டு அரசன் சமுகத்தில் வந்து, தான் கேட்டவைகளை ஆதியோடந்தமாகச் சொன்னான்.

அரசனும் மந்திரிகளுமாக யோசித்து, மகான்கள் குற்றேவல் முதலிய கேவலமான தொழில்களைச் செய்துகொண்டு

பிறர் தம்மை யறிந்து இம்சிக்காதபடி பலவிதக் கோலத்துட னும் இருப்பது உண்டு. ஆதலால், அந்த மனிதனை வர வழைத்துப் பார்த்தால் உண்மை விளங்குமென்று தீர்மா னித்து, அந்தச் சேவகனையே மறுபடியும் போய் அழைத்து வரும்படிச் செய்தனர். அவன் அப்படியே போய்த் திரியம் பகரை விசாரித்தறிந்து அவரை இராச சமுகத்திற்கு அழைத் தான். அதற்கவர் இழிந்தவனாகிய எனக்கு அரசனிடத்தில் என்ன வேலை? வரமுடியாதென்று போய்ச் சொல்' என்றனர். அதை அரசன் முதலானவர்கள் அறிந்து, இராச ஆக்கினையை மீறிப் பேசுகிறவர் மகானாகத்தான் இருக்கவேண்டு மென் றுணர்ந்து அரசன் முதல் எல்லோர்களும் போய்த் தெரி சித்து, சாஷ்டாங்கமாக வணங்கி பயபக்தியுடன் அஞ்சலியத் தராய் நின்று, 'சுவாமி! தேவரீர் ஒரு கேவலமான கூத்தாடிச் சிக்கு குற்றேவல் புரிந்து நிற்கும் திருவுள்ளம் யாதோ? தயை புரிந்து அடியேங்களுக்குத் திருவாய் மலர்ந்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனர்.

திரியம்பக சுவாமிகள் மனமிரங்கி ஆதியோடந்தமாகத் தமது வரலாற்றைக் கூறக் கேட்டு, மறுநாள் அவளை கூத் தாடும்படி அரசன் கட்டளையிட்டு, அவள் நடித்த பின் வியப் படைந்ததுபோல் பாவனைகாட்டி கேசாதி பாதம்வரை ஆடை யாபாரணங்களைப் புனையக் கொடுத்தனர். அவற்றைப் புனைந்து கொள்ளும்போது காதிலிருந்த பனையோலையைக் கீழே யெறிய, அதைத் திரியம்பகர் எடுத்து பேராவலுடன் பார்த்தனர். அதில்,

நாற்றமிகும் பூமாலை நற்குரங்கின் கைக்கொடுத்தால்
போற்றிமணங் கொள்ளாவாம் புத்திதனக் கில்லாமை
வேற்றொருவர் காணுத வேதாந்தத் துட்பொருளை
தேற்றமிலி கைக்கொடுத்தேன் தேறுவனோ தேருனே.

என்று எழுதியிருந்தது. அதைப் பார்த்து, நமக்கு உபதேசித்திருக்கிற விஷயமானது அவ்வளவு மகத்துவம் வாய்ந்ததா! ஆ! இவ்வளவு காலமாய்த் தெரியாமற் போயிற்றே! என்று பாவசமுற்று அதுமுதல் துறவடைந்து தமது எதார்த்த சொரூபத்தினிடத்தில் அனவரதமும் நிழல்போல் நின்று அநுட்டித்து, விதேக கைவல்ய முத்தியை அடைந்தனர் என்று ஆன்றோர் கூறுவர்.

## சிவனடியாரும் தெய்வமணியும்.

இலட்சம் பிராமணோத்தமர்கள் சாப்பிட்டபின் ஓரடி அடிக்கிற மணியானது, ஒரு மகான் சாப்பிட ஒன்றரை (1-30) மணி நேரம் ஓயாமல் துரிதமாக அடித்ததென்றால், ஒரு வினாடி (செக்கண்டு) க்கு ஒரு மணி அடித்ததென்று உத்தேசித்துக்கொண்டாலும், ஒன்றரை மணி நேரத்திற்கு ஐயாயிரத்து நானூறு (5,400) செகண்டுகளாகிறபடியால் அத்தனை மணி தொனித்திருக்கவேண்டியதாகிறது. ஆகலின் 5,400 லட்சம் அதாவது ஐம்பத்து நான்கு கோடி பிராமணோத்தமர்கள் சேர்ந்து, அச்சமயம் சீவன் முத்தியை யடையாதிருந்த ஓர் மகானுக்கு நிகராகவில்லை யென்றால், விதேக பூமியை அடைந்தவர்கள் பிரபாவத்தை எவரால் சொல்ல முடியும். இக்கதை ஒன்றினாலேயே முன்னிருந்த வேதியர்களுக்கும் இப்போதுள்ள ஆரியர்களுக்குமுள்ள ஏற்றத் தாழ்வுகள் கரதலாமலகம்போல் விளங்குகின்றது.

"நூற்றைக் கெடுக்கும் குறுணி" யென்றபடி சில பிராமணப் பட்டம் உடையவர்கள், காயத்திரி செபம், சந்தியாவந்தன முதலிய இயம நியமங்களைக் கனவிலுங் கருதாமல், செபம் என்றால் பலம் என்ன விலை? எந்தக் கடையிற் கிடைக்

கும்? என்று பிதற்றி, தற்கால நாகரீக நாடகத்தை நடித்து மனம்போனபடியெல்லாம் நடப்பதால், "நுனைத்தடித்தால் நான்குபுறமும்" என்றபடி பிராமணோத்தமர்களுக்கும் கெட்ட பேர் வந்து சம்பவிக்கின்றன. அந்தோ! என்ன பரிதாபம்!

அகரமோ ராறு கோடி மடாலயம் அனந்தங் கோடி
சிகரமோ ராறு கோடி செய்தவப் பலன்க ளெல்லாம்
மகரகே தனனை வென்ற மாதவ ரடியார்க் கன்னம்
பகரவே கனவு கண்ட பலனுக்கும் ஒவ்வா தன்றே.

பிரபுலிங்கலீலை.

பத்தரைப் புகழ்வுறப் பணிய வுண்டவர்
வைத்தன கொளவுடன் மருவப் பெற்றவர்
சித்தியுங் கடவுளர் சிறப்பும் வேறொரு
முத்தியும் பொருளென முன்னு ரூர்களால்.

திருமந்திரம்.

வித்தக மாகிய வேடத்த ருண்டவூண்
அத்த னயன்மால் மூவரும் உண்டது
சித்தந் தெளிந்தவர் சேடம் பருகிடின்
முத்தியா மென்றுநம் மூலன் மொழிந்ததே.

அடியார்களானவர்கள் ஒருவர் பொருளைக் கொள்ளை யிட்டாலும், ஒருவரை நிந்தித்தாலும், பற்பல தீங்குகளைச் செய்தாலும், அவர்களை யிகழாமலும், கோபிக்காமலு மிருப் பவனே கடவுளுக்கு அன்பனுவான் அடியார்களுக்குச் சாதி நிரூபிக்கிறவன் கடவுளுக்கே சாதி நிரூபிக்கும் மூடனுவான், கடவுள் வேறு, அடியார் வேறு என்று எண்ணுபவன் இரௌரவாதி நாகங்களிற் சதாகாலமும் மூழ்கி வருந்துவான். உலையில் அரிசி போடும்போது அடியார்களுக்கென்றும், அடி யார்கள் புசித்து எஞ்சியதை நாம் சாப்பிடலாம் என்றெண்

ணிப் போடாமல் தமது குடும்பத்தினருக்காக என்று எண்ணிப் போடும் அரிசியானது நஞ்சினுங் கொடியதாகுமென்று அநேக நீதி நூற்கள் ஓலமிடுகின்றன. ஆரம்ப யோகிகளாகிய அடியார்கள், சிற்சில வீடுகளில் அன்னம் புசிக்கக் கூடாதென்று நியாய மிருக்கிறது. அதாவது பரப்பிரம சொரூபத்தை நோக்கி உபாசனை புரியும் உத்தமர்கள் எவர்களோ! அவர்களைத் தான் பிராமணர்களென்றும், பிரம்மோபாசனையுடையவர்கள் "சருவம் பிரம்ம மயம்" என நினைந்து சமரச நோக்குடையவரா யிருத்தல் வேண்டுமென்றும் நூற் சம்மதம் இருக்கின்றது. அவ்வாறு இல்லாதவர்களைப் பிராமணர் என்று அழைப்பது முகதாட்சண்ணியமே யாகும். சமரசம் மேவிடாதவர்க்கு நான் என்னும் அகந்தையே குடிகொண்டிருக்கும். அதாவது நாங்களே உயர்ந்தவர்கள், ஏனையோர் தாழ்ந்தவர்கள் என்னும் அகங்காரப் பேய் பிடித்திருக்கும் அத்தன்மை யுடையவனது இருதயாசனத்தில் அகங்காரம் என்னும் பேய் உட்கார்ந்திருப்பதால், அப்பேய் வெளியேறுகிற வரையில் கடவுளுடைய அருள் அவனுக்கு பிரத்தியட்சமாகிறதில்லை. அவன் இதயம் இருளடைந்திருக்கும். அவ்வாறுன தற்பெருமை யுடையவர்கள் வீட்டிலும், அமுது புசிப்பவனுக்கு அகங்காரமென்னும் விட விருட்சமே செழித்தோங்கி வளரும். சீலமான நன்னடை யில்லாதவர்கள் வீட்டிலும் அமுது புசிக்கலாகா. புசிக்கின் அவ்வுணவு சீரணமாகிற வரையில் புசித்தவன் மனம் ஆபாசம் அடைந்தேயிருக்கும். இதைப் பற்றி ஒரு கதை உண்டு.

## சாவகாரி பிட்சையும் — சன்னியாசி இச்சையும்.

ஒரு நாள் ஒரு சன்னியாசியை ஒரு பிராமண சாஸ்திரி கண்டு, அவரைத் தமது கிரகத்தில் அமுது புசிக்கச் செய்வ

த்றகாக அழைத்துப் போய்த் திண்ணையில் உட்காரச் செய்து உள்ளே சென்று தன் சம்சாரத்துடன் சங்கதியைச் சொல்ல சீக்கிரம் ஸ்நானம் செய்து ஆகவேண்டியதை இன்றைக்கா வது முகம் கோணாமல் பத்தியுடன் செய்வாயானால் நமக்குச் சேமமுண்டாகும்; புத்திர சந்தானமும் கிடைக்கும் தயவு செய் என்றார்.

## சம்சாரமே சனியன்.

('சர்வம் ... மயம் செகத் என்ற முறை தவறி இக்கலியில் சர்வம் நாரீமயம் செகத்' என்றிருப்பதால்) அதற்கு அவள் உமக்கு வாழ்க்கைப் பட்டு இந்தச் சுகத்தைத் தான் கண் டேன். சாதுவென்றும், சன்னியாசியென்றும் தெருத் தெருவாய்ப் போகிறவர்களை யெல்லாம் இழுத்துக்கொண்டு வந்து என் கழுத்தை நன்றாய் அறுக்கிறீர். திரள நிற்கும் பெண்ணுக்கொரு சித்தாடைக்குக் கூட வழியில்லை; மாடு கட்ட நனையாத வீடு இல்லை. நமக்கு இருக்கிற சம்சாரத் திற்கு தர்மம் கூட வேண்டுமா? இந்த ஊரில் பணக்காரர் ஒருவருமில்லையா? கிராம சாந்திக்கு தலையைச் சிறைத்துக் கொண்டு நீர் ஏன் அலைகிறீர்? கண்டவனுக்கெல்லாம் பொங் கிப் போட என் தலையிலா கூழைக் கரைத்துக் கொட்டியிருக் கிறது. அழகாகப் பணம் சம்பாதித்து, வித விதமாக நகை களைச் செய்துபோடும் உத்தியோகத்தன் வீட்டில் என்னை விவாகஞ் செய்து கொடாமல், குறுணி விபூதியைப் பூசிக் கொண்டு அப்பம் வடை சாப்பிடுகிற சாஸ்திரிக்கு என்னை பாணிக்கிரகணம் செய்து கொடுத்து, அன்னம் கஸ்தூரியாய் விளங்குகிற இப்பாழும் வீட்டில் என்னைக் கொண்டு வந்து சேர்த்த என் பெற்றோர்களை யல்லவா சொல்லவேண்டும் நல்லதிருக்கட்டும் காணும்! வீட்டுக்காரி யென்றால் யார்?

நானே? நீரோ? என் அனுமதியின் பேரிலல்லவா நீர் பிட்சை சொல்லவேண்டும். என்ன தைரியம் உமக்கு! வைதீகக் குறும்பை விட்டீரில்லையே! 'ஊருக் கிளைத்தவன் பிள்ளையார் கோவில் ஆண்டி' யென்பது போல் என்னை வேலை செய்யச் சொல்லுகிறீரே! இஷ்ட மிருந்தால் கோவணத்தை இறுக்கிக் கட்டிக்கொண்டு பொங்கிப்போடும். என்னால் முடியாது; எனக்குத் தலை வலிக்கிறது; அடுத்த வீட்டில் ஒரு பெண் திரண்டு குளிக்கிற நாள்; இன்றைக்கு அங்கே போகப் போகிறேன் என்றாள்.

ஐயருக் கமுதுபடை யென்றுவந் தாய்நீயு
மாண்பிள்ளை யென்றெண்ணவோ
அரிசியெங் கேபானை சட்டியெங் கேயென்ப
ளவள்சொன்ன வகைகளெல்லாம்
பையவே கொண்டுவந் தாலுஞ் சமைக்கப்
படாதுதலை நோகுதென்று
பாயிற் கிடப்பள்சின மாயொன்று பேசிடிற்
பாருனக் கேற்றபுத்தி
செய்யவல் லேனென்பள் சற்றடித் தால்நஞ்சு
தின்கிறேன் கூ! கூ!! வெனத்
தெருவீதி தோறுமுறை யிடுபெண்டி ருண்டெனிற்
றீயநமன் வேறுமுண்டோ?

என்செய்வான்! கெஞ்சுகிறான்! கும்பிடு போடுகிறான். இன்றைக்கு மாத்திரம் மூக்குக்கொடு; இனி உன் அனுமதியின்றி ஒன்றாவது செய்கிறதில்லை எனப் பலவிதமாய்க் கெஞ்சுகிறான்; காலைப் பிடித்துக்கொள்ளாத குறைதான். அதற்கவள் உமது சாலமெல்லாம் எனக்குத் தெரியும். 'காலைச் சுற்றின பாம்பு கடிக்காமல் விடாது' வீட்டில் ஒரு சாமானும் கிடையாது; உப்பு முதல் கற்பூரம் வரை வாங்கிப் போட்டு

னால் சீக்கிரம் போட்டுத் தொலைக்கிறேன்; தாமசமானால் நான் அடுத்தகத்திற்குப் போய்விடுவேன்; கூடையை எடுத்துக்கொண்டு கடைக்கு ஓடும் என்றாள்.

சாஸ்திரி, தன் மனைவி இவ்வளவாவது சொன்னாளே யென சந்தோஷித்து, சரேலென்றுள்ளேபோய் பெட்டியைத் திறந்துபார்க்க, வெறும் பெட்டியா யிருக்கக்கண்டு, என்னடீ! பெட்டியிற் பணமில்லையே யென உரத்திக் கேட்டார். அகத்தில் ஒன்றுமில்லை யென்று நான் சொன்னது காதில் படவில்லையா? அதிகாரம் பண்ணுகிறீரே! நீர் சம்பாதிக்கிற சம்பாதனைக்குப் பெட்டியில் பணம் விளையுமோ! எவன் காலிலாவது விழுந்து சீக்கிரம் வந்தால் காரியம் நடக்கும்; தாமதித்தால் என்பேரில் குற்றம் சொல்ல வேண்டாம் என்று பரபரப்புடன் சொன்னாள்.

## பகலிலே கொள்ளை.

வேதியர் மனங்கலங்கி, தன் கைமோதிரத்தை எடுத்துக்கொண்டு காசுக்கடைக்கு ஓட்டோடியும் போய், அப்பா! இந்த மோதிரத்தைக் கிரயத்துக்கு எடுத்துக்கொண்டு பணம் கொடு என்று அவசரத்துடன் சொன்னார். கடைக்காரன் 'ஐயரே! என்ன பரபரப்பு? இப்படி யுட்காரும்! என்ன அவசரமான செலவு வந்துவிட்டது?' என்று கேட்டான். அப்பா! என்ன சொல்லச் சொல்லுகிறாய்; பேச நேரமில்லை; தெரியாத்தனமாய் ஒரு சன்னியாசிக்கு பிக்ஷைக்குச் சொல்லி விட்டேன்; கையில் காசுமில்லை, கடன் கொடுப்பார் யாருமில்லை; பிற்பாடு சாவகாசமாய்ப் பேசிக் கொள்வோம்; இதை வைத்துக்கொண்டு, நாலு-ஐந்து ரூபாய் கொடு என்றார். சற்று பொறுமையா யிரும், என்ன தடபுடல் பண்ணுகிறீர்! 'பிட்சை

யென்றுலென்ன? சன்னியாசி யென்றால் யார்? சற்று விவரமாய்ச் சொல்லும், பதருதேயும்' என்று கடைக்காரன் சாவகாசமாய்க் கேட்டான்.

'அப்பா! வீண்காலம் போக்காதே! பிராமணர்களுக்குள் நான்கு ஆச்சிரமங்களுள. அதில் சன்னியாசி ஆச்சிரமம் மேன்பட்டது. அவர்கள் ஒரே யிடத்தில் வாசம் செய்யவும் சமையல் செய்துகொள்ளவும் விதியில்லை. அவர்கள் ஊரூராய்ச் சஞ்சாரம் செய்து யோக்கியர்களிடம் பிட்சைபண்ணவேண்டியது. அத்தகைய ஒரு சன்னியாசிக்கு ஒருநாள் பிட்சை செய்துவைத்தால் அநேக எக்கியங்கள் செய்த பலன் உண்டென்று சாத்திரம் முறையிடுகின்றது. இந்த உண்மை எனக்குத்தான் தெரியும் என்றார்.

'அப்படியா! மோதிரத்தை நீரே போட்டுக்கொள்ளும் இந்தப் பிட்சை என்னுடையதா யிருக்கட்டும் அந்தப் பலன் எனக்குக் கிடைக்குமா' என்றான். 'மகாராஜன், இப்படி யார் சொல்லப்போகிறார்கள்! நீ வந்து, வந்தனம் பண்ணி அட்சதை வாங்கிப் போட்டுக்கொள்' என்றார். 'அப்படியானால் வேண்டிய சாமானுக்கு ஒரு சாபிதா கொடும்' என்றான் கடைக்காரன்.

பார்ப்பனர் தனக்குள் சந்தோஷமடைந்து, இதுவே தருணமென்று தன் வீட்டிற்கு ஒரு மாதத்திற்கு வேண்டிய சாமான்களுக்கு ஒரு சாபிதா கொடுத்தார். துன்மன வணிகர் தங்களைப் படைத்துச் சோரரை யென்செயப் படைத்தாய் என்பதற் கிலக்கான தூர்ப் புத்தியையுடைய கடைக்காரன் வேலைக்காரப் பையனை நோக்கி, 'தம்பி! நமது வீட்டிலிருக்கும் சாமான்களை ஒரு வண்டியில் போட்டு ஐயர் வீட்டில்

கொண்டு கொடுத்துவிட்டுவா. ஐயரே! இந்தாரும் ரூபாய் ஐந்து; மேல் செலவுக்கு வைத்துக்கொள்ளும். உள்ளே போய் தம்பியைக் கேட்டு நம் வீட்டிலிருக்கும் சாமான்களை ஒரு வண்டியில் போட்டுக்கொண்டு வீட்டிற்குச் செல்லும். பிட்சை ஆனவுடன் என்னைக் கூப்பிட்டால் நான் வந்து யதிக்கு நமஸ்கரித்து அட்சதை வாங்கிப் போட்டுக்கொள்ளு கிறேன்' என்றான்.

அவ்வாறே சாமான்களை வீட்டில் கொண்டுபோய்ப் போட்டு ஐந்து ரூபாயையும் அம்மாள் கையில் கொடுக்க, அவள் ஒரு குதி குதித்து, 'இப்பொழுதுதான் நீர் புத்திசாலி! சீக்கிரம் பூசைசெய்யும். எல்லாம் தயாராய்விட்டது, பிட்சைக் கழையும்' என்றாள்.

சாஸ்திரி உள்ளேபோய்ப் பார்க்க எல்லாம் தயாரா யிருக்கக்கண்டு, 'நீ மகா கள்ளி, உன் சங்கதி எனக்குத் தெரியாதா? ஏண்டி! எவ்வளவு சாமான் கொண்டுவந்து விட்டேன்! இரண்டு மாசத்திற்குக் காணும்' என்று பதினாறு பல்லையுங் காட்டினான்.

"பிறந்தகத்து வரிசையை உடன்பிறந்தவனிடம் சொல்லிக்கொள்வதுபோல் உமது சாமர்த்தியத்தை என்னிடம் சொல்லவேண்டாம். சாமான்களை உள்ளே எடுத்துவையும், இலைபோட்டு பிட்சை பண்ணும்" என்றாள். உடனே, சன்னியாசியை உள்ளே யழைத்து வருமுன்னமே கடைக்காரனால் கொடுக்கப்பெற்ற நெய், பால், நல்ல அரிசி முதலிய சாமக்கிரியைகளைக் கொண்டு ஒரு நொடியில் சர்க்கரைப் பொங்கலும் செய்துவிட்டாள். பிட்சையும் முடிந்தது. சன்னியாசி வெளியில்போ யுட்கார்ந்து, வந்த சனங்களுக்கு

ஆசீர்வாத அட்சதை கொடுத்துவிட்டு, (பார்ப்பனராதலால் சர்க்கரைப்பொங்கல் முதலானவைகளை அளவிற்கு மிஞ்சி விலாப்புடைக்கத் தின்றதனால்) இரேழியில் கொஞ்சம் சிரம பரிகாரம் செய்துகொள்கிறேனென்று படுத்துக்கொண்டார். கடைக்காரனும் அட்சதை பெற்றுக்கொண்டு சென்றான்.

'அம்மாள், திரண்ட பெண்வீட்டிற்கு சென்று, மங்கள ஸ்நானம் செய்ய எண்ணெய் முதலானவைகள் வாங்கிக் கொண்டு, வீட்டிற்கு வந்து, தன் காதில் - கழுத்திலிருந்த நகைகளைக் கழற்றி புட்பம் எடுக்கும் குடலையில் போட்டு உயர மாட்டிவிட்டு, எண்ணெய் தேய்த்துக் கொள்ள ஆரம்பித்தாள். இதை சன்னியாசி பார்த்துக் கொண்டிருந்தார். அவ்விரவு சாஸ்திரிக்கும், அவர் வீட்டிலுள்ளோருக்கும் அடுத்த வீட்டில் போசனமானதால் எல்லோரும் அங்கே போய்விட்டார்கள். இரவில் பாட்டும் - கூத்துமாக அந்தவீட்டில் நடந்ததால் இந்த வீட்டிற்கு ஒருவரும் வரவில்லை. சன்னியாசி மட்டுந்தான் இருந்தார்.

சன்னியாசி தூங்கி விழித்துக்கொண்ட சமயம் நடு நிசி நேரமாயிருந்தபடியால் உள்ளே சென்று, குடலையிலிருந்த எல்லா நகைகளையும் எடுத்துத் தனது கமண்டலத்தில் போட்டுக் கொண்டார். விடிந்தவுடன் எழுந்து ஸ்நானம் செய்து அனுஷ்டானமுடித்து காஷாயம் தரித்துக் கொண்டு தண்ணீர் கொண்டுவரக் கமண்டலத்தை யெடுக்கையில் அதிலிருந்த நகைகளைப் பார்த்து, என்ன அநியாயம்! கமண்டலத்தில் நகையேது? இதென்ன அபக்கியாதிக்குக்காரணமாயிருக்கிறதென்று மனங் கலங்கி, அதிகோபத்துடன் எழுந்து சாஸ்திரியை யழைத்து, சாஸ்திரிகளே! நேற்று நடந்த பிட்சையைப்பற்றி உண்மையாய் எனக்குரைக்க வேண்டும். சொத்து

உம்முடையதல்ல. சொர்னகாதகன் சொத்தா யிருக்கவேண்டும். ஏனெனில், அந்த போசன திரவியங்கள் என்னுடைய பஞ்சகோசத்தில் சேர்ந்து * சமான வாயு அதை சிரணிக்கும் சமயத்தில் எனக்குச் சொர்னத்தைத் திருடும்படி சித்த விர்த்தியை யுண்டுபண்ணிற்று அதனாலேதான் உம்முடைய சம்சாரம் வைத்திருந்த நகைகளைத் திருடி இதோ வைத்திருக்கிறேன். உண்மையைச் சொல்லும் இல்லாவிடிற் சபிப்பேன் என்றார்.

சாஸ்திரி பயந்து, அவரை மூன்று பிரதட்சணஞ்செய்து நமஸ்கரித்து, 'தாங்கள் சொல்வதெல்லாம் உண்மையே. என் ஏழைத் தனத்தாலும், என் மனைவியின் துர்ப்புத்தியாலும் கடைக்காரன் சொத்தை வாங்கி பிட்சை செய்வித்தது உண்மை; சபிக்கவேண்டும்' என்றார். சன்னியாசி நகையை யெடுத்து சாஸ்திரி கையில் கொடுத்து, நீர் அயோக்கிய (†) வியாபாரியின் சொத்தை வாங்கி பிட்சை செய்தது நியாயமா? எனக் கடுகடுத்துக் கூறி சாஸ்திரியைப் போகவிடுத்து, பரியாலோசனை செய்யாமல் தாம் சாஸ்திரி வீட்டில் பிட்சை செய்தது பிசகென்றும், தமது தபசுக்குப் பங்கம் வந்ததென்றும் தன்னைத் தானே நிந்தித்துக் கொண்டார்.

---

* இந்தச் சமான வாயுவின் விபரம் வேதாந்த பாஸ்கரனில் தச வாயு என்ற அத்தியாயத்தில் விபரமாகக் காண்க.

(†) பகற் கொள்ளை யடிக்கும் வியாபாரிகளைக் குறித்து, குர்ஆனில், வய்லுன்லில்மு தவ்பிபீன்-குறைவு பட அளப்போர் (நிறுப்போர்) களுக்கு வய்லென்னும் அதோ கதியான நரகமே துணை என்று கூறப் பெற்றிருக்கிறது. எடுத்தலளவையிலும், முகத்தலளவையிலும் நிறைவு குறைவு செய்வதற்கு தவ்பீப் என்று சொல்வதுண்டு.

இந்தக் கதையினல், சுத்த அந்தக் காரண விருத்திக்கு அன்னமே காரணமென்றும், அவ்விதமான அன்னத்தை முன்பின் பாராமல் கண்டவிடத்தில் போசனஞ் செய்தல் கூடாதென்றும் நன்கு புலப்படுகிறது? கண்ட கண்ட விடத்தில் அன்னம் புசிப்பதனுல் அந்த அன்னம் எந்த வருவாயி லிருந்து வந்ததோ அந்தக் குணம் நமக்கும் உண்டாகிறது. அன்னம் யார் சமைத்தார்களோ எந்தச் சங்கற்பத்துடன் சமைத்தார்களோ அந்த குணமும் நமக்கும் உண்டாகிறது. இதற்குத்தான் ஆரம்ப அப்பியாசிகள் குருபிரான் கையால் சமைத்த சாதமாவது, அன்புள்ள தாய் கையால் சமைத்த சாதமாவது அல்லது சற்கருமத்தில் முயன்று சம்பாதித்து சற்பாவத்துடன் சமைத்த அன்னமாவது சாப்பிட வேண்டும். இதனுலே தான் இஸ்லா மார்க்கத்தில் ஹலாலான் ஆகாரம் புசிக்கவேண்டு மென்று வற்புறுத்திக் கூறப் பெற்றிருக்கிறது.

## குணமே குலம்.

எந்தக் குலத்திற் பிறந்தவராணுலும் தெய்வ பக்தியுடையவர் எவரோ! அவர் யாவராலும் தெய்வத்தைப் போலவே மதிக்கப்படுகிருர். அங்ஙனமிருக்க சில குறும்பர்கள் விசேட பத்தியுடைய மகான்களை அந்த மதஸ்தர், இந்த மதஸ்தர் என்றிகழ்வார்கள். ஆனுல், உயர்குலமென்று பேர்வைத்துக் கொண்ட பிராமணர்கள், அவர்களிலுந் தாழ்வாக எண்ணப் பட்ட சத்திரிய வமிசத்தினராகிய இராமபிரானையும், இடையர் (ஆயர்) குலத்தினராகிய கிருஷ்ண மூர்த்தியையும், கேவலம் மிருக வமிசத்தைச் சேர்ந்த ஆஞ்சனேயரென்னும் குரங்கையும், கோழிக் குஞ்சு, மீன் முதலியவைகளைத் திருடிப் புசிக்குங் கருடனையும், தெய்வமாகவும்—தெய்வத்

தைப் போலவும் பூசித்து வரவேண்டிய காரணமென்ன ? அவர்கள் தெய்வத்தையும், தெய்வமாகிய பரப்பிரம்ம சொரூபத்தை உபசரணை புரிந்த அடியார்களேயும், சேர்ந்திருந்ததனுலன்றோ ? அங்ஙனம் மேன்மை யடைய நேரிட்டது. அது போல் கடவுளை விசுவசிக்கிறவர்கள் எவரா யிருந்தாலும் கடவுளின் அருமந்தப் புதல்வர்களேயன்றி வேறல்ல. ஆதலால் அன்பர்க ளிடத்தில் விகற்பம் பாராட்டலாகா.

பிரபுலிங்கலீலை.

சங்கமந் தனக்கொரு சாதி யுன்னிஞல்
அங்கையி னமர்தரு அரற்கு முன்னிஞன்
சங்கர ஞெடுசரந் தம்மில் வேறெனும்
அங்கவ னறிவரும் அளற் றழுங்குவான்.

திருநாவுக்கரசு.

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழு நோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் யாம்வணங்குங் கடவு ளாரே.

நீதிவெண்பா.

தாமரைபொன் முத்துச் சாமரைகோ ரோசனைபால்
பூம்ருதேன் பட்டு புனுகுசவ்வா—தாமழன்மற்
றெங்கே பிறந்தாலும் எள்ளார்கள் நல்லோர்கள்
ஏங்கே பிறந்தாலும் என் ?

துணுங்குடி வள்ளல்.

(1) மதபேதம் ஒழிமதி கெட்டவர்க் கெட்டாத
வான்கருணை வெள்ளமாகி
(2) சாதிபே தத்தையும் மாதர்போ கத்தையும்
தள்ளிநிற் பதுசமாதி.

நான்மணிக்கடிகை.

கள்ளி வயிற்றில் அகில்பிறக்கும் மான்வயிற்றில்
ஒள்ளரி தாரம் பிறக்கும்—பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும் அறிவார்யார்
நல்லாள் பிறக்குங் குடி,

பெரிய புராணம்.

எத்தன்மைய ராயினு மீசனுக் கன்பரென்றால்
அத்தன்மையர் தாம்நமை யாள்பவ ரென்றுகொள்வார்.

அடியார் அனுக்கிரகம்.

இடுப்பிற் கட்டிய வஸ்திரம் அவிழ்ந்ததைக் கையானது பிரதிப் பிரயோசனத்தைக் கருதாமல் உடனே கட்டி விடுவது போல, மகான்கள் தாம் அடைந்திருக்கிற அட்டமா சித்திகளின் மகிமையைக் காமியமாகப் பல தடவைகளிலும் அனுவசியமாய் உபயோகிக்காமல், தன்னிடத்தில் மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரண சுத்தியுடன் அடுத்துத் தொண்டு புரியும் அன்பர்கள் கொடிய துன்புறும் ஆபத்துக் காலங்களில் எங்கிருந்தாலும் நினைக்குமுன் உடனே விரைந்து வந்து உதவி புரிவார்கள்.

திருவாரூர்—மடப்புரத்தில் திருவுருக்காந்து அன்பர்களைப் பரிபாலனம் செய்துவரும் கருணையங்கடலாகிய தட்

சணாமூர்த்தி வள்ளற் பெருமானை, திருவாரூர் கொத்தத் தெருவில் வசித்துவந்த வேளாள வமிசத்தாராகிய அருணாசலம் பிள்ளை என்பவர் (சனகாதி நால்வர்களுக்கும் மூன்றரைக்கோடி கற்பகாலத்திற்குப் பின் வந்து கல்லால விருட்சத்தினடியிலிருந்து உபதேசித்தருளிய தட்சணா மூர்த்தமே) இக்கலிகாலத்தில் அன்பர்கள் உய்யும்பொருட்டுச் சின்முத்திராங்கத்துடன் ஞானோபதேசஞ் செய்யவந்த கலிகாலத் தட்சணாமூர்த்தமென்று நினைந்து அன்புடன் சதா தியானித்து வந்தார் அவர், கொத்துவேலை, சிங்காரப் பந்தல்கள் செய்வதில் அதிக பாண்டித்துவ முடையவராயிருந்தபடியால் சீரங்கம் சென்று அரங்கநாதர் கோவிலில் ஏகாதசி உற்சவத்திற்காகக் கொட்டகைப்பந்தல் சிங்காரஞ் செய்துகொண்டிருந்தவர் சாரத்தினின்றுந் தவறிக் கீழே விழும்போது 'தட்சணாமூர்த்திக்கு அபயம்' என்று ஓலமிட்டார். அப்போது திருவாரூர்க் கமலாலயக் குளத்தின் மேல்கரையில் நிஷ்டை செய்துகொண்டிருந்த ஸ்ரீ தட்சணாமூர்த்தி சுவாமிகள் தட்சணாமூர்த்தியை நம்பினால் தட்சணாமூர்த்தி என்ன செய்வான்?' என்று கூறி ஒரு சிறிய பொருளைத் தாங்கி மிருதுவாகக் கீழே வைப்பதுபோல் வைத்தனர் என்பது முதல் இறுதிவரையில் ஷை சுவாமிகள் சரித்திரப் புத்தகத்தில் விரிவாய்க் காணலாம். 'பருமரத்தை அண்டிய பல்லியும் சாகாது' என்னும் பழமொழிபோல், மகான்களை யடுத்தவர்கட்கு எப்போதும் பயம் என்பது கிஞ்சிற்றேனுமில்லை.

விருட்சங்களில் கற்பகத்தருவும், பசுக்களில் காமதேனுவும், மலைகளில் மகாமேருகிரியும், இரத்தினங்களில் சிந்தாமணியும், புட்பங்களில் தாமரைப்புட்பமும், பொன்னில் சாம்புநதமும், நதிகளில் கங்காநதியும், மந்திரத்தில் பிரணவ

மும், தானத்தில் அன்னதானமும் எப்படி உயர்ந்தவை களோ ! அப்படியே தேவர், மக்கள், விலங்கு, புள், நீர்வாழ் வன, ஊர்வன, தாவரம் என்னும் எழுவகைப் பிறப்புகளுள் மக்கட்பிறப்பே அருமையானது. எண்சாணுடம்பிற் சிரசே பிரதானம் என்னும் பழமொழிபோல், எத்தகைய சிறப்பு வாய்ந்த மானிடர்களிலும் மகான்களே நனி சிறந்தவர்கள். ஏனெனில், சாதாரண மனிதர்கள் செய்யமுடியாத அட்ட கருமங்களை ஓர் சிறந்த மந்திரவாதி செய்து விடுவான், மகான்களோ அப்படியல்ல ; அவர்களுக் கிஷ்டமானால். பஞ்ச கிருத்தியங்களைச் செய்து காட்டினாலுங் காட்டுவார் கள். ஆதலால், மகான்களுக்கு ஈடாக எவரையுஞ் சொல்ல வொண்ணாது.



## பதின்மூன்றாவது அத்தியாயம்.

# அடியார் நிந்தை.

---

விருத்தம்.

பந்த நீங்கிப் பரம னடிமிசை
சிந்தை வைத்த திறலடி யார்களை
நிந்தை செய்தவர் நீணிரை யந்தனில்
வந்து மூழ்கும் வகையை விளக்குவாம்.

மூட்டை கட்டுதல்.

மெய்ஞ் ஞானிகளாகிய அடியார்கள் பொறுமையோடு பிராரத்துவத்தை அனுபவிக்குங் காலத்தில் முன் தன்னை யறியாமற் செய்த கன்மமானது, பரமாகிய மறுமையில் தொடர்ந்து வருத்தாமல் நசிக்கும்படிச் செய்வதற்கு ஒரு மார்க்கமுண்டு. அஃதி யாதெனில், அறிவீனர்களாகிய சிலர், தமது புன் கருத்தின்படி மெய்ஞ் ஞானிகள் நடந்து கொள்ளவில்லை என்று அவர்களிடம் பல குற்றங்கள் இருப்பதாகக் கருதிப், பலரிடத்திலும் தூற்றி இவர் என்ன யோகி! என்ன ஞானி! அந்த தாசியுடன் பேசிக்கொண்டிருந்தார்! இந்தப் பெண்ணுடன் பரிகாசஞ் செய்தார்! நான் பார்த்தேன்! என்று கண்டபடி யெல்லாம் பிதற்றி, உண்மையைக் கருதமுடியாமல் இனிமேல் தாம் அனுபவிப்பதற்காக மூட்டை கட்டிப் பத்திரப்படுத்தி வைப்பார்கள்,

பிரபஞ்சத்தவர்கள், எப்போதும் மடந்தையர்களது சையோகத்தையே மெய்யோகமாகத் தியானித்துக் கொண்டிருப்பவர்க ளாதலால், ஓர் அழகிய இளம் பெண்ணுடன் தனித்து சம்பாஷணை செய்யும்போது விரக சன்னதமான

வார்த்தைகளையே பிரயோகஞ் செய்வார்கள். ஆதலால், பரிபக்குவமுள்ள சில பெண்கள் மகான்களுக்கு உபசரிக்கும்போது அந்த மகான்களையும் காமாந்தகாரமுடைய தம்மைப்போலவே கருதி, உண்மையைக் கண்டுபிடிக்க முடியாமல் அநியாயமாய் நிந்தைசெய்கின்றனர். அன்றியும், சூரியனை இருள் மறைத்து விட்டதென்று அவ்விருளை யகற்ற ஒரு சிறிய கைவிளக்கு பிரயத்தனம் செய்வது போல், ஞானிகள் சரியான வழியில் நடக்கவில்லையென்று அவர்களுக்குப்புத்திசொல்லித் திருத்தவும் முயலுகின்றனர்.

இராமலிங்க வள்ளல்.

ஓகைமட வாரல்கு லேபிரம பதமவர்க
ளூந்தியே வைகுந்த மேல்
ஓங்குமுலை யேகயிலை யவர்குமுத வாயினித
ழூறலே அமுத மவர்தம்
பாகனைய மொழியேநல் வேதவாக் கியமவர்கள்
பார்வையே கருணை நோக்கம்
பாங்கினவ ரோடுவிளை யாடவரு சுகமதே
பரமசுக மாகு மிந்த
ஊகமறி யாமலே தேகமிக வாடிநீ
ருறுசுவைப் பழ மெறிந்தே
யுற்றவெறு வாய்மெல்லும் வீணர்சீ ரென்றுநல்
லோரைநிந் திப்ப ரவர்தம்
வாலைவாய் மதமற மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழ்வரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர்வயித் திய நாதனே.

கைவல்லிய நவநீதம்.

பொறுமையற் பிராரத் துவத்தைப் புசிக்குநாட் செய்த கன்ம
மறுமையிற் றொடர்ந்தி டாமன் மீண்டுபோம் வழியே தென்னிற்

சிறியவ ரிகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வ
ரறிபவ ரறிந்து பூசித் தறமெலாம் பறித்துண் பாரே.

திருமந்திரம்.

பத்தினி பத்தர் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமு மாவியும் ஆண்டொன்றின் மாய்ந்திடுஞ்
சத்திய மீது சதாநந்தி யாணையே.

சீவகசிந்தாமணி.

மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்
பல்லவரே யன்றிப் பகுத்துணப் பாவிகளும்
அல்குல் விலைபகரும் ஆய்தொடியா ராதியா
வில்பொருதோள் மார்பா விலங்காய்ப் பிறப்பவே.

வளையாபதி.

பொய்யன் மின்புறங் கூறன்மின் யாரையும்
வையன் மின்வடி வல்லன சொல்லிநீ
ருய்யன் மின்னுயிர் கொன்றுண்டு வாழுநாள்
செய்யன் மின்சிறி யாரொடு தீயன.

## இக்கரைக்கு அக்கரை பச்சை.

மகான்களையும், சிறந்த வித்துவான்களையும், தெய்வங்களையும், அரசர்களையும் வேறு சில பொருள்களையும் உள்ளூரார் கௌரவமாக மதித்து உபசரிப்பது பெரும்பாலும் அருமை. ஏனெனில், கண்ணன் மகன் பொன்னன்தானே! 'சோமன் மகன் ராமன்தானே! என்று சாமானியமாக எண்ணி இகழ்வது சகசமாகிவிட்டது. அநேகமாக வெளியூரார்களே அவர்களிடத்திலுள்ள சிறந்த குணங்களைக்

கண்டு போற்றிப் புகழ்ந்து வணங்கி உபசரிப்பார்கள். உள்ளூரிலுள்ள தெய்வங்களை அவ்வளவு விரும்பாமல் அந்த ஊர் மாரியம்மன் விசேடம்! இந்தவூர் காளியம்மன் விசேடம்! என்று சிலர் மருண்டு ஓடியலைவார்கள். ஆனால் விசேடம் என்கிற வார்த்தையில் "சேடம்" என்பதையும், சந்தோஷம் என்கிற வார்த்தையில் "தோஷம்" என்பதையும் அறியார்கள்போலும். அங்ஙனமே அயலூர் வைத்தியர்கள், மாந்திரீகர்கள் முதலானவர்களையும் இக்கரைக்கு அக்கரை பச்சையென்று நினைப்பார்கள்.

## உள்ளூராண்டி.

சில அன்பர்கள், விஜயபுரம் கடைத்தெருவுக்குச் சமீபமாய் போகும்போது, கொடிக்கால் பாளையம் பாப்பு மஸ்தான் அவர்களைக்கண்டு, ஆனந்த பாவசமுற்று, பலகார பட்சணங்களை வாங்கிவந்து கொடுத்தனர். அதைப் புசித்த மஸ்தான் அவர்கள் தாகத்திற்குத் தண்ணீர் கேட்க, அருகில் வெற்றிலைக்கடை வைத்திருக்கும் ஒரு இஸ்லாமானவரிடம் ஐயா! பாப்புசுவாமிகள் அருந்துவதற்கு கொஞ்சம் தண்ணீர் கொடுங்கள் என்று கேட்டதற்கவர், 'கல்லையே சுவாமியென்று கட்டிக்கொண்டழுகிற நீங்கள் மனிதனைக் கண்டால் விட்டுவிடுவீர்களா? பைத்தியம் பிடித்து அலைகிறவனைச் சாமியென்று சொல்லுகிறீர்களே! இஃதென்ன அநியாயம்! தண்ணீர் கொடுக்க முடியாதுபோ' என்று கூறி ஏளனம் செய்தனராம். அதன்பின் பாப்புமஸ்தான் அவர்களின் உண்மை நிலையை யறிந்தபின் இஸ்லாமானவர்களே அதிகமாகக் கொண்டாடினார்கள். காணுமுன் பிணங்குவதும், கண்டபின் வணங்குவதும், உள்ளூராண்டி, பேயாண்டி, பிச்சாண்டி யென்று நினைப்பதும், சிலருடைய

வழக்கமாக இருக்கிறது. எந்த உருவத்தோடிருந்தாலும் உண்மையைத் தெரிந்தவர்கள் எங்கிருந்தாவது தேடிவந்து கண்டு வணங்குகிறார்கள்.

விவேக சிந்தாமணி.

தண்டாமரையி னுடன்பிறந்தும் தண்டேனுகரா மண்டூகம்
வண்டேகானத் திடையிருந்து வந்தேகமல மதுவுண்ணும்
பண்டேபழகி யிருந்தாலு மறியார்புல்லர் நல்லோரைக்
கண்டேகளித்தங் குறவாடித் தம்மிற்கலப்பார் கற்றோரே.

பிரபஞ்சமானது அநித்தியமென்று, சுருதி, யுக்தி, யனுபவத்தால் கரதலாமலகம்போல் நன்குணர்ந்தவர்களும் பொய்யாகிய பிரபஞ்சத்திலேயே கட்டுண்டு ஆவரண சத்தியின் மறைப்பால் தன்னை யறியாமல் சிலசமயங்களில் மயங்குவார்கள். அதுபோல் நாம் ஒருவரைப் புகழாவிட்டாலும் இகழாமல், தன்னைக் காத்துக்கொள்வதே புகழ்வதிலும் பன்மடங்கு மேன்பாடுடையதெனப் பலகால் வியந்து சொல்லும் சில விவேகிகள்,

"யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு"

என்னும் திருக்குறள் கருத்தை மறந்துவிட்டு தன்னை யறியாமலோ, வேறு எந்த காரணத்தினாலோ இகழ்ச்சி பண்ண ஆரம்பிக்கிறார்கள். நம்மை மற்றொருவன் இகழ்வாகப் பேசினால் அது நமக்குத் திருப்தியாயிருக்குமா? என்பதையும் "அஹிம்சா பரமுதருமம்" என்பதையும் இவர்கள் சிறிது யோசித்துப்பார்த்தால் அவ்விதம் பிறரை நிந்திக்கமாட்டார்கள். தனக்கு புகழ் வேண்டுமென்னும் விருப்பமுள்ளவர்கள் பிறரை யிகழாமலிருப்பதே முறையென்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும்.

நீதிநெறி விளக்கம்.

பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டு
மறவாமே நோற்ப தொன்றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்தி
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்.

மக்கள்களிடத்துள்ள நற்குண, நற்செய்கைகளை வியந்து புகழ்ந்து பேசுபவர்கள் ஆயிரத்தில் ஒருவரும், பிரபஞ்சத்தார் கருத்துக்கு விரோதமாக இலை மறை காய் போல் ஏதாவது அவர்களிடத்தில் காணப்படின் அதனைத் தூற்றித் திரிவோர் ஆயிரத்தில் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மருமாகக் காணப்படுகிறார்கள்.

மனமடக்கமும்—மௌனசாமியும்.

கலியுகாதி 5014—15-ல், பிரமாதீச—ஆனந்த வருடங்களில் சுமார் நான்கு வருடகாலம் நாகபட்டினத்தில் மௌனமாயிருந்த சுவாமியாரைப்பற்றி பெரும்பாலும் தெரியாதவர்களில்லை யென்றே சொல்லலாம்.

தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறலும்
தீரா விடும்பை தரும்

என்ற குறட்பாக் கருத்தை நன்குணராமல் அவரை ஆரம்பத்திலேயே விசேடமாகக் கொண்டாடி புகைப்படம் (Photograph) பிடித்து பூசை முதலியவைகளும் செய்து வந்தார்கள். சிறிதுகால மானவுடனே அவர்மீது பல் விதக் குறைகூற ஆரம்பித்தார்கள். அவர் எத்தன்மை யுடையவராயிருந்தாலும் சரி. நாலு வருடகாலம் வரையில் பிறருடன் சம்பாஷிக்காமல் பஞ்சேந்திரியங்களின் வழியே

சென்றுமுன்று சஞ்சரிக்காமலும் இருந்தார் என்பது உலக மறிந்த வுண்மை. அவ்வாறு வேறோர் மனிதன் ஒருமணி நேரமாவது இருக்க எண்ணினால், மனமானது அடங்காமல் பஞ்சேந்திரியங்கள் வழியாகச்சென்று, விடயங்களைக் கவர்ந்துழலுமாதலால் அவனை ஓரிடத்திலேயே நிலைபெற்றிருக்க விடாது. எல்லாரும் மனத்தையடக்கி யாள்வதென்றால் மிக்க அருமை. சிலர் நித்திரை செய்யும்போது மனம் அடங்கியிருக்கிறதே யென்று கேட்பார்களாயின், நித்திரை செய்யும்போது மனமானது இந்திரியங்களின் வழியாகச் செல்லாததனால் நித்திரை சுகமாக இருக்கிறதேயன்றி, மனம் விடயங்களைக் கவர்ந்து கொண்டிருக்கும்போது நித்திரை வரவே வராது, இதற்கு வியாகூல முடையவர்களையும் பிணியாளர்களையும் திருட்டாந்தமாகக் காணலாம். ஒருவர்க்கு மனம் அடங்கியதையும், அடங்காததையும் (*) சாக்கிரவத்தையில் அல்லவா பார்க்க வேண்டும். ஆகையால் சிறிது நேரமேனும் ஒருவித யோகாப்பியாசம் செய்தவர்களும் கால்வீசம், அரைவீசம் ஞானியே யன்றி அவர்களை வீணர்களாக எண்ணி நிந்திக்கக் கூடாது.

தணங்குடி வள்ளல்.

சொல்லுமெய்ஞ் ஞானச் சுகக்கடலை யுண்டுநான்
சும்மா விருக்க வருள்வாய்
சுத்தபரி பூரணச் சுகவாரி தன்னிலோர்
சொட்டாகி னுந்தொட்ட பேர்

(*) சாக்கிரம், இதன் விபரம் விரிவாக இருப்பதால், நமது ஞானயோக ரகசியத்தில் "ஐந்தவத்தைகள்" என்ற தலைப்பின் கீழ்க்காண்க.

சலவர்கள் நல்லவர்கள் நல்லவர்க ளென்றெக்கு
நாலுநல் லவருமில்லை
நற்குணங் குடிகொண்ட புத்துஷா வானகுரு
நாதன் மூவிழித் தீனே.

சிவஞானவள்ளல்.

ஆன்றநற் சனக ஞாதி நால்வரு மான்மு கத்தை
மூன்றரைக் கோடி கற்பம் பார்த்தபின் மூத்த ராஞா
தோன்றிநின் றழியு மிந்த தொடுகடற் புவியி னுள்ளோ
ரூன்றியோர் கணம தேனும் பார்த்திடி னுறுவர் முத்தி.

அறிவி லறிவா யகண்டிதமா யனந்தா னந்த மயமாகிச்
செறியும் பரம சிவந்தன்னைத் தன்னுட் கண்டு தியானித்துக்
கறவை யருந்தப் பால்சுரக்குங் கால மேனுங் கடைப்பிடிப்போர்
பிறவிக் கடலைக் கடந்தோர்க ளவரே யுலகிற் பெரியவரே.

ஆக்கறக்கு மந்நேரம் அம்புவிடு மந்நேரம்
நோக்கிமைக்கு மந்நேரம் நுண்ணறிவால்—நீக்கமற
நானென்னும் போத நழுவிச் சிவமானர்க்
கினைபிறப் புண்டோ வினி.

நெருப்பிற் கொளுத்திய தீபம் உருவத்திற் சிறியதா யிருப்பினும், அதுவும் சிலதூரம் வரையில் இருளை அகற்றும். அதுபோல் ஒருவர் தத்துவஞானத்தைச் சிறிது அநுட்டித்திருந்தாலும் அந்தத்தவம் அநேக பாவங்களைப் போக்கிவிடும்.

இருவகை வண்டு.

சில வண்டுகள் அழகிய புட்பங்களில் ததும்பிய தேனையே தேடித்திரியும். சில வண்டுகள் பரிமளமான புட்பங்கள் எதிர்ப்பட்டாலும் அவற்றிலுள்ள பசிய தேனைப் புசிக்க அறியாமல், துர்க்கந்தமான மலங்களையே உருட்

டிக்கொண்டு செல்லும். விவேகிகள் பசுமாட்டிலுள்ள பால், நெய் முதலானவைகளை உபயோகிக்கிறார்கள். புலையர்கள் பசுமாட்டிலுள்ள பால், நெய் முதலானவைகளை அதிகமாக விரும்பாமல், அதன் மாமிசம், தோல், எலும்பு முதலானவைகளை அதிகமாக விரும்புகிறார்கள். அவை போல் சில விவேகிகள் மகான்களிடத்துள்ள நற்குண நற்செய்கைகளையே ஆராய்ந்தறிந்து மகிழ்வுற்று,

சோணசைல மாலை.

“ குலத்தினிற் பிறந்தும் அலகில்நூல் கற்றுங்
குணத்தினிற் சிறந்துநல் விரத
பலத்தினிற் கவர்ந்தும் நின்னடி யவர்க்குப்
பரிவிலார் கதியிலா தவரே.”

தாயுமான வள்ளல்,

“ அன்பர்பணி செய்யவெனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே.”

என்று திருவாய்மலர்ந்தருளியுள்ள அமுத வாக்கியங்களை யுணர்ந்து, அவர்களுக்குத் திரிகாண சுத்தியாகத் தொண்டூழியஞ் செய்து மகான்கள் பிரியாசைப்பட்டு சம்பாதித்த அருமையான பிரம்ம நிட்டையை அவர்கள் கருணைகூர்ந்து சொல்லக்கேட்டு அனுட்டித்து மெய்ஞ்ஞானியாவார்கள்.

தாயுமானவள்ளல்

கற்றும் பலபல கேள்விகள் கேட்டுங் கறங்கெனவே
சுற்றுந் தொழில்கற்றுச் சிற்றின்பத் தாடு சுழலியென்றுங்
குற்றங் குறைந்து குணமே விடுமன்பர் கூட்டத்தையே
முற்றுந் துணையென நம்புகண் டாய்சுத்த மூடநெஞ்சே.

பிடித்தடிகள்.

அடியா ருறவும் அரன்பூசை நேசமும் அன்புமன்றிப்
படிமீதில் வேறு பயனுள தோ?யின் வகுத்த
குடியான சுற்றமுந் தாரமும் வாழ்வுங் குயக்கலங்கள்
தடியா லடியுண்ட வாறொக்கு மென்றினஞ் சார்ந்திலரே.

## தான் கள்ளன் பிறரை நம்பான்.

காமசன்னதமுள்ள எவ்வனப் பருவமுடையவர்கள் ஒரு அழகிய மங்கையின் பூரணச் சந்திரன் போன்ற முகத்தை நன்றாகப் பார்த்தாலும், அதைவிட்டு அவளது துர்க்கந்தமுடைய யோனியைத் தேனொழுகு கனியென்று நாடுகின்றதைப்போல், சில அவிவேகிகள் மகான்களிடத்தி லுள்ள குணத்தை ஆராயாமல் ஏதாவது கொடிய குற்றம் குறைகள் இருக்கின்றனவா? வென்று ஆராய்ந்து நன்மை யானதை, தமது அந்தக்கரண சுத்தியில்லாத பிராந்தியால் தீமையென்றெண்ணிப் பலரிடத்திலும் சொல்லித் தூற்றி யலைவார்கள். மேற்கூறிய புகழ்ச்சியினாலும் இகழ்ச்சியி னாலும் மகான்களது இருவினைகள் நீங்கி விடுகின்றனவே யன்றி வேறில்லை. அஃதெப்படியெனில்:—மகான்கள் தமது ஊழ்வினையை யனுபவிக்குங் காலத்தில் தம்மை யறியாமற் செய்த புண்ணிய பாவங்கள் மறுமைக்குத் தொடாதபடி, நல்லவர்கள் மகான்களைத் தொழுது அவர்கள் செய்த புண்ணியத்தைக் கைக்கொள்வார்கள். சிலர் நல்லவர்களைப் போல் வெளித் தோற்றத்திற்குப் பொய் நாடகம் நடித்து பாசாங்குசெய்து (ஞமலிக்கு எச்சில் எலும்பைக் கடிப்பதி லேயே ஞாபகமிருப்பதுபோல்) ஆஷாடபூதிகளாகிய இரு கால் ஞமலிகள் மகான்களிடத்திலுள்ள குற்றங்களையே

ஆராய்ந்து இகழ்ந்து பாவங்களை மூட்டை மூட்டையாகக் கட்டுவார்கள்.

சீறப்புராணம்.

பாரி டைப்பெரி யவர்களுக் கிடர்படுத் திடவென்
றோரும் வன்மனத் தவர்களுக் குறுபொரு ளுலகில்
சாரு மக்களு மனைவியுந் தாமுந்தம் பொருளும்
வேறொ டுங்கெடு மென்பது நிசமென விரித்தான்.

வாயுசங்கிதை.

அழிவிலா யோகந்தான் வல்லுநரைத் தீங்குரைத்தோர்
நரகி லாழ்வார்
செழுமனைநல் லாடையுண்டி சேகறுமற் றவர்க்குநன்காச்
சிறப்ப வீந்தோர்
எழுமையுஞ்செய் பாவமெலா மிலகுகதி ரிரவிமுன
மிருளே போல
ஒழியவுயர் வறவுயர்ந்த கதியிலடைந் தின்பமுற்றே
யுறைகு வாரே.

வாலேக்தும்மி.

சிவனடி யாரை வேதிய ரைச்சில
புலவர் ஞானப் பெரியோரை
மவுன மாகவும் வையாதே—அவர்
மனது நோகவும் செய்யாதே.

திருக்குறள்.

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேனுங் காத்த லரிது.

## திருமந்திரம்.

ஈச னடியா ரிதயங் கலங்கிடத்
தேசமும் நாடுஞ் சிறப்பும் அழிந்திடும்
வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும்
நாசம தாகும் நம்நந்தி யாணையே.

## விருத்தாசல புராணம்.

கருக்குழி வேண்டிற் கொல்லுங் காலனை வேண்டிற் செக்கில்
நெருக்குணல் வேண்டி லெந்தன் நேசரை நிந்தை செய்மின்
திருக்கிளர் செல்வம் வேண்டில் திகழ்முத்தி வேண்டில் தொண்டர்
வருக்கமே போற்று மென்று மறைந்தனன் மன்று ளாடி.

## பட்டினத்தடிகள்.

கடுஞ்சொல்லின் வம்பரை யீனரைக் குண்டரைக் கீழ்மகரைக்
கொடும்பவ மேசெய்யும் நிர்மூடர் தம்மைக் குவலயத்துள்
நெடும்பனை போல வளர்ந்துநல் லோர்த நெறியறியா
யிடும்பரை யேன்வகுத் தாயிறை வாகச்சி யேகம்பனே.

மகான்கள் எப்போதேனும் தமது பசிப்பிணியை நீக்கிக்கொள்ளும் பொருட்டு ஒரு வீட்டில் அன்னம் கேட்க வந்தால் சில அன்பர்கள் ஆர்வத்துடன் அமுதளித்து உபசரிப்பார்கள்.

## குடும்ப சாந்தம்.

திருவாரூருக்கு மேற்கேயுள்ள கோடிமங்கலம் என்னும் கிராமத்தில் அன்பர்பணி செய்வதற்காகவே ஒருரு வெடுத்துவந்தாற்போன்ற விருத்தாசலம் பிள்ளை என்பவர் ஒருவரிருந்தனர். அவர் வீட்டுக்கு வந்திருந்த ஒரு பிரா

மண சன்னியாசி அக்கினி தேவனை யதிகமாய் நட்புகொண்டிருந்தார்போலும்; அவருக்கடிக்கடி பசியுண்டாகிக்கொண்டேயிருந்தது. அவர் அன்று காலையில் பிள்ளை யவர்கள் வீட்டில் பழையசோறு-காப்பி (Coffee) முதலியவைகளை மனம்போல் புசித்திருந்தும், அகாரணமாகப் பத்து நாழிகை நேரத்திற்கெல்லாம் எனக்கு வயிறு பசிக்கிறது! என்றனர். அதற்குப் பிள்ளை யவர்கள் சுவாமி! அடுப்பில் கறி (குழம்பு) கொதிக்கிறது, தயவுசெய்து சற்று பொறுங்கள் என்று பணிவுடன் கூறினர். சன்னியாசி கோபத்துடன் அதுவரையில் பொறுத்திருக்க முடியாதுபோ! எனக் கூறிவிட்டு வெளியிற் புறப்படுஞ் சமயத்தில், பிள்ளையவர்கள் அவருக்கு இங்கித வார்த்தைகூறி வேண்டிக்கொள்ள, சன்னியாசியும் ஒருவாறு சம்மதித்து அமர்ந்தனர். அப்போது பிள்ளையவர்கள் வீட்டுக்கு விருந்தாக வந்திருந்த மாணிக்கவாசகம் என்பவர், 'சன்னியாசிக்கு இவ்வளவு கோபம் வரலாமா?' என்னலும்; பிள்ளையவர்கள் அவரை நோக்கி, 'அவ்வாறு கூறவேண்டாம். துறவிக்கு வேந்தன் துரும்பு என்று ஆன்றோர் வசனம் இருத்தலாலும், இந்த வீட்டில் அன்னம் இடாவிடின் இன்னொரு வீடு இருக்கவே யிருக்கிறது என்னுந் துணிபு ஏற்பட்டிருத்தலாலும், நம்மையோர் பொருளாக அவர்கள் மதிக்கவேண்டிய அவசியமேயில்லை. அவர்கள் மனோரதப்படி குறிப்பறிந்து பசிப்பிணியை நிவர்த்திக்கத் தாமதித்த குற்றம் நம்முடையதே. அன்றியும்,

விள்ளரு நற்சிவ வேடத் தோர்பொருள்
கொள்ளைகொள் கிற்பினுங் குறைகள் கூறினும்
பிள்ளையை யறுப்பினும் பிழைகள் செய்யினும்
எள்ளுத லின்னெனில் ஈசற கன்பனும்

என்று பிரபுலிங்கலீலை கூறுகின்றதெனை, அஞ்சி யொடுங்கி நவின்றனர்.

என்ன சாத்துவிகம்! என்ன அன்பு! என்ன பொறுமை! இப்புண்ணிய புருடரன்றோ? இல்லற கருமத்திற் சிறந்த பரிபாக பக்குவமுடையவர். இத்தகைய தரும சீலர்கள் நம்து நாட்டின்கண் மலிந்திருப்பின், அடியார் குழாத்திற்கு என்ன குறைவு! அவர்கள் பாக்கியமே பெரும் பாக்கியம்!

மேலவீடும்—கீழ்வீடும்.

சிலர், மேலவீட்டில் கேள்; கீழ்வீட்டில் கேள்; அடுத்த வீட்டைப்பார்; பெண்பிள்ளை வெளியில் போயிருக்கிருள்; கைவேலையாயிருக்கிருள்; சாப்பிட்டுக்கொண் டிருந்தாலும் முந்திப்போய் விட்டதென்று பலவிதமாகச் சொல்வார்கள். சிலர், இவன் உலக்கைத் தடியன்போலிருக்கிறன்; குத்தினும் கலநெல் குத்துவான்; கூலிக்கறுத்தாலும் குறுணி சம்பாதிப்பானே! இவனுக்கு என் சோறு போடவேண்டும் என்று கடிநாய்போற் சீறிவிழுந்து நிந்திப்பார்கள். கோவில், மடம் முதலானவைகளிலிருக்கும் விக்கிரகம், படம் முதலியவைகளுக்கென்றுலோ புளியோதரை, சர்க்கரைப்பொங்கல், தயிரன்னம், சித்திரான்னம், வடை, சுண்டல் முதலிய பற்பல தினுசுகள் தயாரித்து, தீபாராதனையிட்டு, சுவாயின்மீது அதிக பத்தியுள்ளவர்கள்போல் நிவேதனஞ் செய்துவிட்டு, பெண்சாதி பிள்ளைகள் முதலிய எல்லோரும் வயிறுபுடைக்கத் தின்பார்கள். விக்கிரகம், படம் முதலானவைகள் சாப்பிடுவதா யிருந்தால் இத்தன்மையானவர்கள் ஒரு சோற்றுப் பருக்கையையாவது வைத்து நிவேதிப்பார்களா? ஒருபோது மில்லை.

கடவுளோ ஒருநாமம், ஓர்குலமும், ஓர்வடிவும் இல்லாத வாராயிருக்கிறார் என்பது பின்வருஞ் சரித்திரத்தால் நன்கு விளங்குகின்றது.

## நவாபு அரசரும்—சைவச்சாமியும்.

சென்னை இராசதானியை அரசாண்டுவந்த இஸ்லாமிய அரசராகிய நவாபு காலத்தில் காஞ்சீபுரத்து கோயிலைச் சைவர்களும், வைணவர்களும் தத் தம்முடையதென நவாபிடம் பிரியாது கொடுத்தனர். நவாபு இரு வகுப்பினரையும் நோக்கி, உங்கள் சாமியின் சொரூபத்தை வரைந்து கொண்டு வாருங்கள். பிறகு தீர்ப்புச் சொல்கிறேன் என்றனர்.

வைணவர்கள் உடனே கைதேர்ந்த சிற்ப சாஸ்திரியைக்கொண்டு அதிக பொருட்செலவு செய்து, கிருட்டின சொரூபத்தை எழுதி நவாபிடம் கொண்டுபோய்க் கொடுத்தார்கள். அதை நவாபுகண்டு ஒருவிதமாக மனத்துள் தீர்ப்புச்செய்து வைத்தனர்.

சைவர்கள் அதையுணர்ந்து நமது, சாமியின் உருவத்தை எவ்விதமாக எழுதுவதென்று ஆலோசித்து ஒன்றுந் தோன்றாமல் திகைத்து, தேவாரப் பதிகங்கள் எழுதிய ஏட்டுச் சுவடியில் ஒரு நூலைப்போட்டு திருவுளச் சம்மதம் எப்படி யிருக்கிறதென்பதைப் பார்த்தார்கள். அவ்வேட்டில்,

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையா னென்னி னல்லால்
ஒப்புடைய னல்லனொ ருருவ னல்லன்
ஒரூரன் அல்லனோ ருவ மில்லி

யப்படியும் மந்நிறமு மவ்வண் ணம்மும்
அவனருளே கண்ணாகக் காணி னல்லா
லிப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்தன்
இவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே

என்று எழுதியிருந்தது. அதைப் பார்த்ததும் ஒன்றுந் தோன்றாதவர்களாய் இனி என்செய்வது? என்று மலைத்து ஆலோசனைக்கடலுள் அமிழ்ந்துகொண்டிருந்தார்கள்.

உங்கள் சுவாமி படம் எழுதியாகிவிட்டதா? என்று நவாபிடத்திலிருந்து சைவர்களுக்கு உத்தரவு வந்தது. சைவர்கள் மேற்கண்ட பாடலைக் குறிப்பிட்டுக்கொண்டு போய் நவாபிடத்தில் கொடுத்தார்கள். அச்செய்யுளின் கருத்தை நவாபு உணர்ந்து, இந்தச் சைவர்கள் சாமியானது ஓர் வடிவமும், ஓர் நிறமும், ஓர் ஊரும், ஒரு குலமும் இல்லாதது என்பதால் பெரும்பாலும் நமது அல்லா குத்தாலாவைப்போலவே ஒத்திருக்கிறது. இந்த வைணவர்களோ ஒரு படத்தை அழகாய் எழுதி நம்மை ஏமாற்றப் பார்த்திருக்கிறார்கள். ஆகையால் கோவில் சைவர்களுக்கே சொந்தம் என்று தீர்ப்பளித்தனராம்.

இந்த விவகாரத்தின் மூலமாய் கடவுளுக்கு ஓர் வடிவமும், ஓர் நிறமும், ஒரூரும் இல்லையென்று நன்கு புலப்படுகின்றது. அத்தகைய கடவுளுக்கு ஓர் வடிவமும், நிறமும் ஊரும் ஏற்படுத்தி, நிவேதனமென்று தாம்புக் கயிற்றையும், அங்கவஸ்திரத்தையும் சுருட்டிவைத்து நிவேதித்து, ஏமாற்றி பொய்ப்பூசை பண்ணுகிறார்களென்றால் இவர்கள் கதி என்ன கதியாகும்? அதோகதிதான் ஆகும்?

ஞானவாசிட்டம்.

தேகமுதற் பிரிவுகளாய்ச் சிறியனவாம் பொருள்களிலத்
தெய்வ முண்டோ
பாகமறப் பணிமையற வடிமுடிவற் றளவுணர்வே
பரம போத
மாகலினு லத்தெய்வ மருச்சித்தற் குரித்தாகு
மறிவி லாத்
மூகருக்கு வடிவமுத லருச்சனையே யியல்பென்று
மொழியு மன்றே.

செல்வழி(*)யோ சனைநடக்க மாட்டாதார் (§)குரோசவழி
செல்லு மாபோற்
பல்வடிவி லருச்சிப்ப ரறிவில்லா ரறிவுநிலை
படையா ரென்று
சொல்வர்பரா பரமற்ற சிற்ககன மெவ்விடத்துந்
துன்றி நிற்கு
மல்லெழியாங் கற்பங்க ளனைத்தினுமா யாததனு
லதுவே தெய்வம்.

கூறு சங்கு டோல் முரசு.

முன்னொரு காலத்தில், அந்தகரு முடவருமாகிய இரண்டு வித்துவான்கள் இரட்டையர்கள் என்றிருந்தனர். அவர்கள் ஒருவர்க்கொருவர் சகோதரர். ஆசுகவி பாடுவதில் சதுரர்கள். அவர்கள் ஒருநாள் திருவனந்தபுரத்துக்குப் போயிருந்தபோது அவ்வூர்க் கருகாண்மையிலுள்ள ஆங்கூர்ச் சிவன் கோவிலுக்குப்போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துவிட்டு, அமுதுவாங்கிப் புசிப்பதற்காகக் காத்திருந்தனர். குருக்கள் வழக்கம்போல் மணியை ஆட்டி, தூபதீபமட்டிலு நீட்டி, வெறுந்துணி மூட்டையைக் காட்டி; சந்தடி

*யோசனை-பத்து நாழிகை தூரம். § குரோசம்-கூக்கேட்குந்தூரம்.

செய்யாமல் வீட்டுக்குப் போயினர். இரட்டையர்கள் பசியோடு வெகுநேரம் வரையிற் காத்திருந்தும் பிரயோசனப்படாமல்,

தேங்குப் மூங்கூர்ச் சிவனே! சில் லாளியப்பா!
நாங்கள் பசித்திருக்க ஞாயமோ?

என அரை வெண்பாவைப் பாடினர். அதற்குள் அந்தக் கோவிலிலுள்ள சில்லாளியப்பர் இரட்டையர்களை நோக்கி,

—போங்காணும்
கூறுசங்கு தோல்முரசு கொட்டோசை யல்லாமல்
சோறுகண்ட மூளியார்? சொல்

என்று கூறினராம்.

கடவுள், அன்னாகாரத்தை விரும்பாமல் அரூபியாக இருக்கும்போது, அவருக்கோர் சொரூபம் வகுத்து, அன்னம் படைப்பதாகத் தாம்புக்கயிற்றை வைத்துப் பரிகாசம் பண்ணி வருந்துவதைப்பார்க்கிலும், பஞ்சபாண்டவர்களில் ஒருவனாகிய வீமன், தான் செல்லுமிடங்களிற் காணும் நந்தவனங்களிலுள்ள மலர்களையெல்லாம் சிவார்ப்பணம்! சிவார்ப்பணம்!! என்று மானதமாகப் பாவிக்க, அப்புட்பங்கள் கைலையங்கிரியில் மலைமலையாகக் குவிய, அதைத் தினந்தோறும் வெளியில் அகற்றுவதற்குத் தேவர்கள் எல்லாம் சலிப்படையச் செய்தான் என்பதுபோல் இவர்களும் மானதமாகப் பூசை செய்தாலும் சிறப்புடையதாகத் தோன்றும்.

## பூசலார் கோவில்.

தொண்டை மண்டலத்தில், திருநின்றவூர் என்னுங் கிராமத்தில், பிராமண குலத்தில், பூசலார்நாயனார் என்பவர்

ஒருவர் இருந்தார். அவர் கடவுள் அடியார்களுக்கு வேண்டு வனவற்றை எவ்விதத்திலும் தேடிக்கொடுத்து, பரமசிவ னுக்கு ஓராலயங் கட்டுவதற்கு விரும்பி எங்கும் வருந்திப் பொருள் தேட, அற்பமுங் கிடையாமையால் மனம் நைந்து, 'இதற்கு யாது செய்வேன்' என்றுலோசித்து மனோபாவனையினாலே (மானதமாக) ஆலயங்கட்டத் துணி ந்து மனதினாலேயே அதற்கு வேண்டுந் திரவியங்கள், உப கரணங்கள், சிற்பர்கள் முதலானவைகளைத் தயாரித்துக் கொடுத்து சுபதினமும் பார்த்து நிலை முதலியவைகள் நிறுத் திக் கோவில்கட்டி முடித்து பிரதிட்டை (கும்பாபிஷேகம்) செய்தற்குரிய சுபதினத்தை யெதிர்பார்த்திருந்தார்.

பெரியபுராணம்.

*அடிமுத லுபான மாதி யாகிய படைக ளெல்லாம்*
*வடிவுறுந் தொழில்கண் முற்ற மனத்தினால் வகுத்து மான*
*முடிவுறு சிகரந் தானு முன்னிய முழத்திற் கொண்டு*
*நெடிதுநாள் கூடக் கோவி னிரம்பிட நினைவாற் செய்தார்.*

காடவர்கோன் என்னும் அரசன், தமது இராசதானி யாகிய காஞ்சீபுரத்தில் ஒரு சிவாலயங் கட்டுவித்து பிர திட்டை செய்ய, ஓர் சுபதினத்தை எதிர்பார்த்திருந்தான். பூசலார் குறித்த சுபதினமும் அரசன் குறித்த சுபதினமும் ஒரே நாள், ஒரே இலக்கினமாக இருந்ததால், பூசலார் நாய னாரது அன்பை விளக்குவான் கருதி; கடவுள், முதல் தினத் தில் அவ்வரசன் கனவில் தோன்றி, 'நின்றவூரில் பூசல் என்பவன் நமக்கோர் ஆலயம் கட்டியிருக்கிறான். அதில் நாளைக்கு நாம் பிரவேசிப்போம். ஆகலின், உன் பிரதிட் டைக்கு மற்றொரு சுபதினத்தைக் குறித்துக்கொள் என்று கூறி மறைந்தனர்.

நின்றவூர்ப் பூச லன்ப னென்டிதா ணினைந்து செய்த
நன்றுநீ டால யத்து நாளைநாம் புகுவோம் நீயிங்
கொன்றிய செயலை நாளை யொழிந்துபின் கொள்வா யென்று
கொன்றைவார் சடையார் தொண்டர் கோயில்கொண் டருளப்
[போந்தார்.

அரசன் விழித்தெழுந்து நின்றவூரில் வந்து பூசலாரை விசாரித்துக் கண்டு, 'சுவாமி! தேவரீர் கட்டிய கோவில் எங்குளது? அதற்கு இன்று பிரதிட்டை செய்யும் சுபதின மென்று சிவபெருமான் நேற்று கனவில் வந்து சொல்ல அறிந்து வணங்குதற்கு வந்தேன்!' என விண்ணப்பித்து நின்றார். அதற்குப் பூசலார் மானதமாகக் கோவில் கட்டியது முதல் ஆதியோடந்தமாகச் சொல்லி, மானதமாகக் கும்பாபிஷேகமும் குறித்த தினத்தில் செய்து பாகதியடைந்தார் என்பது பெரியபுராணக் கருத்து.

## சத்தம் உனக்கு—தண்ணீர் எனக்கு.

வெளிப்பார்வைக்கு மாத்திரம் இடம்பமாகக் கோவிலைக் கட்டி அங்கவஸ்திரத்தையும், தாம்புக்கயிற்றையும் சுருட்டி வைத்தும், சுடுசோறுபோல் ஆவி வரும்படியாகச் செங்கலைப் பழுக்கக் காய்ச்சி ஓர் பாத்திரத்தில் வைத்து ஈரவஸ்திரத்தால் மூடிக்கொணர்ந்தும், பூசை செய்வதுபோல் காயத்திறைல் மாத்திரம் பாவனை காட்டி, பிறர் தம்மை பத்திமான் என்றெண்ணி விசுவாசிக்கவும், தாம் அவர்களிடத்தில் பகற்கொள்ளை யடிக்கவும் நினைந்து, சொரூபங்களுக்கு முன், 'சத்தம் மட்டும் உனக்கு, தண்ணீர் முதலியவை எனக்கு' என்று தேங்காய் உடைத்து, 'சாம்பிராணிப் புகை உனக்கு, சாத முதலியவை எனக்கு' என்று வெறும் மணியை யாட்டி பஞ்சகாரி செய்யும் புண்ணிய சீலர்கள்,

தூலமாகப் பூசைசெய்ய முடியாவிட்டால் மேற்கூறிய வீமன், பூசலார் முதலானவர்களைப்போல் மானதமாகப் பூசைசெய்வதற்கு அவர்கள் சரித்திரங்களைக் கேட்டறியார் கள்போலும். இத்தன்மை யுடையவர்கள் கோவிலுக்கு தாசி வராவிட்டால் சுவாமிக்குத் திருத்தியில்லையென்று வஞ்சகமாய்ச் சொல்லி, சனங்களை ஏற்கனவே ஏமாற்றி அதற்கேற்ற சாத்திரங்களை யெழுதிவைத்து, வரி வசூலித்து வருவது போதாதென்று இப்போதும் தம் இஷ்டகாமியங் களை நிறைவேற்றுதற்காகப் பஞ்சாயத்தார்களுக்கு மாத்தி ரம் நல்ல பிள்ளையாக நடந்து, அவர்களையும் விவேகசாகரம் என்னும் சிற்றின்பக் கதைகளில் பெண்கள் தத்தம் புரு டரை ஏமாற்றியதுபோல் ஏமாற்றி, தம் புத்திக்குத் தகுந்த உருத்திர கணிகையர்களை வரவழைத்துக் கோவிலென்றுங் கொஞ்சமும் நெஞ்சு அஞ்சாமல், சொல்லத்தகாத அக்கிர மங்களை புரிந்துகொண்டு வருகிறார்கள்.

இத்தன்மை யானவர்கள் சர்வசீவ தயாபரராகிய கட வுளை பரிகாசம் பண்ணுபவர்களே யன்றி வாஸ்தவத்தில் பத்திமானவார்களா? இவர்கள் அழுகள்ளன், தொழுகள் ளன், ஆசாரக்கள்ளன் என்கிற மூவகைக் கள்வர் குழாத் தைச் சேர்ந்த பகற்கொள்ளை பக்காத்திருடர்கள் என்ப தற்கு ஆட்சேபனையும் உண்டா?

மதங்கொண்ட யானையானது தன் மத்தகத்தில் தானே மண்ணைவாறிப் போட்டு கொள்வதுபோல், பீமதங் கொண்ட உருத்திராக்கப் பூனைகள் பத்திசெய்வதாகப் பாவத்தைச் சேகரித்து வைக்கிறார்கள். சகல சீவகோடி களுக்கும் அமுதளித்து, ஊட்டி, உறக்காட்டி, இரட்சித்து, பிறப்பு, இறப்பு, பசி, தாகம் முதலியவைகளின்றி யெப்

போதும் ஒரே படித்தாக இருக்கும் கடவுளுக்கு பசி தாகம் வந்துவிட்டதாக எண்ணி நிவர்த்திப்பவர்கள் இவர்கள் தானே? இந்த இரகசியார்த்தத்தை யெந்தக் குருவினிடத்தில் கேட்டறிந்தார்களோ தெரியவில்லை.

## அக்கினி தேவனுக்கு சுக்குக் கஷாயம்.

இதுகாரணம் பற்றியே உயிர்களுக்கெல்லாம் உயிராயிருந்து ஊட்டியுபசரிக்கும் தாயனைய கருணாநிதியாகிய மூவாமுதல்வனுக்குப் பசி வந்துவிட்டதாக சோடசவுபசார முதலானவைகள் செய்து உபசரிப்பது எப்படியிருக்கிறதெனில், எல்லோரும் புசித்த புசிப்புக்களை அவரவர் வயிற்றாடிருந்து சீரணிக்கப்பண்ணுகிற அக்கினி தேவனுக்கு அசீரணம் (செமியாமை) பிறந்துவிட்டதாக எண்ணி சுக்கரைத்துக் கொடுத்து, சீதளம் பிறந்துவிட்டதென்று வைக்கோலால் மூடி., முன்னமே நாம் இவ்வாறு செய்யாமற் போனோமே! யென்று வருந்துபவர் யாரைப்போல் இருக்கிறாரென்றால், தண்ணீரைத் தண்ணீரால் கழுவி, தமது நிழலை மண்ணுக்குள் புதைத்து, அந்த நிழலைத் தம்முடைய கால் அடியினால் இத்தனை அடியென்று அளவெடுப்பவரைப்போல் இருக்கிறதென்னும் பொருளடக்கி,

### கண்ணுடைய வள்ளல்.

அக்கினி தேவர்க் கசீர்த்தியென்று சுக்கரைத்து
வைக்கோலால் மூடி மலையடுப்பிற்—றுக்கியாய்
நீரைக் கழுவி நிழலைப் புதைத்தளப்பார்
ஆரைப்போல் வாரென்ன லாம்.

எனத் திருவாய் மலர்ந்திருக்கின்றனர்.

சாந்தலிங்க வள்ளல்.

நாமாற்கருச் சனைமுத லியகொடு நலஞ்செய்தே மவையின்றித்
தீமைசெய்துளே மெனவுமுன் னிலையொரு சிறிதசை வடைந்தாலும்
யாமியற்றப ராதமென் னினைவுமற் றசைகிலை யெனில்நெஞ்சே
ஏமமிக்குறச் செய்யுநன் கிறை கழற் கெனத்துணிந் திடுநீயே.

சங்கர னெடுசரந் தம்மில் வேறெனும்
அங்கவ னறிவரும் அளற் றழங்குவான்

எனும் பிரபுலிங்கலீலைக் கருத்துப்படி பாலிங்கமாகிய கடவு ளும், சாலிங்கமாகிய அடியார்களும் ஒரே தன்மையுடைய வர்கள். அஃதெப்படியெனில், நெருப்பைச் சேர்ந்த இரும்பு முதலிய பொருள்கள் நெருப்புமயமாகி விடுவதுபோல் கடவுளைச்சேர்ந்த அடியார்களும் கடவுளே. இங்ஙனமின்றி, அவர் வேறு—இவர் வேறு என்று எண்ணுபவர்கள் நிரய வாழ்வுக் காளாவார்கள். ஆகையால் கடவுளுக்குப் பசி தீர்க்க எண்ணியவர்கள், அடியார்களைக் கவனித்து உப சரித்தால் கடவுளுக்குப் பசிதீர்த்ததை நிகர்க்கும்; அவர் கள் விரும்பிய எண்ணங்களும் கைகூடும்.

திருமந்திரம்.

ஏறுடை யாயிறை வாவெம்பி ரானென்று
நீறிடு வாரடி யார்நிகழ் தேவர்கள்
ஆறணி செஞ்சடை அண்ண லிவரென்று
வேறணி வார்க்கு வினையில்லைத் தானே.

அகாம் ஆயிரம் அந்தணர்க் கீயிலென்
சிகாம் ஆயிரம் செய்து முடிக்கிலென்
பகரும் ஞானி பகலுண் பலத்திற்கு
நிகரில்லை யென்பது நிச்சயந் தானே.

ஆறிடும் வேள்வி அருமறை நூலவர்
கூறிடும் அந்தணர் கோடிபே ருண்பதில்
நீறிடும் தொண்டர்கள் நினைவின் பயனிலை
பேறெனின் ஓர்பிடி பேறது வாமே.

### பட்டினத்தடிகள்.

பருத்திப் பொதியினைப் போலே வயிறு பருக்கத்தங்கள்
துருத்திக் கறுசுவை போடுகின் றூர்துறந் தோர்தமக்கு
வருத்தி அமுதிட மாட்டார் அவ்வரையிம் மாநிலத்தில்
இருத்திக்கொண் டேனிருந் தாயிறை வாகச்சி யேகம்பனே.

### பெரியபுராணம்.

மண்ணினிற்பிறந் தார்பெறும் பயன்மதிசூடும்
அண்ணலாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணினாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மையாமெனி னுலகர்முன் வருகென வுரைத்தார்.

## சிவபூசையும்—அடியார் வருகையும்.

திருவள்ளுவ நாயனார் வாசுகியை விவாகஞ்செய்து இல்லற தருமம் நடத்தற்பொருட்டு, நெய்தல் தொழில் பாபமில்லாதது என்றுணர்ந்து ஏலேலேசிங்கன் என்னும் வர்த்தகனிடத்தில் நூல்வாங்கி ஆடைநெய்து அதன் கூலியால் சீவனம் செய்துவந்தார். அவ்வாறாய நாட்களுள் ஓர்நாள் நூல்வாங்கும் பொருட்டு, ஏலேலேசிங்கன் வீட்டுக்குப்போய் செட்டியார் எங்கே? யென்று கேட்க, அவர் சிவபூசை செய்கிறார் என்றார்கள். சிவபூசை இங்கு செய்கிறாரோ? குப்பத்திற் செய்கிறாரோ? என்னலும், பத்தினியார் உள்ளேபோய்ச்சொல்ல, அவர்கேட்டுச் சிவபூசையை

விட்டுத் திடுக்கிட்டோடிவந்து நாயனருடைய உபய பாதங்களில் வணங்கி, சுவாமி! அடியேன்செய்த சிவபூசையின் பயனாக எழுந்தருளிவந்த தேவரீரது உண்மையை யறியாமல், மீண்டும் சிவபூசை செய்துகொண்டிருந்த என்னைப் பந்தசாகரத்தினின்று எடுத்துக் கரையேற்ற வேண்டுமென்று விண்ணப்பிக்க, அவரது பக்குவத்தைப் பரிசோதித்து ஞானோபதேசஞ் செய்தனர்.

கலியாணபுரத்துக்கு அதிபதியாகிய விச்சல மன்னவனுக்கு பிரதம மந்திரியாகவும், நந்தியினது அம்சமாகவும் விளங்கிய வசவேசர், அடியவர்கள் வேண்டிய பொருள்களைக் கொடுத்துத் தாய்போல் ஆதரித்து வந்தனர். அன்றியும், அடியார்கள் சிறப்போடு வந்தாலும், அருவருக்கத் தகுந்த கோலத்தோடு வந்தாலும், அவர்களுடைய சாதி பேதம் முதலியவற்றைக் கருதாமல், சிவனடியாரைச் சிவ பெருமானுகவே பாவித்தனர்.

பிரபுலிங்கலீலை.

பலரொடு வரினு மென்னும் படிதனி வரினு மிக்க
கலமொடு வரினு மேனி நலமற வரினுஞ் சீர்சால்
மலைமகள் கணவன் தொண்டர் வரவுகண் ணுறின் எதிர்ந்து
நிலமிசை வணங்கி யஞ்சி நின்றுநன் றுற்று நந்தி.

இவ்வாருய காலத்தில் அல்லமதேவரது மகிமைகளைக் கேள்வியுற்று, அவரது வரவை எதிர்பார்த்திருந்தார். அப்போது சொன்னலாபுரத்தில் கருமயோகம் புரிந்துகொண்டிருந்த சித்தராமையனுக்கு, ஞானயோக இலக்கணத்தை அல்லமதேவர் உபதேசித்து, அவ்விலக்கணத்திற்கு வசவண்ணர் என்னும் இலக்கியத்தை உதாரணமாகக் காட்டத்

திருவுள்ளங்கொண்டு சித்தராமையனும் தானுமாகக் கலி யாணபுரிக்குச்சென்று, வசவண்ணரது திருமாளிகைக் கெதிரே போனார்கள்.

அப்பொழுது அங்கிருந்த அப்பணன் என்னும் பெய ரையுடைய ஒரு பரிசுத்தன், இவர்களைக் கண்டு பூசை செய்துகொண்டிருக்கும் வசவண்ணரிடத்திற்போய் 'பரம சிவனே இரண்டு உருவங்கொண்டு வந்தாற்போல இரண்டு மகான்கள் நமது தலைவாயிலில் வந்து நிற்கிறார்கள்' என்று சொல்ல, வசவண்ணர் அவனை நோக்கி, 'கன்றுக்கிரங்கி வந்த தாய்ப்பசுவுக்கு ஒரு தடையுண்டோ? நீபோய் அவர் களை இங்கே அழைத்துவா' என்று கட்டளையிட, அவனும் அப்படியேபோய் அல்லமதேவரையும், சித்தராமையனையும் வணங்கி, 'ஐயன்மீர்! உங்கள் வரவை அடியேன் போய்ச் சொன்னமாத்திரத்தில், வசவண்ணர் மிகவும் களிப்படை ந்து, நான்செய்த பரசிவலிங்க பூசையின் பயன் இதுவாம்' என்று உங்களை அழைத்து வரும்படி அடியேனுக்கு கட் டளையிட்டார்; எழுந்தருளக்கடவீர்' என்று பிரார்த்திக்க, அல்லமதேவர் கோபிப்பவர்போல் வெளிக்குக் காட்டிப் புன்னகைசெய்து அப்பணனை நோக்கி, 'இராசரீகம் உடை யோரிடத்தில் ஐயமேற்று உண்பவர்களாகிய எங்களுக்கு ஒரு காரியமுமில்லை. நீபோ' என்றார். இந்தச் செய்தியை அப் பணன் வசவண்ணருக்குச் சொல்ல, அவர் மிகவும் மனம் வருந்தி, ஐயோ! தாய்ப்பசுவின் வருகையைக்கேட்ட கன்று தும்பறுத்து ஓடி யணைவதுபோல் நான் எழுந்து விரைந்தோடி அவர்களை அடையாதிருந்தேனே' என்று துக்கிக்கும்போது; மாச்சிதேவன் அருகேவந்து நின்று, 'ஏன் துக்கிக்கிறீர்? திருப்பாற் கடலிற் பிறந்த அமிர்தமா

னது கிடைத்தால் அதனை உண்ணாது சோம்பியிருப்பவர்க்குச் சமானமாய் இருக்கிறீரே' என்று சொல்லுதலும்; அந்தச் சொல்லானது தூண்டுகோல் போல் உதவ விரைவாய் எழுந்து மாச்சிதேவரை அடிவணங்கி, 'நான் பெரும் பிழை செய்தேன்' என்று சொல்லி அருந்தவத்தினரோடு கூடி அல்லமதேவருக்குச் சமீபத்தில் வந்து, ' அடியேனது குணம் பாவமேயாகி, யான் அந்தக் குணத்தினின்றும் மாறுபடாதிருக்கிறேன். அதுபோலவே, தேவரீரும் உமது குணமாகிய அருளில் நின்றும் மாறுபடாதிருத்தல் வேண்டும். புதல்வர் செய்த பிழையைப் பொறுக்காத தாய் உலகி லுண்டோ? என்று அல்லமதேவரது திருவடிமேல் வீழ்ந்து வணங்கினர்.

அவ்வாறே மாச்சிதேவரும் கின்னரப்பிரமன் என்போரும் அங்கிருந்த ஏனைய அடியார்களும் அல்லம தேவர் திருவடிகளில் விழுந்துவணங்கி, எங்களையெல்லாம் அடிமை கொளத் திருவுளமாயின் இந்த வசவண்ணர் செய்த பிழையைப் பொருத்தருளவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். அவர்களை அல்லமதேவர் நோக்கி, 'நீங்கள் பேசக் கற்றுக்கொண்டீர்களே யன்றி அவ்வாறு ஒழுகக்கற்றீர்களில்லை. இப்படி மனம் ஒருவகையாயும், வாக்கு ஒருவகையாயும், செயல் ஒருவகையாயும் இருக்கிற நும்மினும் கூத்தாடிகள் சிறந்தோராவர் என்று நிந்தித்து ஞானோபதேசம் செய்தனர்.

பிரபுலிங்கலீலை.

சொல்லிய சொற்கள் கற்றீர் சொற்றவந் நெறியி னிற்கு
நல்லிய வில்லை நும்பால் நவிறரு மாற்ற மொன்று
புல்லிய செயலொன் றாகப் பொருந்துநர் தம்மி லார்க்கும்
பல்லிய மொடுந டிக்கும் பாதரே பெரிய ராவர்.

ஆகையால் நினைத்தகாரியம் இனிது முடியும்பொருட்டு கடவுளை நோக்கி, பூசையாதி செபதபங்களை வழுவாது செய்துகொண்டிருப்ப, அவற்றின் முதிர்ச்சியினால், இஷ்ட பூர்த்தி செய்யக் கடவுளானவர் ஓர் அடியாரைப்போல் வருவரேயன்றி இடபவாகன ரூடராய் மான்மழுவோடும் வருவதில்லை. மாணிக்கவாசகர் முதலிய சகல பரிபக்குவர் களுக்கும் அவ்வாறே அருள் புரிந்திருக்கின்றனர், ஆதலால் சிவபூசையினும் அடியார் பூசையே சிறந்ததெனலாயிற்று.

திருவிளையாடற்புராணம்.

அதிக நல்லற நிற்பதென் றறிந்தனை யறத்துள்
அதிக மாஞ்சிவ புண்ணியஞ் சிவார்ச்சனை யவற்றுள்
அதிக மாஞ்சிவ பூசையுள் அடியவர் பூசை
அதிக மென்றறிந் தன்பரை அருச்சனை செய்வார்.

சாமியாருக்குக் கலியாணம்.

சந்தேகமுள்ளவர்களைப் போலீஸ் அதிகாரிகள், நீர் எந்தவூர்? எங்கே போகிறீர்? இங்கு வந்த காரணம் என்ன? உமது பெயர் யாது? என்று வினவுவதுபோல் அடியார் களை நோக்கி, சாமியாரே! நீர் என்ன குலம்? உமது பெயர் என்ன? உமக்கு விவாகமாகிவிட்டதா? குழந்தைகள் இருக் கிறதா? சகோதரர்கள் இருக்கின்றனரா? எதற்காகச் சாமியார் ஆனீர்? என்பது போன்ற அனுவசியமான கேள்விகளை, தமது மகளை விவாகம் செய்து கொடுக்கக் குலம்-கோத்திரம் விசாரிப்பதுபோல் சிலர் கேட்கின்றனர். அவர்கள் சல்லாபமாகப் பேசினால் குறிப்பறிந்து சந்தர்ப் பம் நோக்கி, மிருதுவான இனிய தொனியோடு, சுவாமிகள் திருநாமம் யாது? திருமேனி யாது? வசிக்குமிடம் யாது?

என்று அவசியமானால் கேட்கவேண்டும். அதற்கு அவர்கள் மனம் வருந்திப் பதிற் கூறினாலும், பதிலே கூறாதிருந்தாலும், கேள்விகளை நிறுத்திவிட்டு, இருவருக்கும் பயன் தரத்தக்க சம்பாஷணைகளையே பேசவேண்டும்

## குஞ்சுப் பாம்புக்கு நஞ்சில்லையா?

அடியோர்களைச் சாதியினாலும், தவம் முதலிய வற்றாலும் உயர்ந்தவர்-தாழ்ந்தவர், பெரியவர்-சிறியவர் என்று எண்ணிப், பெரியோர் என்று மதிக்கப்பெற்றவர்களைக் கண்டால் மட்டும் வணங்கியும், ஏனைய அடியார்களைச் சிறியோர் என்று எண்ணி வணங்காமலும் இருப்பது பெருந் தவறு, பெரிய சர்ப்பம், பெரிய தேள் தீண்டினால் மாத்திரம் விஷம் ஏற்படுமென்றும். சிறிய சர்ப்பம் சிறிய தேள் தீண்டினால் விஷம் ஏற்படாதென்றும் எண்ணலாமா? சைவ வேளாள குல திலகராகிய ஸ்ரீ திருநாவுக்கரசர் என்னும் அப்பர் சுவாமிகளும், பிராமணக் குலக் கொழுந்தாகிய ஸ்ரீ திருஞானசம்பந்தமூர்த்திகளும், ஒருவருக் கொருவர் உயர்வு-தாழ்வு என்பதின்றி ஒருவர் காலில் ஒருவர் விழுந்து வணங்கினர் என்பது வெளிப்படை.

### பிரபுலிங்கலீலை.

பெரியவர் சிறியவ ரென்னும் பெற்றிமை
யரவணி கடவுட னடியர் தம்முளே
தெரிபவ னெவனவன் சிறிய னேயென
விரிவுறு மறையெலாம் விளம்பு மென்பவே.

ஆவுரித் திடினுநீ றணியு மன்பனம்
* மாவுரித் தவனென வணங்கத் தக்கவன்

---

* மாவுரித்தவன்—யானையை உரித்த சிவபெருமான்.

பூவுரித் தவன்பதம் புனையப் போற்றுற
நாவுரித் தெனமறை நான்கு மோதுமால்.

## இரண்டாவது கடவுள்.

ஒரு அரசனால் அனுப்பிய இராசப் பிரதிநிதியானவர் குடிகளின் பொது நன்மைக்காக அவர்களிடம் நியாயமான வரி வசூலிக்க விரும்பி, அவரவர்கள் செல்வத்துக்குத் தக்க படி இன்னார் இவ்வளவு கொடுக்கவேண்டும், இன்னார் அவ்வளவு கொடுக்கவேண்டும் என்று விதித்தால், அவர் அபிப்பிராயத்திற்கும் அதிகமாகக் கொடுப்பவர்களை நன்கு மதித்து ஹானரபிள், ராவ்சாஹிப், கான்பஹதூர், திவான்பஹதூர் போன்ற கௌரவ பட்டம் முதலியன கொடுப்பார்கள். அவர் விரும்பிய தொகையையே கொடுக்கப் பிரியமில்லாத வர்கள், அந்த வரி முழுவதையும் கொடுக்கமுடியாது; சில பாகத்தையே கொடுக்க முடியுமென்று தயாவிஷயமாய்க் கேட்டுக் கொள்ளலாமேயன்றி, எவ்வளவு பெரிய குடும்பத்தினராயிருந்தாலும் அதிகாரமாய்ச் சொல்ல முடியாது. சொன்னால் இராசப் பிரதிநிதியினுடைய கோபத்திற்கு ஆளாவதுடன், அரசருடைய கோபத்திற்கும் ஆளாகித் தண்டனை விதிக்கப் பெறுவார்கள்.

பிரயோசனமில்லாத சமுத்திர சலத்தை மேகம் எடுத்துப்போய், மழையாகப் பெய்து உபயோகப்படுத்துவது போல், பிறர்க்கு இட்டுண்டு வாழாத கருமிகள், பூதம் போல் பணத்தையே தெய்வமென்று காத்துக்கொண்டிருந்து, நன்னெறி இன்னதென்று கனவிலும் கேட்டுணராமல் கெட்டுப்போவதை யுத்தேசித்து அடியார்கள் பச்சாதாபப்பட்டு, அந்தக் கன்மிகள் ஈடேறும் வண்ணம் அவர்

களிடத்தில் ஏதாவது ஒரு பொருளைக் கேட்டால், அவர்கள் விரும்பியதையாவது, அதற்கு அதிகமாயாவது கொடுத்து உதவிசெய்யவேண்டும். அப்படி உதவியவர்களைச் சன்மார்க்கத்திற்கு ஏதுவாகிய அநேக புண்ணியார்த்தங்களைக் கொடுத்து மேன்மேலும் நன்மையடையும்படி விரும்புவார்கள். அவர்கள் கேட்ட பொருளைக் கொடுக்க இயல்பில்லாதவர்கள் இனிய வார்த்தையாவது புகன்று வணங்கித் தன்னால் இயன்றதைக்கொடுத்து உபசரிக்க வேண்டுமேயல்லாமல், ஒன்றுமே கிடையாதென்று வன்சொல் ஒருபோதும் சொல்லக்கூடாது. அவ்விதம் சொன்னால் கடவுளது பிரதிநிதியாகிய அடியார்களுடைய கோபத்திற்காளாவதுடன், சருவ வல்லமையுள்ள முழு முதற்கடவுளாகிய ஏக சக்காதிபதியினுடைய கோபத்துக்கும் ஆளாகி, நிரைய வாழ்வு என்னும் தண்டனை விதிக்கப்பட்டு வருந்துவார்கள்.

ஆதலால். அடியார்களைக் கடவுளுக்கு இரண்டாவது கடவுளாக எண்ணி, அவர்கள் விரும்பியதைக் கொடுத்து, உபசரித்து வணங்கி வந்தால் மேன்மேலும் நன்மையுண்டாவது திண்ணம். இதுவே இல்லற வாழ்க்கையுடையவர் கடமை.

திருமந்திரம்.

படமாடுங் கோயிற் பகவற்கொன் றீயின்
நடமாடுங் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடுங் கோயில் நம்பர்க்கொன் றீயின்
படமாடுங் கோயிற் பகவற்க தாமே.

திலமத் தனைபொன் சிவஞானிக் கீந்தால்
பலமுத்தி சித்தி பரபோக முந்தரு
நிலமத் தனைபொன்னை நின்மூடர்க் கீந்தால்
பலமுற் றேபர போகமுங் குன்றுமே.

## விருத்தாசல புராணம்.

மாயனே தொண்டர்க் கீந்த வளமெலா நமக்கே யாகு
மேயவ ரிடத்தே யாமும் விருப்ப மாயிருப்ப தென்றார்
ஆயனும் பூசை பண்ணி அடியிணை தலைமேல் வைத்து
நேயமாமுண்மை கேட்டு நிருத்தமு மன்றிற் கண்டான்.

## சிவஞானசித்தியார்.

சிவஞானச் செயலுடையோர் கையிற் றானந்
    திலமளவே செய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து
பவமாயக் கடலிலழுந் தாதவகை யெடுத்துப்
    பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை யறுத்துத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
    சரியைகிரி யாயோகந் தன்னிலுஞ்சா ராமே
சுவமாருந் தத்துவஞா னத்தை நல்கி
    நாதனடிக் கமலங்கள் நணுகுவிக்குந் தானே.

## விவேகசிந்தாமணி.

நம்ப னடியவர்க்கு நல்காத் திரவியங்கள்
பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்—வம்புக்காங்
கொள்ளைக்காங் கள்ளுக்காங் கோவுக்காஞ் சாவுக்காங்
கள்ளர்க்காந் தீக்காகுங் காண்.

ஒரு குடியானவன் ஒரு அபாயகாத்தை யுத்தேசித்து பாதுகாப்பு இலாக்காவின் பிரதம உத்தியோகத்தரு (Police Superintendent) க்கு மனு செய்துகொண்டால், அவர் வருவதற்கு பதிலாக அவ்வூர் சப்இன்ஸ்பெக்டருக்குக் கட்டளை யனுப்பி விசாரிக்கச் செய்வார். அப்போது பிரதம உத்தியோகத்தர் வாாமல் இந்த இன்ஸ்பெக்டரை ஏன் அனுப்பினர் என்று அவமதித்தால் அந்தக்

குடியானவன் கதி எவ்வா றாகும்; அதோகதியாகுமல்லவா? அதுபோல், ஒரு பக்குவியானவன் தீனி-யோனி-திரவியம் என்னும் வீணாசை விட்டு ஞானாசைப்பட்டு நிட்காமியமாகக் கடவுளைக் குறித்து செபதபஞ் செய்வானாயின், அந்தத் தவத்திற்காக இரங்கி அவனுக்கு ஆன்மலாபம் கிடைக்கும் பொருட்டுத் தனது அடியாரை யனுப்பிவைப்பார், அந்த உண்மையை யறியாமல், வந்த அடியாரைக் கவனிக்கும் ஆற்றலின்றி சிலர் நிந்தித்துக் கேட்டுப் போகின்றனர்,

## நபிகணாயகமும் வேடிக்கைவினையும்.

நபிகணாயகம் முகம்மது (சல்) அவர்கள் தீனுல் இஸ்லாம் மார்க்கத்தைப் புதிதாக நிலைநிறுத்துகின்ற காலத்தில், காபிரீன்களெல்லாம் நாயகம் அவர்களைப் பகைத்தார்கள். ஹாஷீம் மக்களில் அக்கம் என்னும் ஒருவன், நபி நாயகத்தின் முன் வந்து, கண்களிலுள்ள கறுப்புகள் ஒரு புறம் ஒதுங்கவும், உதடுகள் கடைவாயின்கண் பிதுங்கவும், கண்களைச் சிமிட்டி முகத்தைத் திருகித்திருகிக், கோணக் கோண வலித்துப் பழித்தான். ஏன் பழிக்கிறாய்? என்று பலபேர்கள் சொல்லி விலக்கியும் கேளாமல், நாயகம் அவர்கள் முகத்துக்குச் சமீபமாகச் சென்று கோணக்கோண வலித்துப்பழித்தான், பெருமான் அவர்கள் அவனை நோக்கி, "நீ இதனினும் எண்மடங்கு வலித்துத் திரியக்கடவாய்.!" என்று சொன்னார்கள். அந்தசாபம் பலித்துவிட்டதனால் அவன் உண்மையாகவே வலிக்கப்பெற்று, புத்திதடுமாறி, தன் பந்துக்கள். தாய், தகப்பன், சகோதரி, மனைவி, மக்கள் முதலியவர்களிடத்திலும், அவன் குலதெய்வங்களிடத்திலும் அதிகமாக வலித்துக்கொண்டு, தினந் தினம் நோய் அதிகப்படும்படி வருந்தி அலைந்தான், அதைக் கண்டு

ஆயுள் பரிட்சையும்-ஆன்ம இலாபமும்.

## சாயா (புருட) தரிசனம்.



அப்பியாசம் (2)

293-ம் பக்கம் பார்க்க. PICTURE: OF K. G. P. 1927.

அவன் பந்துமித்திரர்களெல்லாம் பயந்து அதிக துக்கமடைந்தார்கள்.

துவாரகையிலிருந்த ஸ்ரீ கிருட்டிணமூர்த்தியின் பேரன்களும், ஏனைய சிறுவர்களும் சேர்ந்து ஒன்று விளையாட்டுக்காக ஒரு வாலிபனுக்கு ஆறுமாதக் கர்ப்பிணி போல் வேடம் போட்டார்கள். சில நேரத்துக்கெல்லாம் நாரதமகரிஷி அங்குவரவே, அவரைக்கண்டு எல்லோரும் பரிகாசமாக 'சுவாமி' இதோ இருக்கும் பெண் எப்போது பிரசவிப்பாள்? பெண்பிறக்குமா? பிள்ளைபிறக்குமா? என்றனர். நாரதர் அந்தப் பையன்களுடைய அகந்தையை அடக்கவெண்ணி கோபம் கொண்டவராய், ஏ! துஷ்டர்களே! இப்பெண் இன்னும் நான்கு மாதங்களுக்குள் ஒரு உலக்கையைப்பெறுவாள்? அதனால் உங்கள் குலம் அழியும்! என்று கூறி மறைந்தார். அவர் போன பிறகு பையன்கள் பயந்து பெண்வேடத்தைக் கலைக்க எத்தனித்தனர்; பயன்படவில்லை. பொய் மெய்யாயிற்று. தட்சணமே கண்ணபிரானிடம் வந்து நடந்த சங்கதியைத் தெரிவித்தார்கள். அவர் மூடர்களே! 'மகரிஷியின் சாபம் பலித்தே தீரும்' என்று வாளாவிருந்துவிட்டார். இருடியின் வார்த்தைப்படியே உலக்கை பிறந்து யாதவர்களாகிய அவர்கள் குலத்தை யழித்தது என்று கூறப்பெற்றிருக்கிறது. ஆதலின் பெரியோர்களைப் பரிகாசம் செய்யலாகாது.

### எவர் மனதையும் புண்படுத்தலாகாது.

பாண்டவர்களை மாயச்சூதில் வென்று, காட்டுக்குத் துரத்திவிட்டு மிகுந்த களிப்புடன் துரியோதனதியர் அரசாண்டுகொண்டிருந்த காலத்தில் அவர்கள் சபைக்கு

மைத்திரேயர் என்ற ஒரு மகரிஷி வந்தார். பாண்டவர்களுக்கு நேர்ந்த கஷ்டத்தை அவர் கேள்வியுற்று, மிகுந்த துக்கமடைந்து துரியோதனுதியர் செய்தது அநியாயம் என்றும், பாண்டவர்கள் கோபாவேசத்தைத் தாங்குவது அசாத்தியமான காரியமென்றும், அவர்களுடன் சீக்கிரத்தில் சமாதானம் செய்துகொள்ள வேண்டு மென்றும் வெகுவாகப் புத்திமதி கூறினர். அப்பொழுது துரியோதனன், அவர் சொல்லை நியாயமென்று கொள்ளாமலிருந்ததோடு, தனது இடது தொடையை கையால் தட்டிக்கொண்டு வேறு விடயத்தில் கவனம் செலுத்தினவனுய், ரிஷியின் சொல்லை மதிக்கவில்லை யென்பதையும் குறிப்பால் உணர்த்தினன். மைத்திரேயர் தமது நல்ல வாக்கியங்கள் எல்லாம் வீணனமைகண்டு, மனம் நொந்து துரியோதனனை நோக்கி, "நான் சொல்லும் உறுதி வார்த்தைகளை தொடைதட்டிக் கொண்டு அலட்சியம் செய்ததற்காக, நீ அந்தத் தொடையிலேயே அடிபட்டு இறக்கக் கடவாய்" என்று சபித்தார். அவ்வாறே துரியோதனன் தனது இடது தொடையில் வீமனுல் அடிபட்டிறந்தான் என்று பாரதங் கூறுகிறது.

இம்மாதிரியே, இராமாயணத்திலும் நல்லவர் மனதைப் புண்படுத்தியதால், இராவணனுக்கும் ஒரு சாபம் சம்பவித்தது. அதாவது முன்பு இராவணன் திக்குவிசயத்திற்குப் புறப்பட்டு, அரசர்களையெல்லாம் வலியச் சண்டைக்கு இழுத்து, தன் வரப்பிரசாதத்தின் பலத்தால் அவர்களை முறியடித்துக்கொண்டு வந்தகாலத்தில், அயோத்திமாநகரம் வந்து, அங்கு அரசாண்டுகொண்டிருந்த அனரண்ய மகாராசனைச் சண்டைக்கு அழைத்தான். அவர் தமது சேனைகளோடு வெகு உற்சாகமாகச் சண்டைசெய்தார்; முடிவில் வரத்தின்பலம் மிகுந்த இராவணனுல் அடிக்கப்

பட்டு, யுத்தகளத்தில் விழும்படி நேர்ந்தது. அத்தருணத்திலும் அந்தக்கொடிய இராவணன் இறக்கும் அரசனைப் பார்த்து, பரிகாச வார்த்தைகளால் வெகுவாகப் புண்படுத்தினன். மஹா தருமாத்மாவான அனரண்யர் மனம் நொந்து, இராவணனைநோக்கி, "என்குலத்தில் வரும் அரசனாலே நீ யுத்தகளத்தில் உயிர் நீங்கி விழக்கடவாய்" என்று சபித்தார். அச்சாபம் பிற்காலத்தில் அயோத்தி அரசரான ஸ்ரீ இராமபிரானால் இராவணன் கொல்லப்பட்டது பிரசித்தமானது (இராமாயணம்.)

குறள்.

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

## ஆரிபீன்கள் சரித்திரம்.

ஆரிபீன்களென்னும் மெய்ஞ்ஞானிகள் விசாரணையிலும், அநுபவத்திலும், அட்டமாசித்து முதலானவைகளிலும் சிறந்து விளங்குகின்றார்கள். அவர்களறியாதவழியும், துறையும், நீதியும், நெறியும் வேறே இருப்பதாகத் தெரியவில்லை. அங்ஙனமிருப்ப, அவர்கள் பேசும் மஹா வாக்கியங்களோ சாமானியக் கல்வி யறிவுடையவர்கள் மனோவாக்குகளுக் கெட்டாமலிருக்கிறது. குர்ஆனிலும், ஹதீதிலும் வெளிப்படையாக விளக்கிக்காட்டாத அநேக நீதி நெறிகளை அவர்கள் அனுபவித்து வெளிப்படுத்துங் காலத்தில், சூஃபானியர்கள் அவசரப்பட்டு முன் பின் யோசிக்காமல், இஃதென்ன இப்படிச் சொல்லுகிறார்! அஃதென்ன அப்படிச் சொல்லுகிறார்! என்று தட்டுக் கெட்டு தடுமாறி உளறுகிறார்கள்.

அபுல் அப்பா சிபுனு சுறைஜ் (*றஹ்) அவர்கள் அறிவிலும், விசாரணையிலும் மஹா சிறந்தவர்களா யிருந்தும், ஆரிபீன்களைப்பற்றி துவேஷம் பாராட்டி யிருந்திருக்கிறார்கள். அவர்கள் அபுல்காசிம் ஜுனைது ($றலி) அவர்களுடைய சபையில் மஹ்றிபா சம்பந்தமான சில வார்த்தைகளைக் கேட்டபின்னரே சமாசமடைந்தார்கள்.

ஷெய்குல் இஸ்லாம் மஸ்துத்தீன் பைரோசா பாதீ (றஹ்) அவர்கள் கூறுவதாவது:—நபிமார்கள் காரணிகங்களின் பணாகிய கராமாத்து என்னும் அற்புதங்களை ஆண்டவன் அவுலியாக்களுக்குக் கொடுத்திருக்கிற படியால் மஹா பாரவான்களான உலமாக்களாலும் விளங்கிக்கொள்ள முடியாத நூதனமான வாக்கியங்களை அவர்கள் மூலமாய் வெளிப்படுத்துவான் என்பதே.

ஷெய்கு முஹியித்தீ னிபுனு அறபி (றலி) அவர்கள் புதூஹாத்தில் மக்கிய்யா என்னுங் கிதாபில் 54-வது பாடத்தில் கூறியிருப்பதாவது:—ஆரிபீன்கள் சகல ஞானவழிகளையும் நன்குணர்ந்தும், அவற்றை பகிரங்கமாகப் பேசாமல் இஸ்திலாஹ் ஏற்படுத்தி சுட்டுவாசகம், நொடி முதலிய பாவனைகளால் பேசுகிறார்கள். அதிற் பழக்கமில்லாத மூடர்கள் அறியாத்தனமாக அதை வேறு அருத்தம் பண்ணிக் கொண்டு அவர்களை இன்காறு செய்கிறார்கள் என்பதே.

(அவுலியாக்களுடைய தறீக்கில் விசுவாசமுள்ள சாமானிய மனிதனும் அவர்களுடன் பழகி தேர்ச்சிபெற்று எவ்விதமாக நாம் இந்தப் பெற்றுக்கொண்டோம்" என்று ஆச்சரியமடைகிறன். விசுவாசமில்லாதவனோ நன்மை பெறுவதை இழந்துபோனது மன்றி தின்னை முட்டை முட்டையாகக் கட்டுகிறன்.)

---

(*றஹ்) றஹ்மதுல்லா. ($றலி) றலியல்லாகு அன்ஹு.

அஹ்மது இபுனு சுறைஜ் (றஹ்) அவர்கள் கல்வி, கேள்வி முதலானவைகளில் மஹா பாண்டித்துவ முடைய வர்களா யிருந்தும், ஒரு நாள் ஜுனைது (றலி) அவர்களு டைய மஜ்லிசில் ஹாஸிருயிருந்து போகும்போது அவர் களுடைய வார்த்தையை விளங்கினீர்களா? என்று ஒருவர் கேட்டதற்கு, அவர்கள் இன்னகாரியம் பேசுகிறார்களென் பதே எனக்குத் தெரியவில்லை. ஆயினும் அந்தரங்கமான அவர்கள் வார்த்தைக்கு வணக்கமாக நான் தலைசாய்க்கும் படி என் கல்பில் (இருதயத்தில்) காண்கிறேன் என்றார்கள்.

ஆரிபீன்கள் லாஹிறுடைய உலமாக்களிடத்தில் அறி வைக் கற்கவில்லை யென்றும், ஷரீ அத்துடைய கல்வியைக் கற்றறியாத ஆமிகளென்றும் முன்கிரீன்களாகிய பகைவர் கள் தவறான எண்ணங்கொள்வது பல விரோதங்கட்கு மூலகாரணமாக இருக்கிறது.

ஒரு உஸ்தாதிடத்திலும் படிக்காமல் மெய்ஞ்ஞானக் கல்விகள் இவருக்கு எப்படி வந்தது என்று சிலர் எண்ணு கிறார்கள். அறிவென்பது படிக்கிறதினால் மட்டும் உண்டா கிறதென்று நினைக்கிறார்களே யன்றி, ஆண்டவனுடைய நன்கொடையாகக் கிடைத்திருக்குமென்று எண்ணுகிறார் களில்லை. ஆண்டவன் தன்னை நாடிவந்தவர்களுக்குத் திரு வில்லாமல் தானே படித்துக் கொடுத்து, விலாயத்தையும் கொடுக்கிறான் என்பது ஆராயத்தக்கது.

நமது நாயகம் எவ்வுயிர்க்கும் தாயகம் காத்திமுல்லம் பியா, செய்யிதுல் ஹறமைன், ஷபீவுல் முதுனபீன், ஹபீ புறப்பில் ஆலமீன், முஹம்மது (சல்) அவர்கள் சுமார் 39வது வயது வரையில் ஒரு உஸ்தாதிடத்தில் ஒன்றைப் படித்த

வர்களுமில்லை; கேட்டவர்களுமில்லை. ஆகையால் அவர்களுக்கு உம்மி என்றே ஒரு பெயரும் வந்திருக்கிறது. அத்தகையோர்கள், ஹிறுமலையில் இக்றவ் பிஸ்மிறப்பிக் கல்லதீ என்னும் சூறத்தை மாலம்யஃலம் வரையில் நஃபு என்னும் இலக்கண வழுவின்றி; சீரும், தளையும், எதுகையும், மோனையும், தொனி முதலானவைகளும் குறையாமல் எப்படி ஓதினார்கள் என்பதை நமது வேதாந்த பாஸ்கரன் சீடரியலில் விளக்கமாகக் காணலாம்.

எக்காலத்திலும், எத்தகைய கல்விப் பாண்டித்துவ முடையவர்களாலும், எத்தகைய மெய்ஞ்ஞானிகளாலும், (கடவுளாலும்) மாற்றுவதற்கு இடந்தராத புறுக்கானுல் அலீம் என்னும் குர்ஆன் ஷரீபானது நபிகள் பெருமான் அவர்களுடைய திருநாவிலிருந்து உதயமானது என்பதை கல்விமான்கள் யாவரும் உணர்வார்கள். இதுபற்றியே உமறுப்புலவரவர்க ளியற்றிய சீறுப்புராணத்தில்.

"விதுமாற ஒளிவான வதனுதி நபிநாவில்
விளைவான திருவேதமே"

என்று கூறியிருக்கிறது. இதுபோலவே கௌதுநாயகம் முதலான எண்ணிறந்த மகான்களும் சிறந்திருந்ததாகத் தெரிகிறது.

குர்-ஆனில், அல்லமல் இன்சான மாலம் யஃலம்= மனிதனுக்கு அவனறியாத அறிவைப்படித்துக்கொடுத்தோ மென்றும், வ அல்லம்னாஹு மின்லதுன்னா இல்மா= நம் வசத்திலிருந்து நாம் அவருக்கு அறிவைப்படித்துக் கொடுத்தோம் என்றும், யூத்தில் ஹிக்மத மன்யஷாவு=

நாடின பேர்கட்கு ஹிக்மத்தென்னும் அறிவைக் கொடுப்போமென்றும் வந்திருக்கிறது. இவ்வுண்மையை அறிந்தோ, அறியாமலோ தூலசம்பந்தமான உணர்வை யுடையவர்கள், சூக்கும உணர்வுடையவர்களை நன்கு கல்லாதவர்கள் என்று நிந்திப்பது விந்தையேயாம். நஃபு என்னும் இலக்கணப் படிப்புக்கும், அருள் என்னும் ஆண்டவன் படிப்புக்கும் அதிக தாரதம்மிய மிருக்கிறது. இதுபற்றியே செய்யிதி அபூயசீதில் பிஸ்தாமி (றலி) அவர்கள் அக்காலத்திலுள்ள கல்விமான்களை நோக்கி நீங்கள் உங்களுடைய அறிவுகளை மய்யித் என்னும் இறந்தவர்களிலிருந்து கிரகித்தீர்கள். நாங்களோ ஒருகாலத்திலும் பிறப்பு-இறப்பில்லாத ஹய்யுன் என்னும் சீவனுள்ளவனிலிருந்து கிரகித்தோம் என்றார்கள்.

மெய்ஞ்ஞானப் படிப்பு (இல்மு) க்கு ஆரிபீன்களுடைய இருதயமென்னும் கல்லைத்தவிர வேறுதானங்களில்லை யென்றும், அஸ்றாறு என்னும் மஃறிபா இல்முகளை வல்லோர்க்கே யன்றி எல்லோர்க்கும் தொகுக்கவில்லை என்றும் சுருதிகள் கூறுகின்றன. ஆகையால் மெய்ஞ்ஞான இல்முகளை விளங்கத் தகுதி யில்லாதவன் அந்நூற்களை நோட்டமிட வேண்டாமென்று ஆரிபீன்கள் தடுத்துமிருக்கிறார்கள். இந்தத் திருட்டாந்த-தாட்டாந்தங்களை யுணர்ந்தபின்னரும், ஆரிபீன்களைப்பற்றி நிந்தை கூறுவது வியப்பாகத்தானிருக்கிறது. இவர்கள் மூடர்களில் முதல் தாம்பூலம் பெற்றவர்களன்றோ?

ஜலாலு ஸுயூத்தி (றஹ்) அவர்கள் சொல்வதாவது:—திரு தகுதிவானுக்கு கீழ் மக்களிலிருந்து ஒரு பகைவன் உண்டானலன்றி அவர்கள் சிறப்படைகிறதில்லை. ஆனல்

பெரியோர்கள் பல விடங்களிலும் சோதிக்கப்பட்டவர்களாகவே யிருப்பார்கள். நபி ஆதம் அலைகிஸ்ஸலாம் அவர்கட்கு இபுலீசு பகையன். நூகு அலைகிஸ்ஸலாம் அவர்களுக்கு ஹாமு முதலானவர்கள் பகையர். தாவூது அலைகிஸ்ஸலாம் அவர்களுக்கு ஜாலூத்து முதலானவர்கள் பகையர். சுலைமான் அலைஹிஸ்ஸலாமவர்கட்கு சக்று பகையன். ஈசா அலைஹிஸ்ஸலாமவர்களுக்கு முந்தின ஹயாத்தில் புக்து நசறு பகையன்; பிந்தின ஹயாத்தில் தஜ்ஜால் பகையனாய் வருவான். இப்றாஹீம் அலைகிஸ்ஸலாமவர்களுக்கு நம்றூது பகையன. மூசா அலைகிஸ்ஸலாமவர்களுக்கு பிரு அவுன் பகையன். இப்படிப் போலவே முஹம்மது றசூல் அலைஹிவசல்லமவர்களுக்கு ஒலீது, உத்துபா, உமாறு, உக்குபா, உமையா, சைபா, அபூஜஹில் முதலானவர்கள் பகைஞர்.

### கண்ணடியும்-கழுதையும்.

இப்பகைவர்கள் ஒருகாலத்தில் நாயகமவர்களை அவமானப் படுத்தத் துணிந்து, அவர்கள் ஒரு சபையில் பிரசங்கம் செய்து கொண்டிருக்கும் போது, உம்மைப் பார்த்தால் ... ... ... ப்போல் தெரிகிறது. நபி என்றும், இறசூலென்றும் சனங்கள் சொல்வது பெரும் பிசகு என்றார்கள். அதற்கு நாயகமவர்கள் புன்முறுவலுடன் நீங்கள் உண்மையைச் சொன்னீர்கள்! உண்மையைச் சொன்னீர்கள்!! என்று கூறினார்கள். அதனால் மிக்க வருத்தத்தோடிருந்த நாலியார்களும், அஸ்ஹாபிமார்களும் பிரசங்கமுடிந்தவுடன் நாயகமவர்களை நோக்கி, அச்சமும், விசனமு முடையவர்களாய் நாயகமே! அபூஜகில் முதலானவர்கள் சொன்ன கொடூர நிந்தனைக்கு அவர்களை

வெட்டி அதம் செய்யும்படி எங்களை ஏவவேண்டியதிருக்க உண்மையைச் சொன்னீர்களென்று தேவரீர் திருவாய் மலர்ந்த கருத்தின்னதென்றறியாது அழுங்குகின்றோம் என்று விண்ணப்பித்தனர்.

அதற்கு நாயகமவர்கள் கூறியதாவது:— கண்ணாடியைக் கழுதை நோக்கினால் கழுதை ரூபமன்றி வேறுரூபம் தோன்றுமா? தோன்றாது. அதுபோல், அவர்கள் என்னைப் பார்த்து நிந்தித்ததற்கு உண்மையைச் சொன்னீர்களென்று சொன்னேன் என்று திருவாய் மலர்ந்தார்களாம்.

குர்-ஆனில், வஜஅல்னா பஃலக்கும் லிபஃலின் பித்னதன் அதஸ்பிறூன்—உங்களில் சிலரை சிலருக்குச் சோதிப்பாக ஆக்கினோம். நீங்கள் பொறுமை செய்யுங்களென்று கூறப்பெற்றிருக்கிறது. ஜலாலுத்தீனுஸ் ஸுயூத்தி (றஹ்) அவர்கள், கூறுவதாவது:—ஆண்டவன் எனக்கு ஒரு பகைவனை ஏற்படுத்தி, அவன் என்னைத் துன்பஞ் செய்யவும், அவமானப்படுத்தவும் நியமித்ததை எனக்குச் செய்த பேருபகாரமென்று நினைத்தேன். அப்படி நினைத்ததனால் எனக்கு நபிமார்கள், ஒலிமார்களுடைய தொடர்ச்சி யுண்டாயிற்று என்பதே.

தொழுகையும்-சூடானவெந்நீரும்.

இபுனு உமறு (றலி) அவர்களை எங்கே கண்டாலும் வசைபேசுகிற ஒரு பகையனிருந்தான். அப்துல்லா இபுனு சுபைறு (றலி) அவர்களை தொழுகையில் முகத்தாட்சணியக்காரனென்றும், முனாபிக்கென்றும் சொல்லி அவர்கள் தொழுது கொண்டிருக்கும்போது, சூடுள்ள வெந்நீரைக்

கொதிக்கக் கொதிக்க அவர்கள் மீதூற்றி முகத்தையும், தலையையும் புண்ணாக்கினார்கள். அவர்களதை யறியவில்லை. தொழுது சலாம் வாங்கினபிறகு எனக்கு நடந்த கருமமென்ன வென்று, அங்கிருந்தவர்களை கேட்டுணர்ந்து உடனே "ஹஸ்பு னல்லாஹூ வனிஃமல் வகீல்=ஆண்டவன் எனக்குப் போதும், அவனே பாரஞ்சாட்டப் பட்டவனில் நல்லவன்" என்று சொல்லிக்கொண்டு அநேக நாள் தலையிலும், முகத்திலுமுள்ள வருத்தத்தை யனுபவித்தார்கள்.

(கொதிக்கிற வெந்நீரை தன் முகத்தில் ஊற்றிப் புண்ணாக்கிய சமயத்திலும், பிரக்ஞையற்று தன்னை மறந்திருந்ததானது அசம்பிரக்ஞாத சமாதியின் அறிகுறியாம். இந்தச் சமாதியிலிருந்து பரப்பிரம்மத்துடன் இரண்டறக் கலந்து, பிரம்மஞான வீட்டப் பதவிலிருந்த சீவன் முத்தரும், "நலியல்லாத அன்துமா" என்னும் அரிய பட்டம் சூட்டப்பெற்றவர்களுமாகிய அப்துல்லா ஹிப்னு சுபைறு நலியல்லாத அன்துமா அவர்களையே முஷ்ரிக்கென்று கூறி மிக்க கொடுமை செய்திருக்கிறார்களென்றால், சாதாரண ஆரிபீன்களை இந்தச் சண்டாளர்கள்—அல்லது இவர்களைப் போன்ற சில ஞான சூனியர்கள் என்ன பாடு படுத்துவார்கள்! என்பதை நாம் சொல்லவும் வேண்டுமா?) ஆ! என்ன பரிதாபம்! என்ன மதியீனம்!!

இப்னு அப்பாசு (றலி) அவர்களை நாபிவு என்பவர் பல தொந்தரவுகள் செய்து அறிவில்லாமல் குர்-ஆனுக்கு தப்சீர் செய்ததாகச் சொல்லி நிந்தித்தார்.

சஃது (றலி) அவர்கள் சொர்க்கத்தைக் கொண்டு நல்வரவு சொல்லப்பட்ட பத்துப்பேர்களி லொருவராயிருந்தும், கூபாவிலுள்ள சில மடையர்கள் கோவினை செய்து அவர்களுக்கு தொழுகையின் வாலாறுகள் நன்றாகத் தெரி

யவில்லை யென்று உமறு (றலி) அவர்களிடத்தில் முறை யிட்டார்கள். அன்றியும் முஜ்தஹிதீன்களான இமாம்கள் பட்ட கஷ்ட நஷ்டங்கள் இவ்வுலகமறியாததல்ல.

இமாம் அபூ ஹனீபா (றலி) அவர்கள் கலீபா அரசர்களால் இம்சை செய்யப்பட்டார்கள். இமாம் மாலிகீ (றலி) அவர்கள் 25 வருடகாலம் ஜும்ஆவுக்கும், ஜமா அத்துக்கும் போகாமல் மறைந்திருந்தார்கள். இமாம் ஷாபியீ (றலி) அவர்கள் மிசிரியர். இருக்கியர்களால் பல அவத்தையடைந்தார்கள். இமாம் ஹன்பலீ (றலி) அவர்களை கையப்புடைத்து சிறைச்சாலையி லடைத்தார்கள். இமாம் புகாரீ (றலி) அவர்களை புகாராவை விட்டு கர்தன்கு என்னும் ஊருக்குத் துரத்தப்பட்டது. நபிநாயகமவர்களை காபிர்கள் மக்கத்தைவிட்டு மதீனத்துக்குத் துரத்தினார்கள். அபூ யசீதுல் பிஸ்தாமி (றலி) அவர்களை பிஸ்தாமிலுள்ள சில உலமாக்களால் 7 தடவைகள் ஊரைவிட்டு நீக்கப்பட்டது. துன்னூனுல்மிஸ்றி (றலி) அவர்களை விலங்கு மாட்டி மிசிறிலிருந்து பாக்தாதுக்கு அனுப்பப்பட்டது. மிசிறியர் அவர்களை சிந்திக்கென்னும் அக்குபுறுடையவரென்று சாட்சி சொன்னார்கள். சம்னூன் (றலி) அவர்கள் பெரும்பாவம் செய்கிறதாய் அவதூறு சொல்லி, ஒரு வேசைக்கு கையடை கொடுத்து, அவர்களும், அவர்களுடைய முறீதுகளும் அவளிடத்தில் கெட்டசெயல் செய்ததாக சொல்லச்சொன்னார்கள். சஹ்லிப்னு அப்துல்லா ஹித்துஸ்தரீ (றலி) அவர்கள் தகுதியிலும், மேன்மையிலும் பிரபலமாயிருந்தும், சில குற்றங் குறைகளைக் கூறி காபிரென்று சொல்லி, அவர்களை ஊரைவிட்டு பஜராவுக்குத் துரத்தப்பட்டது. அதனால் மரணபரியந்தம் பசராவிலேயே யிருந்தார்கள்.

அபூ சயீதுல் கர்ருசு (றலி) அவர்கள் பெரும்பாவங்கள் செய்ததாக அவதூறுசொல்லி, அவர்களியற்றிய நூற்களில் காணப்பெற்ற சில வாக்கியங்களுக்கு தப்பு அருத்தம் பண்ணி, காபிறென்று உலமாக்கள் பத்வா செய்தார்கள். ஜுனைது (றலி) அவர்கள் தௌகீதுடைய இல்மை பலபேர் முன்னிலையில் பிரசங்கஞ்செய்த காரணத்தால் காபிறென்று சொல்லப்பட்டது. பின்னர் மரணபரியந்தம் வீட்டிலிருந்தே பேசினார்கள். இவர்கள் மீதும், இருக்கிலுள்ள அநேக ஷெய்குமார்கள் மீதும் இபுனுதானியால் என்பவர் பெரிய பகைவராகவும், குற்றமே கூறுகிறவராகவும் இருந்தார். அவர்களுடைய குணத்தை யாரேனும் எடுத்துப் பேசினால் நிறம் பேதித்து, புலிபோல் சீறி விழுவார். முஹம்மது இபுனு பலுலுல் பல்கி (றலி) யவர்கள் சிபாத்துடைய ஹதீதுகளை பகிரங்கமாய் பொருள் சொன்னதனால் பல்கு இராச்சியத்தை விட்டுத் துரத்தினார்கள். அப்போது நான் போகமாட்டேன், போகவேண்டுமானால் என்னுடைய கழுத்தில் கயிற்றைக்கட்டி, கடைவீதிதோறும் கொண்டுபோய், இவன் பிதுஅத் என்னும் நூதன கொள்கைக்காரன்; இவனை ஊரைவிட்டுத் துரத்துகிறோமென்று அறிவிக்க வேண்டுமென்றார்கள். அவ்வாறிழுத்துக்கொண்டு போகும்போது, பல்கு தேசத்தார்களே! ஆண்டவன் உங்களுடைய கல்புகளிலிருந்து மஃறிபாவை நீக்கிவிட்டான் என்று கூறி சாபம் (பத்துவா) செய்தார்கள். அந்த பத்துவாவுக்கு பின்னர் (மற்ற தேசங்களை விட) சூபியாக்கள் மிகுந்த அந்த பல்கு தேசத்தில் ஒரு ஆரிபீனுவது ஏற்படவில்லை.

இமாம்யூசுபு (றஹ்) அவர்களையும் தேசப்பிரஷ்டம் செய்யப்பெற்றது. அவர்களுக்காக றை என்னும் பட்டி

னத்திலுள்ள துறவிகளும், ஞானிகளும் மிக்க உதவியாக நின்றார்கள். அபூ உதுமான் மக்றிபீ (றழி) அவர்கள் அறிவிலும், நடப்பிலுந் தவத்திலு மிருந்தவர்களா யிருந்தும் அவர்களை நையப்புடைத்து ஒரு ஒட்டகையிலேற்றி தெருவெல்லாம் சுற்றி மக்கத்தைவிட்டு அப்புறப்படுத்தினதால் அவர்கள் மாணபரியந்தம் பாக்தாதிலிருந்தார்கள்.

ஷெய்கு ஷிப்லீ (றஹி) அவர்கள் கல்வியிலும், நன்னடப்பிலும், தெண்டிப்பிலும் பூரணமாயிருந்தும் எத்தனையோ தடவை அவர்களை காபிரென்று தீர்ப்பு செய்தார்கள். அதனால் அவர்களுடைய அசுஹாபுகள், மனிதர்கள் வராமலிருப்பதற்காக அவர்களை ஒரு வைத்தியசாலையில் மிருந்த காலமாக வெளியே விடாமல் வைத்திருந்தார்கள். இமாம் நர்பல்கி (றழி) அவர்கள் அறிவிலும், சிறப்பிலும், தகீக்கின் நேர்மையிலும் கீர்த்தி பெற்றிருந்தும், மக்றிபு நாட்டைவிட்டு மிசுறுக்குத் துரத்தப்பட்டது. அவர்களை (சிந்திக்கு) அகக்குபிறுடையவரென்று சாட்சிசொல்லி குனியவைத்து தோல் கழற அடிக்கப்பட்டது. அப்போதும் அவர்கள் ஆராய்வும், அச்சமும் பொருந்தி குர்-ஆனை ஓதிக் கொண்டிருந்தார்கள்.

## குல்ஹூவல்லாவும்—சக்கிலியன் செருப்பும்.

நசீபி (றழி) அவர்களை ஷாம் தேசத்தைச்சேர்ந்த ஹலவு என்னும் ஊரில் தேர்லுரிய அடிக்கப்பட்டது. அவர்கள் அறிவில் எல்லாரிலும் சிறந்தும், ஒருவராலும் எதிர்க்கக் கூடாமலு மிருந்ததனால் மேற்படி ஹலவு என்னும் நகரிலுள்ளவர்கள் பொறாமைகொண்டு, குல்ஹூவல்லா சூறு முழுமையும் ஒரு துண்டிலெழுதி சக்கிலியனிடம்

கொடுத்து அழகான ஒரு செருப்புக்குள் வைத்து தைக்கச்சொல்லி அதை ஷெய்கு நசீமி (றஹ்) அவர்களுக்கு தூரத்திலிருந்து வந்த ஹதியா என்று கொடுத்து அனுப்பினார்கள். அவர்கள் இந்தச் சூதை உணராமல் வாங்கிக் காலில் மாட்டிக்கொண்டார்கள். பின்னர் அந்தப்பொறாமைக்காரர்கள் நாயிபு என்னும் பிரதிநிதியிடத்தில் போய் நசீமி என்பவர் சூறத்துல் இக்லாசை எழுதி செருப்பில் வைத்து தைத்துக் காலில் மாட்டிக்கொண்டு திரிகிறதாக சரியான முகாந்தரத்தோடு எங்களுக்கு சமாச்சாரமெட்டியிருக்கிறதென்று சொன்னார்கள். அவ்வரசன் சோதித்துப் பார்த்து, துண்டைக் கண்டெடுத்து, அவர்களுடைய முதுகின் தோல் கழற அடிக்கும்போது, அவர்கள் தெளஹீதின் அரிதான அறிவுகளைப் பொதிந்த நூதனமான கவிகள் சொல்லிக்கொண்டும், சிரித்துக்கொண்டு மிருந்தார்கள். ஷெய்கு அஹ்மதியன் (றலி) அவர்கள் சிந்திக்கு என்று விஜாயா என்னு மூரிலிருந்து திலமிசான் என்னுமூருக்குத் தூரத்தப்பட்டதனால் அங்கேதான் மவுத்தானார்கள்.

ஹிக்காயத்து:— செய்கு முஹியித்தீ னிபுனு அறபி (றலி) அவர்கள் கூறுகிறார்கள்:—நானும், அப்தால்களிலொருவரும் காபு மலைக்குப் போனபோது அம்மலையைச் சுற்றிக்கொண்டிருக்கிற ஒரு பாம்பைக் கண்டோம். கூட வந்தவர் என்னைப்பார்த்து இந்தப் பாம்புக்கு சலாம் சொல்லும், அது பதில் சொல்லுமென்றார். அதன்படி சலாம் சொன்னேன்; பாம்பும் பதில்சொல்லி, நீங்கள் எந்தவூர் என்றது. பிஜாயா என்னும் ஊர் என்றோம். பிஜாயா வாசிகள் தெளது அஹ்மதியன் அவர்களை எப்படி நினைத்திருக்கிறார்கள் என்றது. அவர்களை சிந்தீக்கு என்னும்

அகக்குபிறையுடைய காபிரென்று கூறுகிருர்களென்ருேம். அதற்கு பாம்பு ஆண்டவன் விலாயத்தைப்பெற்ற ஒரு பெரியோரை இப்படிச் சொல்வார்களென்று அல்லாவி ஞனை நான் நினைக்கவில்லை என்றது. குதுபு அபூமத்யனை எப்படி அறிவாய்? என்ருேம். சுபுஹானல்லா! இஃதென்ன புதுமை! அல்லாவின் மூபாறக்கான அவுலியாக்களில் ஒரு வராகிய அபூமத்யனை அறியாத பிராணியுமுண்டோ? அவ ரை நிந்திப்பவன் மூனுபிக்கேயன்றி வேறில்லை யென்றது என்பதாம்.

ஷெய்கு அபுல்ஹசன் னிபுனு அலிய்யுஷ் ஷாதிலிய்யி (றலி) அவர்களை சிந்தீக்கு என்று அவதூறு சொல்லி மஃறிபு தேசத்தைவிட்டு மிஸ்றுக்குத் துறத்தப்பட்டது. ஹிக் காயத்து;—இபுனு அதாவுல்லா (றஹ்) அவர்கள் கூறுகி ருர்கள்—நாயகம் அபுல்ஹசன் அலிய்யுஷாதுலி (றலி) அவர்களின் காரணங்கள் மஃறிபுதேசம் எங்கும் பிரசங்க மாக, அவர்களை அங்கிருக்கவிடாமலும், மனிதர்களிடம் நெருங்கவிடாமலுந் தடுத்து நோவினை செய்து மிஸ்றுக்குத் துரத்தினுர்கள்.

பின்னர் மிஸ்று சுல்தானுக்கும் இடையூருன பல கடி தங்கள் சிந்தீக்கென்றும், முஸ்லீம் அக்கீதாக்களைக் கெடுத் தவனென்றும், அல்லா இல்லையென்கிற முல்ஹிதென்றும், மந்திரமான வாசகத்தால் மருட்டுகிறவனென்றும், ஜின்வா சிலாத்துக் காரனென்றும் அனேக கொடூரமான வசனங் களை எழுதினுர்கள். சிலகாலத்திற்குப் பின் அவர்கள் கார ணங்களை மிஸ்று சுல்தானும், பல கல்விமான்களும் நன் குணர்ந்து அவர்கள் தறீக்கை ஒப்புக்கொண்டார்கள்.

## கடவுளுக்கு பெண்சாதி-பிள்ளை.

செய்கு அபுல்ஹசன் அலியுஷ் ஷாதுலி (றலி) அவர்கள் சொன்னதாக குத்புஅப்தால் வஹ்ஹாபுஷ் ஷஃறானி (றஹ்) அவர்கள் சொல்லுகிறார்கள்:—நபிமார்களையும், ஒலிமார்களையும் ஊரைவிட்டு விரட்டுகிறதும், அவர்கள்பேரில் பொய்க் கட்டு கட்டுகிறதும், நோவினை செய்கிறதும், பேயனென்றும், பித்தனென்றும், பொய்யனென்றும், வழிகேடனென்றும், பாசாங்குக் காரனென்றும் நிந்திப்பதும் வழக்கமாக இருந்துவருகிறது. அதை சில மூதேவியாகிய பாவிகளுக்கு மறுத்தண்டனை ஏற்படும்படி ஆண்டவன் விதித்திருக்கிறான். அன்றியும், ஆண்டவன் சொல்வதாவது:—என்னையே கெட்டவன், வஞ்சகன் என்றும்; எனக்கே பெண்சாதி-பிள்ளையுண்டென்றும் சொல்லி, எனக்குத் தெரியாதென்று அநேக அக்கிரமங்கள் செய்து வருகிறார்கள். அவர்களுக்கும் நான் அன்னபானாதி கொடுத்து வருகிறேன். அப்படியிருக்க, நீங்கள் என்னை யடுத்திருப்பதால் பொறுமையோடிருங்கள்; அப்போதுதான் என்னை அடுத்தவர்களாவீர்களென்று நபிமார்களுக்கும், ஒலிமார்களுக்கும் சொல்லி இருக்கிறான் என்பதே.

ஹிக்காயத்து:—மூஸா அலைகிஸ்ஸலாம் அவர்களை அவர்கள் கூட்டத்தார் நோவினை செய்தபோது நாயனை நோக்கி, உன் அடியார்களை என்னை நிந்திக்காமல் தடுத்துக் கொள் என்று கேட்டதற்கு, மூசாவே! எனக்குப் பிள்ளை-பெண்சாதி முதலான குடும்பம் இருப்பதாகவும், இன்பத்துன்பமாகிய இருவினை முதலானவைகளிருப்பதாகவும் என்னை நிந்திப்பவர்களையே தடுக்காமல், பொறுமையோடு

கேட்டுக் கொண்டிருக்கிறேன் என்று ஆண்டவன் கூறினன்.

றிவாயத்து:—இமாம் மாலிகீ (றலி) அவர்கள் மிஸ்றப் (றழ்) அவர்களிடத்தில், மனிதர்கள் என்னைக்குறித்து எப்படிப் பேசிக்கொள்கிறார்கள் என்று கேட்க, உவந்தவன் போற்றுகிறான்! பகைத்தவன் தூற்றுகிறான்! என்றார்கள். அதற்கு இமாம் அவர்கள், எந்தக்காலத்திலும் போற்றுகிறவனும், தூற்றுகிறவனும் உண்டாகித்தா னிருப்பான் என்றார்கள்.

அபுல் அப்பாசுல் முர்சி (றலி) அவர்கள் சொல்வதாவது:—ஒலிமார்கள் உயிரோடிருக்கும்போது சிலர் கொண்டாடமாட்டார்கள்; இறந்த பிறகு இன்னார் மிகவும் பெரியவர்; இன்னார் மிகவும் சிறந்தவர் என்பார்கள்.

ஷெய்கு அபுல்ஹசன் அலிய்யுஷ் ஷாதுலி (றலி) அவர்கள் கூறுவதாவது:—அறிவாளிகளை 4 காரியங்களால் சோதிக்கப்படும். அவை—பகைவர் ஜெயங்கூறுவது, கூட்டாளிகள் நிந்திப்பது, மடையர் குறைகூறுவது, அறிவாளிகளும் பொறாமை கொள்வது. இவ்விதக் காரியங்களில் பொறுமைபெற்றால் நாயன் அவரை இமாமாக ஆக்குவான்.

ஷெய்கு தாஜுத்தீனுஸ் ஸூபிகி (றழ்) அவர்கள் கள்ளையும் - லூத்தையும் ஆகுமென்று சொன்னதாகவும், இரவுகாலத்தில் காபிரீன்களினுடையும், பூணூலுமணிந்ததாகவும் அவதூறு சொல்லி, விலங்குபோட்டு மிஸ்றுக்கு கொண்டுவந்து வெட்டும்படி செய்தார்கள்.

இப்றாஹீமுல் ஷம்பரீ, ஹூசைனுல் ஜாகீர் (றழ்) இவ்விருவர்களையும் நாற்காலியிலிருந்து உபதேசஞ் செய்யக்கூடாதென்று பொறாமையினால் விலக்கினார்களாம்.

செய்யிதினா அப்துல்காதிறு ஜெயிலானி, செய்யிது அஹ்மதுகபீறு றபாயீ, செய்யிது அஹ்மதுல் பதவீ, செய்யிது இப்றுஹீமுல் மத்பூலி முதலான அனேக மஹான்களையும், இமாம் கஸ்ஸாலி (றஹ்) அவர்கள் போன்றவர்களையும் பலவாறு நிந்தித்திருக்கிறார்கள்.

இன்னும் பலர் செய்யும் அநேக விதவிதமான விபரீத விசித்திர அக்கிரமங்கள் கணக்கிலடங்காமலிருக்கிறது. அவைகளை விவரித்தெழுதினால் விரிவாகு மென்றஞ்சி இம்மட்டில் நிறுத்தப்பெற்றது.

ஷெய்கு அபுல் அப்பாசில் முர்சி (றலி) அவர்கள் கூறுவதாவது:— ஒலிமார்களை நிந்தித்தவர் அநேக பாக்கியங்களையும், போக போக்கியங்களையும், பெண்சாதி பிள்ளைகளையும் இழந்து, பல விதமான சங்கடங்களைப்பட்டு துர்மரணமாகச் செத்தார்களே யன்றி நல்ல மரணமாக மவுத்தாகவில்லை.

செய்கு அப்துல்காதிறு ஜெயிலானி றலியல்லாகு அன்கு அவர்கள் திருவாய்மலர்ந்ததாவது :—ஒலிமார்களை அவமதிப்பவன் மவுத்துடைய காலத்தில் ஆண்டவனால் அதிகமாகச் சோதிக்கப்பெறுவான் என்பதே.

குறிப்பு:— முற்காலத்தவர்களைப்போல் இக்காலத்தவர்கள் அவ்வளவு அக்கிரமங்கள் செய்ய முயலவில்லை. ஆனால், மதச் சட்டமும், அரசாங்க சட்டமும் ஒன்றுகவகித்த சுல்தானுடைய காலமாக இல்லையே யென்று சிலர் மனம் புழுங்கி, முணு முணுத்துக் கொண்டு யாரிடமிருந்து பத்வா வாங்கிக் கொடுக்கலாமென முயன்றலைகின்றனர்- என்ன மதியீனம்.

சிலர் சர்பு, நஃவு, ஹதீது, பிக்ஹு இவைகட்கு முறையே இலக்கியம், இலக்கணம், வேதவியாக்கியானம்,

அநுட்டானம் என்பவற்றில் பெயருக்குமாத்திரம் சிலபாகங்களை உருப்போட்டுப் பொட்டைப் பாடமாக வரப்பண்ணி, சில பட்டங்களைச் சுமந்துகொண்டு வயிறு வளர்ப்பதற்கு வேறு மார்க்கந் தெரியாமல், நெடுஞ்சட்டையும், பெரிய தலைப்பாகையும், கனத்த பாத குறடும் வாடகைக்கு கிடைத்தால் வாங்கி யணிந்து ஒய்யார நடை நடந்து, சாமானிய சனங்களிடத்தில் போய் குறைகுடத்து நீர் தளம்புவது போல், அவன் இப்படி-இவன் அப்படி என்று சல்லித்தனமாக வீண் குதர்க்கம்பேசிப் பணம் பறிப்பார்கள்.

இவர்களை அக்கீதா வுடைய இல்முகளைப்பற்றி முக்கியமாக அறியவேண்டிய வாஜிபு, மும்கின், ஜாயிசு, முஸ்தஹில் முதலியவைகளைப்பற்றிக் கேட்டால் புலியைக் கண்ட பூனையைப்போல் பதுங்குவார்கள். ஹகாயிக் என்னும் ரகசியார்த்தத்தையும், குறுஆனுடைய அகம்-புறமென்னும் வேதாந்த-தூல-சூக்கும தத்துவார்த்தங்களையும் நன்குணர்ந்து அகக்கண் திறந்த (கஷ்புடைய) ஒலிமார்களையும் நிந்தித்து மோசம் போகிறார்கள்.

என்னுடைய ஒலியை ஒருவன் மனநோகச்செய்வானாகில், நான் அவனுடன் போர் செய்வேன் என்று ஆண்டவனால் ஹதீது குதுசியில் கூறப்பெற்றிருக்கிறது.

அறபியில் இன்சான்காமில், புசூது, புதூஹாத்து முதலான நூற்களையும், பார்ஸியில் மதனவீ ஷரீபு, ஹிந்தியில் ஆபஹாயத்து இவைகளையும், இவைகளைப் போன்ற கோடிக்கணக்கான நூற்களையும் பகிரங்கமாக வெளியிட்டிருக்கிறார்கள். தமிழில் ஒரு சிறு பாகத்தை வெளியிட்டாலோ! இரகசியத்தை யெல்லாம் வெளியிட்டுவிட்டான்; அல்லது

தவறுதலாகச் சொல்லிவிட்டான்! மோசம் வந்துவிட்டது! முதலெல்லாம் முழுகிப்போய்விட்டது!! என்று ஒரே பிதற்றலாய் பிதற்றுகிறார்கள். இவர்களுடைய அறிவீனத் திற் கென்னதான் சொல்லுகிறது!

ஒருவன் சிறுபிராயத்தில் படத்திற் கண்ட புலியை நிச மென்று நம்பிக்கொண்டிருந்து, பகுத்தறிவு வந்த பின்னர் உயிருடனிருக்கும் புலியைப் பார்த்தால் எப்படி நினைப் பானோ! அப்படியே, தூல - சூக்கும அறிவுகளும் நினைக் கப்பெறும். அதாவது சிறுவனைப்போன்ற கல்வி - அறிவு உடையவர்கள் லாகிறை மட்டும் அநுட்டிப்பார்கள். ஆரி பீன்களோ! தூல-சூக்கும மாகிய லாஹிறு-பாத்தின் இரண் டையும் அநுட்டிப்பார்கள். இதுவே வித்தியாசந் தோன் றுவதற்குக் காரணம்.

குர்ஆனுல் அலீம், வத்தீனி வஸய்த்தூனி என்னுஞ் சூறாவில், "லகத் கலக்னல் இன்ஸான பீ அஹ்ஸனி தக் வீமின் தும்மற தத்னாஹு அஸ்பல ஸாபிலீன்—உண்மை யாக நாம் மனிதனைச் சிறந்த அழகான ரூபத்தில் படைத் தோம்; பின்னர் நாம் அவனைத் தாழ்ந்தவர்களிலும் தாழ்ந் தவனாக ஆக்கி மீட்டினோம்" என்று கூறப்பெற்றிருக்கிறது. அதாவது மனிதனை கடவுளானவர் தன்னுடைய ஜலால்- ஜமால்-கமால் என்னும் பூரணத்துவங்களுக்கு மலுஹறெ னுந் தோற்றமாக்கி தமது சிபத்துகளினால் சிறப்பாக்கின தாம். பின்னர் தாழ்ந்தவர்களிலும் தாழ்ந்தவனாக ஆக்கி னோம் என்பதின் கருத்தாவது :—ஒருவன் தன் நபுசை நோட்டமிட்டு தன்னுடைய கெட்ட செயல்களிலிருந்து மீண்டு, தௌபாச்செய்து கல்பை பரிசுத்தமாக்கி; தன்னை யும், தனக்காதாரமான தலைவனையும் அறியவேண்டிய வழி

களைப்பற்றி சிறிதும் ஆராயாமல், இரண்டொரு நூற்களில் நாலைந்து வரிகளைப்படித்த மாத்திரத்திலேயே பிறரிடத்தில் என்ன குற்றங் குறைகள் இருக்கிறதென்று ஆராயத்தொடங்கி நிந்தித்து கெட்டுப்போவது முதலானவைகளைப்பற்றியேயாம்.

நல்லோர்கள் காபிர்களுக்கும் நேர்வழி காட்ட நாடுவார்கள். அறிவீனர்களோ இஸ்லாமானவர்களையும் காபிராக்க எத்தனிப்பார்கள்.

காபிறுக்கு நூறு முகாந்தரம்.

ஒரு மனிதனைக் காபிர் என்பதற்கு 100 முகாந்தரம் நிரூபித்தல் வேண்டும். அதில் காபிரென்பதற்கு 99 முகாந்தரமிருந்தும் காபிரல்ல என்பதற்கு ஒரு முகாந்தரமிருந்தால் முஸ்லிமென்றே பத்வா செய்யவேண்டும். அன்றியும் ஒரு பிற மதஸ்தனை அவன் மரணமாகிற வரையில் காபிர் என்று சொல்லக்கூடாதென்று சட்டமு மிருக்கிறது, அப்படியிருக்க ஒரு முஸ்லிமை காபிர் என்று அவசரப்பட்டுச் சொல்பவன் சண்டாளனல்லவா?

ஒரு மந்திரவாதி செய்யும் தீங்கு எதிரியிடத்தில் பலிக்காவிட்டால் திரும்ப இவனுக்கே வந்து சேர்வதுபோல், குபிறுடைய விஷயமும் அவ்விதமாகவே ஆகிறது. அதாவது, ஒருவரைக் காபிரென்பதில் அவரிடத்தில் அதற்குள்ள குணங்க ளில்லாவிட்டால் சொன்னவனே கடுங் காபிராகிறான்.

நபிகள் பெருமான் முஹம்மது முஸ்தபா இறசூல் (ஸல்) அவர்கள் ஸதப்றுகு உம்மத்தீ என்னும் ஹதீதில் என்

னுடைய உம்மத்துகள் 73 கூட்டமாகப் பிரிவார்களென்று திருவாய்மலர்ந்ததில் அவர்களை என்னுடைய உம்மத்துக ளல்லவென்று சொல்லவில்லை. ஒரு அணுவளவு ஈமானும், தௌகீதும் உடையவன் முடிவில் ஈடேற்றம் பெறுவான் என்று கூறப்பெற்றிருக்கிறது.

ஒரு மனிதனிடத்தில் கொலை - களவு - கள் - காமம் - பொய் என்னும் பஞ்சமாபாதகங்களாவது; காம - குரோத - உலோப - மோக - மத - மாற்சரியம்-என்னும் அறுவகைக் குற்றங்களாவது இருந்தால் அவனைக் கெட்டவனென்று சொன்னாலுஞ் சொல்லலாம். இவைகளின்றி இலைமறை காய்போல் "மன் அறப நபுசகு பகத் அறப றப்பகு" என்று தன்னைப்பேணி பெரும்பாலும் சன சமூகங்களை விட்டு விலகி, தன்னுடைய ஹாலிலிருக்கும் மகான்களை வலிய வம்புக்கிழுத்து, பொறாமையால் கெட்டவனென்று சொல் பவனை என்ன சென்மமென்று சொல்லலாமென்பது எமக்கே விளங்கவில்லை. ஏன்? மிருகங்களுக்கு ஒப்பிடலா மென்றாலோ! ஒவ்வொரு மிருகங்களிடத்தும் ஒவ்வொரு விசேட குணங்களிருக்கின்றன. ஆகையால் இவர்களை ஆண்டவனுடைய முனிவுபெற்ற ஆயிரம் இபுலீசு லகுனத் துல்லாவென்றுதான் சொல்வோம்.

உலகத்தில் இராசாக்கினை யென்னும் பதம் வழங்கு கின்றது. பிரசைகள் எல்லோரும் அந்த இராச ஆக்கினைக் குப் பயப்படுகிறார்கள். ஆகிலும், ஒருவராவது இராச ஆக்கினையைக் கண்ணுற் கண்டதேயில்லை; அது கறுப்போ, சிவப்போ ஒன்றும் தெரியாது. போலீஸ் கான்ஸ்டேபில் முதல், மாஜிஸ்ட்ரேட், செஷன் ஜட்ஜி, ஹைகோர்ட்டு, இந்தியா கவர்ன்மெண்டு, செக்ரட்டரி, பார்லிமெண்டு,

அரசர் ஆகிய எல்லாவிடங்களிலு மிருந்து இராச ஆக்கினை பிறக்கிறது. ஏழு ரூபாய் சம்பளமுள்ள கான்ஸ்டேபில் நம்மைக் கூப்பிட்டால் உடனே போகிறோம்; ஏன்? இராச ஆக்கினைக்குப் பயந்து. ஹைகோர்ட்டார் சம்மன் அனுப்பினால் உடனே போகிறோம் அதுவும் இராச ஆக்கினைக்குப் பயந்துதான். இப்படியே எல்லா அதிகாரிகளுக்கும் ஒருவித சத்தியை இந்த இராச ஆக்கினையானது கொடுத்துக் கொண்டிருக்கிறது. அதுபோல், கடவுளுடைய ஆக்கினையானது சிறியவரும், பெரியவருமாகிய அன்பிற் சிறந்த ஒவ்வொரு மெய்யடியார்களிடத்திலும் உண்டு. அந்த அடியார்களை அவமதித்தால் கடவுளுடைய ஆக்கினையை மீறியதுபோல் ஆகுமல்லவா? ஆகையால் புலவர்கள், அன்பர்கள், யோகிகள், ஞானிகள் இவர்களிடத்திலெல்லாம் நன்மையாகவே நடக்கவேண்டும். கூடுமானால் எல்லாரிடத்திலும் நன்மையாக நடப்பதுவே சர்வோத்தமமாகும்.

---

## பதினொன்காவது அத்தியாயம்.

## சா து ச ங் க வி சா ர ணை.

### கலிவிருத்தம்.

போது சங்கம் புனையும் அவாவுள
மாது சங்க மகன்று மலியருட்
சாது சங்க மடைந்தவர் தந்திறம்
பாது சங்க முடன்பசர் வாமரோ.

சாது சங்கம் என்பது சத்துக்களாகிய சன்மார்க்கமுடையவர்களது கூட்டமென்று பொருள் தந்து நிற்கும்.

சாதுக்கள், சத்துவம் - இராசதம் - தாமதம் - என்னும் முக்குணங்களில், பேருண்டி - நெடுந்துயில் - சோம்பு - நீதி வழு - ஒழுக்கவழு - வஞ்சம் - மறதி - பொய் - கோபம் - காமம் - கொலை முதலிய தாமதகுணச் செய்கைகளும், மனவூக்கம் - விவேகம் -வீரம்-தவமுயற்சி-கருமம்-தானம்-கல்வி - கேள்வி முதலிய இராசதகுணச் செய்கைகளும் நீங்கி; ஞானம் - கிருபை-தவம்-சாந்தம்-சத்தியம் - அடக்கமுடைமை-மோனம்-ஐம்பொறியடக்கல் முதலிய சத்துவ குணச் செய்கையையே தமது கடமையாக எண்ணி நடப்பார்கள்.

இத்தன்மை யுடையவர்களது குழாத்தில் ஒரு சாமானிய மனிதன் அடுத்துப் பழகினும், (மயக்கத்தைத் தரும் பனைமரத்தின் கள்ளானது சுண்ணும்பு சேர்ந்தவுடன் 'பதனீர்' என்னும் பானமாகி விடுவதுபோலவும், உப்பு மயமான சமுத்திரத்தின் உவர் நீர் மேகத்தினுல் சுத்தோதக மாகிவிடுவது போலவும்) பரிசுத்தனுகிவிடுவான்.

திருக்குறள்.

மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்.

இராமாயணம்.

தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்தம்
மருண்ட புன்மையை மாற்றுவரென்பது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுரு ளுறைத்துறைத்தோடி
இருண்ட கல்லையும் தன்னிற மாக்கின விரதம்.

மகாமேருவைச் சார்ந்த காகமும் பொன்னிறமாகின்றது. பாலோடு சேர்ந்த நீரையும் பாலாகவே எண்ணப் பெறுகின்றது. பூவோடு சேர்ந்த நாரும் மேன்மை அடை

கின்றது. நெருப்பைச் சார்ந்த பலவித விறகுகளும் நெருப்பு மயமாகிப் பிரகாசிக்கின்றன. இரசவாத வித்தை யால் இரசத்தைச் சேர்ந்த செம்பும் பொன்னாகிறது. அவைபோல் மகான்களது சங்கத்தைச் சார்ந்த சாமானி யர்களும் மகான்களாகவே மதிக்கப்பெறுகிறார்கள். ஆனால் நல்லோர்களைச் சேர்ந்து கெட்டவர்கள் நல்லவர்களாவது போல், கெட்டவர்களைச் சேர்ந்து சில நல்லவர்களும் கெட்ட நடவடிக்கை யுடையவர்களாகி விடுகிறார்கள்.

நீர் நிரம்பிய ஒரு தடாகத்தில் நான்கு குடம் பசுவின் பாலைக் கொண்டுபோய் ஊற்றினால் பாலின் சொரூபமின்றி நீர்மயமாகவே ஆகிவிடும். ஒரு குடம் பசும் பாலில் ஒரு படி சலத்தை விட்டால், நீர்மயமின்றிப் பால் மயமாகவே ஆகிவிடும். அதுபோல், நன்மை அதிகரித்திருக்கிறவர்க ளிடத்தில்—அதாவது அரையே அரைக்கால் (⅝) பங்கு நன்மையுடையவர்களிடத்தில், காலே யரைக்கால்(⅜) பங்கு தீமையுடையவர்கள் சேர்ந்தால், நன்மை அதிகரித்திருப் பதால் தீயவர்களும் நல்லவர்களாவார்கள். மேற்கூறியபடி மாறுதலாக, தீமை அதிகரித்தவர்களிடத்தில் நன்மை குறைந்தவர்கள் சேர்ந்தால், நல்லவர்களும் தீயவர்களாவார் கள். ஆகையால் தம்மில் உயர்ந்தோர்க ளிடத்திலேயே பழகவேண்டும்.

திருக்குறள்.

நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுவதூஉ மில்.

## கழுதையைப் பார்த்து குதிரையுங் கெட்டது.

குழந்தைகள், தமது தாய் தந்தைகள் எவ்வித வார்த் தைகளை உபயோகிக்கிறார்களோ அவ்வித வார்த்தைகளை

யும், இன்னும் அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் எப்படி எப்படி பேசுகிறார்களோ அப்படிப் பேசவும், அதன் கருத்து இன்னதென்று அறியாமலே கற்றுக் கொள்ளுகின்றன. அன்றியும், அவர்கள் செய்கிற நடை - உடை - பாவனை - சாடை - சைகை - முதலிய அனைத்தையும் ஒருவருடைய பிரயத்தனமுமின்றி எளிதில் கற்றுக்கொள்ளுகின்றன.

சில சமயங்களில் நம்மைப் பார்த்து மற்றவர்கள் படிக்கிறார்கள். மற்றவர்களைப் பார்த்து நாம் படித்துக் கொள்கிறோம். அதாவது ஒருவர் ஒருவிதமான வஸ்திரத்தையோ! ஆபரணத்தையோ! வேறெதையோ தரித்துக் கொள்ளக் கண்டால், அதில் நமது மனம் பற்றினவுடனே நாமும் அவ்வாறு செய்துகொள்ளப் பெரும்பாலும் பிரயத்தனப்படுகிறோம். நாம் எதையாவது அணிந்துகொள்ளக் கண்டால், பிறரும் அவ்விதமாகவே விரும்புகிறார்கள்

இக்காலத்தில் அநேக இளைஞர்கள், மேனாட்டார்களைப் போல் தலைமயிர்களைப் பற்பலவிதமாகக் கத்தரித்து, மினுக்கெண்ணெய் தடவித் தன்னை அழகுபடுத்திக் கொள்வதாக எண்ணிச் செய்கிறார்கள். பறையர், .... .... முதலிய சிலர், காராளர் என்னும் பொருள்படத் தம்முடைய பெயருடன் பிள்ளை என்னும் பட்டத்தைச் சேர்த்து வேளாளர் ஆகிறார்கள். இவையனைத்தும் ஒருவரைப் பார்த்து ஒருவர் செய்துகொள்வதேயன்றி வேறில்லை.

ஆகையால் நாம் நன்கு மதித்து யார் யாரிடத்தில்பழகுகிறோமோ, அவரவர்கள் நடைகளே பெரும்பாலும் நமக்கு வந்து சேரும் என்பதற்கு ஐயமில்லை.

மேற்குலமாக எண்ணப்பட்ட சிற்சிலர்கள், தத்தம் தொழிலைச் செய்யவேண்டியதிருக்க, கலிகால விபரீதத்திற்குத் தக்கபடி சிலர் வேடங்கட்டிக் கூத்தாடுவதும்; கடுமையாய் நீக்கப்பட்ட மது - மாமிசம் - மச்சம் - முதலானவைகளைப் புசிப்பதும்; தம்மில் எத்தனையோ மடங்கு தாழ்ந்த வகுப்பாக எண்ணப்பெற்றவர்கள் வீட்டில், நாடகர்கள் பேசிக்கொள்வதுபோல் உபசாரம் பேசிக் காப்பி பானத்திற்காகக் காத்திருப்பதும்; தொடக்கூடாது என்று விலக்கிய சருமத்தினால் இணைக்கப்பெற்ற மிருதங்கம் - கெஞ்சிரா முதலியவைகளைத் தோளில் தாங்கிப் பகிரங்கமாகத் தெருவில் சஞ்சரிப்பதும்; 'பன்றியுடன் சேர்ந்தால் கன்றும் பீதின்னும்' என்னும் முதுமொழிக்கிணங்க, அறிவில் தம்மிலும் தாழ்ந்த வகுப்பினரிடத்தைச் சார்ந்ததனாலல்லவா? அங்ஙனம் ஏற்படுகின்றது.

முற்காலத்தில் மேற்குலம் என்று பேர்வைத்துக் கொண்டவர்களால், கீழ்க்குலம் என்று எண்ணப்பட்ட ஏனைய வருணத்தவர்கள், தாங்கள் வம்ச பரம்பரையாகப் புசித்துவந்த மது - மாமிச பட்சணங்களை யறவே ஒழித்து, வைதீக நெறியை அனுசரித்து நன்னிலைமைக்கு வருவது அவர்கள் தம்மிலும் அறிவில் உயர்ந்தவர்களைச் சார்ந்ததனாலன்றோ?

## "TELL ME YOUR FRIEND AND I WILL TELL YOU WHAT YOU ARE"

என்பது ஓர் ஆங்கிலப் பழமொழி. அதன் பொருளாவது, 'உன் சிநேகிதன் இன்னாரென்று சொல், நான் உன் நடக்கை முழுவதையும் சொல்லுகிறேன்' என்பதாம். நமது

ஔவைப் பிராட்டியாரும் 'சான்றோரினத்திரு' எனவும், 'சேரிட மறிந்து சேர்' எனவும், 'நல்லாரைக் காண்பதுவும் நன்றே' எனவும்; 'தீயாரைக் காண்பதுவுந் தீதே' எனவும், 'நல்லிணக்க மல்லது அல்லற் படுத்தும்' எனவும், 'பெரியாரைத் துணைக்கோள்' எனவுங் கூறியிருப்பது தமது அனுபவத்தின் முதிர்ச்சியினாலல்லவா?

## சேரிடம் அறிந்து சேர்.

'பெரியாரைத் துணைக்கொள்' என்றதனால் எக்காலத்தும் பெரியோரையே நேசிக்கவேண்டும். அவர்கள் நேசத்தை ஒருபொழுதும் கைவிடலாகாது. அனேகரது பகையைத் தேடிக்கொள்வதனால் வரும் தீமையிலும், ஒரு பெரியோரது நட்பை யிழந்துவிடுவதனால் வரும் தீமை பதின்மடங்கு அதிகமாகும். இதுபற்றியே தமிழ்வேதம்,

"பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்"

என்று கூறியிருக்கிறது.

'சேரிடம் அறிந்துசேர்' என்பதற் கேற்ப களங்கமில்லாத பொன்போலும் உண்மை நெறியோராகிய பெரியோர்களை அறிந்து அவர்களிடம் சேர்ந்து, அவர்கள் சொற்படி நடக்க வல்லவர்கட்கு, அறம் - பொருள் - இன்பம் - வீடு என்பவைகளில் எதுதான் அரிதாகும்? கற்பகத் தருவைச் சார்ந்த காகமும் அமுத முண்ணும் அன்றோ?

முருகுவிரி மலர்க்கொடிகள் மூங்கில்மிசை படர்ந்துபோய்ப்
பொருவரிய துறக்கத்துப் புகுந்துவளர் கற்பகமாம்
மாமுழுதும் படர்ந்துலவும் வளர்மதியின் மேலாய
பெரியவரை யடைந்தொழுகப் பெறிற்றுறக்கம் புகலரிதோ.

திருக்குறள்.

நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு.

மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானாம்
இன்னா னெனப்படுஞ் சொல்.

சிறுபஞ்சமூலம்.

பெருங்குணத்தார்ச் சேர்மின் பிறன்பொருள் வம்மன்மின்
கருங்குணத்தார் கேண்மை கழிமின்.

சாதாரண மழைத்துளியானது, முத்துச் சிப்பியைச் சார்ந்து தாளமாகிறது. அதே மழைத் துளி சிப்பியில் விழாமல் தாமரை யிலையில் விழுந்தால் முத்தைப் போன்ற வெண்மையை மட்டிலும் பெறுகிறது. அதே மழைத்துளி நிலத்தில் விழுந்தால் முத்தும் ஆகாமல், முத்தைப்போன்ற வடிவமும் ஆகாமல் அது இருக்கும் இடமும் தெரியாமல் மறைந்து போகின்றது. சேர்ந்த இடத்தினால், அதற்குப்பெருமையும்-சிறுமையும் ஏற்படுவதை நாம் உணர்கின்றோம். அதுபோல், மானிடராகப் பிறந்த எல்லோர்க்கும் ஒரே அறிவுதான், ஒரே ஆத்மாதான். அங்ஙனமிருக்க அவர்கள் எந்த இடத்தைச் சேர்ந்து பழகுகிறார்களோ, அந்த சகவாசத்திற்குத் தக்கபடி அறிவானது உயர்வு-தாழ்வு என்னும் பதத்தை அடைகின்றது. இதற்குத் திருட்டாந்தமாக ஆங்கிலேயர் ஒரு பழமொழி வழங்குகின்றனர். அதாவது:—

If you want to know the character of a man,
see who his friends are.

(இதன் பொருள்) ஒருவருடைய நடவடிக்கைகளை அறிய வேண்டுமானால் அவரது சிநேகிதர்கள் யார் என்று பார் (என்பதாம்)

ஆதலால் நாம் நம்மிலும் உயர்வான ஞானம் - கல்வி கேள்வி - ஒழுக்கம் - கருணை - சாந்தம் - தெய்வ வழிபாடு முதலிய நல்லொழுக்கம் உடையவர்களிடத்திலேயே சிரமப் பட்டாகிலும் பழக வேண்டும்.

திருக்குறள்.

அறியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

பட்டினத்தடிகள்.

நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுள தோவக மும்பொருளும்
இல்லாளும் மைந்தரும் சுற்றமும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக் கேயிறை வாகச்சி யேகம்பனே.

நமது ஆங்கிலேய துரைத்தனத்தார், சாதியில் உயர்ந்தவர் - தாழ்ந்தவர் என்று கருதாமல், அறிவினாலும், படிப்பினாலும் சிறந்தவர் எவரோ! அவருக்கே அந்தஸ்துக்குத் தக்க உத்தியோகத்தை அளிக்கின்றனர். அதுபோல், அறிவினால் சிறந்தவர் எவரோ! அவர் எந்தக்குலத்திற் பிறந்திருந்தாலும் உயர்ந்தவரேயாவர். அறிவில்லாதவன் எவனோ! அவன் எவ்வித உயர் குலத்தில் பிறந்திருந்தாலும் கீழான சென்மமே யாவன்.

வெற்றிவேற்கை.

நாற்பாற் குலத்தின் மேற்பா லொருவன்
கற்றில னாயிற் கீழிருப்பவனே.

நாலடியார்.

தோணி யியக்குவான் தொல்லை வருணத்திற்
காணிற் கடைப்பட்டா ரென்றிகழார் — ...

உண்மையான சாதுசங்கப் பழக்கமோ கிடைப்பதும், சாதுக்கள் ஒருவன் மீது பூரண அன்பு செலுத்துவதும் அரிதாக இருக்கின்றது. மூடர்கள் சங்கமோ மிக எளிதாக இருக்கின்றது. பிறர் துக்கம் தன் துக்கமாகப்பாவிக்கும் தயையானது சில மகான்களுக்கு இல்லாமையால் எவ்வளவு தொண்டு செய்தாலும் கிருபை உண்டாவதுமில்லை; ஒருவரைத் தனக்குத் தொண்டனுகச் சாமானியத்தில் சேர்த்துக்கொள்வது மில்லை. பெரும்பாலும் அத்தன்மையுடையவர்க ளிடத்திலேயே உண்மையான மெய்ஞ்ஞான நெறிகளிருக்கின்றன. மற்றவர்கள், புலி பசுவேடம் போட்டுக்கொண்டதைப்போல் இருக்கிறார்கள். ஆயினும் சில சமயங்களில் நல்லவர்களாஞ்லும் ஆவார்கள். இதற்குத் திருட்டாந்தமாகப் பின் வருவதைக் காண்க.

கள்வர்களும், வழுதுளங்காயும்.

கன்னடதேயத்தில் இங்குளாபுரியில், இலிங்க தாரணஞ் செய்யும் வீரசைவராகிய மாதரசன் என்னும் பிராமணோத்தமருக்கும், அவர் மனைவி மாதாம்பிகைக்கும், நந்திச்சுரரின் அம்சமாகிய வசவேசர் அவதரித்தனர்.

அவர், கலியாணபுரத்தை இராசதானியாகக் கொண்டவனும், சமணசமயத்தை மேற்கொண்டவனுமாகிய விச்சலன் என்னும் அரசனுக்கு மந்திரியாக இருந்தனர். அக்காலத்தில் அல்லமதேவரைக் காணும் பொருட்டு, பலதிசைகளிலுமிருந்து வரும் அடியார்களுக்கு வேண்டியவைகளை

(*) முதல் வள்ளல்களைப் போல் குறிப்பறிந்து கொடுத்து வந்ததுமன்றி, ‡ அறுசுவைப் பதார்த்தங்களுடன் அடியர் குழாங்களுக்கு திருவமுது செய்வித்தும் வந்தனர்.

பிரபுலிங்க லீலை.

மொழியினல் நினைவால் நோக்கால்
முக்கணு னடியர் வேண்டிற்
ரெழிவிலா துதவித் தாய்போல்
ஓம்பினன் புறமதத் தோர்
வழியெலாம் வழக்கு மாற
மலிபுகழ்ச் சைவ மென்னும்
பழியிலா வழிந டப்பப்
பண்ணினன் வசவ தேவன்.

அக்காலத்தில் அவரது திருமடாலயத்தில் அடியார்களுக்கு அமுதளிக்கும்போது, தமது வீரசைவ ஆசாரப்படி சரீரத்தில் சிவலிங்க தாரணம் செய்துகொண்டிருக்கும் அடியார்களுடனே தானும் புசிப்பார். அங்ஙனமிருக்க, ஒரு

---

(*) வள்ளல்=வரையாது கொடுப்போர். இவர் முதல்-இடை-கடை என மூவகையாவர். முதலெழுவள்ளல்-குமுணன்-சகரன்-செம்பியன்-துந்துமாரி-நளன்-நிருதி-சீதக்காதி. இடையெழு வள்ளல்—அக்குரன்-அந்திமான்-அரிச்சந்திரன்- கன்னன்-சந்திமான் சிசுபாலன் - தந்தவக்கிரன். கடையெழு வள்ளல் - எழிலி - ஓரி - காரி - நள்ளி - பாரி - பேகன்-மலையன்.

முதல் வள்ளல் = குறிப்பறிந்து கொடுப்போர்; இடை வள்ளல்=கேட்டன கொடுப்போர்; கடைவள்ளல்=பலமுறையுங் கேட்க மறுத்துக் கொடுப்போர்.

(‡) அறுசுவை=கைப்பு - தித்திப்பு - புளிப்பு - உவர்ப்பு - துவர்ப்பு - கார்ப்பு.

நாள் இரண்டு மூன்று கள்ளர்கள் காஷாயம் அணிந்து இலிங்கதாரிகள் போல் வேடம் தரித்து, போசனவேளையில் சாப்பிடுவதற்காக அம் மடத்தில் நுழைந்து, மற்ற அடியார்களோடு பந்தியில் உட்கார்ந்து கொண்டார்கள். தாங்களும் இலிங்கதாரணம் செய்துகொண்டிருப்பதாகக்கருதவேண்டி வழுதுளங்கா (கத்தரிக்கா) யின் காம்பை நீக்கிவிட்டு அதை வேஷ்டியில் சுருட்டிப் புயத்தில் கட்டிக்கொண்டிருந்தார்கள்.

போசனம் அளிக்கும் வேளைவந்ததும் யாவர்க்கும் அறுசுவையுண்டி பரிமாறப்பெற்றது. அச்சமயம் அங்கு நடக்கப்போகும் கிரியைகளைப் பற்றி இக்கள்வர் சற்றும் அறியார்கள். சாப்பிட்டுவிட்டுத் தட்சணை பெற்றுக் கொண்டு செல்லலாமென்று நம்பி இருந்தார்கள். ஆனால் போசனம் வட்டிக்கப்பெற்ற பின்னரும் ஒருவரும் புசிக்க ஆரம்பிக்காமலும், இலையைக்கூடத் தொடாமலு மிருப்பதைக் கண்டு, 'ஓகோ! ஏதோ ஒரு சமிக்கை செய்துவிட்டு அப்புறமே யாவரும் புசிக்கத் தொடங்குவார்கள் போலும்' என்று கருதினார்கள். மறு நிமிடம் மடாதிபதியாகிய பெரியோர், கரத்தில் தீபாராதனைத் தட்டை யேந்திக் கொண்டு அங்கு வந்த வுடனே, அடியார் அனைவரும் தத்தம் அங்கத்திலுள்ள இலிங்கங்களை வெளியிலெடுத்து அங்கையில் ஏந்திக்கொண்டனர். ஏனெனில், அப்பெரியோர் ஒவ்வொரு இலிங்கமூர்த்திக்கும் தீபாராதனை காட்டி நைவேத்தியம் செய்வித்த பின்னரே யாவரும் புசிக்கத் தொடங்கவேண்டும். இப்பொழுது வழுதுளங்காய் கட்டிக்கொண்டு வந்த திருடர் என் செய்வார்கள்? அவர்களுக்குப் பெருந்திகில் பிடித்துவிட்டது. அந்த மகான் வரிசையாய் தீபாராதனை காட்டிக்கொண்டே வந்து, இக் கள்ள

ரிடம் நெருங்கியபோது, இவர்கள் கையில் இலிங்கம் வந்தி யிராமல், வாய் பேசவும் முடியாமல், மிக்க மிரட்சியோடு விழிப்பதைக் கண்டார்.

இக்கள்ளரின் தீச்செயலை யுணர்ந்த மடாதிபதி பரம சிவத்தின் திருவருளை நினைந்து, 'எமது பெருமானே! வயிற் றின் கொடுமைக்காக அன்னத்திற் காசைப்பட்டு வழுது ளங்காயை இலிங்கமெனக் கட்டிக்கொண்டு, அடியார்கள் போல் பொய்வேடந் தரித்து வந்த இக் கள்ளர்கள், மெய்ப் பத்தியுடைய உண்மைச் சிவனடியார்களாகிவிடவும், இவர் கள் கட்டிக்கொண்டு வந்திருக்கும் வழுதுளங்காய்கள் மெய் யான சிவலிங்கங்களாக மாறிவிடவும்! திருவருள்புரிய வேண்டும்' என்று பிரார்த்தித்தனர்.

இவ்வாறு அம்மகான் பிரார்த்திக்க, கள்ளர்கள் மெய் யடியாராக மாறி, அருள்பெற்று உய்ந்தார்கள் என்று கூறப்பெற்றிருக்கிறது.

பிரபுலிங்கலீலை.

வெள்ள வேணிப் பெருந்தகைக்கி யாஞ்செய் யடிமை மெய்யாகக்
கள்ள வேடம் புனைந்திருந்த கள்ள ரெல்லாங் களங்கமறும்
உள்ள மோடு மெய்யடியா ராக வுள்ளத் துள்ளுமருள்
வள்ள லாகும் வசவேசன் மலர்த்தாள் தலையால் வணங்குவாம்.

பருமரத்தை அண்டிய பல்லி.

சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரை அவரது பிதாவாகிய சிவபாத விருதயரும், ஏனைய சுற்றத்தார்களும் விவாகம் செய்தருள வேண்டு மென்று கேட்க, பிள்ளையார் 'கூடவே கூடாது' என்று மறுத்தருள, பின்னும் கைதொழுது வற்புறுத்தினதின் பேரில் மனமிசைந்து, திருநல்லூரில் வசிக்கும் நம்பாண்

டார் நம்பி என்னும் பிராமணோத்தமர் புதல்வியை, விவா கம் செய்துகொள்ள நிச்சயித்து விவாகம் நடைபெறும் போது, அக்கினியை வலஞ்செய்ய வேண்டியதாதலால் 'அக்கினியாவார் பரமசிவனே' எனத் திருவுளங்கொண்டு, திருப்பெருமணம் என்னும் சிவாலயத்திற் செல்லக்கருதி, வேத விதிப்படி வளர்த்த அக்கினியை வலஞ் செய்து, 'இவ்வில்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே! நான் இவளோடு கடவுளது திருவடியை அடைவேன்? எனக்கருதி அனைவ ரும் சூழ்ந்துவர, மனைவியாரோடு சென்று, ஆலயத்திற் பிர வேசித்து, தமது திருமணத்தைத் தரிசித்தவர்களுடைய பாசத்தை நீக்க நினைந்து, 'திருநல்லூர்ப் பெருமணத்தில் எழுந்தருளியிருக்கும் கடவுளே! தேவரீருடைய திருவடி களை அடையும் பதம் இதுவே' என்று 'கல்லூர்ப் பெரு மணம்' என்னும் திருப்பதிகத்தைப் பாடினார்.

உடனே கோயில் உட்பட மேலோங்கிய ஒரு சோதி கிளம்பி, அதில் ஒரு வாசல் தோன்றிற்று. அப் போது சுந்தரமூர்த்தி நாயனார் 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி' என்னும் பதிகத்தைத் திருவாய் மலர்ந்தருளி, 'இக் கலியாணங் காணவந்த எல்லீரும் உங்கள் சனனநோய்தீரும் பொருட்டு, இச்சோதியினுள்ளே பிரவேசியுங்கள்' எனப் புகன்றார். பிள்ளையாருடைய சிவிகை தாங்கிய பரிசனங் கள் முதலிய அனைவரும் அந்தச் சோதியிற் கலந்து, சோதி சொரூபமானார்கள். ஞானசம்பந்தர் தன் மனைவியாரைக் கைப்பற்றிக்கொண்டு, அந்தச் சோதியில் மறைந்தருளினார் என்பது புராணக் கருத்து.

'அரச சமுகத்தையும், அடுப்பங்கரையையும் சாத்தவன் வீண் போகான்', 'பருமரத்தை அண்டின் பல்லியுஞ் சாகாது'

என்னும் முதுமொழிகள் போல் நல்லோர்களை அடுத்திருப்பவர்களுக்கு ஒரு நாளும் குறைவில்லை. அவர்கள் உன்னத பதவியையே அடைவார்கள்.

| | |
|---|---|
| ஒஸா ஹிப்ஹு மா பித்துன்யா மஉரூபன் ஒத்தபிஉ சபீல மன் அநாப இலைய | உலகத்திலே நல்லவரோடு இணங்கி என்னளவில் மீளுவார்களே அவர்களின் வழியைக் கடைப்பிடியுங்கள். |

(குர்ஆன் 21-11)

ஔவையார்,

இனியது கேட்கிற் றனிநெடு வேலோய்
இனிது இனிது ஏகாந்தம் இனிது
அதனினும் இனிது ஆதியைத் தொழுதல்
அதனினும் இனிது அறிவினர்ச் சேர்தல்
அதனினும் இனிது அறிவுள் ளோரைக்
கனவினும் நனவினும் காண்பது தானே.

திருவருட்பா—கலிவெண்பா.

மோனந்தான் கொண்டு முடிந்தவிடத் தோங்குபர
மானந்தா தீதத் தமர்ந்தோருந்—தாநந்தாச்
சாதுக்க ளாமவர்தஞ் சங்க மகத்துவத்தைச்
சாதுக்க ளன்றியெவர் தாமறிவார்—நீதுக்க
நீங்கியன்னோர் சங்கத்தி னின்றுமகிழ்ந் தேத்திநித
மாங்கவர்தாட் குற்றேவ லாய்ந்தியற்றி.

திருவருட்பா விருத்தம்.

சற்சபைக் குறியார் தம்மொடுங் கூடித்
தனித்தபே ரன்புமெய் யறிவும்
நற்சபைக் குரிய வொழுக்கமு மழியா
நல்லமெய் வாழ்க்கையும் பெற்றே
சிற்சபை நடமும் பொற்சபை நடமுந்
தினந்தொறும் பாடி நின் றாடித்
தெற்சபை யுலகத் துயிர்க்கெலா மின்பஞ்
செய்வதென் னிச்சையா மெந்தாய்.

## பதினைந்தாவது அத்தியாயம்.

## சாதிமதச் சங்கடம்.

### விருத்தம்.

பேதா பேதந் தனைத்தொழிலாய்ப் பிதற்றித் திரியும் பேயருக்கே
சாதி மதச்சங் கடமதனைச் சாற்றி வைத்தார் முன்னோர்கள்
பேதா பேதந் தணந்துயர்ந்த பெரியோர்க் குரைத்த தன்றெனவே
தீதில் முதியோர் நவின்றதனைத் தெளிவு பெறுமா றுரைத்திடுவாம்.

உலகத்தில் பற்பல சாதி வித்தியாசங்களும், மதபேதங்களும், பிரபஞ்சத்தார்களாகிய அந்தகர்கள் ஒருவருக்கொருவர் தட்டுக்கெட்டு முட்டிக் கடுமாறுதிருப்பதற்காக, முன்னோர்கள் ஏற்படுத்திய ஓர் சட்டமாகும்.

### திருக்குறள்.

சுவையொளி யூறோசை நாற்றமிவ் வைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

அஃதேயன்றி ஞானநேத்திரமுடைய அறிவுடையோர்களுக்காகச் சொன்னதே யன்று. பொன்னுக்குப் பொன்னாபரணமிட்டு அலங்கரித்துப் பார்க்க எவரும் விரும்புவதில்லை. எல்லாவற்றையும் பார்த்து மகிழும் கண்ணுக்கு ஆபரணமிட்டு அலங்கரிப்பதில்லை. அதுபோல், அறிவுடையோர்களுக்கு அறிவுடையோர் சட்டம் வகுப்பதேயில்லை. அரசாங்கத்தார், சிவில்-கிரிமினல் முதலிய நியாய (Court) தலங்களை ஏற்படுத்தி வகுத்திருக்கின்றனர். அதில் என்னுடைய நிலம், உன்னுடைய நிலம் என்று வாய்த்தர்க்

கம் பேசுபவர்கள் தெரிவித்துக்கொள்ள சிவில் கோர்ட்டென்னும் நியாயத்தலங்களையும், தர்க்கம் முதிர்ந்து அடிபிடி சண்டைகள் உண்டாகி மண்டை யுடைந்து போகின்றவர்களையும், வேறெவ்விதத் துன்மார்க்கமான கலகங்கள் செய்கிறவர்களையும் தண்டிப்பதற்கு போலீஸ் முதலிய கிரிமினல் நியாயத் தலங்களையும், அவிவேகிகளாகிய கலகக் காரர்களுக்கென்று ஆலோசித்து ஏற்படுத்தியதேயன்றி, உள்ளதை உள்ளதுபோல் பாவிக்கும் அறிவுடையவர்களுக்கு ஏற்படுத்தியதே யன்று. அதுபோல் சாதி விகற்பம்-மதவிகற்ப முதலிய சங்கடங்களை,போராசைப்பேய்பிடித்தாடும் பிரபஞ்சத்தவர்களாகிய சமயத்தவர்கள், வரன்முறை தவறாமல் ஒருவருக்கொருவர் கட்டுப்பட்டு நடந்து கொள்வதற்காக அறிவுடையோர்களால் ஏற்படுத்திய ஓர் வரம்பேயன்றி, சமயங்கடந்த மோன சமரசமுடைய மகான்களுக்குஞ் சேர்த்து ஏற்படுத்தியதல்ல.

பூமியின்மீது உருண்டு திரியும் இரதம்-வண்டி முதலியவைகளுக்கு மேடு-பள்ளம் கவனித்து நடத்தவேண்டுமேயன்றி, ஆகாய விமானங்களுக்கு மேடு பள்ளம் கவனிக்க வேண்டிய அவசியமில்லை. பூமியில் வசிப்பவர்கள் 'இது என்னுடைய நிலம், அது உன்னுடைய நிலம் என்று எல்லை ஏற்படுத்திக் கொள்வதேயன்றி, ஆகாயமாகிய வெளியில் எல்லை ஏற்படுத்திக்கொள்வதில்லை; இது இன்னின்னவர் ஆகாயம் என்று பங்குபோடுவதுமில்லை. அதுபோல், மயக்கத்தைத்தரும் சமய சங்கடத்தில் நிற்பவர்கள், தமக்கு மாத்திரம் சாதி-மதங்களை உபயோகப் படுத்திக்கொள்ள வேண்டுமேயன்றி, சமயாதீதரான ஞானிகளுக்கு ஒரு சாதியும், ஒரு மதமும் ஏற்படுத்துவது உசிதமன்று; அவர்கள் உலகர்கள் கட்டுப்பாட்டிற்குள் நுழையவுமாட்டார்கள்.

ஆகாயம் எல்லோருக்கும் பொதுவாயிருப்பதுபோல் ஞானிகள் எல்லோருக்கும் பொதுவானவர்கள்.

பிரபஞ்சத்தவர்களுக்கும் சாதி விகற்பம் இருக்கக் கூடாதென்று கருதி, பலபேர் பிரசங்க முதலிய முயற்சிகள் செய்துவருகிறார்கள். சாதி இல்லாவிட்டால் சனங்கள் நிலைகுலைந்து தடுமாறிப்போய், அரங்கின்றிச் சொக்கட்டான் ஆடியதுபோலாவார்கள். ஆதலால் சாதிபேதம் அவசியம் இருந்துதான் தீரவேண்டும் என்பது பலருடைய அபிப்பிராயம். ஆனால் சாதிகளைச் சமரசப்படுத்த விரும்பி பிரசங்கம் - துண்டுப் பிரசுரம் முதலிய முயற்சிகள் செய்வதானது, சாதி-மத துவேஷங்களை மட்டுப்படுத்துவதற்கேயாம்.

சாதி - மதச் சங்கடம் என்னும் விருட்சமானது முளையாயிருந்து, நாளுக்கு நாள் தடித்துப் பெரிய ஆலவிருட்சமாகிவிட்டது. அதைப் பெயர்ப்பதென்றால் சிறிய அரிவாள் போன்ற முயற்சியால் முடியாது. பெரிய வாள்-கோடரி போன்ற அரும் பெரு முயற்சியாலும் அதன் நிலையை விட்டுப் பெயர்ப்பது மஹா அருமை. ஆகையால் சாது சங்கத்தைச்சேர்ந்தவர்கள் உயர் குலத்தினர்; மாதுசங்கத்தைச் சேர்ந்தவர்கள் தாழ்ந்த குலத்தினர். இந்தச் சாதி இரண்டொழிய வேறில்லை. இதற்கு அப்பாலுமில்லை. இது வேதாந்தத் துரைத்தனத்தாருடைய முடிவான (Rule) சட்டம்.

திருவருட்பிரகாசவள்ளலல்.

நரைமரண மூப்பறியா நல்லவுடம் பினரே
நற்குலத்தா ரெனவறியீர் நானிலத்தீர் நீவிர்
வரையிலுயர் குலமென்றுந் தாழ்ந்தகுல மென்றும்
வகுக்கின்றீர் இருகுலமு மாண்டிடக்காண் கின்றீர்

புணையுறுநுங் குலங்களெல்லாம் புழுக்குலமென் றறிந்தே
புத்தமுத முண்டோங்கும் புனிதகுலம் பெறவே
உரைபெறுமென் றனித்தந்தை வருகின்ற தருணம்
உற்றறிவ ணுற்றிடுவீர் உண்மையுரைத் தேனே.

கூத்தில் அரசவேடம் புனைந்தவன், உண்மையான அரசனைப்போல் இரத - கச - துரக - பதாதி என்னும் நால் வகைச் சைனியங்களும் சூழ அரசாட்சி செய்து, துட்ட நிக்கிரக சிட்டபரிபாலனம் புரிந்து, வேண்டுவார்க்கு வேண்டுவனவாகிய நாடு நகரங்களைச் சர்வமானியமாக பூதானம் செய்ய முடியாது. அவ்வாறே, உயர்ந்தவர்களைப்போல் பல அறிகுறிகளைத் தரித்திருக்கும் வேடதாரிகள், பெரியோர்களைப்போல் ஒன்றுமே செய்யமுடியாது.

திருக்குறள்.

செயற்கரிய செய்வார் பெரியோர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

ஆகையால் மகான்களுக்கு மாத்திரம் சாதிபேதமில்லை. மற்றவர்களுக்குச் சாதிபேதம் வேண்டியதே என்று வியாசர் முதலிய பெரியோர்கள் செய்துவைத்தது சரியானதாகும். நாம் கலிகால விபரீத புத்திக்குத் தக்கபடி, முன்னுள்ள பெரியோர்கள் அறிவில்லாமல் சாதி - மத பேதங்களை வகுத்து விட்டனர் என்றெண்ணுவது சரியல்ல. ஆனால் போலியாக ஏற்படுத்தியுள்ள சாதிமதச் சங்கடத்தை இக்காலத்துள்ள சில மூடர்கள் போலி யென்று உணராமல், உண்மையான மோட்சத்திற்கு இதுவும் ஒரு சிறந்த வழிதான் என்று கருதி, 'கண்ணுடையரென்பவர் கற்றோர்' என்னும் ஆன்றோர் வசனத்தை மறந்து கற்றோர்கட்கும் சாதி நிரூபித்து அடுப்பங் கரைக்குள் சாப்பிட்டுவிட்டால்

மோட்சம் கிடைத்துவிடும் என்று நினைக்கின்ற இக் காலத்தில், சாதியென்பதே தொலைந்து போனாலும் மிகவும் நல்லதே. அன்றியும் சாதிசமயத் தடிப்பை மாற்றுவதற்காக அரும் பெரும் முயற்சி செய்துவரும் சில தேசாபிமானிகளின் பிரயாசையும், கால விபரீதத்துக்குத் தக்கவாறு பயன்தரத் தக்கதேயாம். இன்னும் சில காலத்திற்குள் சாதித் தடிப்பையே மேலான சாயுச்சிய பதவியாகக் கருதிக் கொண்டிருக்கும் அறிவிலிகள் வாயில் மண் விழுந்துவிடும் என்பதற்கு எவ்விதச் சந்தேகமுமில்லை.

நெற்பயிர் விளைவிக்கின்ற நன்செய் நிலங்களெல்லாம் ஒரே வெளியா யிருக்கக்கூடாதென்று, அவைகட்கு நான்கு பக்கமும் வரப்புகள் ஏற்படுத்தி, இது இன்னின்னாருடைய வயல் என வெவ்வேறாகப் பிரித்து வழங்கப் பெறுகிறது. அப்படிச் செய்யாமல் எல்லாம் ஒரே கழனியாக இருந்தால் நில வித்தியாசம் தெரியாமல் ஒருவர்க் கொருவர் கலகம் உண்டாகும்; அதனால் நியாய சபைக்குச் செல்ல வேண்டிய அவசியமும் நேரிடும். அன்றியும், வரப்புகளே யில்லாதிருந்தால் ஒரு பக்கம் நீர் பாய்ந்தும், ஒரு பக்கம் நீர் பாயாமலும் சரிவர மணி பிடித்து விளையாது. அதுபோல், நாம் எல்லோரும் ஒரே கடவுளுடைய சிருட்டியில் அவதரித்தவர்களா யிருந்தாலும், எல்லோருக்கும் எண்சாண் உயரமும், ஒரே தன்மையான அவயவங்களும் வாய்க்கப் பெற்றிருந்தாலும், அவரவர் தொழிலுக்குத் தக்கபடி பிரம்ம - சத்திரிய - வைசிய - சூத்திர என்னும் நால் வருணபேத வரப்புகளை ஏற்படுத்தி, உன் வீட்டில் நான் அன்னபானாதிகள் புசிக்கக்கூடாது; என் வீட்டில் நீ அன்னபானாதிகள் புசிக்கக்கூடாது; நான் உயர்ந்தவன், நீ தாழ்ந்தவன்; நான் தாழ்ந்தவன், நீ உயர்ந்தவன் என்று

அவரவர் சௌகரியத்திற்கு வருண பேதம் ஏற்படுத்திக் கொண்டதேயன்றிப் பிறிதன்று.

அருணகிரியந்தாதி.

அச்செல்லாம் ஒன்றும் அதிலே யிருவிதமாய்
வச்சதென்ன சோணகிரி வள்ளலே—இச்சையுடன்
வாழ்ந்துசில பேரிருக்க வாய்பொத்திக் கைகட்டித்
தாழ்ந்துசில பேரிருக்கத் தான்,

என்பதுபோல் ஒருவர்க்கொருவர் கட்டுப்பட்டு நடந்து கொள்ளச் செய்த ஓர் உபாயமே யன்றி, உண்மையில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்கிற பேதம் குடும்பத்தவர் களிற் கிடையாது. துரைத்தனத்தார் (ஒரே அரசாங்கத் தினராயிருந்தும்) தங்கள் சௌகரியத்திற்காக ஒவ்வொரு இலாக்காவையும்,ஒவ்வொரு டிபார்ட்மெண்டாகஏற்படுத்தி, சருவ வரவு செலவுகளையும் எளிதில் அறிந்துகொள்ளு முறை போல், எல்லா மதங்களும் ஒரே கடவுளை நோக்கி வழிபடு வதாயிருந்தாலும், வெவ்வேறு விதமாய்ப் பிரித்து வணங் கச் செய்ததானது, போட்டா போட்டியுடன், அவனைப் போல் நாமும் வணங்க வேண்டும் என்று ஒருவர்க்கொரு வர் சிரத்தை யெடுத்து வணங்கிக் கடவுள் திருவடியைப் பெறுவதற்காகவாம். எல்லாம் ஒரே மதமாயிருந்தால் அவ் வளவு சிரத்தை ஏற்படாதென்பது கருத்து.

சில வயல்களுக்கு எரு - தழை யிட்டால் நன்றாக மணி பிடித்து விளையும். அப்போது அந்த நிலம் நல்ல நிலம் என்று பெயர் பெறும். அதுபோல், சில இல்லறத்தவர் கள் கல்வி - கேள்வி - சாதுசங்கச் சார்பு முதலியவைகளால் தீவிரதர பக்குவம்பெற்று, ஞானசாரியர் கிருபாநுக்கிரகத்

தால் மேல் நிலைமைக்கு வந்தால், அவர்களை உயர்ந்தோர் என்பதே யன்றி,

நாறுங் குருதிச் சலதாரைத் தோற்புரை நாடொறுஞ்சீ
யூறு மலக்குழி காமத் துவாரம் ஒழித்திடும்புண்
தேறுந் தசைப்பிளப்பு

என்னும் படுகுழியில் விழுந்து அறிவற்றுப் போகிறவர் எவராயிருந்தாலும் இல்லறத்தாரென்னும் ஒரேசாதிதான்.

கடைத்தெருவில், அந்தணர் முதல் பஞ்சமர் வரையில் வியாபாரஞ் செய்கிறார்கள். அவர்களை உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் பட்டத்தை வழங்காமல், எல்லாரையும் வியாபாரி யென்றே குறிக்கப்பெறுகிறது. அதுபோல் பிரபஞ்ச வியாபாரமே துணையென்று நம்பி யிருப்பவர்களை அறிவின் மிக்கோர் ஒரே இனமாகத்தான் கருதுவார்கள்.

ஞானவெட்டித்தரு.

பல்லவி.

உங்களுக்கும் எங்களுக்கும் பேதமாமோ—ஆண்டே
உள்ளுணர்ந்து பார்க்கஒரு எள்ளளவில்லை.

சரணம் பல்லவி.

1. அங்கம்அந்த ரங்கவறு போகஞ்செய்தால் — ஆண்டே
அவரவர்க்கு ரதிகேளி வேறேயுண்டோ — விந்து
இங்களுஞ்செய் ரதிகேளி யுங்களுக்காண்டே — அது
சிவப்பாமோ எங்கள்விந்து கறுப்பாமோ — (உங்க)

2. வேற்றுமையா யுங்கள்விந்து பெருத்ததென்ன — பேதம்
விளங்கவும் எங்கள்விந்து சிறுத்ததென்ன — சொல்லும்
மாற்றதீத முண்டோவிந்த ஊத்தைக்குழியில் — வேறு
மனிதர்க ளோபிறப்பார் மாதர்குழியில் — (உங்க)

3. அச்சதுவும் நின்றதெல்லாம் ஆண்டேகேளும் — அதில்
அமைந்த பலவுயிரும் எல்லாம்ஒன்று — மேலும்
உச்சிதமா யுந்தனுடல் உயர்ந்ததென்ன — உண்மை
உறுதியாம் எந்தனுடல் தாழ்ந்ததென்ன — சொல்லும்
இச்சடலம் அச்சடல மிரண்டும்ஒன்று — ஆண்டே
இம்மயமும் அம்மயமும் எல்லாம்ஒன்று — நீர்
வச்சதென்ன தச்சதென்ன ரூபம்எல்லாம் — ஒன்று
வளமான மயம்வஸ்து எல்லாம்ஒன்று — (உங்க)

4. ஊணியனு போகஞ்செய்யச் சுந்தரலிங்கம் — எண்சாண்
உனக்கும் எனக்கும்சரி தான்காணும் — மாது
வாணிவிந்து உந்தனுக்கு உயர்ந்ததுண்டோ — நல்ல
வஸ்துவிந்து எந்தனுக்குக் குறைந்ததுண்டோ — (உங்க)

5. பள்ளையாடு செம்மறியின் குட்டியாமோ — நல்ல
பசுவைக் கிடாமருவக் கிடாரியாமோ — பின்னும்
உள்ளமதி லுன்குலத்தில் என்குலஞ்சேர்ந்தால் — பிள்ளை
உன்னதென்றும் என்னதென்றும் எழுதியுண்டோ — (உங்க)

### சிவவாக்கியர்.

பறைச்சியாவ தேதடா பணத்தியாவ தேதடா
இறைச்சிதோ லெலும்பிலும் இலக்கமிட் டிருக்குதோ
பறைச்சிபோகம் வேறதோ பணத்திபோகம் வேறதோ
பறைச்சியும் பணத்தியும் பகுந்துபாரு மும்முளே.

ஒருவன் பத்தியாலல்லாது உயர்குலத்திற் பிறந்ததனாலேயே கடவுள் திருவருளுக்குப் பாத்திரனாக ஒருபோதும் முடியாது. பரமனது திருவருளுக்குப் பாத்திரமாகிறவர்கள் உயர்குலத்தார் என்றும், இழிகுலத்தார் என்றும் கிடையாது. எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும் மனத்தூய்மை யடைந்து, கடவுளிடம் அன்பு கொண்ட

வரே அவாது பேரருளுக்கு அருகராவர். உயர் குலத்திற் பிறந்திருந்தாலும் மனத்தூய்மையும்-கடவுள் மீது பத்தியும் ஒருவனுக்கு இல்லாவிடின், அவன் கடவுள் அநுக்கிரகத்திற்குப் பாத்திரனுகான். ஒருவன் அதிக இழிகுலமென்று கருதப்படும் குலத்திற் பிறந்திருந்தாலும், மனத்தூய்மையும்-கடவுள் மீது பத்தியும் உடைத்தாயிருப்பானே யாகில், அவனே பரமகருணாநிதியாகிய கடவுள் அருளுக்கு உரியவனுவான். ஏகலைவன் என்பவனைச் சாதியில் நிஷேதனுக எண்ணப்பட்டாலும் அவனிடமிருந்த பத்தியினுலன்றோ? மேன்மையைப் பெற்ருன். பெத்தான் சாம்பானுக்கு முத்தி கொடுக்கும்படி கொற்றங்குடி உமாபதி சிவாச்சாரியாருக்கு,

அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டு—படிமீதில்
பெத்தான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை

என்னும் வெண்பாவை நடராசப்பெருமான் பாடிக்கொடுத்தது பெத்தான் என்னும் பத்தனுடைய குலத்தைப் பொருத்தா? நந்தனுர் நடராச தரிசனத்திற்காகக் கோவிலுக்கு வெளியில் காத்திருந்தும், நந்தி மறைத்திருந்ததனுல் தரிசனங் கிடைக்கப்பெருமல் ஏங்கியிருக்கும்போது,

பல்லவி.

சற்றே விலகியிரும்பிள்ளாய் சன்னிதானம் மறைக்குதாம் (சற்)

அநுபல்லவி.

| | |
|---|---|
| நற்றவம்புரியும் | நம்முடையதிரு |
| நாளைப்போவார் | வந்திருக்கிருர் (சற்) |

என்று சிற்றம்பலவர் நந்தியை விலகிக்கொள்ளும்படி ஆக்கியாபித்தது நந்தனுரின் குலத்தைக் குறித்தா? அன்று;

அவர்களது பேரன்பின் மகிமையினாலேயே. கிராத்தக குலத்தினராகிய கண்ணப்ப நாயனாரை சீகாளத்தியப்பர் தமது பேரருளுக்குப் பாத்திரனாக்கியது அவரது குலத்தினலா ?

புராணங்களிற் சொல்லியிருக்கிறபடி (*) மான் வயிற்றிற்பிறந்த கலைக்கோட்டு மகாமுனிவரும், பசுவின் வயிற்றிற் பிறந்த கௌதம முனிவரும், நரியின் வயிற்றிற்பிறந்த சம்புகமுனிவரும், நாயின் வயிற்றிற்பிறந்த சவுனக முனிவரும், கழுதை வயிற்றிற்பிறந்த கார்க்கேய முனிவரும், கிளி வயிற்றிற்பிறந்த சுகமுனிவரும், கரிக்குருவி வயிற்றிற் பிறந்த பாத்துவாசமுனிவரும், தவளையின் வயிற்றிற்பிறந்த மாண்டவிய முனிவரும், கலசத்திற்பிறந்த அகத்தியமா முனிவரும், கைம்பெண் பெற்ற கவுண்டன்னிய முனிவரும், சண்டாளப்பெண் பெற்ற சத்திமுனிவரும், புலைப் பெண்ணுக்கு பிறந்த பாராசாமுனிவரும், வலைப்பெண்ணுக்குப்பிறந்த வியாசமுனிவரும், சக்கிலியப்பெண் பெற்ற மதங்கமுனிவரும், வண்ணாரப்பெண் பெற்ற நாரதமுனிவரும், வேடப்பெண் பெற்ற வான்மீகரும், அம்பட்டப் பெண் பெற்ற வபன முனிவரும், தேவதாசியாகிய ஊர்வசி வயிற்றிற்பிறந்த வசிட்டமகா முனிவரும் ஆகிய இவர்கள் பிரம்மரிஷிகளானதும்;

நாவிதராகிய கருவூராரும், பளிங்கசாதியிற் பிறந்த கொங்கணவரும், சேணியராகிய சட்டமுனிவரும், குயவராகிய போகமுனிவரும், செட்டிகுலத்திற் பிறந்த சுந்தரானந்தரும், ஆதியென்னும் புலைச்சி வயிற்றிற் பிறந்த திரு

(*) இவர்கள் பிறப்பு-வளர்ப்புகளில் சிலபாகம் இயற்கைக்கு முரணாகத் தோன்றுவது பற்றி வெவ்வேறு விதமாகவும் கூறுவதுண்டு.

வள்ளுவர்-கபிலர்-ஔவை முதலியோரும், செம்படவராகிய மச்சமுனிவரும், கன்னா குலத்திற் பிறந்த கமலமுனிவரும், யாதவகுலத்தினராகிய இடைக்காடருமாகிய இவர்கள் எல்லாம்வல்ல சித்தர்களானதும் அவரவர்கள் குலத்தினலா? அன்று.

கபிலரகவல்.

சேற்றிற் பிறந்த செங்கழுநீர் போலப்
பிரமற்குக் கூத்திவயிற்றிற் பிறந்த வசிட்டரும்
வசிட்டர்க்குச் சண்டாளி வயிற்றிற்பிறந்த சத்தியரும்
சத்தியர்க்குப் புலைச்சிதோள் சேர்ந்துபிறந்த பராசரும்
பராசருக்கு மீன்வாணிச்சி வயிற்றிற்பிறந்த வியாசரும்
(இந்நால்வரும்)
வேதங்க ளோதி மேன்மைப் பட்டு
மாதவ ராகி வயங்கின ரன்றே
அருந்தவ மாமுனி யாம்பக வற்குக்
கருவூர்ப் பெரும்பதிக் கட்பெரும் புலைச்சி
ஆதி வயிற்றினி லன்றவ தரித்த
காண்முளை யாகிய கபிலனும் யானே
என்னுடன் பிறந்தவ ரெத்தனை பேரெனில்
ஆண்பால் மூவர் பெண்பால் நால்வர்
யாம்வளர் திறஞ்சிறி தியம்புவல் கேண்மின்
ஊற்றுக் காடெனு மூர்தனிற் றங்கியே
வண்ணா ரகத்தில் உப்பை வளர்ந்தனள்
காவிரிப்பூம் பட்டினத்திற் கள்விலைஞர் சேரியில்
சான்றா ரகந்தனில் உறுவை வளர்ந்தனள்
நரப்புக் கருவியோர் நண்ணிடுஞ் சேரியில்
பாண ரகத்தில் ஔவை வளர்ந்தாள்
குறவர் கோமான் கொய்தினைப் புனஞ்சூழ்
வண்மலைச் சாரலில் வள்ளி வளர்ந்தனள்

தொண்டை மண்டலத்தில் வண்டமிழ் மயிலைப்
பறைய ரிடத்தில் வள்ளுவர் வளர்ந்தனர்
அரும்பார் சோலைச் சுரும்பார் வஞ்சி
அதிக னில்லிடை யதிகமான் வளர்ந்தனன்
பாரூர் நீர்நாட் டாரூர் தன்னில்
அந்தணர் வளர்க்க யானும் வளர்ந்தேன்.
(ஆதலால்)
மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ
காற்றுஞ் சிலரை நீக்கி வீசுமோ
மானிலஞ் சுமக்க மாட்டே னென்னுமோ
கதிரோன் சிலரைக் காயே னென்னுமோ
வாழ் நான்குசாதிக் குணவு நாட்டிலும்
கீழ் நான்குசாதிக் குணவு காட்டிலுமோ
திருவும் வறுமையுஞ் செய்தவப் பேறும்
சாவதும் வேறிலை தரணி யோர்க்கே
குலமு மொன்றே குடியு மொன்றே
இறப்பு மொன்றே பிறப்பு மொன்றே
வழிபடு தெய்வமு மொன்றே யாதலால்
முன்னோ ருரைத்த மொழி தவறாமல்
எந்நா ளாயினு மிரப்பவர்க் கிட்டுப்
புலையுங் கொலையுங் களவுந் தவிர்ந்து
நிலைபெற வறத்தி னிற்பதை யறிந்து
ஆணும் பெண்ணு மல்லதை யுணர்ந்து
பேணி யுரைப்பது பிழையெனப் படாது
சிறப்புஞ் சீலமு மல்லது
பிறப்பு நலந் தருமோ
பேதை யீரே !

ஆகையால் ஒருவன் பத்திமார்க்கத்தை அடைய, அவனது சாதிகுலம் ஒருக்காலும் துணையாயிருப்பதில்லை. அவனது மனோநிலைமையே காரணமாயிருக்கிறது.

நீதிசாரம்.

ஜென்மனு ஜாயதே சூத்திர:
கர்மணு ஜாயதே த்விஜ:
வேதபாடந்து விப்ராணும்
பிரமக்கியானந்து ப்ராமண:

வேமன்னபத்தியம்.

அக்கியானமே சூத்திரத்துவமு
சுக்கியானமே பிரம்மனுஸ்ருதுலனுவினுரா
யக்கியானமுடிகி வால்மீகி
சுக்கியானபு பிரம்மமொந்தே சூடரவேமா.

(இ-ள்) அஞ்ஞானமே சூத்திரத்துவம். சூத்திரன் என்றால் பாமரன் என்பது பொருள். எவனுக்கு அஞ்ஞானம் நீங்கவில்லையோ அவனே சூத்திரனவன். பிரம்ம ஞானம் உள்ளவன் சூத்திரன் என்றழைக்கப்பெற்றவனு யிருந்தாலும் பிரம்ம ஞானியேயாவன். வனவேடராகிய வான்மீகர் பிரம்ம ஞானம் அடைந்ததால் பிரம்ம ஞானி யென்று பேர்படைத்தார். மேற்குலத்திற் பிறந்தவனுனுலும் ஆத்மானுசந்தானத்தை அப்பியாசிக்காதவன் சூத்திரனேயாவான் (என்பதாம்).

கச்சலு காமுலு கூடுக
திரச்சங்கர ஜகமுபுட்டெ தாதலநாடுன
இச்சட குலசுண் டெவ்வடு
நச்சரிதமு அந்கரனுசு சாடரவேமா.

(இ-ள்.) சம்போகத்தினுல் நாசுவிந்து கூடி எல்லா மனிதர்களும் பிறந்திருக்கிறார்கள். அதில் உயர்குலமென்றும் தாழ்ந்த குலமென்றும் வித்தியாசமே யில்லை. அப்ப

யிருக்க, யோனி வழியே பிறந்தவர்களில் ஒருவருக்கொருவர் பிரம ஞான-ஆன்மாறு சந்தான உயர்வு அடைந்திருந்தாலன்றி, பேதஞ் சொல்லிக் கொள்வது போல் முழு மூடத்தனம் வேறே யில்லை ' என்பதாம்).

எவர்களிடம் ஓதல் - ஓதுவித்தல் . வேட்டல் - வேட்பித்தல் - ஈதல் - ஏற்றல் என்னும் அறுவகைத் தொழிலும் காணப்பெறுகின்றதோ, அவர்களே அந்தணரென்று சாத்திரங்கள் முறையிடுகின்றன. இதனாலேயே அந்தணர்களை அறு தொழிலாளர் என்று சொல்லப்பெறுகிறது. இக் காலத்தவர்களோ பெரும்பாலும் ஓதல் - வேட்டல் - ஏற்றல் என்னும் முத்தொழிலாளராகவே காணப்பெறுகிறார்கள். இதுவும் காலவிபரீதமே!

ஒரு நாள் ஒரு குயவன், தன்னிடத்திலிருந்த சால் - பானை - சட்டி - தோண்டி - குடம் - சாடி - தாளி - மடக்கு - அகல் - மிடா - தொட்டி முதலிய அனேக சாமான்களை விற்பதற்காகக் கடைத் தெருவிற் கொண்டு வந்து வைத்திருந்தான். அவைகளில் சாடியானது, மற்றப் பாத்திரங்களைப் பார்க்கிலும் அழகாயும், மினு மினுப்பாயும் இருந்தது. அதனால் அது, ஏனைய பாத்திரங்கள் ஒவ்வொன்றையும் தனித் தனியே பார்த்து, நீ ஒரு தாழ்ந்த சாதிப் பயல்; நீ மிகவும் கேவலமானவன்; ஏழை - எளியயவர்கள் வீட்டிலேயே வசிப்பாய்; அவர்கள் உன்னைக் கௌரவமாகப் போற்றி வாழாமல் இழிவாகவும், அலட்சியமாகவும் உபயோகிப்பார்கள். நானோ! அப்படியல்ல! உயர்ந்த சாதியை யுடையவன்; பிரபுக்கள் வீட்டிலேயே வசிப்பேன்; என் மேல் மல்லிகை - முல்லை - ரோஜா முதலிய பரிமள மிகுந்த புட்பங்களையும், தங்க நகைகளையும்

வைப்பார்கள்; நான் உயர்ந்த தானத்தில் பொன்னே போல் போற்றப்பட்டு வாழ்வேன். ஆகையால் உனக்கு நான் பல்லாயிர மடங்கு உயர்ந்தவன் என்று இகழ்ந்தது. அதற்குப் பக்கத்திலிருந்த சட்டியானது மனம் வருந்திப் பின்வருமாறு சொல்லிற்று.

அடே! மூடா? நாம் இருவரும் ஒரே குழியிலிருந் தெடுத்த மண்தான்; ஒரே குயவனுடைய கைவேலைதான். ஒருநாளில்லா விட்டாலும் ஒரு நாள் நாமிருவரும், நமது இனத்தார்களும் உடைந்துபோவது நிச்சயம். அப் பொழுது நம்மை வெளியில் எறிந்து விடுவார்கள், பல பேர் காலில் மிதிபட்டு, மண்ணோடு மண்ணாய்ப் புதைந்து கிடப்போம். குலாலனுக்கு இஷ்ட மிருந்திருக்குமானால் என்னை - உன்னைப் போலவும், உன்னை - என்னைப்போல வும் செய்திருக்கக்கூடும். அப்பொழுது நீ ஒரு சட்டியாக இருப்பாய்; நான் ஒரு சாடியாக இருப்பேன். ஆகை யால் ஆய்ந்தோய்ந்து பாராமல் பெருமை பேச உனக்கு வாய் எப்படி வந்தது என்று கூறிற்று. அதைக் கேட்ட பின் சாடியானது "குந்தினையா குரங்கே! சந்தடி அடங்க," என்பதுபோல் பதில் பேசமுடியாமல் அடங்கிப்போயிற்று. அதுபோல், கடவுள் எல்லோரையும் ஒரே அவயவத்தோடு படைத்திருக்க விவேக சூனியர்கள், 'தன்பெருமை சொல் லியே தன்னைப் புகழ்ந்தபதர்' என்பதுபோல் உயர்ந்த சாதி யென்றும், தாழ்ந்த சாதியென்றும் பேசிக்கொள்வது எத் தகைய மூடத்தனம். கவர்னர் என்றாவது கலெக்டர் என் றாவது ஜட்சி என்றாவது ஒரு சாதி கிடையாது. படிப்புக் குத் தக்கபடி உத்தியோகங் கிடைக்கிறது. அதுபோல் அறிவிற்குத் தக்கபடி குலம் வகுக்கவேண்டுமேயன்றி உய

ர்ந்தகுலம் தாழ்ந்தகுலம் என்று ஏற்படுத்தி முழுமூடர்களை யும் உயர்ந்த குலத்தவர் என்று சொல்பவரும் முழு மூடரே யாவர். ஒருவனுடைய உயர்வுக்கு அவனுடைய மதமும் குலமும் துணையாயிருப்பதில்லை. அறிவிற் சிறந்தவர்கள் யாவராயிருப்பினும் அவர்கள் உயர்ந்த சாதியேயாம். அறி வற்றவர் எத்தகைய உயர்குலத்திற் பிறந்திருப்பினும் தாழ்ந் தவர்களேயாம்.

குறள்.

அறிவுடையார் எல்லாம் உடையார் அஃதிலார்
என்னுடைய ரேனு மிலர்.

திருவாசகம்.

உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்
சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும்
கவலைக் கெடுத்துகந்த வினைகள் தந்தருளுஞ்
செயலைப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டோமோ.

## சங்கராச்சாரியரும்-தீட்டும்.

சர்வ கலைக்கியானங்களையும் ஐயந்திரிபறக் கற்ற ஆதி சங்கராச்சாரியார், ஒரு காலத்தில் காசிமாநகரம் சென்றிருந் தார். அவர் அளவிறந்த நூற்களை வாசித்திருந்தும் உயர்வு-தாழ்வு என்னும் பேதம் நீங்காததை உத்தேசித்து கடவு ளானவர், நீசவடிவங் கொண்டுவந்து, அவர் ஸ்நானஞ் செய்துவிட்டுக் கோவிலுக்குப் போகும்வேளையில் அவர் மேல் இடித்தாராம். சங்கராச்சாரியார் அடே! நீசா! என்னைத் தொட்டு விட்டனையே! தீட்டாகிவிட்டதே! யென்று நிந்தித்தனராம். அப்போது கடவுள் நீ எந்த அடையாளத்தைக் குறித்து நீசன் என்று சொன்னாய்!

இந்தப் பேதம் அகலாதிருக்கும்போது நீ எப்படி பிராமணனாவாய்! சகல வஸ்துக்களையும் பிரம்மமயமாகப் பாவித்தவனன்றோ பிராமணன்! நீ கற்றிருக்கிற சாத்திரங்களாற் பயனென்னை? என்று சொல்லி மறைந்தனராம்.

### சுந்தரமூர்த்தியும்-தூதுளங் கீரையும்.

திருவாரூரிலிருந்து மாயவரம் போகும் அயாதமார்க்கத்தில் பூந்தோட்டம் (South Indian Railway) இருப்புப் பாதைக்குக் குணபால், ஒரு கடிகை தூரத்திலுள்ள திருவம்பர் (அம்பல்) என்கிற கிராமத்தில், உண்மைப் பிராமண குலத்தில், சோமாசிமாற நாயனார் என்பவர் அவதரித்திருந்தார். அவர் யாகம் செய்வதிலேயே அதிக விருப்பமுள்ளவர். அக்காலத்தில் திருவாரூரிலிருந்த சுந்தரமூர்த்தி நாயனாருக்கு, அவர் அறுமதி பெறுமலே நீண்டகாலம் சமையலுக்கு தூதுளங்கீரை கொண்டுபோய்க் கொடுத்து வந்தனர். ஒருநாள், இடையிலுள்ள ஆற்றில் பிரவாகம் வந்தபடியால் கீரை கொண்டுவரத் தடை யேற்பட்டு, சமைக்கப் பெறவில்லை. அக்கீரையில் அதிக ஆர்வமுடையவன்றொண்டர், ஒருநாளேனும் தவறுமல் சமைத்துவந்த கீரையை இன்றையதினம் ஏன் பாகஞ் செய்யவில்லை? யென வினவினர். சுவாமி! வழக்கம்போல் கீரை கொண்டு வருபவன் இன்றையதினம் வரவில்லை எனலும், நாயனார், 'அவன் யாவன்? என்று வினவ, அவன் ஊரும், பேரும் தெரியவில்லை' யென்றனர். நாளையதினம் வந்தால் அவனைத் தன்னிடம் அழைத்து வரும்படியாகச் சுந்தரமூர்த்தி கட்டளையிட்டனர்.

மறுநாள் கீரைகொண்டுவந்த நாயனாரை நாவலூராரிடம் அழைத்துப்போய் விடுத்தனர். நீர் யாது காரணத்

திற்காக இவ்வளவு காலம் கீரை கொண்டுவந்து கொடுத்தீர்? எனக்கேட்க; சுவாமி! அடியேனுடைய மனோரதத்தைப் பூர்த்திசெய்வதாக வாக்களித்தால் சொல்கிறேன் என்று வணங்கிக்கூற, அவ்வாறே செய்கிறேன் என்று வாக்களித்தனர். பின்னர் சோமாசிமாறர் சுந்தரமூர்த்தி நாயனாரை நோக்கி, சுவாமி! அடியேன் யாகம் செய்வதில் அதிக சங்கற்பமுடையேன்; யான் அளிக்கும் அவிர்ப்பாகத்தைச் சிவபெருமான் நேரில்வந்து வாங்கவேண்டும்; இதுவே என்னுடைய பிரார்த்தனை; இதைப் பூர்த்திசெய்து வைப்பதற்காகவே தங்களுக்கு இவ்வூழியஞ் செய்துவந்தேன் என்றுகூறி அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கினர்.

பெரிய புராணம்.

சீருந் திருவும் பொலியுந் திருவா ரூரெய்தி
ஆரந் திகழ்மார்பி னனுக்கவன் றொண்டர்க் கன்பாற்
சாரும் பெருநண்பு சிறப்ப வடைந்து தங்கிப்
பாரும் விசும்பும் பணியும் பதம்பற்றி யுள்ளார்.

## தியாகேசர் தோற்றமும்-பிராமணர் ஏமாற்றமும்.

சோமாசிமாற நாயனார் கூறியது அருமையான காரியமாயினும், அவர்செய்த பத்திப் பிரவாகத்தையும், தாம் கொடுத்துவிட்ட வாக்குத்தத்தத்தையும் நினைந்து-நினைந்து, எப்படிப் பூர்த்திசெய்வது என்று திகைத்து மனம் புழுங்கி, உடனே தியாகேசர் சன்னதியிற் சென்று நிகழ்ந்தவற்றை ஆதியோடந்தமாக விண்ணப்பித்து மன்றாடினர். தியாகப்பெருமான் ‘என்னைத் தெரிந்து கொடுத்தால் பெற்றுக்கொள்ளுகிறேன்’ என்று திருவுளம்பற்றி அறுத்த பசுவின் கன்றைத் தோளில் தாங்கியும், உமாதேவி கட்குடத்

தைத் தலையிற் சுமந்து வரவும், பறைத்தப்புகள் முழங்கவும், அனேக ஞமலிகள் சூழ்ந்துவரவும் நீசவடிவத்துடன், திரு மாகாளத்தில் பல்லாயிரம் பிராமணர்களுடன் சோமாசி மாற நாயனுர் செய்துகொண்டிருந்த யாகசாலைக்குள் நுழைந்தனர். அக்கோலாகலத்தைக் கண்டவுடன் மந்திரம் சொல்லிக்கொண்டிருந்த ஏனைய பிராமணர்களெல்லாம், நீசன் வந்துவிட்டான்! நீசன் வந்துவிட்டான்!! என்று பேரோலமிட்டு, புலியைக்கண்ட மான்கூட்டம் மருண்டு ஓடுவதுபோல், ஒருவர் போனதிசை ஒருவர் அறியாதபடி ஓடி மறைந்தனர்.

நீசனுயிருந்தால் பல பிராமணர்கள் சேர்ந்து யாகம் செய்யுமிடத்தில் நெஞ்சம் அஞ்சாமல் வருவானு? இவர் கடவுளாகத்தான் இருக்கவேண்டுமென்று சோமாசிமாற நாயனுர் நினைந்து, அவர் கையில் அவிர்ப்பாகத்தைக் கொடுத்து முத்தியை அடைந்தனர்; சிவபெருமானும் மறைந் தனர். ஏனைய பிராமணர்களனைவரும், ஏமாந்து மோசம் போனேமே யென்று மனம் வாடி வருந்தினர்.

உண்மையை யறியமுடியாமல் வெளி வேடத்தைக் கண்டு மருண்டோடிய போலிப் பிராமணர்கள், சிவபெரு மானை நீசனென்று கூறிய தோஷத்தால் நீசத்தன்மை அடைந்து, இன்றைக்கும் மத்தியானப் பறையர் என்னும் பட்டம் வழங்கப்பெறுகின்றனர். இந்த மத்தியானப் பறை யர் என்னும் பிராமணர்களுக்கும், ஏனைய பிராமணர்களுக் கும் கொள்வன-கொடுப்பன இன்றளவும் கிடையாததே போதிய சான்று பகர்கின்றது.

உண்மையான அந்தரங்கத்தை அறியாமல், ஆதிரங் கம்-சீரங்கம் என்னும் ஊர்களுக்கு ஓடியலைந்து வாடி

வருந்துபவர்களே! வெளிவேடத்தைக்கண்டு அடியார்களுக்குச் சாதிநிரூபணஞ் செய்வீராயின், நீங்கள் மேல் நிகழ்ந்தபடி நீசத்தன்மை யடைவது திண்ணம்.

திருமந்திரம்.

ஆன சமய மதுவிது நன்றெனும்
ஈன மனிதர் மயக்க மதுவொழி
கானங் கடந்த கடவுளை நாடுமின்
ஊனங் கடந்த வுருவது வாமே.

சாதி-சமயங்களில் அபிமானித்துத் தர்க்கம் பேசி அலையும் சமயத்தவர்களே! மாயை என்னும் மழை விடாது பெய்யப்பெற்ற பிரபஞ்சமாகிய சேற்று வழியின் சறுக்கலில் நடப்போர்கள் வழுக்கி விடாமலும், ஞானக் கண்ணின்றி ஊனக்கண்ணுடைய மாலைக்கண்ணர்கள் தட்டிமுட்டித் தடுமாறித் தவறி விழுந்து விடாமலும் நடந்துகொள்வதற்கு, அன்னவர்கள் சௌகரியத்தை உத்தேசித்தே சாதியையும், மதத்தையும் பல விகற்பங்களாகப் பிரித்து ஊன்று கோல்போல் ஏற்படுத்தி யிருக்கின்றனர் ஆன்றோர். பிரபஞ்சச் சறுக்கலில் நடக்கிறவர்கள் சாதி-மதமாகிய ஊன்றுகோலை ஓர் ஆதரவுக்காக வைத்துக்கொண்டு, தன் பலத்தைக்கொண்டே நடக்கவேண்டும். இங்ஙனமின்றி, ஊன்று கோலையே முழுப்பலமாக எண்ணி நடந்தால், தான் நினைத்த விடத்திற்கு ஒருபோதும் போகமுடியாது. வாசிக்கத் தெரியாதவனுக்குச் சாத்திரம் சுமையாவதுபோல், நடக்கமுடியாதவனுக்கு ஊன்று கோலும் பாரமேயாகும். அதுபோல் சாதிகளையும், மதங்களையும் ஒரு பற்றுக்கோடாக—அதாவது வீட்டில் ஏறுவதற்குப் படிகளைப் போல் எண்ணிக்கொள்ள வேண்டுமேயன்றி, படிகளே

வீடென்று கருதி அவ்விடத்திலேயே நின்று விட்டவன் போல், சாதி-சமயங்களையே முத்திகொடுக்கும் சாதன மென்று நினைந்து, வாணாளை வீணாகக் கழித்துவிடாமல் ஆன்மஞான வழிக்குப் பிரயத்தனப் படவேண்டும்.

திருவருட்பிரகாசவள்ளல்.

குலத்திலே சமயக் குழியிலே நரகக்
குழியிலே குமைந்துவீண் பொழுது
நிலத்திலே போக்கி மயங்கியே மாந்து
நிற்கின்றார் நிற்கநா னுவந்து
வலத்திலே நினது வசத்திலே நின்றேன்
மகிழ்ந்துநீ யென்னுள மெனுமம்
பலத்திலே நின்றாய் எனக்கிது போதும்
பண்ணிய தவம்பலித் ததுவே.

---

## பதினாறாவது அத்தியாயம்.

## ஆயுள் பரீட்சை.

கலிவிருத்தம்.

புவன வாழ்வைச் சதமெனப் போற்றியே
பவமு ளோர்களின் ஆயுட் பரீட்சையாம்
அவமி ருத்துகள் அண்டவொ ணாவகை
விவர மாக விரித்தெடுத் தோதுவாம்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்"

என்ற திருக்குறட் கருத்தின்படி சகலமும் விதியின்படியே நடக்கிறது; விதியை யன்றி நாமாகப் பிறிதொன்றும்

செய்துகொள்ள முடியாது என்ற நிச்சய விவேகமானது கற்றவர்க்கும், மற்றவர்க்கும் நன்முகத் தெரிந்திருந்தாலும் கிரகங்களின் நிலையையும், அவற்றின் பலாபலன்களையும் தெரிந்தோ-கேட்டோ சாந்திசெய்து கொள்கின்றது யாவரும் அறிந்தவிஷயம். அதுபோல் ஆயுட் பாகமானது இன்னாருக்கு இன்னபடி யென்று ஏற்பட்டிருந்தபோதிலும், சிற்சில பரீட்சைகளால் அதையுணர்ந்து சாந்திசெய்து கொள்ளலாமென்று நூற் சம்மதமும், சில அநுபவமுமிருந்து வருகின்றது.

## சாயா புருட தெரிசனம்.

ஆகாயத்தில் மேகமில்லாமல் நிர்மலமாக விருக்கும் போது, பூமியில் மேடு-பள்ள மில்லாத சமமான விடத்தில் சுமார் காலை 9-மணி அல்லது 10-மணிக்குள்ளாகச் சூரியன் நன்முகப் பிரகாசிக்கும்போது, தனது உருவத்தின் நிழல் 5 அடி முதல் 10 அடிக்குட்பட்ட தருணத்தில், அந் நிழல் முகமாக மேற்கு நோக்கி நின்று, கைகள் இரண்டையும் தொங்கவிட்டு, விழியிமையாமல் அந்நிழலில் தோன்றும் தலை-கை-கால் இவ்வுறுப்புகளி லொன்றைக் கூர்மையாக நோக்கி, அப்படியே ஆகாயத்தை நோக்க, அங்கே தன் உருவம் தோன்றும். அவ்வுரு பொன்னிறமாகில் செல்வ சம்பத்து உண்டாகும்; வெண்மையெனில் பிராண பயமில்லை; கருமையாகில் நோயுண்டாகும். இஃதன்றி, அவ்வுருவில் கை-கால் இவைகளில் ஏதேனும் தோன்முதிருந்தால் ஆறு மாதத்தில் மரணம். இப்படியே சந்திரனிலும் பார்க்கலாம். சாயாதெரிசனம் பார்க்கும்போது தன்னுடைய நிழல் ஆடினுல் மறுநாளில் மரணம். இந்தச் சாயாபுருட தெரிசனத்தை விடாமல் 12-வருடம் தெரி

சித்துவந்தால் அந்நிழல் ஓர் ரூபமாகித் தன்னுடன் பேசும். அட்டமா சித்துக்களையும் பெறலாம். அந்நிழல் தன்னுடன் கூடவே திரியும்; இருந்தால் அதுவும் இருக்கும்; படுத்தால் அதுவும் படுக்கும்; முக்காலங்களையும், நன்மை-தீமைகளையும் சொல்லும்.

அலம்தர இலா றப்பிக | நெடியநிழலை அல்லாவின் வழியிலே
கைப மத்தல் வில்லி | பார்க்கவில்லையா ?

(குர்ஆன் 19-3)

ஞானமணிமாலை.

முகம் தெரியும் நம்மிறசூல் மெய்முழுது மேதெரியும்
அகம் தெரியும். ... ... ...

இவ்வித அப்பியாசமுள்ளவர்கள் மரம் வண்டிகளின் சொரூபத்தையும் ஏனைய மனிதர்கள் வடிவத்தையும் பார்க்கலாம். ஆனால் உத்தம அப்பியாசிகள் தவிர ஏனையோர்களுக்கு இந்த சாயாவுருவங்கள் பிரதிபலிப்பதில்லை. இந்த அப்பியாசங்களை நாம் சில ஆஷிக்கீன்களுக்கு கூறியிருக்கிறோம். ஆனால் சிற்சில உத்தம அதிகாரிகள் தவிர ஏனையோர்கள் தங்களுக்கு ஒன்றும் தோன்றவில்லையென்று கூறக்கேட்டிருக்கிறோம்.

வானவில் பரீட்சை.

ஆகாயத்தில் களங்கமின்றிய வேளையில், சூரியன் பிரகாசிக்கும்போது சரம் பார்ப்பவன், மரம் அல்லது வீட்டு நிழலிலிருந்துகொண்டு, தனது வாய் நிரம்ப நீர் பருகி, அந்நிழலருகில் துகள் பறக்கும்படி கொப்பளித்து அத்துகளை நோக்கினால் வானவில் தோன்றும். அது தோன்றினால் அன்று முதல் ஒரு வருடம் வரை மரணபயமில்லை. வாய்

நீரை உமிழும்போது அந்த நீர் தன்மீது சிந்தினால், அன்று முதல் ஆறுமாதத்தில் மரணம் உண்டாகும். அந்த வில் மாறி ஒரு பெண்ணுருவாகத் தோன்றினாலும் ஆறு மாதங்களில் மரணம் என்று அறியவேண்டியது.

## சந்திர - சூரிய பரீட்சை.

ஒரு செப்பகலில் உருக்கின பசு நெய்யைவிட்டு, அதில் பூரணச் சந்திரனை அல்லது அமாவாசை யன்று சூரியனைப் பார்த்தால், சூரியனாவது-சந்திரனாவது வெண்ணிறமாகத் தோன்றினால் பிராணபயமில்லை; செந்நிறமாகில் சம்பத்துண்டாகும்; பொன்னிறமாகில் கெடுதியுண்டாம்; பசுமையாகில் நோயுண்டாம் ; கருமையாகில் மரணம் உண்டாம். அம்மதிரவியில் தென்புறத்து வட்டம் குறைந்தால் ஒரு வருடத்தில் மரணம்; மேற்புறம் குறைந்தால் ஆறு மாதத்தில் மரணம்; வடபுறம் குறைந்தால் மூன்று மாதத்தில் மரணம்; கீழ்புறம் குறைந்தால் ஒரு மாதத்தில் மரணம்; நடுவில் துவாரம்போல் தோன்றினால் பத்து நாளில் மரணம் என்றறிகவும்.

## சுப்பிரமணியர் ஞானம்.

அறைகிறேன் என்மகனே மாறு கேளு
அப்பனே நாளைமுதல் சாவோர்க் கெல்லாம்
நிறைகிறேன் காலனென்ற நிழல்தா னப்பா
நிச்சயமாய்க் கூத்தாட்டம் நிதானம் காட்டும்.
வறைகிறேன் அதையறிந்து மைந்தா நீயும்
வகையான மும்மூலம் வழியாய்க் கொண்டால்
நிறைகிறேன் அவனுயிரும் போகா தப்பா
நிச்சயமாய்ச் சொல்லுகிறேன் நினைவாய்த் தேரே.

திருமலர்.

*தப்பாது வாய்நீர்தான் தாக்கித்தன் மேல்வீழில்*
*ஒப்பாகத் தனுமறைய ஒழிந்திடுவன் மதியாறில்*
*செப்பாகத் தானிருக்கச் சேர்ந்தநிழல் அலைந்திடினும்*
*அப்பாகேள் சாவுநிசம் அறிந்துகற்பங் கொண்டிடே.*

ஏதாவது வியாதி கண்டிருக்கும்போது, பிங்கலை ஒரு நாள் விடாமல் ஓடினால் மூன்று வருடத்திலும், இரண்டு நாள் விடாமல் ஓடினால் இரண்டு வருடத்திலும், மூன்று நாள் விடாமல் தொடர்ச்சியாக ஓடினால் ஒரு வருடத்திலும்; இடகலை மூன்று நாள் விடாமல் ஓடினால் ஒரு மாதத்திலும்; சுழிமுனை யென்னும் உபயநாடி பத்துநாள் விடாமல் ஓடினால் ஆறு மாதத்திலும் மரணமுண்டாம்.

நாக்கு-வாய்-பல்-நகம்-இவைகள் கறுப்பேறினால் ஆறு நாளிலும், நாசி வழியாகச்செல்லும் சுவாசம் வாய்வழியே சென்றால் மூன்று நாளிலும், பித்தரோகத்தினால் இளைத்த உடல் தூலித்தால் ஒரு மாதத்திலும், சிலேத்துமம் வெள்ளம்போல் அதிகமாய் ஓடினால் மறுநாளிலும், பித்தம் சிதறி ஓடினால் மூன்று நாளிலும், வாதம் சிதறியோடினால் எட்டு நாளிலும், வாத-பித்தம் இரண்டும் சேர்ந்து நிலைதப்பிச் சிதறியோடினால் ஐந்து நாளிலும், வாத-பித்த-சிலேத்துமம் மூன்றும் கூடித் தத்தம் நிலைதப்பிச் சிதறியோடினால் ஒரு மண்டலத்திலும், அவை மூன்றும் ஒன்றாய்க்கூடி வெட்டுண்ட அரணை வால் துடிப்பதுபோல் துடித்தால் ஒரு தினத்திலும், அவை மூன்றுங்கூடி தேட் கொடுக்குபோலாடி ஓடம்போல் நடந்தால் ஒரு மாதத்திலும், காலையிற் சிலேத்தும நாடியும், உச்சியிற் பித்தநாடியும், மாலையில் வாதநாடியும் வகைதப்பி முறையில்லாமல் ஓடினால் நாலைந்து தினத்தி

லும், சிலேத்துமநாடி மயில்போலும் அட்டைபோலும் பதறி நின்றால் ஏழு தினத்திலும் மரணமுண்டாம் என்றறிக.

சூதமுனிநாடி;

வாதமது முன்னெழுந்து தாழ்ந்து சற்றே
மயிலதுபோல் நடைநடந்து மங்கு மாகில்
சேதமது இல்லையெனப் தாறு மாண்டிற்
செப்புவர்கள் மரணமென்று தீர்க்க மாக
நாதமது குறைந்துவிட்டிற் போலே கண்டால்
நாளெட்டில் மரணமென்று நவில லாகும்
பேதமது இல்லையிது பிசகி டாமல்
பெரியவனுஞ் சூதமுனி பேசுங் காலே.

பாளமாகக் கிழித்த துணியை நெய்யில் நனைத்து மணிக்கட்டைச் சுற்றி மூன்றேமுக்கால் நாழிகை (1½-மணி) நேரம் சென்றபின் அவிழ்த்துப்பார்க்க வாதநாடி சிறுத்து வாங்கினாலும், பாம்புபோல் நெளிந்தோடினாலும் இருபத்திரண்டாவது நாளிலும், உதைத்து வாங்கினால் ஒன்பது நாளிலும், அட்டைபோல் நடந்தால் மூன்று தினத்திலும், வீணையின் தந்திபோல் சுண்டினால் அன்று பொழுதிலும், பக்கம் சென்று எதிர்த்து வாங்கினால் முப்பது நாளிலும் மரணமுண்டாம்.

இடது உள்ளங்கால் குளிர்ந்தாலும், வலது உள்ளங்கால் சுட்டாலும், (*) குழைச்சு குளிர்ந்தாலும் பத்துநாளில் மரணமுண்டாம். குழைச்சுகள் இரண்டும் குளிர்ந்து உச்சி வியர்த்து, இளைப்பு-விக்கல் தோன்றி, விழியிருண்டாலும்; பிடரி-நெற்றி-கழுத்தின் உட்புறம் குளிர்ந்து விழி நீல நிற

(*) குழைச்சு—கை-கால் முதலியவைகளின் பொருத்து.

மாகி, நெஞ்சில் கபம் கட்டினும் மூன்று தினத்தில் மரணம் உண்டாம். அடித்தொடையும்-இரண்டு உள்ளங்கால்களும் குளிர்ந்து, இருசெவியும் விறைத்து நின்றால் இரண்டு தினத்தில் மரணமுண்டாம் என்றறிக.

இவற்றின் விரிவை அகஸ்தியர் ஆயுள்வேதம் 1200-லும், திருமூல நாயனார், அகஸ்திய மகாமுனிவர், தேரையர் இவர்களது பாடல்கள் சேர்ந்த குணவாகடத்திரட்டு 421-லும், திருமந்திரம் 3000-த்திலும், ஸ்ரீ மகாபாரதம் அனுசாசனிக பருவத்திலும் பார்த்துணர்க. அவற்றின் விரிவஞ்சிச் சுருக்கப்பெற்றும்.

மேற்கூறி வந்த விஷயங்களில் எது-எது கூடுதல்-குறைத்தலாக இருந்தாலும், நியாயமானதை யுணர்ந்து அவ்வித ஆபத்துகள் வருவதற்குள் கடவுளை வழிபட்டுய்ய வேண்டியது ஒவ்வொருவரின் கடமையாகும்.

---

## பதினேழாவது அத்தியாயம்.

## சங்கீதமே சாயுச்சிய வழி.

---

விருத்தம்.

பூதமுத லாறாறு தத்துவங்க ளறியாத பொருளைக் காணப்
போதமுறு பேரின்பப் பாலாலே பலபுகன்று பொருந்தக் கூற
நாதவடி வாகியசங் கீதமதை வகுத்துமறை நாலின் மூன்றும் [வாம்.
வேதமெனப் பெரியோர்கள் நவின்றதனை நன்குணர விரித்துச் சொல்

சங்கீதம் ச-ரி-க-ம-ப-த-நி என்னும் ஏழு அட்சரங்கள் கொண்ட அருமையான வித்தை. இந்த ஏழு அட்சரங்

களே மாறி-மாறி, எடுத்தல்-நலிதல்-படுத்தல் என்பவைக்கு முறையே எச்சுத்தாயி - மத்திமத்தாயி - மந்தரத்தாயி என்னும் சூட்சுமமான முயற்சிகளினுல் எவ்வகைய இசைகளுக்கும் காரணமாகப் பொருந்தி நிற்கின்றன. இவை ஆரம்பத்தில் (*) 32 வகையான முக்கிய இராகங்களோடும், வேறுபல இராகங்களோடும் தோன்றியிருந்து, இக்காலத்தில் இந்துஸ்தானி முதலிய இராகங்கள் கலக்கப்பெற்று இவ்வளவு-அவ்வளவு என்று வரையறுத்துச் சொல்வதற்கு இயலாத அளவிறந்த இராகங்களுடன் வழங்கப் பெறுகின்றன.

இவையன்றி பலவகைப்பட வழங்கும் இராகங்களை இங்கு கூறில் பெருகுமென நிறுத்தப்பெற்றது.

## சங்கீத மகத்துவம்.

இத்தகைய சங்கீதமானது சகல பிராணிகளையும் தன் வசப்படுத்தும் வல்லமையுடையதாய் இருக்கின்றது. அதிக சாதுவான ஆடு-மாடுகளும் வேணுகானம் என்னும் மூங்கிற்குழலாலாய புள்ளாங்குழல் முதலிய கீதத்தைக் கேட்டுத் தம்மை மறந்து நிற்கின்றன. அவற்றை மேய்ப்பவரும், அவை நீர் அருந்தும்போது இன்னிசையெழுப்பி மகிழச் செய்கின்றனர். சில துட்டத்தனமுள்ள பசுக்கள்

(*) பைரவி - தேவக்கிரியை - மேகரஞ்சி - குறிஞ்சி - பூபாளம்-வேளாவளி-மலகரி-பௌளி-சீராகம் - இந்தோளம் -பல்லதி-சாவேரி-பட்டமஞ்சரி-தேசி-இலலிதை-தோடி-வசந்தம்- இராமக்கிரியை-வராளி-கைசிகம் - மாளவி - நாராயணி - குண்டக்கிரியை-கூர்ச்சரி-பங்காளம்-தன்னியாசி - காம்போதி - கௌளி - நாட்டை -தேசாக்கரி-காந்தாரி-சாரங்கம் என்பனவாம்.

இனிய கீதத்தைக் கேட்டு மனம் அடங்கிப் பால் கறக்கின்றன. நகராத பெரிய மலைக் கற்களையும் 'ஏலப்பா ஏலோ' என்று பாட்டுப்பாடி நகர்த்துகிறார்கள். வண்டிகளிலும் ஏருகளிலும் சாலம் போட்டுப் படுத்துக் கொள்ளுகின்ற மாடுகளும் காளைப்பாட்டுப் பாடினால் நடந்துசெல்கின்றன. பூசாரிகள் அடிக்கும் உடுக்கையின் நாதமானது சிலருக்கு ஆவேசம் எழச்செய்கின்றன. தம்புரா-பிடில்-வீணை முதலிய வாத்தியங்களின் இன்னிசையால் எலி-சர்ப்பம் முதலிய பிராணிகளை ஒரு பெரியவர் தருவித்தார் என்பது கர்னபரம்பரை.

## சங்கீதமே சருவ வசியம்.

ஆங்கிலேய பாடப் புத்தகத்தில், ஒரு இந்துஸ்தானிக்காரர் இன்னிசையெழுப்பி எலிகளைத் தருவித்ததாகப் படிக்கப்பெற்றிருக்கிறோம். கொடிய விஷ சந்துக்களாகிய சர்ப்பங்களும், மோடி முதலிய வாத்தியத்தின் ஓசையைக் கேட்டு அசைவற்று நிற்கின்றன. மாம்-மலை முதலிய இந்திரிய வுணர்ச்சி யில்லாத அசரப்பொருள்களும் இன்னிசையைக் கேட்டு இளகிநிற்கின்றன என்னும் புராணக்கூற்றும் பலவுள; அவற்றையும் இக்காலத்துப் பௌதிக சாஸ்திரிகளாகிய தத்துவ சாஸ்திரிகள் நியாயமென்றே அங்கீகரிக்கின்றனர். பிரான்சு தேசத்தில் பெரிய வைத்தியசாலைகளைக் கட்டி, அதில் சித்தப்பிரமை முதலிய மனோவியாதியாளர்களை ஔடதப் பிரயோகமின்றிச் சங்கீதம் ஒன்றினாலேயே, பூரண சௌக்கியப் படுத்தி வருகிறதாகவும் தெரிகிறது. சிறிய குழந்தைகளும் தமது அன்னையோர் பாடும் தாலாட்டு என்னும் இன்னிசையைக் கேட்டு ஆனந்தங்கொண்டு, அழுகையை நிறுத்தி அயர்ந்து நித்திரை

செய்கின்றன. ஆரணியங்களில் சஞ்சரிக்கும் மான்கள், இன்னிசையைக்கேட்டு மதிமயங்கி தம்பம்போல் அசைவற்று கின்று, வேடர்கள் கையில் சிக்கிக்கொள்ளுகின்றன. கேகயப்புள் என்னும் அசுணப் பறவையானது இனிய வீணைகானத்தைக் கேட்டவுடன் தன்னுயிரையும் பொருட்படுத்தாமல் கானமுண்டாகப் பெற்ற விடத்திற்கே வந்துசேரும். ஆதலால்,

விஞ்சை மாதர்தம் யாழொலி கேட்டமா வேடர்
அஞ்சி லோதியர் பதிலேகேட் டயரசு ணம்போல்

என்று பிரபுலிங்கலீலை விளக்குகின்றது. எவற்றிற்கும் இரங்காத கல்நெஞ்ச முடையவர்களேச் சங்கீத இன்னிசையால் மனம் இரங்கச் செய்துவிடலாம். பற்றனைத்தும் முற்றத்துறந்த முனீஸ்வரர்களும் இன்புமுற்று, மூன்றும் வேதமாகிய சாமகானம் பாடுகின்றனர். இஸ்லாமிய வேதத்திலும் மூன்றுவது வேதமாகிய சபூர் என்ற சங்கீத வேதத்தை தாவூது நபிக்காக அருளப்பட்டிருக்கிறது.

ஒ ஆதைனஹா தாவூத ஸபூரா (குர்ஆன் 2-3)

சமர்க்களத்தில் யுத்தவீரர்களுக்கும், குதிரை முதலிய மிருகங்களுக்கும் வீரவேசம் எழச்செய்வது இரணபேரிகையின் உற்சாக மேயன்றி, அவ்வவற்றின் உடல் வன்மையன்று.

கலிவெண்பா.

பொங்கும் பசாசும் புகலு மிசைக்கவிகேட்
டங்கே தலைசுழற்றி யாடலையோ—தங்கமுடன்
னாட்டிற் குழக்தைகளும் நற்றொட்டி கட்டியுந்தா
லாட்டுகின்ற பாட்டுக் கழுகாதே—கூட்டமிட்டு

ஏலப்பா ! எலவெனும் இந்தச் சிறுகவிக்கு
ஞாலத்தே கல்லும் நகருமே—சாலமுழு
மாட்டுகளி லுண்டுகள்ள மாடதுதா னுங்காளைப்
பாட்டுப் படித்தால் படுக்காதே—கேட்டிலையோ
கூடித் துரத்திவந்து குத்துகின்ற தூர்ப்பசுவும்
பாடிக் கறந்தாக்கால் பால்தருமே—பாடித்தான்
சொற்புலவர் வந்துகவி சொன்னால் மனங்கரைந்து
கற்பசுவும் பாலைக் கறக்குமே.

## சங்கீதமும்-கடவுளும்.

எல்லாம் வல்லவரும், எல்லாம் கடந்தவருமாக விளங்கும் முழுமுதற் கடவுளரும் இன்னிசையிற் கட்டுண்டு, அதனைப்பாடும் அன்பர்களுக்கு இன்னருள் பாலிக்கின்றனர். இவ்வாறு எதையும் செய்யவல்லது சங்கீதமென்பது அநேகருடைய அபிப்பிராயம். ஆயினும் சங்கீதமானது ஞானேந்திரியங்களில் ஒன்றாகிய செவிப்புலனால் நுகரப்பெறும் ஒருவித உணர்ச்சியென்று அறிந்தவர்கள் மிகச் சிலரே. 'சங்கீதமானது எவற்றையும் வசப்படுத்த வல்லது' என்றெண்ணுவது வாஸ்தவமே யெனினும், அது கடவுளைக் கட்டுப்படுத்து மென்றும், கடவுளானவர் இன்னிசைச் சங்கீதத்திற் கட்டுண்டு, அதனைப் பாடும் அடியார்களுக்கு இன்னருள் பாலிக்கின்றனர் என்றும் எண்ணுவது சரிதானா என்று சற்று நிதானிக்க வேண்டியதாயிருக்கிறது. ஏன்? கடவுள் அன்பு ஒன்றுக்கு மாத்திரம் கட்டுப்படுவரே யன்றி, சங்கீதம் போன்ற பல இந்திரிய நுகர்ச்சிகளுக்கு ஒருபோதும் கட்டுப்படமாட்டார். பஞ்ச பாண்டவர்களில் ஒருவராகிய சகாதேவன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை அன்பொன்றினாலே கட்டினார். (சங்கீதக்

திறற் கட்டவில்லை) என்பதை மஹாபாரதத்தில் விரிவாகக் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது.

சங்கீதமும்—சாகித்தியமும்.

சங்கீதமோ! வாழைநாரைப் போன்றும், சாகித்திய மென்னும் செய்யுள் முதலிய கீர்த்தனங்களோ! பரிமள மிகுந்த புட்பங்களைப் போன்றும் உள்ளன. ஒருவர் வாழை நாரில் தொடுத்த புட்பங்களைச் சூடிக்கொள்ள விரும்பு வதேயன்றி, வாழை நாரைமட்டும் சூடிக்கொள்ள விரும் புவதில்லை. ஆனல் வாழை நாரில்லாமலும் புட்பங் களை சூடிக்கொள்ளலாம். அது பிறருக்கு விசேட அலங் காரமாய்க் காணப்படாவிட்டாலும், தனக்கும்-பிறருக்கும் சுகந்தமான வாசனை பரிமளிக்காமல் போகாது. அது போல், கடவுள்மீது பத்திரசமான பாடலைச் சேர்க்காமல், வெறும் வாழைநாரைப் போன்ற சங்கீதத்தை மட்டும் 'தோந்தரனு-தோந்தரனு' வென்று குரல் நெரிந்து கம்மும் படி, விடிய விடியக் கத்தினுலும் ஒரு எட்டுணைப் பிரயோ சனத்தையும் தராது. அன்றியும் பிராணவாயுமானது, நமது வேதாந்த பாஸ்கரனில் சரலாப நட்டம் என்னும் அத் தியாயத்தில் காட்டியுள்ள விதியைக்கடந்து அனுவசிய மாய்ச் செலவழிந்து போவதால், வாட்சி அதிகரித்து பற் பல ரோகங்களும் சஞ்சரிக்கச் செய்யும்.

சங்கீதத்தின் ஒத்தாசை யின்றிக் கடவுளைத் தோத்த ரிக்கலாமோவெனில், சந்தேக மின்றி தோத்திரம் பண்ண லாம். தேங்காயின் உள்ளிருக்கும் தண்ணீர் முதலியவை களைப் புசிக்க விரும்பாமல், தேங்காய் உடைக்கும் சத் தத்தை மட்டும் விரும்புகின்றவர்களுக்கும், சாரத்தை

ஒழுகவிட்டுச் சக்கையைத் தங்கச் செய்யும் பன்னடையை நிகர்த்தவர்களுக்குமே, தரஞ - தோந்தரஞ வென்று இசை கூட்டாமல் பாடுவது திருத்தியாயிராதே யன்றி, கடவுளுக்கும், அவரது மெய்யன்பர்களுக்கும் திருத்திகரமாய் இராமற் போகாது.

ஒரு மனிதன் நமக்கு எழுதிய கடிதத்தின் கையெழுத்து அழகா யில்லாவிட்டாலும், அந்த நிருபத்தின் சாராம்ச மாகிய கருத்தை மட்டிலும் அவசியம் தெரிந்து கொள்ள விரும்புகிறோமே யன்றி, கையெழுத்து அழகா யில்லை யென்று அதைப் பார்க்காமல் எறிந்துவிட மாட்டோம். ஆனல் கையெழுத்தும் அழகா யிருந்தால் விசேடந்தான். அதுபோல், நாம் கடவுளிடத்தில் செய்துகொள்ளும் மனுவாகிய தோத்திரப்பாக்களில் சங்கீத இசையில்லா விட்டாலும், அந்தப் பாக்களின் முக்கிய கருத்து என்னவென்று உணர்ந்து, மனுதாராகிய அன்பர்கட்கு இன்னருள் பாலிக்க விரும்புவரே யன்றி, சங்கீதம் சேர்த்துப் பாடவில்லை யென்று ஒருபோதும் பாராமுகமாக இருக்கமாட்டார். ஆனல் சங்கீதம் சேர்ந்திருந்தாலும் விசேடந்தான். இல்லாததற்கு என்ன செய்து கொள்ளலாம்? 'கண்ணாடி இல்லை-சீப்பு இல்லை' என்று கலியாணமுகூர்த்தத்தை எங்கேனும் நிறுத்தி விடுவதுண்டா? இல்லையே! அதுபோல் சங்கீதம் தனக்குத் தெரியவில்லையென்று, கடவுளைத் தோத்திரம் பண்ணுகிருந் தவர்களும்-இருக்கின்றவர்களும் இதுவரையிலும் இருந்த தாகத் தெரியவில்லை. ஆகையால் நம்மவர்களே! சங்கீதம் தெயவில்லையே யென்று கடவுளைத் தோத்திரம் பண்ணு மல் ஏமாந்துபோய், வாணளை வீணளாகக்கழித்து விடாதீர்கள்.

சிலர் சுகந்தமான புட்பங்களை நாரில் தொடுத்துக் கடவுளின் ஞாபகச் சின்னமென்று அமைக்கப்பட்டுருக்கும் விக்கிரகம்-படம் முதலியவைகளுக்கு அணிந்து அலங்காரம்செய்து, ஆடல்-பாடல் புரிந்து குதூகலம் அடைவார்கள். மகான்களே! தோத்திரப்பாக்கள் என்னும் இரமணீகாமான அழகிய புட்பங்களை, இனிமைதங்கிய சங்கீதம் என்னும் நாரில் தொடுத்து,உண்மையான கடவுளுக்குப் பூமாலைக்குப் பதிலாகப் பாமாலை சாத்தி ஆனந்த நிருத்தம் செய்து இன்புறுவார்கள்.

தாயுமானவள்ளல்.

பன்மாலைத் திரளிருக்கத் தமையு ணர்ந்தோர்
பாமாலைக் கேநீதான் பட்ச மென்று
நன்மாலை யாவெடுத்துச் சொன்னார் நல்லோர்
நலமறிந்து கல்லாத நானுஞ் சொன்னேன்
சொன்மாலை மாலையாக் கண்ணீர் சோரத்
தொண்டனேன் எந்நாளுந் துதித்து நிற்பேன்
என்மாலை யறிந்திங்கே வாவா வென்று
யெனைக்கலப்பாய் திருக்கருணை யெம்பி ரானே.

கொடுக்கின் றோர்கள்பாற் குறைவையா தியானெனுங் குதர்க்கம்
விடுக்கின் றோர்கள்பாற் பிரிகிலா துள்ளன்பு விடாதே
அடுக்கின் றோர்களுக் கிரங்கிடுந் தண்டமி ழலங்கல்
தொடுக்கின் றோர்களைச் சோதியா ததுபாஞ் சோதி

திருவிளையாடற் புராணம்.

பழுதகன்ற நால்வகைச்சொன் மலரெடுத்துப் பத்திபடப் பரப்பித் திக்கு
முழுதகன்று மணந்துசுவை யொழுகியணி பெறமுக்கண் மூர்த்தி தாளிற்

ரெழுதகன்ற வன்பெனுநார் தொடுத்தலங்கல் சூட்டவரிச்
சுரும்புந் தேனுங்
கொழுதகன்ற வெண்டோட்டு முண்டகத்தா னடிமுடிமேற்
கொண்டு வாழ்வாம்.

பழுதி லாதசொன் மணியினைப் பத்திசெய் தன்பு
முழுது மாகிய வடத்தினுன் முறைதொடுத் தலங்கல்
அழுது சாத்துமெய் யன்பருக் ககமகிழ்ந் தையர்
வழுவி லாதபேர் மாணிக்க வாசக னென்றார்.

## சங்கீதப் பெருமையும்—செய்கைக் குறைவும்.

சங்கீதமானது விசாலம் பொருந்திய பூமிக்கும், கங்காநதிப் பிரவாகத்திற்கும் சமானமானதே. பூமியில் நன்மையைத் தரும் வித்தைப் பதித்தாலும், தீமையைத் தரும் வித்தைப் பதித்தாலும்,அவைகளுக்கு மாவுணவாகிய சாரத்தைக் கொடுத்து முளைக்கச் செய்கின்ற சுபாவம் பூமிக்குடையது. நதியின் சலத்தை எங்கெங்கு பாய்ச்சப் படுகிறதோ,அங்கங்குள்ள பயிர்-செடி-கொடிவிருட்சம்முதலியவைகளைவிருத்திசெய்யும் சுபாவம் சலத்திற்குடையது. அவ்விதமிருக்க, ஒருவனுடைய நல்ல நிலத்தில் எலுமிச்சை வைத்துப் பயிராக்குவதற்குப் பதிலாக எலுமிச்சம் பழத்தைப் போல் காய்க்கும் எட்டிமரத்தை வைத்துப் பயிர் செய்தாலும், ஆற்று சலத்தை பூச்செடிகள்-எலுமிச்சை நாரத்தை-கத்தரி- மிளகாய்-கீரை முதலிய செடிகளுக்குப் பாய்ச்சவேண்டியதற்குப் பதிலாக விழல் முதலிய பற்பல வீணன புற்-பூண்டுகளுக்கு முத்துலை யேற்றமிட்டு இறைத்துப் பாய்ச்சினும், அவை மனிதனுடைய குற்றமே யன்றி முறையே பூமியின் குற்றமும், ஆற்றுநீரின் குற்றமும் அன்று. அதுபோல் சங்கீதம் என்னும் அரிய-பெரிய வித்

தையைக்கற்ற ஒரு வித்துவான், அந்த இன்னிசையை நிட்காமிய மனத்துடன் பேரின்பச் செய்யுட்களில் சேர்த்துப் பாடி ஆனந்த பரவச மடைந்து, மனிதராகப் பிறந்ததின் பயனாகிய கடவுளின் திருவருளைப் பெற்று உய்யவேண்டுமென்று கருதாமல், அதைச் சிற்றின்பச் செய்யுட்களில் கலந்து பாடி, படுகுழியைநாடி, விலைமாதர்க்குப் பூமாலை சூடி, அவள் கேட்கும் பொருளுக்காகப் பல விடங்களுக்கும் ஓடி, கிடையாததால் மனம் வாடி, சரீரம் மெலிந்து தள்ளாடி மாறுவத்தைப் படுகின்றனர். அந்தோ !

சங்கீதம் பிரதிபிம்பம்.

சங்கீதமானது அடயோகம்- இலயயோகம்-இராசயோகம் என்னும் யோகத் திரயங்களுள் இரண்டாவதாகிய இலய யோகத்தினால், அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் பிரதி பலிக்கும் வண்ணம், அண்டமாகிய சரீரத்துள் ஆறு தார கமலங்களில் நான்காவது, அநாகதச் சக்கரத்திலிருந்து உண்டாகும் மணி-சமுத்திரம்-மேகம்-மத்தளம்-பேரிகை-வீணை-சிலம்பு-சங்கு-வண்டு-கைத்தாளம் என்னும் தசவிதப் பிரணவ நாதங்களின் அறிகுறியாக, பிண்டமாகிய இந்தப் பூமியில் பிரதிபிம்பம்போல் செய்ததும், பத்தி மார்க்கத்துக் குப்பற்றுக்கோடு போன்றதுமாகிய அருமையான வித்தை.

இனிய நாத வோசையும், அரிய பொருட்சுவையுங் கலந்த சங்கீத-சாகித்தியங்களை சில ஆரியீன்கள் சிற்சில சங்கீதக் கருவிகளால் அப்பியாசித்ததாகவும் புலனாகிறது.

இத்தகைமை மகத்துவம் வாய்ந்த சங்கீத வித்தையை அடுப்பிலேற்றிய சோற்றுப்பானையின் சலமானது கொதி நிலம்பியவுடன் 'கதபுத-க்தபுத' என்று கொதிப்பது போல்

சில சங்கீத வித்துவான்கள், தெருக்களிலும், சந்துகளிலும் நடக்கும்போதும், மலோபாதை கழிக்கும் போதுங்கூட கமபத-நிதபம-மபதநி' என்று அதே பிரமையாகப் புலம்பித் திரிகிறார்கள். இவ்விதமாக இடபேதமின்றி எல்லா விடங்களிலும் சுராவளிகள்-சண்ட வரிசைகள்-அலங்காரங்கள் முதலியவைகளை அப்பியாசித்துக் கொண்டும், சுரங்களுக்குத் தக்கவாறு அகார சாதகம் செய்துகொண்டும், தெருவில் போகும்போதே தப்பு திப்பு என்று கையைமாற்றி-மாற்றிச் சாணம் தட்டுவதுபோல் தாளம் போட்டுக்கொண்டும் சஞ்சரிப்பதானது, சங்கீதத்தின் பெருமையைக் குறைக்கின்றதல்லவா? சங்கீதம் இன்ன காரணத்திற்காக ஏற்பட்டதென்று அதன் அருமை-பெருமையை அறிந்துணர்ந்த விவேகிகள் கூடிய நன்மையான இடங்களில் பாடாமல் கண்ட-கண்டவிடங்களில் பாடினால், அதிக விவேகிகளும், சங்கீதம் என்பதே தெரியாதவர்களும், அவனைச் சித்தப்பிரம்மையுடையவனென்று எண்ணுவார்களேயன்றி, சங்கீத வித்துவான் என்று எண்ணமாட்டார்கள்.

### பாடகர் சரீரக்குற்றமும்—தொழிற் குற்றமும்.

முன்னொரு காலத்தில் ஒரு மாட்டிடையன் இலட்சம் வராகன் புதையல் அகப்பட்டு பாக்கியவானானான். ஒரு சங்கீத வித்துவான் அவனிடத்தில் போய்த் தக்க பரிசு பெறுவதற்காகக் கீர்த்தனைகள் பாடினான். பாடும்பொழுது இசைக்குத் தக்கபடி,

திருவிளையாடற் புராணம்.

வயிறது குழிய வாங்கல் அழுமுகங் காட்டல் வாங்குஞ்
செயிரறு புருவ மேறல் சிரநடுக் குறல்கண் ணுடல்
பயிரறு மிடறு வீங்கல் பையென வாயங் காத்தல்
எயிறது காட்ட லின்ன வுடற்றொழிற் குற்ற மென்ப

வெள்ளைகா குளிகீ ழோசை வெடிகுரல் நாசி யின்ன
எள்ளிய வெழாலின் குற்றம் எறிந்துநின் றிரட்ட லெல்லை
தள்ளிய கழிபோக் கோசை யிழைத்தனெட் டுயிர்ப்புத் தள்ளித்
துள்ளலென் றின்ன பாடற் ஞெழிற்குற்றம் பிறவுந் தீர்ந்தே.

கல்லாடம்.

விரல்நான் கமைத்த வணிகுரல் வீங்காது
நான்மறை துள்ளும் வாய்பிள வாது
காட்டியுள் ளுணர்த்தும் நோக்கம் ஆடாது
பிதுர்கனன் மணிசூழ் முடிநடுக் காது
வயிறுகுழி வாங்கி அழுமுகங் காட்டாது
நாசி காகுளி வெடிகுரல் வெள்ளை
பேசாக் கீழிசை யொருபுறம் ஓட்டல்
நெட்டுயிர்ப் பெறிதல் எறிந்துநின் றிரட்டல்
ஓசை இழைத்தல் கழிபோக் கென்னப்
பேசுறு குற்ற மசைவொடு மாற்றி.

இசைமரபுடையார்.

கண்ணிமையா கண்டம் துடியா தொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்றா பற்றெறியா—எண்ணிலிவை
தள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவர்
உள்ளாளப் பாட லுரை.

உள்ளாளம் விந்துவுடன் நாதம் ஒலியுருட்டுத்
தள்ளாத தூக்கெடுத்தல் தான்படுத்தல்—மெள்ளக்
கருதி நலிதல் கம்பித்தல் குடிலம்
ஒரு பதின்மே லொன்றென் றுரை.

திருவேங்கட சதகம்:

புருவநெரி யாமல்மணி யெயிறுதோன் றாமல்விழி
புறளாமல் அங்க சேட்டை
புரியாமல் சிரத்லையை யசையாமல் மிடறுவாய்
பொருமிவிம் மாமல் இயல்பாய்ச்
சுருதிலய சாஞான நீதியொடு வீணையின்
தொனியினு தப்பிரம மாய்த்
துய்யதந் திரியோசை மிடறோசை யெனவேறு
தோன்றாமல் இன்ப மயமாய்
தருமதுர அமுதரசம் ஒழுகுசா ளிகள்பழகு
சங்கீத வித்தை யென்றால்
... ... ...

என்னும் செய்யுட்களின் கருத்துப்படி, பாடும்பொழுது வயிறு குழிபடல் - மேல்வாங்குதல் - அழுமுகம் காட்டல் - புருவம் நெற்றிமேல் செல்லுதல் - தலையசைத்தல் - கண் ஆடுதல் - கண்டம் வீங்குதல் - பையைப்போல் வாயைத் திறத்தல் - பற்களைக் கடித்தல் முதலிய சரீரத்தின் குற்றங்களையும், அபசுரம் - பேய் கத்தினாற்போற் பாடுதல் - நிறமும் - தானமும் குறைபடும் கட்டையிசை - ஒரு தானத்தில் பாட ஒரு தானத்தில் நழுவுதல் - ஒரு பண்ணைப் பாட வேறொரு பண்ணிலே விலகி நிற்றல் - ஒரோசையான தன்மை நீங்கிப் பல ஓசையாய் வருதல் - காகம் கத்தினாற்போல் கத்துதல் - பாடுந்திறத்தை ஒதுக்கிப் பாடுதல் முதலிய பாடுந் தொழிற் குற்றங்களையும் கவனிக்காமல், கை - தலை - கண்களை அசைத்து வாயைக் கோணக் கோண இழுத்துக் காக்கை வலிப்பு வந்தவன்போல் பாடினான். இடையன், இவனுக்கு ஏதோ வலிப்பு வந்து விட்டது; ஆகிலும் பிராமணனுச்சே! என்று பட்சாத்தாபப்பட்டு

உட்கட்டிற்குப் போய்ச் சூட்டுக்கோலை நன்றாகக் காயப் போட்டு வந்து, உள்ளே வாருங்கள் என்று பாடகனை அழைத்தான். பாடகன், தனக்கு வெகுமதி கொடுக்க அழைக்கிறானென்று உள்ளே போனான். அவனை இரண்டு ஆட்களைவிட்டுப் பிடித்துக் கொள்ளச் சொல்லி, பொருத்துக்குப் பொருத்து சூடு போட்டு விட்டான். சங்கீத வித்துவான் திகிலடைந்து அலறி யழுதுகொண்டே கள்வர் கையிற் சிக்கி மீண்டவன்போல் ஓடோடியும் தன் வீடு வந்து சேர்ந்து, இரணவைத்தியனால் குணப்படுத்திக் கொண்டு இனிமேல் யாவரிடத்திலும் போய்ப் பாடக்கூடா தென்று தீர்மானம் செய்து கொண்டான்.

## சூட்டுக்கு எத்தனம்.

அவ்விதமான காலத்தில் சங்கீத வித்துவானுக்குப் பழக்கமான ஒரு இலக்கண வித்துவான் கண்டு நீர் சங்கீதத்தில் வல்லவரா யிருந்தும் கச்சேரி பண்ணாமல் வறுமை யடைந்திருக்கிறீரே? யாதுகாரணமென் றதியோடந்தமாகக் கேட்டுணர்ந்து, அவர் அறியாமைக்காக மனமிரங்கி ஒரு அரசனிடத்தில் சிபார்சு பண்ணி, அழைத்துப் போய்ப் பாடச்சொன்னார். அதற்கிணங்கிய வித்துவான், அரசன் முதலிய யாவரும் ஆனந்திக்கும்படி தேவகானம்போல் இனிமையாகப் பாடினான். அரசன் தகுந்த சன்மானஞ் செய்ய நினைந்து உட்கட்டுக்குப் போகவும், சங்கீத வித்துவானுக்குச் சந்தேகம் பிறந்து, இதுவும் சூட்டுக்கு எத்தனந் தான் என்று ஓட்டம் பிடித்துத் தன் வீடு வந்து சேர்ந்தான்.

அரசன் வந்து, வித்துவான் எங்கே என்றனன். அங்கிருந்தவர்கள், என்னமோ ஒரு பயத்தினாலே ஓடிப்போய்

விட்டார் என்றனர். "அப்படிப்பட்ட பயம் என்னாலே வரவேண்டியதென்ன?" வென்று விசனப்பட்டு சகல வெகுமதிகளையும் வித்துவான் வீட்டுக்கு சேவகன் மூலமாய் அனுப்பினான். சேவகனைக் கண்டதும் வித்துவான் கதவைமூடித் தாழிட்டுக்கொண்டு, நமக்குக் கஷ்டகாலம் வந்து விட்டதே! என்று வருந்தி, தலையில் ஓங்கி அடித்துக் கொண்டு குய்யோ! முறையோ! என்று கதறினான். சேவகன் அவனைப் பலவிதத்திலும் சமாதானப்படுத்தி, தான் கொண்டுவந்த சன்மானங்களைக் கொடுத்து மகிழச்செய்து, எது காரணத்தில் ஓடிவந்து கதவைச் சாத்திக்கொண்டு அழுதீர்? என்று கேட்டான். தனக்கு ஆட்டிடையன் சூடு போட்டதைச் சொல்லிக்காட்டி, இப்போதும் அப்படியே நடக்குமென்று பயந்து ஓடிவந்து விட்டேன் என்று கூற, சேவகன் ஆச்சரியப்பட்டு நடந்த வரலாற்றை அரசனிடம் வந்து சொன்னான். அரசன் நகைத்து "இவ்வளவு கல்வியைக் கற்ற வித்துவான் இடமறிந்து உடற்குற்றம்-தொழிற்குற்றம் நீக்கிப் பாடுவதற்கு கற்றுக்கொள்ள வில்லையே" என்று விசனப்பட்டான்.

## பஞ்ச சாஸ்திரிகள்.

ஒரு அரசன் தன் குமாரனுக்கு இளவரசுப் பட்டம் கட்டியகாலத்தில் ஏராளமாக பரிசு கொடுத்தான். பலர் அரசனைப் புகழ்ந்து பாடிக்கொண்டு வந்தனர். கடைசியாக தர்க்க சாஸ்திரி-சங்கீத சாஸ்திரி-சோதிட சாஸ்திரி-வைத்திய சாஸ்திரி-இலக்கண சாஸ்திரியாகிய ஐந்து சாத்திரிகள் ஒன்று சேர்ந்து வந்தார்கள். அவர்கள் ஒன்றும் பாடிக்கொண்டு வரவில்லை. ஆனால் ஒவ்வொருவரும் தம்மைத் தாமே புகழ்ந்து கொண்டனர். அதுகண்ட மந்திரி

(இரகசியமாய்) அரசே! இவர்களை நமது சத்திரத்திற் போய்ச் சமைத்துச் சாப்பிட்டுவரச் சொல்லுங்கள்; பிறகு பரிசு கொடுக்கலாம் என்றனன்.

அரசன், சாஸ்திரிகளே! நீங்கள் சென்று நமது சத்திரத்தில் சமைத்துச் சாப்பிட்டு வாருங்கள்! என்று சொல்லி, ஐந்து ரூபாய் அவர்களுக்குக் கொடுக்கும்படி கட்டளையிட்டான். சாத்திரிகள் தொகையைப் பெற்றுக்கொண்டு சத்திரத்திற்குப் போனார்கள்.

அவர்களில், வைத்திய சாத்திரி பதார்த்தம் வாங்கிவரவும், தர்க்க சாத்திரி நெய் வாங்கிவரவும், இலக்கண சாத்திரி தயிர் வாங்கிவரவும், சோதிட சாத்திரி இலை பறித்துவரவும், சங்கீத சாத்திரி அரிசி வாங்கிவந்து சமையல் செய்யவும் முறையேற்படுத்திக்கொண்டு தத்தம் வேலையைச் செய்து முடிக்க ஆரம்பித்தார்கள். வைத்திய சாத்திரி பலவிதக் காய்-கறிகள் குவிந்திருக்கும் பதார்த்தக் கடைக்குப்போய், என்ன பதார்த்தம் வாங்கலாம்! என்று நெடுநேரம் யோசித்தும் ஒன்றுந் தோன்றாமல், ஒவ்வொரு காயின் குணகுணங்களையும்,

கொத்தவரைக்-காய்பித்தம் கூடாது பத்தியத்தின்
மெத்தெனவும் ஐயம் விளைக்குங்காண்—பித்தத்தால்
ஓத மகற்றிவிடும் தின்மருந்தைப் பாழாக்கும்
வாதக் குடைச்சலுக்கு மால்.

தண்ட கிராணி கழிய அதிசாரம்
விண்டவள சீதரத்தம் மேவுங்காண்—ஒண்டொடீ
வண்டற்காய் வெய்யகப வாதமிகும் வாய்க்குணவாம்
வெண்டைக்காய் உண்பார்க்கு வின்.

பித்தமொடு வாதப் பெருக்கைமிக வுண்டாக்கும்
தத்து காப்பானைத் தருவிக்கும்—பற்றிரதத்
தாரை பாஷாணந் தமைமுறிக்கும் தப்பாது
காரைவல்லி யாம்பாகற் காய்.

பண்டு மாண்ட கிரந்தியைப் பாலிக்கும்
உண்ட கைக்குந் தினவையுண் டாக்கிடும்
நண்டு கட்டுங் குரங்கென நாளுமாம்
கண்டுவிட்டது கத்தரிக்கா யதை

என்று ஒவ்வொன்றுக்கும் குற்றம் நினைந்து ஒன்றும் வாங்காமல் திரும்பிவிட்டார்.

தர்க்கசாத்திரி கடைக்குப்போய் தொன்னையில் நெய் வாங்கி வரும்போது, 'தொன்னைக்கு நெய் ஆதாரமா? நெய்க்குத் தொன்னை ஆதாரமா?' என்று நெடுநேரம் யோசித்தும் புலப்படாமல் தொன்னையைக் கவிழ்த்துப் பார்த்தார். நெய் முழுதும் சிந்திப்போயிற்று. பிறகு நெய்க்குத் தொன்னை தான் ஆதாரம்! என்று தெரிந்துகொண்டார். நெய் போனாலும் போகிறது; இவ்வளவு பெரிய சந்தேகம் நீங்கிற்றே? இதை நமது சிநேகிதர்கள் கேட்டாலும் அதிக சந்தோஷப் படுவார்கள்! என்று எண்ணிக்கொண்டே வந்தார்.

இலக்கண வித்துவான் தயிர் வாங்கப்போனார். ஒரு வீதியில் தயிர் விற்கும் இடையன், 'தயிரோ ஓ! ஓ!! தயிரு! தயிரோ ஓ! ஓ!! தயிரு!' என்று கூவினான், அதைக்கேட்ட வித்துவான், இதென்ன அநியாயமாயிருக்கிறது. 'மூன்றுயிறளபிரண்டாம் நெடில்' என்னும் நன்னூற் சூத்திரவிதியின் மாத்திரை அளவின்படி ஓகாரத்தை இரண்டு மாத்திரை தானே உச்சரிக்கவேண்டும். இவன் உச்சரிப்பது இருபது

மாத்திரைக்கும் அதிகப்படுமே! இலக்கணம் தவறினவ னிடத்தில் தயிர் வாங்கக்கூடாது என்று ஆத்திரப்பட்டு,

ஆவியும் ஒற்றும் அளவிறந் திசைத்தலும்
மேவும் இசைவிளி பண்டமாற் றாதியின்.

என்னும் நன்னூலின் மாத்திரைச் சிறப்பு விதியை நன்குணராமல் வந்துவிட்டார்.

சோதிட சாத்திரி இலை பறிப்பதற்காக மரத்தில் ஏற ஆரம்பிக்கும்போது, ஒரு பல்லி 'கிச்சு கிச்சு' என்று சொல் லிற்று. அதைக்கேட்ட சோதிடர், ஒஹோ! இதென்ன! ஆபத்துக்கு இடமாக யிருக்கிறது. 'தலைக்குமேல் பல்லி சொன்னால் தப்பாமல் இராச விரோதம் உண்டாகும்.' இலை இல்லாமற்போனாலும் போகிறது என்று திரும்பிவிட்டார்.

சங்கீத வித்துவான் கடைக்குப்போய் அரிசியும்-பானை யும் வாங்கிவந்து அடுப்பு மூட்டி, அரிசியைக் கழுவி உலையி லிட்டார். சிறிது நேரத்தில் சாதம் தள-பள என்று கொதிக் கத் தலைப்பட்டது. உடனே சங்கீத வித்துவான், ஆஹா! இந்தத் தாளவரிசை நன்றாய் இருக்கிறது என்று ஒரு பாட் டுப்பாட ஆரம்பித்தார். தாளம் அடுப்பு எரிகிற உஷ்ணத் திற்குத் தக்கபடி திசாமாகவும்-சதுரசிரமாகவும்-மிசிரமாக வும்-கண்டசாதியாகவும்-சங்கீரணமாகவும்,

த்ருவோமட்ய ரூபகஸ்ச்ச ஜ்ஜம்பா த்ருபுடயேவச்ச
அடதாளேக தாளேச்ச ஸப்ததான ப்ரகீர்த்திதா:

என்ற சுலோகத்தின்படி துருவ - மட்டிய-ரூபக-சம்பை- திரிபுடை-அட-ஏக என்னும் ஏழுவகைத் தாளங்களின் அங்

கங்களாகிய திசாலகு - சதுரசிரலகு - மிசிரலகு-கண்டலகு-சங்கீரணலகு என்பவைகட்கு முறையே 3, 4, 7, 5, 9 அட்சரங்கள்கொண்ட அங்கப்பிராண லட்சணத்தின்படி மாறி-மாறி வெவ்வேறு விதமான தாளங்கள் போட ஆரம்பித்தது. வித்துவான் அதற்குத் தக்கபடி பாடியும், அடிக்கடி தாளம் மாறிப்போவதால் கோபம் வந்து, சோற்றுப் பானையை ஓங்கி ஒரு உதை உதைத்தார். உடனே பானை தகர்ந்து வெந்த சோறெல்லாம் கீழே கொட்டுண்டு போனதுமன்றி, வித்துவானுடைய காலும் வெந்துபோயிற்று.

### எல்லாமிருந்தும் போசனமில்லை.

முடிவில் எல்லோரும் சத்திரத்தண்டை வந்து சந்தித்து, ஒவ்வொருவரும் தத்தமக்கு நேர்ந்த விஷயங்களை வெளியிட்டனர். பிறகு அனைவரும் இதற்கு என்ன செய்கிறது? நாழிகையாகிறதாதலால் இராச சபைக்குப் போய் வந்து, பிறகு சாப்பிடலாம் எனத் தீர்மானித்து அரச சபைக்கு வந்தார்கள். அதற்குள் நடந்த விருத்தாந்தங்களை ஒற்றர்கள் மூலமாய் மந்திரி தெரிந்து அரசனுக்கு அறிவித்திருந்தான். மந்திரி சாத்திரிகளைப் பார்த்து, போசனம் ஆயிற்றோ? என்க, எல்லாம் இருந்தும் போசனம் செய்யச் சரிப்படவில்லையென்று நடந்த விஷயத்தை சவிஸ்தாரமாகச்சொல்ல, அரசன்-மந்திரி முதலானவர்கள் கேட்டு நகைத்தார்கள், பின்னர், அரசன் சாத்திரிகளை நோக்கி, நீங்கள் சாத்திரங்களை நன்றாய் உருப்போட்டு படித்திருப்பீர்கள். ஆனால் உங்களுக்கு உலக ஞானம் சிறிதும் இல்லை. ஞானம் உபயோகப்படாது. அதையும் நன்றாய் அறிந்துகொள்ளுங்கள் என்று போதித்து அவர்கள் அறியாமைக்கிரங்கி சிறிது பரிசு கொடுத்து அனுப்பினான்.

திருக்குறள்.

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லார் அறிவிலா தார்.

ஒரு மனிதனுக்குத் திரண்ட செல்வமிருந்தும், அச் செல்வத்தை நன் மார்க்கத்தில் செலவழிக்க அவனுக்குப் புத்தி கோசரமில்லாதது போல், பிரபலசங்கீத ஞானம் உடையவர்களும், பாடகர்களுமாகிய சில வித்துவான்கள் தம்முடைய அருமையான சங்கீத ஞானரத்தினத்தைப் பேரின்பச் செய்யுள் என்னும் உயர்ந்த தங்கத்திற் பதித்து பிரகாசிக்கச் செய்யாமல், அதைச் சிற்றின்பப் பாடல் என்னும் தாழ்ந்த இரும்பிற் பதித்து மலினம் அடையச் செய் கின்றனர். சிற்றறிவுடையவர்களால் பாட்டுப்போல் பாடிய காமாதுரமான பாடல்களை சிலர் படித்து இதற்குள் பேரின்பப் பொருட்கள் நிறைந் திருக்கின்ற தென்று, அறியாமையாற் புலம்புகிறார்கள். ஐயோ! என்ன மதியீனம்!

பாட்டுக்கச்சேரியும்—மாஜிஸ்ட்ரேட் கச்சேரியும்.

இக்காலத்து வித்துவான்களிற் சிலர், பாட்டுக்கச் சேரிகளில் இராகம்பாடிப் பல்லவி பாடும்போது மனதுக்குத் தோன்றியவாறு பல்லவிகளை எடுத்துக் கொண்டு சாதாரண சனங்களை இரஞ்சிக்கச் செய்யும் சதுரசிர நடைகளை விட்டு விட்டு, கண்ட நடைகளிலும், மிசிர நடைகளிலும், இக்கட்டான இடங்களிலும், பல்லவி எடுப்புகளை வைத்துக் கொண்டு, தாழங்குடையில் மழை பெய்கிற சத்தம்போல் சுரநிரவல்செய்து, பக்க வாத்தியக்காரர்களும்-பாடகரும் தலைவிரி கோலமாய்த் தாளங்கள் போட்டு வேதாளமாகி, ததிகிணதோம் தீர்மானங்கள் விழிபிதுங்கி உடல் வியர்க்க,

பாட்டுக் கேட்க வந்தவர்களும் தங்கள் துடைகளில் தாளம் போட்டு புண்ணாகும்படி செய்து, பாட்டுக் கச்சேரிகளை மாஜிஸ்ட்ரேட் கச்சேரிகளாக ஆக்கிவிடுகிறார்கள். இம்மாதிரியான பாட்டு, வித்துவத்தின் அம்சத்தைக் காண்பித்த போதிலும், சாதாரண சனங்களை இரஞ்சிக்கச் செய்யும் சத்தியில்லை.

நாட்டுப் புரத்திலுள்ள ஒரு கிழவி தன் மகனுக்கு சங்கீதம் தெரிந்த பெண்ணைக் கலியாணம் செய்து வைத்தாள். ஒரு நாள் மாமியார் வேலையின்றி உட்கார்ந்திருக்கையில் மருமகளை அழைத்து ஒரு பாட்டு பாடு பார்ப்போம் என்றாள். மருமகள், மாமியார் முன் உட்கார்ந்து, தான் கற்ற முறைப் படி பாடுவதற்காக முதல் முதல், சா-என்றாள். அப்போதே மாமியாருக்கு சிறிது கோபம் வந்தது. உடனே மருமகள், சா-சா-ரீ-ரீ-தா-தா-பா-பா-மா-மா-சா-சா-என்றாள். எதிரிலிருந்த மாமியார் மருமகளின் கன்னத்தில் பளீர்என்றறைந்து, பாடச் சொன்னால் என்னால் முடியாது என்று போகாமல், என்னையும், தாத்தாவையும் பாப்பா, மாமா, எல்லாரையும் சாகவா சொல்கிறாய் என்று நிந்தித்து அந்தப் பெண்ணை நீக்கிவிட்டாளாம். என்ன ஞானம்!

## இன்னிசையும் இஷ்டபூர்த்தியும்.

ஒருவர் தபோபலத்திற்குத் தக்கவாறு இனிமையாகிய சாரீரமும், சிறந்த சங்கீத ஞானமும் கிடைத்திருக்கிறது. பிரபஞ்சச் சேற்றில் அழுந்திக் கிடப்பவர்கள், அந்தப் பற்றுக்கோட்டால் பத்தி செலுத்தி முத்தியென்னும் கரையேறுவதற்காகக் கடவுள்மீது ஆனந்த பாவத்துடன் பாடி-ஆடி தோத்திரம் செய்ய வேண்டியதிருக்க, சில சங்கீத வித்துவான்கள் அதற்கு நேர் விரோதமாக, கடிதட்டி

படுகுழியையே மோட்ச வீடாகக் கருதி, நாம் பத்து கீர்த்தனங்களை நன்றாய்ச் சுர சாகித்தியத்துடன் வரப்பண்ணிக் கொண்டால், அவைகளை யுவதிப் பருவம் அடைந்த ஒரு தாசிப் பெண்ணுக்குப்பாடமாகச் சொல்லிக் கொடுக்கலாம்; அந்த நட்பினால் அவளிடத்தில் தன்னுடைய இஷ்ட காமியங்களை அனுபவிக்கலாம் என்றெண்ணி, அங்ஙனமே அனுபவித்துத் துன்புறுகிறார்கள்.

சில தாசிகளோ! மேற்கூறியபடி கீர்த்தனங்கள், ஜாவளி சிந்து முதலியவைகளில் 10, 20 உருப்படிகள் பாடமாகி விட்டால்; இளைஞர்களை மருட்டி நமது கண் வலைக்குள் சிக்கும்படி செய்து, அளவற்ற செல்வத்தைச் சம்பாதித்து விடலாம் என்று கருதுகிறார்கள். இக்காலத்தில் இந்த எண்ணத்துடனேதான், அநேக தாசிச் சிறுமிகள் சங்கீதம் கற்றுக்கொள்ள முயல்கின்றனரே யன்றி, கடவுளைத் துதித்து ஆன்மலாபம் அடையவேண்டும் என்கிற எண்ணத்துடன் கற்றுக்கொள்ளவில்லை. அன்றியும், சங்கீதத்தை ஆன்றோர்கள் ஏற்படுத்தியதுதான், என்ன காரணத்திற்காக என்று கேட்டறிந்து நடப்பவருமில்லை.

## சகவாச தோஷம்.

சங்கீதமானது ஓர் கூரிய வாளாயுதத்தை நிகர்க்கும் வாளாயுதமானது, ஒன்னலரால் அபாயம் வாராமல் காத்துக் கொள்ளவும், தன்னுடலையே துணித்துக்கொள்ளவும் உபயோகமாவதுபோல், சங்கீதமானது ஒவ்வொரு மக்களும் பக்தி மார்க்கத்தால் முத்தி யடைவதற்கு சாதனமாயும், பல பெரிய குடும்பத்திலுள்ள மாதர்களை சில துஷ்டகாமுகர்களால் விபசாரியாகவுமே செய்திருக்கிறது. ஆதலால், குடும்பத்திலுள்ள பெண்களை துஷ்டர்கள் போவதி

பெருந்தவறு. அவ்விதப் பெண்களுடைய கருத்துக் கிணங்கி, நாடகத்துக்கு அழைத்துப் போகும் புருடர்களும் பேடிகளே யன்றி ஆண்பிள்ளைகள் அல்லர்.

விவேகசிந்தாமணி.

பெண்டுகள்சொற் கேட்கின்ற பேயரொனுங்குண
மூடப் பேடிலோயர்
முண்டைகளுக் கிணையில்லா முனைவீரர் புருடரென
மொழியொ ணாதே.

வேறு.

மங்கைகைகை சொற்கேட்ட மன்னர்
புகழ் தசரதனு மரண மானன்
செங்கமலச் சீதைசொல்லை சீராமன் கேட்ட
வுடன் சென்றான் மான்பின்
தங்கையவள் சொற்கேட்ட ராவணனும்
கிளையோடு தானுமாண்டான்
நங்கையர்சொற் கேட்பதெல்லாம் கேடுவரும்
பேருலகோர் நகைப்பா ரன்றே.

தாசிகள் நியமனம்.

முற்காலத்தில் தாசியென்றும்-தேவடியாள் என்றும் ஏற்படுத்திய காரணம், சங்கீதத்தைக் கற்றுக் கொண்டு வாலிபர்களை மயக்கிச் சர்மவியாபாரம் செய்து பணம் பறிப்பதற்காக வன்று. தாசி என்றால் (கடவுளுக்கு) அடியாள் என்று பெயர். தேவடியாள் என்றாலும் (தேவ × அடியாள்) தேவனாகிய கடவுளுக்கு அடியாள் என்று பொருள் கொள்ளும். இக்காலத்திலுள்ள சில தாசிகளுக்கு, தாசி என்றால் கா—சீ. அதாவது பணம் கொடுத்

த்தால் தா என்று வாங்கி, பணம் கொடாவிட்டால் சீ ஓடிப் போ என்று துரத்தி விடுவதை எண்பிக்கவே தாசி யென்று வழங்குகின்றது. தேவதாசிகளை இந்துக்களுடைய கோவிலிற் சென்று ஆடல்-பாடல் செய்து சாமானியர்களை ஆலயத்திற்குத் தருவிப்பதற்காக வென்றும், இல்லறத்தை நீத்த சீவன் முத்தர்களுக்கு ஒரு காலத்தில் (*) விரகாபேட்சை ஏற்பட்டு விட்டால், அவ்வாதனை நீங்குவதற்காக வென்றும், அவர்களை ஏனைய குலமகளிரை விரும்பாம லிருப்பதற்காக வென்றும் எண்ணியே இந்துக்களது முன்னோர்கள் கணிகையர்களை நியமித்திருந்தனராம். இது விஷயம் அருணாசலபுராணம்-வல்லாள மகாராசன் சரித்திரத்தால் நன்குணரலாம்.

பட்டினத்தடிகள்.

*சீதப் பனிக்குண்டு சிக்கெனக் கந்தை தினமிரந்து*
*நீதுய்க்கச் சோறு மனைதோறு முண்டு நினைவெழுந்தால்*
*வீதிக்குள் நல்ல விலைமாத ருண்டிந்த மேதினியில்*
*ஏதுக்கு நீசலித் தாய்மன மேயென்றும் புண்படவே.*

என்று திருவாய் மலர்ந்தனர். அவ்வாறு தற்போதம் நீங்கிய சீவன் முத்தர்களுக்காக விலைமாதர்களை ஏற்படுத்தியதைப் பண்டையகால இந்து அரசர்களும் அங்கீகரித்து, அம்மாதர்களுக்கு வேண்டிய செல்வத்தையும் கொடுத்து ஆதரித்திருக்கின்றனர் என்பது பல நூற்கள் வாயிலாகவும் தெரிகிறது. இக்காலத்திலோ அது மாறி, கயவர்களுக்கும்-பணக்காரர்களுக்கும் உறைவிடமாக ஆகிவிட்டது. அவர்

(*) முற்காலத்தில் கணிகையர்களை சீவன்முத்தர்கட்கென்று ஒதுக்கப் பெற்றிருந்தாலும் அது பஞ்சமா பாதகங்களுள் ஒன்றாதலால் அவ்வாறு நியமித்ததும் முறையன்றாம்.

களும் பல ரோகங்களுக்கு ஆளாகி இஞ்சிதின்ற குரங்கைப் போல் விழிக்கின்றனர்.

### தாசியும்—வேசியும்.

ஓர்வித வரம்பிற்குட்பட்டவளுக்கு தாசியென்றும், அவ்வரம்பு மீறியவளுக்கு வேசி யென்றும் பெயர். இக் காலத்திலோ இரு திறத்தாருக்கும் தாசி யென்றே பெயர் வழங்குகிறது, முற்காலத்திலிருந்த தாசிகளோ! இக்காலத் திலுள்ள சில தாசிகளைப்போல்,

> புல்லுவிற்றும் கீரைவிற்றும் பொன்கொடுப்பார் காணமக்குக்
> கொல்லிமலைப் பாவாய்! குலதெய்வம்—...

என்று எண்ணுமல், சாந்தம்-கருணை-தெய்வபக்தி-அடியார் பக்தி-ஈகை-சத்தியம்-கல்வி-கேள்வி முதலிய சர்வ சம் பத்துகளையும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற பக்திமான்களா யும், வித்துவ சிரோன்மணிகளாயும் இருந்திருக்கிறார்கள் என்பதற்குப் பின்வரும் சரித்திரங்களே போதிய சான் ருகிறது.

### கவிவாணரும்—கள்வரும்.

முன்னொரு காலத்தில் இராமநாதபுரத்தைச் சார்ந்த மருதூர் என்னும் பாடல்பெற்ற க்ஷேத்திரத்தில், மறவர் குலத்தில் தலைமலைகண்டதேவர் என்ருெரு தமிழ் வித்து வான் இருந்தார். அவருக்கு நாலைந்து குழந்தைகள் இருந்தன. நாடெங்கும் பஞ்சம் அதிகரித்திருந்ததால், அவரது தமிழைக் கேட்டுப் பரிசு கொடுப்பாரில்லை. புல வரும்-மனைவியும்-குழந்தைகளும் பசிப்பிணியால் மிக வருந் தினர்கள். வித்துவானுடைய மனைவி, குழந்தைகளை அழைத்துக் கொண்டு தன் சகோதரர்கள் வீட்டுக்குச்

சென்று, தன்னுடைய நிருவாகத்தை அவர்களிடம் சொல்லி முறையிட்டாள். பஞ்சமா பாதகங்களில் ஒன்ருன திருட்டுத் தொழிலேயே சீவனமாகக் கருதிய அவர்கள் கேட்டு நகைத்து, 'உன் புருஷன் வெள்ளோலை கிறுக்கு கிறவன். அவனுக்கு எப்படி சேமம் உண்டாகும்? நாங்கள் எத்தனையோ தடவை திருடுவதற்குக் கூப்பிட்டும் வந்தானில்லை. என்ன செய்கிறது? போனது போகட்டும்; இனிமேலாவது உபபலமாக வந்தால் போதும்; உங்களுடைய தரித்திரகாலம் விடிந்துபோகும் என்று புத்தி கூறி, செலவிற்கு கொஞ்சம் பணமும் கொடுத்து அனுப்பினார்கள்.

வித்துவான் மனைவி, தன் நாயகனிடம் வந்து 'நீர் செய்கிற தொழில் ஒரு பைசாவுக்கும் பிரயோசனமில்லை. களவு என்கிற மாணிக்கம் கையில் இருக்கிறபோது கேட்டு வாங்கிப் பிழைப்பது இழிச்சவாய்த்தனம் அல்லவா? நீர் இனிமேலாவது என் புத்தியைக் கேட்டு என் சகோதரர்களுடன் களவுக்குப் போய்வந்தால். நமது தரித்திரம் இருந்தவிடம் தெரியாமல் ஓடிப்போகும். என் புத்தியைப் பெண் புத்தி யென்று இகழ வேண்டாம், அரசர்களுக்கு மந்திரி புத்தி சொல்வதுபோல் நாயகருக்கு நாயகி புத்தி சொன்னால் நியாயமானதை ஒத்துக்கொள்வதுதான் முறை. இதனாலேயே,

ஆபத்து வேளைக் கறிவுசொல் மந்திரி
அரும்பிணிக் கவிழ்தஞ் சீவி—துன்பம்
அணுகும்போதாறுதல் தரித்திர காலத்தில்
அருநிதி யாமந்தத் தேவி

எனவும், வாசிட்ட நூலார் 'ஊகமுள தேற்சிறுவ ருரையுங் கோள்க' எனவும் கூறியதை நீர் வாசித்ததில்லையா?

"ஆற்றுக்குள் நின்று அரஹரப் போட்டாலும்
சோற்றுக்குள் இருக்கார் சொக்க நாதர்"

நல்வழி.

மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தவமுயற்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம்.

'நாழி அரிசியை நாய் கொண்டு போனால்
ஞானமும் கல்வியும் பேய்கொண்டு போகும்.
அன்னம் ஒடுங்கினால் அஞ்சும் ஒடுங்கும்'

என்ற பழமொழிகளையுங் கூறிப் பலவிதமாகப் போதித்தாள்.

வித்துவான், ஹர! ஹர!! சிவ! சிவ!! இந்த பஞ்சமா பாதகத் தொழிலைப் புரிபவனுக்கு ஒரு காலத்திலாவது விமோசனம் உண்டா?. இவ்வித வார்த்தைகளை இனி என்னிடம் சொல்லாதேயென்று காதில் கையை வைத்து மூடிக் கொண்டார். அது சமயம் மைத்துனர்களும் வந்துவிட்டார்கள். அவர்களிடம் தன் நாயகன் சொல்வதைச் சொன்னாள். அவர்கள் கோபாவேசத்துடன், என் தங்கைக்கு சோறுபோட விதியற்ற பயலே! நீயும் ஒரு ஆண் பிள்ளையா? என்று பலவிதமாக நிந்தித்துப் பிறகு, என்காணும் ஓலைகளை கிறுக்கிக் கிறுக்கிக் கெட்டுப்போகிறீர்? எங்களுடனே ஆள் எண்ணிக்கைக்காக வாரும்; நீர் திருடவேண்டாம்; உமக்குச் சரியான பங்கு தருகிறோம் என்று கூறிக் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு போனார்கள். 'முண்டனுக்கு இரண்டுபேர்' என்னும் பழமொழிபோல்

நாலுபேர் சேர்ந்திருக்கும்போது வித்துவான் என்ன செய்வார் பாவம்! எல்லாவற்றிற்கும் கடவுள் இருக்கிறார், ஆ! கடவுளே! இது உனக்குச் சம்மதமா என்று புலம்பிக்கொண்டே போனார். வித்துவான் எங்கே ஓடிப்போய் விடுவாரோவென மைத்துனர்கள் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு போனார்கள்.

## காணிக்கையும்-கவிவாணரும்.

மதுரைக்கு கிழக்கே 13-வது மைலில் தனுக்கோடிக்குச்செல்லும் பாதையிலுள்ள (திருப்புவனம்) திருப்பூவண நகரத்தில் அவதரித்தவளும், குரல் - துத்தம் - கைக்கிளை- உழை-கிளி-விளரி-தாரம் என்னும் (*) ஏழிசையைத் தந்தியினிடத்தில் எழச்செய்யும் யாழுக்கிசையப் பாடும் இன்னிசை நிரம்பிய பாடலிலும், பரதநூலின் விதியால் நிரம்பிய ஆடலிலும், அரம்பையரை நிகர்த்த பெண்வனப்பிலும் கடவுளுக்கும் - கடவுளது மெய்யடியார்களுக்கும் தொண்டு செய்வதிற் சிறந்து விளங்குபவளும், அடியார்களைப் பற்பல புட்பங்களால் அருச்சித்து அவர்களுக்கு இனிய சுவைகள் அமைந்த கறி வகைகளோடு அமுது செய்வித்து எஞ்சியதாகிய சேடத்தை புசிப்பதே நியமமாக எண்ணப் பெற்றவளுமாகிய பொன்னனையாள் என்னுந் தாசி ஒருத்தி யிருந்தாள்.

---

(*) ஏழிசைகளும் பிறக்கு மிடம்:—மிடற்றால்-குரல், நாவினால்-துத்தம், அண்ணத்தால் - கைக்கிளை, சிரத்தால் - உழை, நெற்றியால்—கிளி, நெஞ்சால்-விளரி, மூக்கால்- தாரம். இவற்றிற்கு ஓசையுவமை முறையே மயில்-இடபம்-ஆடு-கொக்கு-குயில்-குதிரை-யானை என்பர்.

திருவிளையாடற் புராணம்... ...

ஆய மாதர்பேர் பொன்னனை யாளென்ப் வவள்தன்
நேய வாயமோ டிரவிருள் நீங்குமு னெழுந்து
தூய நீர்குடைந் துயிர்புரை சுடர்மதிக் கண்ணி
நாய னாரடி யருச்சனை நியமமு நடத்தி.

திருத்த பூவண வாணரைச் சேவித்துச் சுத்த
நிருத்த மாடிவந் தடியவைப் பொருளென நினையுங்
கருத்த ளாயருச் சித்தவர் களிப்பவின் சுவையூண்
அருத்தி யெஞ்சிய தருந்துவாள் அஃதவள் நியமம்.

இத்தகைய மேன்மை வாய்ந்த பொன்னனையாள் வீட்டில் அக் கள்வர்கள் போய்ச் சேர்ந்து நள்ளிருளிற் கன்னம் வைத்தார்கள். பொன்னனையாள், சிவன் கோவிலுக்குச் சென்று சுவாமிக்கு ஆடல்-பாடல் முதலிய தொண்டுகள் செய்துவிட்டு, அர்த்த சாமத்திற்குப்பின் தனது வீட்டுக்கு வந்து சயனிக்கப் போகும் போது, திருப்பூவண நாதர்மீது தோத்திரமாகச் சுயம் பாடித் தியானித்துக் கொண்டு சயனிக்கும் வழக்கம் போல் அன்றிரவும்,

தலையிலிரந் துண்பார் தன்னுடலிற் பாதி
மலையின் மலைமகளுக் கீவர்—

மலையின் மலைமகளுக் கீவர் என்று பாடிக்கொண்டே, வெண்பாவின் தனிச் சீரும், பின் இரண்டியும் வாராமல், முன் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லி ஆலோசித்து வருந்திக் கொண்டிருப்பதை, திருடரோடு வந்த தலைமலைகண்ட தேவர் கேட்டுச் சகிக்க முடியாதவராய்,

... ... ... —உலையின்
இருப்புவன மேனியரு ரென்றாலோ

என்று அடியெடுத்து முடிப்பதற்குள் பொன்னனையாள்,

... ... ... ஆமாம்
திருப்புவனத் தீசர் திறம்

என்று பாடி முடித்தாள். இருவரும் பாடிக்கொண்டதை யறிந்த கள்வர்களெல்லாம், 'நூற்றைக் கெடுக்கும் குறுணி' என்ற பழமொழி போல், வெள்ளோலை கிறுக்குகிற வீண் பயலை நாம் கூட்டிக்கொண்டு வந்ததனாலல்லவா? அவன் புத்தியைக் காட்டி விட்டான். குற்றம் நம்மிடத்திலேயே யல்லாமல் அவனிடத்தில் கிஞ்சிற்று மில்லை. நமது உயிர் தப்பிப் போவதே தகுதியென்று ஓட்டம் பிடித்தார்கள்.

## பாதிப் பாடலுக்குப் பரிசு.

இந்த அர்த்த சாமத்தில் நமது பாடலுக்குத் தகுதி யான பொருள் அமைத்துப் பாடலைப் பூர்த்தி பண்ணியவர் நமது திருப்பூவண நாதரே யன்றி சாமானிய மனிதரல்ல வென்று தாசி அடங்கா மகிழ்ச்சிகொண்டு, சத்தம் பிறந்த திசையை நோக்கி யெழுந்துபோய்க் கட்டிப்பிடித்து, விளக் கேற்றிப் பார்த்து வணங்கி, ஐயா! நீர் யார்? எந்த ஊர்? எங்கே வந்தீர்? என்று அன்பாவலோடு கேட்டாள். வித்து வான், அம்மணி! நான் உன்னுடைய வீட்டில் கன்னமிட வந்த திருடன் என்றனர். தாசி, ஐயா! தாங்கள் கள்வரு மல்ல! சாதாரண மனிதருமல்ல! ஸ்ரீ திருப்பூவண நாதரே என்மீது கிருபை கூர்ந்து மனிதவடிவாக வந்த தெய்வப் புலவர்! அடியாளுடைய திரவியங்களில் எவ்வளவு வேண்டு மென்றாலும் எடுத்துச் செல்லுங்கள்! என்று இன்மொழி கூறி, பத்துநாள் வரையில் அவருக்கு உபசரித்துப் பிறகு பொற்பணம்,ஆபரணமுதலியவைகளை மூட்டையாகக் கட்டி ஒரு ஆள் தலையில் வைத்து அனுப்பினாள். அன்றியும், தாங்கள் உள்ளவரையில் தங்கள் குடும்பச் செலவுக்கு வே

ண்டிய திரவியங்களை வருடா வருடம் அனுப்பி வருகிறேன். அதற்கு பதிலாகத் தாங்கள் வசிக்கும் மருதூர் சுவாமியின் மீது ஒரு அந்தாதிபாடியருள வேண்டும் என்று கேட்டுக் கொண்டனள். வித்துவானும் பாடிக்கொடுப்பதாக வாக்களித்து இப்போது வழங்கும் மருதூர் அந்தாதியைப் பாடியருளினாராம்.

### கலி வெண்பா.

தலைமலைகண் டானென்றோர் சாதி மறவன்
புலவருக்கு மேலாம் புலவன்—அலைமலைவாய்ப்

பஞ்சகா லங்கள்வந்து பாட்டொருவர் கேட்பரிதாய்
நெஞ்சமெல்லாம் புண்போல் நினைக்கையிலே—வஞ்சியெனும்

தன்மனையா ளுக்குச் சகோதரர் இராக்கனில்
அன்னவர்கள் சீவனம தாகையால்—பன்னுதமிழ்

வாணரே பங்குமக்கு வைத்துத் தருகிறோம்
நாணமின்றி முன்னே நடவுமென்றார்—வேணதவர்

சொல்லியும் விடாமல் துதிசேர் திருப்புவன
வல்லியெனுந் தாசி வளவிலே—கொல்லைதனில்

வந்தே திரண்டுகன்னம் வைத்துட் புகுந்துநிற்கில்
அந்தமனை வேசைசுய மாகவே—முந்தித்

தலையிலிரந் துண்பார் தன்னுடலிற் பாதி
மலையின் மலை மகளுக் கீவர்—மலையின்

மலைமகளுக் கீவரென்றே மாறுமற் சொல்லப்
புலவருமே நிற்கப் பொறுமல்—உலையின்

இருப்புவன மேனியனு ரென்றலோ ஆமாம்
திருப்புவனத் தீசர் திறமென்—றுரைத்திருவர்

சொன்னவுடன் கள்வரெல்லாம் சொற்புலவ னுல்நமக்கு
வின்னம்வந்த தென்றோடி விட்டார்கள்—அந்நேசம்

சத்தம் பிறந்திடத்தில் தாசியுங்கை கொண்டுகட்டி
எத்தலம்நீ ரென்றுவினக் கேற்றினன்—முத்தமிழோன்

சன்னமட்டிற் போவதிது தானலவென் றன்வீட்டிற் [வுடன்
கன்னம்வைத்துன் னேபுகுந்தேன் கள்ளனென்றார்—சொன்ன

கள்ளனல்ல நல்ல கவிராஜ ரென்றவள்தான்
உள்ளம்வைத்து வீட்டி னுடைமையெல்லாம்—மெள்ளப்

பதறா தெடுத்துப் பணச்சுமையுங் கட்டிச்
சிதறாது போவெனவே செப்பிக்—குதறா

மருதூரந் தாதி வழுத்தும்வகை செய்தாள்
திருமா தவளெனுமே தேசம்.

## தேவடியாளும் சித்த மூர்த்திகளும்.

இத்தகைய கல்வி அபிமானமுள்ள பொன்னனையாள், அடியார்களுக்கு அமுதளித்து அவர்கள் புசித்து எஞ்சிய ஆகாரத்தையே தினமும் புசிப்பதாக விரதம் ஏற்படுத்தி நடந்து வரும் நாட்களில் ஒரு நாள், திருப்பூவணத்துச் சுவாமியின் ஞாபகார்த்தமாக ஒரு விக்கிரகத்தைப் பொன்னால் நிருமித்து வைக்கவேண்டுமென எண்ணங்கொண்டு, ஆடல்-பாடல் முதலியவைகளில் சம்பாதிக்கும் திரவியங்களை அடியார்களுக்குச் செலவழித்தது போக மீந்ததைக் கொண்டு விக்கிரகம் வார்த்து விடலாமென்று நினைந்து தபதிகளிடத்தில் கரு (குகை) வார்க்கும்படி செய்தாள். அது முதல் (சோதனையினால்) சம்பாதிப்ப தெல்லாம் அடியார்கள் பூசைக்குச் சரியாயிருப்பதே யன்றி, ஒரு காசாவது மிஞ்சுவதில்லை. ஆதலால் நாம் எப்படி விக்கிரகம் வார்க்க முடியும் என்ற எண்ணமே ஓயா விசாரமாகிக் கடவுளைச் சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

ஒருநாள் திருப்பூவண நாதர், ஒரு சித்தர் வடிவங் கொண்டு பொன்னனையாள் வீட்டில் அமுது புசிக்க வரும் அடியார்களுடன் வந்து, இதர அடியார்களைப் போல் அமுது புசிக்காமல் அவளது மாளிகையின் கடைவாயிலின் ஒரு புறத்தில் தங்கியிருந்தார். குற்றேவல் செய்யும் பணிப் பெண்கள் அவரைக் கண்டு வணங்கி, சுவாமி! அமுது செய்வதற்கு எழுந்தருளுங்கள்! என்று பிரார்த்தித்தனர். சித்தர், அவர்களை நோக்கி நீங்கள் சென்று உங்கள் தலைவியை இவ்விடத்திற்கு வரச்சொல்லுங்கள் என்றனர். பணிவிடை மாதர்கள் தமது தலைவியைக் கண்டு, எமது பெருமாட்டியே! எல்லா அடியார்களும் திருவமுது செய்தகன்றார்கள். ஒரு சித்த மூர்த்திகள்மட்டும் அமுது புசியாதிருக்கின்றனர் என்றனர். பொன்னனையாள், தாயைத் தேடிச்செல்லும் பசுங் கன்றைப்போல் விரைந்து சென்று, நவபுண்ணியத்துடன் வழிபட்டு, சுவாமி! தேவரீர் அடியாள் மனைக்கு எழுந்தருளப் பெற்றதற்கு நானும், எனது முன்னோர்களும், இந்தக் குடிசையும் எவ்வளவு தவம் பண்ணியிருக்கவேண்டும்! என்று புகழ்ந்து, அடிகளே! மனைக்குள் வந்திருக்கக் கடவீர்! அடியாள் செய்யவேண்டிய ஊழியங்களைச் செய்கிறேன் என்றனள்.

சித்த மூர்த்திகள் அவளை நோக்கி, அன்பிற் சிறந்த பெண்ணே! நீ விசாரமுற்றுச் சரீரம் மெலிந்திருப்பதாகப் புலப்படுகிறது. அதன் காரணம் என்ன? வென்று வினவினார். அதற்கு, எமது பெருமானே! வேறொரு மெலிவுமில்லை; எங்களது இறைவராகிய இவ்வெருமானது திருவுருச் சமைக்க எனக்கு அதிக விருப்பமிருப்பதால் கருத்தட்டி முடிக்கக் கருதினேன். ஆடல்-பாடல்களால் நான்

நாள்தோறும் சம்பாதிக்கின்ற திரவியங்களெல்லாம், தங்களைப்போன்ற அடியார் பூசைகளுக்குச் சரியாக இருக்கின்றதேயன்றி, ஒரு காசேனும் மிஞ்சவில்லை. இதுதான் மெலிவுக்குக் காரணம் என்று சொல்லினள்.

சித்தமூர்த்திகள், மயில் போன்ற சாயலை யுடைய பெண்ணே! நீ செல்வமும்-சரீரமும்-இளமையும் நீர்மேற் குமிழி யென்றறிந்து, புண்ணிய காரியம் இன்னதென நன்குணர்ந்திருக்கிறாய். அறஞ் செய்வதிலும் சிவபுண்ணியம் விசேடம்; சிவ புண்ணியத்திலும் சிவபூசை விசேடம்; சிவ பூசையிலும் அடியார் பூசையே விசேடம் என்றுணர்ந்து அடியார்களைப் பூசித்தும் வருகிறாய். நீ நினைந்து வருந்தும் காரியத்தை நாமே முடித்துக்கொடுக்கிறோம் எனத் திருவாய் மலர்ந்தருளி, அவள் வீட்டிலுள்ள பன்மையான பித்தளை - வெண்கலம் - ஈயம் முதலான பாத்திரங்களைக் கொண்டு வரும்படிச்செய்து, அவற்றின்மீது திருநீற்றைத் தெறித்து, இவைகளை நீ இன்றிரவு நெருப்பில் புடம்போட்டெடுத்தால் மாற்றுயர்ந்த பொன்னாகும். அதனால் சிவ பெருமானது திருவுருச் செய்துகொள்! என்று சொல்லி மறைந்துபோயினர். அப்படியே அவைகளைப் புடமிட்டுத் திருவுருச் சமைத்தனள் என்பதைத் திருவிளையாடற் புராணத்தில் விரிவாய்க் காணலாம்.

### அஞ்சனாட்சியும்-கம்பரும்.

சாலிவாகன சகாப்தம் ஒன்பதாம் நூற்றாண்டில், தஞ்சமா நகரத்தில் அஞ்சனாட்சி என்றொரு தாசி இருந்தனள். அவள் கல்வியிற் சிறந்து விளங்கிய வித்துவாம்சை. கம்பநாட்டார் இராமாயணம் பாடி முடித்து அரங்கமா நகருக்கு அரங்கேற்றக் கொண்டுபோன காலத்து, அங்குள்ள

பிராமணர்கள் அவரை நோக்கி புலவீர்! இன்ன-இன்ன இடங்களுக்குப்போய் இவரிவர் கையொப்பங் கொண்டு வருக என்றபோது, அஞ்சனாட்சி கையொப்பமும் கொண்டு வருக என்றனர். புலவர் பெருமான் அங்ஙனமே அஞ்சனாட்சியிடம் சென்று கேட்டலும், அவள் அதிக வியப்புற்று, தாங்கள் இந்த அற்ப காரியத்திற்காக என்னை ஒரு பொருளாக மதித்து வருதல் சாலுமா? என்று இங்கிதவுரைகூறி,

அம்பரா வணிசடை அரன யன்முதல்
உம்பரால் முனிவரால் யோக ராலுயர்
இம்பராற் பிணிக்கரும் இராம வேழஞ்சேர்
கம்பராம் புலவரைக் கருத்தி ருத்துவாம்.

என்னுஞ் செய்யுளை உடனே பாடிக்கொடுத்தனள்.

"இரண்டொன்றாய் முடிந்துதலை யிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்த னில்லை"

என்னும் செய்யுட் கிலக்கானவரும், (வெண்பா பாடுவதில் சிம்மேறாகிய புகழேந்திப் புலவராலும், விருத்தம் பாடுவதில் சதுராகிய கம்பராலும் கர்வபங்க மடைந்தவரும்) அழுக்காறில் சிறந்தவருமாகிய ஒட்டக்கூத்தரது துர்ப்போதனையைக்கேட்டுக் குலோத்துங்க சோழன் கம்பரைத் தன் தேயத்தை விட்டுத் துரத்தினன். கம்பர் தன் குடும்பத்தாரிடத்துங்கூடச் சொல்லிக்கொள்ளாமல் சோழநாட்டெல்லையை விட்டுச் சென்று கொண்டிருக்கும் வழியில், ஓரூரில் சிலம்பி யென்னும் ஓர் ஏழைத் தாசி, கம்பர் வாக்கால் கவிபெற வேண்டுமென விழைவுற்று அவரை மிகவும் உபசரித்தனள்.

காசுக்குக் கம்பன் கருணைக் கருணைகிரி
ஆசுக்குக் காளமுகி லாவனே—தேசுபெறு
மூழுக்குக் கூத்தன் உவக்கப் புகழேந்தி
கூழுக்கிங் கௌவையெனக் கூறு

என்ற செய்யுட் கருத்தின்படி கம்பர், பொருளாசையாலும், தாசியிடத்து அதிக பொருளிருக்குமென்று எண்ணியபடியாலும், தம் ஒரு கவிக்கு விலை 'ஆயிரம் பொன்' என்றனர்.

தாசி, கவியை மிகவும் வேட்டனளாகலின், தன் சொத்தையெல்லாம் விற்க ஐந்நூறு பொன்தான் தேறிற்று. அதனைக் கம்பர்முன் வைத்து வணங்கலும், அவர் அதனை யேற்று,

தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணாவ தஞ்சோழ மண்டலமே — ...

என அரைவெண்பாவை மட்டும் பாடி, நீ கொடுத்த பொருளுக்குப் பாட்டாயிற்று எனக்கூறி, அதனை அவள் வீட்டுத் தெருச் சுவரின்மேல் எழுதிப் போயினர். தன் சொத்தெல்லாம் இழந்தும், செய்யுள் பூர்த்தியாகவில்லையே யென்று தாசி வறியளாய் வருந்திக்கொண்டிருந்தனள்.

இவ்வாறுய நாட்களில், அவ்வழியே வந்த ஔவைப் பிராட்டியார் அத்தாசியை நோக்கி, என் பசிக்கு ஏதாவது கொடுக்க மாட்டுவையோ! எனலும், அவள் தனக்காக வைத்திருந்த கூழைக் கொடுக்கப் பசி நீங்கி; சிரம பரிகாரத்திற்காக அவள் வீட்டுத் திண்ணையில் சாய்ந்து கொண்டிருக்கும்பொழுது, சுவர்மீது வரையப்பெற்றுள்ள செய்யுளின் இரண்டடிகளைக் கண்ணுற்றுத் தாசியை வினவலும், அவள் நடந்தவற்றை ஆதியோடந்தமாகச் சொன்னாள். அவ்வம்மையார் உடனே அதன்கீழ்,

... ... ... பெண்ணவான்
அம்பொற் சிலம்பி அரவிந்தத் தாளணியும்
செம்பொற் சிலம்பே சிலம்பு;

எனவெழுதிப் பாட்டை முடிக்கத் தாசி மகிழ்ந்தனள்.

## பூங்கோதையும்—சீதக்காதியும்.

கி. பி. பதினாறும் நூற்றாண்டில் மதுரைமா நகரத்தில் பூங்கோதை யென்றொரு தாசி யிருந்தாள். அவள்,

தேட்டாளன் காயல் துரைசீதக் காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்பம் நாட்டிவைத் தான்தமிழ் நாவலரை
ஒட்டாண்டி யாக்கி அவர்கடம் வாயில் ஒருபிடிமண்
போட்டான் அவனும் ஒளித்தான் சமாதிக் குழிபுகுந்தே.

மறந்தா லுமரைக் காசுகொ டாமட மாந்தர்மண்மேல்
இறந்தாவ தென்ன இருந்தாவ தென்ன இறந்துவிண்போய்ச்
சிறந்தாளுங் காயல் துரைசீதக் காதி திரும்பிவந்து
பிறந்தா லொழியப் புலவோர் தமக்குப் பிழைப்பில்லையே

என்பது முதலிய பல பாக்களால் வித்துவான்கள் சிறப்பித்துப் பாடப் பெற்ற பெருங் கொடை வள்ளலாக அவதரித்து விளங்கிய, காயற்பட்டினம், செய்கு அப்துல் காதிறு என்னும் சீதக்காதி மறைக்காயர் கொடுத்த பெருநிதியைக் கொண்டு, தாசி தன் ஊருக்குப் போகும் வழியிலே, கள்ளர் அப் பொருளையும் அவளிடத்திலுள்ள இதர உடைகளையும் பறித்துக் கொள்ள, கதியற்றவளாய்த் திரும்பி வந்து மறைக்காயரைக் கண்டு,

தினங்கொடுக்குங் கொண்டையானே! தென்காயற் பதியானே!
சீதக் காதி!
இனங்கொடுத்த வுடைமையல்ல தாய்கொடுத்த வுடைமையல்ல
எளியாள் ஏர்கை...

மனங்கொடுத்து மிதழ்கொடுத்து மபிமானந் தனைக் கொடுத்தும்
மருவி ரண்டு
தனங்கொடுத்த வுடைமையெல்லாங் கள்ளர்கையிற் பறிகொடுத்துத்
தவிக்கின்றேனே

என்று இவ் விருத்தத்தைப் பாடக் கேட்ட மறைக்காயர், எவ்வளவு தொகை? என்றனர். தாசி, ஐயா! ஆயிரம் (1,000) என்றனள். ஆயிரம் என்பதை ஐயாயிரமாகப் பாவித்து ரூபாய் 5,000 கொடுத்து, பாது காப்புடன் ஊருக்கு அனுப்பி வைத்தனர்.

ஆகையால், மேற்கூறப்பெற்ற பொன்னனையாளும்-அஞ்சனாட்சியும்-பூங்கோதையும் தமிழ்ப் புலமையிற் சிறந்தவர்கள் என்பதற்கு அவரவர்கள் பாடல்களே போதிய சாட்சியாவதுடன், தாசி சிலம்பி என்பவள் தமிழ் அபிமானி யென்று முணரப்பெற்றும்.

முன்னுள்ள தேவதாசிகள் பண்டித சிரோன்மணிகளாயிருந்தது மன்றி, தெய்வ பத்தி, அடியார்களுக்கு வந்தனை வழிபாடு முதலிய சர்வோத்தம செய்கையுடையவர்களாயும் இருந்திருக்கிறார்கள் என்பது வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றது. இக் காலத்திலுள்ள தேவதாசிகளோ! அதற்கு நேர் விரோதமாய் அடியாரைக் கண்டால் விரத்தியும்-நிந்தனையும், பணம் கொடுப்பாரைக் கண்டால் பத்தியும்-வந்தனையும் செய்கிறார்கள். ஆனால் உருத்திர கணிகையர் குலச்சிறுமிகள், காமரசத்தை ஓர் எட்டுணையும் அறியாத பேதைப் பருவத்திலேயே, காமரசம் கன்னி யறிவாளோ! என்னும் தாயுமான வள்ளல் கருத்தை யுணராமலும், தக்க பருவம் வந்தபின், விபசாரம் செய்ய இஷ்டமிருந்தால் செய்யட்டும் என்று கூட நினையாமலும், அச்

சிறுமிகளின் மாதா முதலானவர்களால் ஆபாச நடைக்குப் பழக்கப் பெறுகிறார்கள்.

மாதர்கள் விபசாரம் செய்வது சன்மார்க்க ஒழுக்கத்துக்கு முற்றிலும் முரணான தென்பதை எவரும் மறுத்துரைக்கத் துணியார். ஒவ்வொரு மாதரும் தான் விலைமாதா யிருப்பதே நல்லொழுக்கத்துக்கு மாற்றமாயிருக்கும்போது, ஒருவர் மற்றொரு பாலிய கன்னிகையை விபசாரத்துக் கென்று பழக்குவதானது மிகக் கொடிய பாதகமான காரியமாகவும், சட்ட விரோதமான செய்கையாகவும் காணப்படுகின்றது.

## விபசார மசோதாக்கள்.

இளங் கன்னிகைகளை இவ்விதமான இழிதொழிலில் பழக்காமல் தடுக்கும் பொருட்டு கி. பி. 1924-வருடத்தில் டெல்ஹி அஸெம்ப்ளியில், 18-வயதுக்கு முன் ஒரு பெண்ணை மற்றொரு மாது விலைமகளாக ஆக்கக்கூடா தென்பதற்கு சட்டம் பிறப்பிக்கும் விஷயமாக ஒரு மசோதா கொண்டு வந்து யோசித்துத் தீர்மானிக்கப் பெற்றது. இந்தத் தீர்மானம் ஒட்டக்கூத்தன் கவிக்கு இரட்டைத்தாழ் என்றபடி யிருக்க,

பல பாஷைச் சனங்கள் நிறைந்த பர்மாவின் தலை நகராகிய இரங்கூனில், அநேக தெருக்களில், பர்மீய-ஜப்பானிய-பங்காளிய-தெலுங்க (கோரங்கி) மாதர்களால், விபசார மென்பது ஒரு பெருத்த வியாபாரம் போல், நாற்காலி மேசை போட்டு குமாஸ்தாக்களை வைத்து கணக்கு முதலானவைகளெழுதி பகிரங்கமாகவே நடைபெற்று வந்ததனால் இளைஞரும்-முதியருமாகிய பல மாந்தர்கள் பற்பல

கொடிய ரோகங்களுக்காளாகி வைத்தியசாலைகளையே உறைவிட மாக்கிக்கொண்டனர். தினம் நூற்றுக் கணக்கான பிணியாளர்கள் வந்து நிறைவதால் பிரதான வைத்தியசாலை (General Hospital) முதலான எல்லா வைத்தியசாலைகளிலும் இடமில்லாமற் போனதுடன் இவர்களுக்குச் சிகிச்சை செய்வதற்கும் அசாத்தியமாயிற்று. இந்தக் கண்ராவியை நன்குணர்ந்த சன சமூகத்தாரும், அரசாங்கத்தாரும் சேர்ந்து சென்ற கி. பி. 1923-ம் வருடத்தில் ஒரு மசோதா கொண்டு வந்து, அதைச் சட்டமாக்கி விபசாரமென்பதை தலை காட்டாமல் செய்திருக்கின்றனர்.

கி. பி. 1925-ம் வருடம் கூடிய ஆந்திர மகா நாட்டில் தேவதாசிகளை கோவில்களுக்கும், கலியாணம் முதலானவைகளுக்கும் தருவிக்கப்படா தென்று ஒரு தீர்மானம் கொண்டுவந்து ஏகமனதாய் நிறைவேற்றப் பெற்றிருக்கிறது. அன்றியும்,

தேவ தாசிகளின் வமிசத்தினராகிய இசைவேளாளர் என்று தற்காலம் பெயர்வைத்துக் கொண்ட சங்கத்தார்களால் தாசித் தொழிலை அறவே நீக்கிவிட வேண்டுமென்றும், கோவில்களுக்கு பொட்டுக்கட்டக் கூடாதென்றும், கூடுமானால் தாசி என்கிற நாமமே இத்தென்னிந்தியாவில் வழங்காதபடி செய்துவிட வேண்டுமென்றும் ஒரு அழுத்தமான மசோதா கொண்டுவந்திருப்பதாகவும், இன்னும் பல விடங்களில் விபசாரத்தைப் பற்றிய கண்டனங்கள் நிகழ்வதாகவும் பல பத்திரிகைகள் வாயிலாகத் தெரிகிறது.

### தாசியும்—சர்ட்டிபிகேட்டும்.

தேவதாசியாக விரும்புகிறவள், தனக்குப் பக்குவம் வந்தபின் தன் அபிப்பிராயத்தைத் துரைத்தனத்தாருக்குத்

தெரிவித்து, துரைத்தன வைத்தியர் (Doctor) உறுதி மொழிச் சீட்டு (Certificate) கிடைக்கப்பெற்று, அதன் பிறகு அரசாங்கத்தார் அனுமதியின் பேரிலேயே கோவிலுக்குப் பொட்டுக்கட்ட வேண்டும் என்று துரைத்தனத்தார் ஆக்ஞாபித்திருக்க, அதற்காக (பொய்ச்சாட்சி சொல்வோன், நியாயத்தலத்திலும் மயங்காமல் சொல்வதற்கு, கட்சி செயிக்க வக்கீல்கள் உருட்டும்-புரட்டும் சொல்லிக் கொடுப்பதுபோல்) அந்தக் கன்னிகைக்கும் நாளாவட்டத்தில்; துரைத்தனத்தார் அனுமதி கொடுப்பதற்கு வேண்டிய வாக்கியப் பிரயோகங்களை இப்படிச் சொல்! அப்படிச் சொல்! என்று அல்லும்-பகலும் சொல்லிக் கொடுத்து, நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு என்னும் நாற்குணங்களும் இருந்த விடம் தெரியாமல் ஓடிப்போகும்படி, ஆடல்-பாடல் முதலியவைகளைக் கற்றுக்கொடுத்து, எதுமறியாத பேதைப் பெண் குழந்தைகளை உதர போஷணையின் நிமித்தம் தாய்க் கிழவிமார்கள் கெடுத்து விடுகிறார்கள். இனிமேலாவது,

வயிறு வளர்க்கைக்கு மானம் அழியா
துயிர்விடுகை சால வுறும்

என்பதை யுணர்ந்து இவ்விதத் துர் அனுஷ்டானங்களை விட்டொழிப்பார்களென்றும், அதனால் உலகம் மேன்மை யடையு மென்றும் தாய்க் கிழவிகளுக்கு எச்சரிக்கை செய்கிறோம். 'தொட்டிற் பழக்கம் கட்டையிற்போம் வரை' என்பது கவனிக்கத்தக்கதே.

முற்காலத்தில் மதுரைமா நகரில் மாணிக்கவல்லி யென்றொரு தாசி இருந்தாள். அவளுக்கு திருமகளும்-கலைமகளுமே சிவஞான மாதர்களாக அவதரித்தாரெனச் சொல்லத்தக்க விதமாய் இரண்டு புத்திரிகள் அவதரித்தார்

கள். அவர்கள் (*) பேதைப் பருவம் கடந்து பெதும்பைப் பருவம் அடைந்தவுடன், மாணிக்கவல்லி மனங்களித்து தமக்குரிய கலவித் தொழில்களை அவர்கள் அறிந்து கொள்ளும்படி விரகமிகுதற்கு ஏதுவாகிய சிற்சில லீலைகளை மாடம் முழுமையும் சித்திரித்தும், போக ஓசை பயிற்றுகின்ற மயில் முதலிய பறவைகளையும், வீணை முதலிய வாத்தியக் கருவிகளையும் சேகரித்து சூரியனிடத்திலே இருளைப் பழக்குவித்தல் போல் அவர்களுக்குக் காமக் கல்விகளையும், மோன வித்தையுள்ள முனிவோரையும் மயக்கும் கான வித்தையின் திறங்களையும் அடியிற்கண்ட கலிவெண்பாவின்படி கற்பிக்க முயன்றனள்.

## மாணிக்கவல்லி, உபதேசம்.

### கலிவெண்பா.

மானேயென் கண்ணே மயிலே குயிலனமே
தேனே எனதிரண்டு செல்வமே—மீனீன்ற
குஞ்சுக்கு நீச்சுங் கொடும்பாம்பின் குட்டிக்கு
நஞ்சுங் கொடுத்தவரார் நங்கையே—செஞ்சிலைக்கைச்

---

(*) மாதர்கட்கு - பேதை - பெதும்பை - மங்கை - மடந்தை - அரிவை - தெரிவை - பேரிளம்பெண் எனப் பருவம் எழுவகையாம். 5 வயது முதல் 7 வயது வரையில் பேதை; 8 முதல் 11 வரையில் பெதும்பை, 12 முதல் 13 வரையில் மங்கை, 14 முதல் 19 வரையில் மடந்தை, 20 முதல் 25 வரையில் அரிவை, 26 முதல் 31 வரையில் தெரிவை, 32 முதல் 40 வரையில் பேரிளம்பெண் என்று வழங்கப் பெறும். இவற்றை, வாலை-தருணி-பிரவிடை-விருத்தையென நான்கு பருவங்களாகவும் கூறுவதுண்டு. அவை:—

16 வயது வரையில் வாலை, 17 முதல் 30 வரையில் தருணி 31 முதல் 55 வரையில் பிரவிடை, 55 வயதுக்கு மேற்பட்டவள் விருத்தையாம். (இதன் முழு விபரத்தை நமது யோகஞான ரகசியத்தில் விரிவாய்க் காணலாம்.)

சீவகனுக் கன்றொருபெண் சிங்கமொரு கன்றீனும்
பாவனைபோ லேயெழுதிப் பக்கத்தில்—ஒவியமாக்

காரானை போன்றெழுதிக் காட்டவரிக் கன்றுபோய்ப்
போராடிப் பாய்ந்தகதை பொய்யலவே—யாருக்கும்

சாதித் தொழில்தனக்குத் தானே வருமொருவர்
போதிக்க வேண்டுமோ பொற்கொடிகாள்!—மாதர்க்குள்

என்புத்திக் குங்கள்புத்தி யெண்மடங்க தாகிலுமென்
தன்புத்தி யும்மகனே சற்றேகேள்—அன்புடைய

குஞ்சரத்தி னுக்கிளைய குமரன் பழநிமலை
மஞ்சட் குளியை மறவாதே—மஞ்சன்

மணங்காட்டி யாட்பிடிக்கும் மாயைப் பொடியின்
குணங்காட்டிக் கண்காட்டிக் கோலம்—இணங்கியபொன்

உத்தரியஞ் சற்றே யொருபாற் றெரியவிட்டு
குத்துமுலைச் செம்பொற் குடங்காட்டி—முத்துநகை

காட்டிவகை காட்டிக்கை காட்டியிடை காட்டிநலங்
காட்டியிளை யோர்க்காசை காட்டுவாய்—கோட்டுமுலை

சாய்ந்தான் முகந்திரைந்தாற் சல்லிக்கா சொன்றுமுனக்
கீந்தா தரிப்பவரா ரேந்திழைகாள்!—ஆய்ந்தபஞ்சுப்

பெட்டிபோ லேநரைத்த பெண்கள்கையி லென்னவருஞ்
சட்டி சுறண்டவருந் தையலர்காள்!—கட்டழகு

வாலிபத்தே தேட்டில் மனம்வைத்தால் பொற்றகட்டால்
வேலையிட்டுக் கட்டலாம் வீடெல்லாம்—மேலொருவர்க்

காசைவைத்தாற் பின்னொருவ ரண்டா ருடனொத்த
வேசையர்க்கெல் லாநகைப்பா மெல்லியரே—காசுபணம்

குப்பல்குப்ப லாகக் குவித்தாலும் வாலிபத்தில்
வைப்பிருக்கச் சற்றுமனம் வையாதே—இப்புவியான்

மன்னவரைத் தூங்குசப்ர மஞ்சத்தின் மீதிருத்தி
பொன்னவரைக் கேளாமற் புல்லினுல்—மின்னரசே

ஊர்க்குஞ் சலிகைநம்மோ டொத்தவர்க்கு மெண்ணிக்கை
யார்க்குங் கனத்தகுடி யாகலாம்—பார்க்குள்ளே

புல்லுவிற்றுங் கீரைவிற்றும் பொன்கொடுப்பார் காணமக்கு
கொல்லிமலைப் பாவாய் குலதெய்வம்—பல்விழுந்த

கூனற் கிழவன் கொடுக்கும் பணமதனில்
நானக்குழலே நரையுண்டோ—மானமின்றி

அப்பன் வருவா னதன்பின் மகன்வருவான்
தப்புமுறை யென்றுநீ தள்ளாதே—இப்புவியில்

மாலைக் குடியர்வெகு மாமாயக் கள்ளர்தங்கள்
சோலிக்கும் போகாதே தோகையர்காள்!—வேலையின்றித்

தத்தைமொழி யாரைத் தழுவித் தனம்பறிக்கும்
எத்தரைநா மெத்துவது மெத்துகாண்—புத்திகெடும்

மன்மதநூ லைப்படித்த வம்பரையென் ஞானையுன்றன்
சென்மசென்ம முள்ளமட்டுஞ் சேராதே—சன்யாச

ருத்திராட் சப்பூனை ரூபர்சில ருண்டுவந்தால்
மெத்தையிலே வைத்து விளக்கணைத்துச்—சத்தமின்றிக்

கூடையிலே யானைவைத்துக் கூப்பிட்டா லன்னவரைக்
கூடையிலே மூடிவைத்துக் கூப்பிடுநீ—பாடிக்

கடுக்க னலைக்குங் கவிப்புலவர் வந்தால்
துடுக்கா யொருவார்த்தை சொல்லாதே—கொடுக்கவென்றால்

ஐத்துபொன் வாங்கார் அரைப்பணமே போதுமென்பார்
சிந்தை யவர்மகிழச் செய்திட்டால்—ஈந்த

இசைபாடு வார்கூடா தென்றாற் கொடிய
வசைபாடு வார்கெடுமே வாழ்வு—அசையவுளம்

அஞ்சுகின்ற கச்சேரி யாட்சே வகர்வந்தால்
வஞ்சியவ் ரீந்ததைநீ வாங்கிக்கொள்—கொஞ்சமென்று

எண்ணுதே கைமுந்தல்மற் றென்னபோம் ஓர்செம்புத் [ங்கே
தண்ணீர்போம் நாமிடும்பொய்ச் சத்தியம்போம்—பெண்ணண

வாவென் றழைப்பார் மணியப் பிலுக்கர்சும்மா
போவென்று சொன்னலும் பொல்லாப்பு—பாவையே

சாதனையாச் சேலையிலே தம்பலத்தின் சாருமிழ்ந்து
சூதகமா னேனென்று தூரவிரு—மாதவிடா

யானநா ளிற்பணங்கள் அஸ்தரோக்கங் காணிலொரு
பானைவெந்நீர்க் காகவெண்ணிப் பாராதே—நானுன்மேல்

மோகமுற்றேன் நீயென்மேல் மோகமில்லை யென்றுசிலர்
தோகைநல்லா யுன்கருத்தைச் சோதிப்பார்—ஒகோநீர்

என்னமாச் சொல்லவந்தீ ரென்னுசை யும்மேலென்
றன்னமே யென்றலைதொட் டாணையிடு—சொன்னவந்தப்

பொய்யாணை யால்சீவன் போகுதோ பாரெனக்குத்
தையலவ் வாணை தயிர்ச்சாதம்—கையில்

இருட்டினிற்செல் லாப்பணத்தை யீந்து படுத்துக்
கருக்கலிலே போவார்ரக் காட்டித்—தாச்சொல்லி

வாய்மிரட்டாப் பேசினல் மானே முயலின்மேல்
நாயைவிட்டாற் போலெழும்பி நம்மைவிடு—கோயிலுக்குள்

நம்பியா ரையனுடன் நானுண்டு நம்பியார்
தம்பியாரைக் கூடிச் சஞ்சரிநீ—அம்பெனுங்கண்

மைவிஸ்தா ரக்குயிலே வாய்விஸ்தா ரக்காரன்
கைவிஸ்தா ரக்காரன் கையைவிடு—செய்யுமற்றக்

கட்டளையார் வந்தாலுன் கைம்மருந்தா லேயறிவைத்
தட்டழியப் பண்ணித் தனம்பறிநீ—அட்டலிலே

சோறு சமைக்கும் சுயம்பாகி வந்தாக்கால்
வேறுமொரு வேளாண்மை வேண்டுமோ—காறும்

பரும்படியுஞ் சம்பாவும் பாற்குழம்பு நெய்யும்
வரும்படிந்த கட்டளையாய் மானே—தரும்பொருளை

வெம்பளிக்கை பண்ணாதே வெஞ்சினப்பண் டாரிவந்தா
லும்பளிக்கை யூர்வரத்தை யொக்குமோ—சம்பளத்தைக்

கூட்டிச் சும்த்திவைப்பான் கோயிற் கணக்கனொரு
வேட்டுப்போட் டுப்போக வீட்டிலழை—ஆட்டுவிக்கக்

கால்பிடித்த நட்டுவனார் கையைப் பிடித்தழைத்தால்
வேல்படைத்த கண்மயிலே மேவிவிடு—சாலநெடு

நேரஞ்செல் லாம னெடுங்குடைகைக் காரனைமுன்
நேர மழைத்தனுப்பு நேசமாய்—சாரமுள்ள

நாடகத்துப் பாங்கு நமக்கு நடத்துவிக்கும்
பாடகனை யுந்தனது பண்ணிக்கொள்—கூடுதித்திக்

காரனையுங் கைத்தாளக் காரனையு மெக்காளக்
காரனையுங் கூடியிதங் காட்டாதே—சேருசப்ர

மஞ்சத்தில் நீயுமொரு மாப்பிளையுமா யிருந்து
மிஞ்சுசர சத்திலொரு வேற்றான்வந்—தஞ்சாறு

தந்தா லவனைச் சமையல்வீட்டிற் பதுக்கிச்
செந்தேனே மெல்லச் செறுமுவேன்—வந்தணைந்து

கொல்லைக்குப் போன குணம்போற்கை காலலம்பி
மெல்லப்போ நம்மையெவர் வெல்லுவார்—நல்ல

உடந்தையாய் வைத்திருந்த உத்தியோ கஸ்தர்க்
கிடைஞ்சல்வந்தா லுன்னையும்வந் தேய்ப்பார்—மடந்தையே

காணிக்கை யானேனுன் கண்டியைத்தா தண்டையைத்தா
மாணிக்க மாலையைத்தா வைத்துநான்—காணிக்கை

தீர்ந்தவொரு மாதந் திருப்பித் தருவனென்பார்
ஏந்திழையே நீசற் றிணங்காதே—காந்தாரி

என்னைக் கலந்தவர்க ளென்றாலுங் கைநிறையப்
பொன்னைக் கொடுத்தாற் புணர்ந்துவிடு—முன்னே

பறவையிரு கங்கண்முறை பார்க்குதோ வேசி
முறைபார்க்க வேயிழைப்பு மோசம்

என்பது போன்ற அனுச்சார, அருவருப்பான போதனைகளை மாணிக்கவல்லி பன்னாட்கள் வரையில் தமது மகளிருவருக்கும் வெகுவாக முயன்று காமோபதேசம் புரிந்ததுமன்றி, தன் மனதுக் கிசைந்த விருத்த பருவமுடையவர்களாலும் போதிக்கச் சொல்லி இனி நமக்கு என்ன குறையென்று மஹாகுதூகலத்தோடிருந்தனள். ஆனால், புராணங்களிற் கூறியிருக்கிறபடி தாசி என்றால் கடவுள் பிரதி பிம்பமென்னும் விக்கிரகங்களின் முன்னதாக ஆடல்-பாடல் செய்யும் அடியாள் என்றுணராமல் தாசி என்னும் பதத்திற்கு புணர்ச்சி செய்வதுதான் பொருள் என்று தெரிந்து கொண்டாள்போலும்.

சீகாளத்திப் புராணம்.

செங்கை யொன்று செழுந்தர ளப்பெருங்
கொங்கை யொன்றைக் குழைப்ப வொருகையால்
மங்கை தன்புறம் புல்லினன் வாயமு
தங்க ருந்துறும் ஆண்டகை யாகவும்.

இருந்தும் நின்றுங் கிடந்தும் எதிர்தழீஇப்
பரந்த மென்மலர்ப் பஞ்சணைப் பள்ளியிற்
குரும்பை மென்முலைக் கோதையர் தங்களைப்
பொருந்து மாறு புணர்பவ ராகவும்

இவ்வாறு பள்ளியறையில் கொக்கோக லீலைக் கியைந்த சித்திரங்களைச் சுவரில் வரைந்து முயன்று கற்பித்தும், அந்தப் பெண்கள் இருவருக்கும் கடவுள் அபரஞான உணர்ச்சியையும், பந்தபாசத்தைப் பற்றறக்களையும் அனுபவமாகியுள்ள பரஞான் உணர்ச்சியையும் தந்திருத்தலால் அவர்கள், துராகிருதமான காமத்திலே பயிலாமல், காணங்களுக்கு அதீதமானது பரப்பிரமம் எனக் கண்டு, வேறு மாயா விசித்திரத் தோற்றம் இல்லாதவராகி இவ்வனுபவம் நிலைபெறுவதற் பொருட்டு அடியார்களைத் தேடித் தேடிக் காணப்பெறின், தோத்திரம் பண்ணி வணங்கித் தொண்டு செய்யும் அன்பிலே மிகுந்தவர்களாய் இருந்தனர். அன்றியும், வேட்கைக் குறிப்புகள்-வஞ்சக மொழிகள்-பழிப்புச் சிந்தனைகள் - பாவச்செயல்கள் முதலியவற்றுள்ளே ஒன்றும் பற்றுதவராகி, பெதும்பைப் பருவம் அடைந்த அக்காலத்திற்றுனே, உலகவாக்கியங்களில் ஊமையர்போலாகி பஞ்சேந்திரியங்களையும் அடக்கிப் பேதையாகியும் பேரிளம் பெண்ணென இருந்தனர். அப்போது தென் கைலையாகிய சீகாளத்தியின் பெருமையைக் கேள்வியுற்று தெரிசிக்க வேண்டுமென்று அவாவுற்றிருந்தனர்.

### மக்களுக்குபதேசம்.

மாணிக்கவல்லி, மகளிரை நோக்கிப் 'பெண்களே! மழைபொழிந்த காலத்திலே விதைத்துப் பயன்கொள்ளும் உழவர்போல், காளையர்கள் வந்து கவிகின்ற இளமை பெற்ற இக்காலத்திலேயே,

கலிவெண்பா.

வாடைமஞ்சள் பூசுவதும் மல்லிகைப்பூச் சூடுவதும்
ஆடவரை வீட்டுக் கழைப்பதுவும்—ஓடிப்

பிலுக்குவதுங் கிட்டநின்று பேச்சயிலே முத்துக்
குலுக்குவதுங் கொஞ்சுவதும் தொங்கைத்—தலைக்கறுப்பை
முந்திகொண்டு வெட்கம்போன் மூடுவதுங் காமுகரை
அந்தமட்டும் வைத்துவிளை யாடுவதும்—வந்தவரை
வாள்வீச்சுப் போலே வரிவிழியால் வெட்டுவது

மாக அபிநயித்து, அவ்விளைஞர்களிடம் பொருள் பறியாது விடுத்தால், நுங்களுக்கு இளமைப் பருவம் பின்னர் வருமா? கல்வியினுலும்-கட்டழகினுலும் முதிர்ச்சியுடையராகி, எக் காலம் பயன்படுவீர்! என்று காத்திருந்த எனக்கு நீவிர் செய்யும் உதவி இவ்வளவுதானு! பயன் படாத உங்களிடத் திலே பெண்ணிலக்கணம் முற்றும் அமைந்திருக்தல், ஈகை யில்லாதவனிடத்திலே பொன்னும், அவைக்கு அஞ்சுவோ னிடத்தில் அரியகல்வியும், வீரமற்ற பேடிகையிலே வேலும் வாய்த்திருத்தல் போலாம்.

நீவிர், இளமைப் பருவத்திலேயே என் பால் உதித்து, எனது அழகு முழுமையும் கெடுத்ததேயன்றி, உங்கள் பொருட்டுச் செலவிட்ட திரவியத்திற்கு உதவி ஒன்றும் புரிந்திரில்லை. மணிமந்திர ஔடதங்களாலும், பல்வகை யந்தி ரங்களாலும் ஆடவரை மயக்கி, அவர் பொருளைக் கவர்ந் தால் சிவபெருமானுக்கும், சிவனடியார்களுக்கும் உதவியா காதா? அழகு சிறிது மில்லாதவரும், அணி முதலியவற்றல் அலங்கரித்துக் கொண்டு தம்மை அழகுடையவர்போற் காட்டியும், பிழையில்லாத ஆடவரையும் பிழையுடையராக் கிப் பொய்யன்பு பாராட்டி,உணவை யொழித்து அவர் பன் முறைவேண்ட இருந்தும்,நாடகத்தாலும் நல்லிசைகளாலும் மயக்கியும், பொருளீட்டிக் களியாநிற்பர். நீவிர் எவற்றி னும் சிறந்திருந்தும், இங்ஙனம் செய்து பொருளீட்டாது

இளமையை வீணே கழித்துவிடின், மூப்பு முதிர்ந்துழி உம்மை இளைஞர் விரும்புவரோ?

ஆடவர்முன் ஆடையை அவிழ்த்தன ருடுத்தும்
கூடுமுலை தாரொடு குலுங்குற நடந்தும்
நாடக நடித்துமிசை நல்லன பயின்றும்
வீடலரி தாயமயல் வேலையு ளமிழ்ப்பார்

என்று இன்னனவாகிய தன்குலச் செயல்களை யுரைக்க, அவையாவும் கவிழ்த்த குடமீது விடாது பொழியும் மழை நீர் போலச் சிறிதும் நுழையாது புறங்கழியநின்ற கன்னியர் உரைப்பாராயினர்:—

## தாய்க்குபதேசம்.

அன்னையே! மின்னல்போலத் தோன்றியழியும் இவ்வுடம்பை வளர்க்க விரும்பிக், கொடிய தீவினைகளை யியற்ற எமக்கு இசைப்பது நினக்குத் தகுதியா? இப்பியில் உதித்த முத்தானது, அந்த இப்பிக்கு ஓர் உதவியும் புரியாது, தம்மை அணியத் தக்கவர் மேனியையடையும். அதுபோலவே, நின்பால் உதித்த யாங்களும், நினக்கு ஓர் உதவியையும் புரியாமல், கடவுள் திருமேனியிற் கலத்தலையே யடைவோம். பரமனை அழைத்துத் தரும் பஞ்சாட்சரத்தையே உச்சரிக்கும் எங்கள் வாயானது மனிதரை அழைத்துத் தரும் மந்திரங்களை மறந்தும் உச்சரியாது. பற்பல அணிகளைச் சுமப்பது பாரமேயன்றிப் பயனுண்டோ? ஓர் உருத்திராக்க மணியை ஒரு தினம் உடலில் அணியில், வினையாவும் விட்டொழியுமே! கஸ்தூரி-சந்தன முதலிய கலவைகளைச் கலந்து கலந்து ஓய்வில்லாமல் உடலிற் புனைந்தாலும், சிறிதும் மலம் அகலுமோ? விபூதியை விரும்பி அணியில்

# ஆன்மலாபம் அடைவதற்கு கல்பு என்னும் மனித இருதயப்படம்.

பசுவின் உடலெங்கும் பால் விரவியிருப்பினும் முலைக்காம்பின் வழியாகவே கறப்பதுபோல், கடவுள் எங்கும் நிறைந்தவரானாலும் பரிசுத்த இருதய சிதாகாசத்திலேயே சதாவசிக்கிறார்.

1. இருதய வலது பாகத்தின் (சடரம்) கீழ் அறை. 2. ஷை இடது கீழ் அறை. 3. சுவாசப்பைக்குச் செல்லும் இரத்தநாடி ஆரம்பிக்குமிடம். 4; A; B சரீரத்தின் எல்லா பாகத்திற்கும் நல்ல இரத்தம் பரவச்செய்யும் முக்கிய நாடி. 5. இருதய வலது பாகத்தின் (சிரவம்) மேல் அறை. 6. ஷை இடது பாகத்தின் மேல் அறை.




இருதயம். Human Heart



இருதய கமலம்.



பிளந்த இருதய கமலம்.

இருதய சிதாகாயம்.

இந்த சிதாகாயத்திலேயே பரமாத்மா வசிக்கிறார்.

7. மேலிருந்து இருதயத்திற்குச் செல்லும் கெட்ட இரத்த நாடிகள் சந்தித்து ஊர்த்த பிரகன் நாளத்தை உண்டாக்குமிடம். 8. கீழிருந்து இருதயத்திற்குச் செல்லும் (கெட்ட இரத்தநாடி) அதோ பிரகன் நாளம். 9. கறுப்பு ஈரலிலிருந்து வரும் கெட்ட இரத்தநாடி.

(535-ம் பக்கம் பார்க்க.)

# இறந்த ஆன்மாக்களை வரவழைத்துப் பேசுதல்.




முதல்வட்டம்:—பூதாகாயம். இது கட்புலனுக்குத் தூலமாகத் தோற்றப்படுவது. இவ்வட்டத்தில் சமாதி (கபுர்) அறையும், அவ்வறையில் அடங்கியவரின் ஆன்மாவை வரவழைத்த உருவமும் அப்பியாசஞ்செய்பவருடைய இருப்பும் தூலமாக அமைக்கப்பெற்றுளது.

இரண்டாவது வட்டம்:—மனகாயம். இது மனதுக்குமட்டும் தோற்றப்படுவது. இவ்வட்டம் சூக்கும உலகமாதலால் இறந்துபோனவர்களுடைய ஆன்மாக்களை, தூல சரீரத்தினும் சிறிது மெல்லியதாக அமைக்கப்பெற்றுளது.

மூன்றாவது வட்டம்:—சிதாகாயம். இது அறிவுக்குமட்டும் தோற்றப்படுவது. இவ்வட்டம் காரண உலகமாதலால், இறந்துபோனவர்களுடைய ஆன்மாக்களை, சூக்கும சரீரத்தினும் சிறிது மெல்லியதாக அமைக்கப்பெற்றுளது.

நான்காவது வட்டம்:—பரமாகாயம். இது கடவுளின் சாயைபொருந்திய ஏகப்பெருவெளி மயமாகிய மகாகாரண உலகமாதலால் அந்த வெளியுலகத்தில் செல்பவர்களும், வெளி மயமாகவே யிருப்பார்கள். அதுபற்றி அவர்களது ஆன்மாக்கள் உருவமாகத் தோற்றாகபடி வெட்டவெளியாகவே அமைக்கப்பெற்றுளது. (574-578ம் பக்கங்களிற் பார்க்கவும்)

அம்மலம் யாவும் நசிந்தொழியுமே! மிக்க ஒளி படைத்த தீபத்தையுடைய வீட்டிலே இருள் நுழையுமா? அதுபோலவே எம்பிரான் இருக்கும் எங்கள் உள்ளத்தில், அறிவையொழிக்கும் காமநோய் அணுகுமா? தத்துவங்களுக்கு அதீதமாகிய தனியிடத்திலே, விமலனைக் கலந்து மெய்ம்மையின்பம் அனுபவித்த யாங்கள், மாண்டு போகும் மனிதரைக் கலந்து பொய்ம்மை இன்பத்தைப் பொருளெனக் கொள்வமா? களிப்பை விளைக்கும் யானையை விரும்பியேறுவோர், கழுதைமேல் ஆரோகணிப்பரோ? அதுபோல், சிவதருமங்களை மேற்கொண்டயாங்கள்; உமது குல தருமங்களை மேற்கொள்வமா? இம்மை-மறுமை இன்பங்களைப் பயக்கும் எம்பெருமானை வழிபடும் யாங்கள், பொய்மைப் பொருளை நாடி அழிந்துபோகும் அரசர்களைப் புகழ்வமா? இம்மையில் அறங்களைச் செய்து சம்பாதிக்காமல், மூப்பு முதிர்ந்தக்கால் முறைப்படி தவஞ்செய்ய முடியுமா? நீ சொல்வாயாக. தேவாமிர்தத்தையும் உண்ட வுடனே மலமாக்குகின்ற உடலை வளர்க்கு நிமித்தம், தீயதொழில்களைப் புரிந்து திரியும் மனிதர்களை மக்களுள்ளே பதர் என்று மதிவல்லோர் கூறுவர். கணிகை மாதர்கள் உள்ளுறவில்லாமல், வெளியுறவு பாராட்டிச், செல்வ முழுவதையும் கவர்ந்து கொண்டு நம்பிய ஆடவரை நரகத்துமிடுதலால், கள்ளரினும் கொடியவரேயாவர். குயிலானது காக்கையோடு ஒருகூட்டிலேயே கலந்திருப்பினும் அக்காக்கையின் செய்கையிலே பழகாதது போல், உம்மோடு யாங்கள் ஒருங்கியிருப்பினும், உமது தொழிலிற் பயிலோம். ஆகையால், எங்களை வசப்படுத்தும் நினைவை இன்றே மறப்பாயாக. இவ்வித ஆபாச நடையுடைய வேசையர்களைப் பற்றியே,

திருக்குறள்.

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று.

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

நாலடியார்.

விளக்கொளியும் வேசையர் நட்பு மிரண்டுந்
துளக்கற நாடின் வேறல்ல—விளக்கொளியும்
நெய்யற்ற கண்ணே யறுமே யவரன்புங்
கையற்ற கண்ணே யறும்.

திருவிளையாடற் புராணம்.

இழிபவ ருயர்ந்தோர் மூத்தோ ரிளையவர் கழியா நோயாற்
கழிபவர் யாவரேனுங் கண்வலைப் பட்டு நெஞ்சம் [காட்டிப்
அழிபவர் பொருள்கொண் டுள்ளக் கெண்ணெய்போ லளந்து
பழிபடு போகம் விற்பா ராவணப் பண்பு சொல்வாம்

என்று வற்புறுத்திக் கூறியிருக்கின்றனரெனக் கூறினர்கள்.

அதைக்கேட்ட தாய், மனம்புழுங்கி மகளிரைச்சீறி, 'யான் மலடியுமாயினேனில்லை; மக்களைப்பெற்று மகிழ்ச்சியுறும் சிறப்பையு மடைந்தேனில்லை. நல்வினை புரிந்தோரே யன்றி ஏனையோர் தம் புதல்வரால் உதவி பெறுவரோ? என்று துக்கித்து, பின்பு 'நியங்கிக்கிடக்கும் இவர்களுடைய சித்தத்தை மணிமந்திரவௌடதங்களாலேதெளிவித்துக், காம இச்சையிலே திருப்புவோர், பொருள் கொடாமலே இவர்களை அனுபவிக்கக் கடவர்.' என்று யாவர்க்கும் வெளிப்படுத்த, இதை யறிந்த இருவரும், இவ்வூர் நீங்கித் தென்

க்கையை யென்று நாம் தெரிசிக்கப் பெறுவோம், என்னும் சிந்தனையோடு, பாம்பின் வாய்ப்பட்ட தேரைபோல் இருந்தனர்.

இந்தக் கருத்தை யறிந்த இரண்டு கள்வர்கள், தவ வேடம்பூண்டு இவர்களை வஞ்சித்து, சீகாளத்திக்கு அழைத்துப் போவதாகக்கூறிச்சென்று, சீகாளத்திக்குச் சமீபத்தில், இவர்கள் தரித்திருந்த ஆபரணங்களைக் கவர்ந்துகொண்டு, கொல்ல நினைக்கும்போது, காளத்தியப்பரே மலர்கொய்து தொடுக்கும் தொண்டர் வேடம் தாங்கி வந்து காத்தருளி, சீகாளத்திக்கு அழைத்துப்போய்ப் பலவிபரங்களையும் தமிழ் அறியாத தெலுங்குநாட்டில், அவர்களுக்குத் தமிழில்சொல்லிக்காட்டி மறைந்து போய், பின்பு தெரிசனங்கொடுத்து அவர்களுக்கு ஐக்கிய முத்தியுங் கொடுத்தனர் என்று சீகாளத்திப் புராணம் கன்னியர் சருக்கத்திற் கூறப்பெற்றிருக்கிறது.

## கணிகையர்க் குபதேசம்.

அழகிற் சிறந்த உருத்திர கணிகையராகிய தாசிகளே! நீங்கள் பலவிதக் கல்விகளைக் கற்றறிந்தும், பலரிடமும் கலவிக்கே விரும்புகிறீர்கள். நன்மார்க்கத்தையடைய ஆன்ம விசாரம் செய்யாமல், துன்மார்க்கம் புரிவதற்கு மனிதர் வரவில்லையே யென்று மனவிசாரம் கொண்டு வருந்துகிறீர்கள். உலகத்தில் கேவலம் என்று எண்ணப்பட்ட (*) விபசாரம் செய்து கொண்டிருப்பது அபசாரம் என்று எண்ணாமல்,

(*) பலபேர்களையும் நாயகனாகக் கருதாமல், ஒரு மனிதனைத் தேர்ந்தெடுத்து (காந்தர்வ விவாகம்போல்) நாயகனுக்கிக் கொண்டாலும் கொள்ளலாம், அத்தகைய பெண்மணிகளும் சிலர் இருக்கின்றனர். அது ஒருவாறு சிறந்ததேயாம்.

அதையே இனிய தொழில் என்று கருதி மகிழ்கின்றீர்கள். பெண்களுக்கு இயற்கையாயுள்ள நாணம் முதலான நாற்குணங்களையும் எங்கேயோ தூரத்திவிட்டீர்கள். நீங்கள் செய்கிற தொழிலைக் கொஞ்சம் யோசித்துப் பார்ப்பீர்களேயானால், உங்களுக்கே அருவருப்பாகத் தோற்றும். நீங்கள் செய்யும் பலவிதத் தந்திர மந்திர உபாயங்களை, நீதிநூல், விறலிவிடு தூது என்பது போன்ற புத்தகங்களில் விரிவாய்க் கூறப்பட்டுள்ளது. அந்நூற்களைப் பார்த்தவன் தாசியென்கிற பெயரைக்கேட்டாலும் நடுங்குவான். அந்தப் புத்தகங்களை நீங்கள் பார்த்தாலும் உங்களுக்கே வெட்கமாயிருக்கும். அன்றியும், அருணகிரிநாதர் பாடியருளிய தமது திருப்புகழில் ஒவ்வொரு செய்யுட்களிலும் முதலில் உங்களைப் பலவாறு நிந்தித்துவிட்டு அதன் பின்னரே முருகபிரானை வந்தித்துள்ளனர்.

திருச்செந்தூர்-திருப்புகழ்.

களப மொழுகிய புளகித முலையினர்
கடுவு மமிர்தமும் விரவிய விழியினர்
கழுவு சரியழ கொழுகிய குழலினர்—எவரோடும்

கலக மிடுகய லெறிகுழை விரகியர்
பொருளி லிளைஞரை யழிபடு மொழிகொடு
தனர விடுபவர் தெருவினில் எவரையும்—நகையாடிப்

பிளவு பெறிலதில் அளவள வொழுகியர்
நடையில் உடையினில் அழகொடு திரிபவர் [வோடே
பெருகு பொருள்பெறில் அமளியில் இதமொடு—குழை

பிணமும் அணைபவர் வெறிதரு புனலுணும்
விசுவ வனிதையர் முடுகொடும் அணைபவர்
பெருமை யுடையவர் உறவினை விடவருள்—புரிவாயே

... ... ... ...

## திருவோகம்.

குமாரகுரு பரமுருக குகனே குறச்சிறுமி
கணவசர வணமிருதர் கலகா பிறைச்சடையர்
குருவெனநல் லுறையுதவு மயிலா வெனத்தினமும்—உருகாதே

குயில்மொழிநன் மடவியர்கள் விழியா லுருக்குபவர்
தெருவிலன வரதமன மெனவே நடப்பர்நகை [ரும்
கொடுமவர்க ளுடமைமன முடனே பறிப்பவர்கள்—அனைவோ

தமதுவசம் உறவசிய முகமே மினுக்கியர்கள்
மூலையிலுறு துகில்சரிய நடுவீதி நிற்பவர்கள்
தனமவியர் மனமுறிய நழுவா வுழப்பியர்கண்—வலையாலே

சதிசெய்பவர் அவர்மகிழ அணைமீ துருக்கியர்கள்
வசமுழுகி அவரடிமை யெனமாதர் இட்டதொழில்
தனிலுழலும் அசடனையுன் அடியே வழுத்தவருள்—தருவாயே

... ... ... ...

## பழநீ.

மலரளி கொண்டைச் சொருக்கி லேயவள்
சொலுமொழி யின்பச் செருக்கி லேகொடு
மையையுடை நெஞ்சத் திருக்கி லேமுக-மதியாலே

மருவுநி தம்பத் தடத்தி லேநிறை
பரிமள கொங்கைக் குடத்தி லேமிக
வலியவும் வந்தொத் திடத்தி லேவிழி—வலையாலே

நிலவெறி யங்கக் குலுக்கி லேயெழில்
வளைபுனை செங்கைக் கிலுக்கி லேகன
நிதிபறி யந்தப் பிலுக்கி லேசெயும்—ஒயிலாலே

... ... ... ...

## ஞானபூபதிகள்—திருப்புகழ்.

சிங்கார நீலமயி லேறிவிளை யாடிவரு
மெங்கோன லாறுமுக நாதநறு நீபனெனிர்
செங்கேலை வீசவடி வேலனனு கூலனென—வினைநாடி

சிந்தாகு லாதிபல தீவினைக ளேகமொழி
வங்காகு மோனமனு வாலெழுது நீபமென
சிங்கால ஞவிலுயர் மேலைவழி யாகுசுழி—முனைமீது

மங்காத மாமணிவி ளேதமிகு தீபவொளி
கண்டாவல் தீரவடி யேனையினி யாள்கனக
மன்றாடி காதிலுப தேசமனு வோதுசர—வணபாவா

வம்பார்நி சாசரர்க ளாலதிக வாதையுற
மஞ்சாரு மேகநிற மானமது சூதனனும்
வண்டேவர் கோனுமல ரோனுமினை நேடவருள்—புரிவோனே

வங்கூறு மேகம்வெடி சூலைகுறை நோய்வலிசி
ரங்கேகொ ளுதசய மூலறுகொ டூரவினை
மந்தார காசசுர மீழைமுத லானபிணி—தருமோக

மண்டூகை மாதரழல் யோனிதனி லாழுநசை
யுண்டாகொ ளுதுகம லாலயபு பாதமருள்
மந்தாரை நீபமகி ளாரமல ராமகில்—கமுகாலே

கொங்காரு சோலைமிசை கோகில்மை ஞகிளிகள்
சந்தோட மாகநவில் கீததொனி யோடளிகள்
குன்றூத மோகனமு காரியிசை பாடுபுலி—வலவாசா

குன்றேறி வாழுமுனை மூவர்பரி பாலமன
னென்றேவி ஞேர்கள்புவி யோர்கள்பல காலுநனி
கொண்டாடு லாசமக ராசதவ் ராசவர—முருகோனே.

என்று தாசிகளாகிய உங்களையே அருவருத்து நிந்தித்துக் கூறப்பெற்றிருக்கிறது.

ஆதலால் மேற்சொல்லி வந்த மாணிக்கவல்லியின் புத்திரிகள் சரித்திரத்தை ஞாபகத்தில் வைத்து நீங்களும் ஆன்மலாபம் அடைய முயலுங்கள்! இவ்விதமான கேவலத் தொழிலைச் செய்யாத இதர மாதர்கள், வயிறு வளர்க்காமல் இறந்தா போகிறார்கள்? இல்லையே! நீங்கள் இந்தத் தொழிலைச் செய்யவேண்டியது அவ்வளவு அவசியமா? என்பதைக் கவனித்து யூகியுங்கள்! சீவக சிந்தாமணியில் 'அல்குல் விலைபகர்பவர் விலங்காய்ப் பிறப்பர்' என்று கூறியிருக்கிறது. விபசாரம் புரிவதனால் வயது செல்லச் செல்ல, இரத்தபுஷ்டி குறைய பற்பல ரோகங்களுக்கு ஆளாவீர்கள். இந்த அனுபவத்தை ஏனைய கிழத் தாசிகளிடம் கண்டு உணரலாம். அவர்கள் இஞ்சிதின்ற குரங்குபோல், பசபசவென்று விழிக்கிற காரணம் விபசாரத்தின் கொடுமையினாலேயே என்றறிந்து, கடவுளிடம் மன்னிப்புக் கேட்டுய்யுங்கள். நல்ல மாட்டுக்கு ஒரு சூடு, நற்பெண்களுக்கு ஒரு வார்த்தை' என்னும் பழமொழிபோல், புத்திசாலிப் பெண்களுக்கு இவ்வளவே போதுமென்று நிறுத்தலானேன்.

## சத்காலட்சேபம்.

இந்தக் காலத்தில் நாகரீகம்! நாகரீகம்! என்று கலியாண முதலிய சுபகருமங்கள் நடக்கும்போது, தாசிகளையும் சங்கீத வித்துவான்களையும் தருவித்து ஆட்டக் கச்சேரிகளும், பாட்டுக் கச்சேரிகளும் நடத்தச் செய்கின்றனர். இதர பாஷைகளில் ஓர் அட்சரமாகிலும் படித்தறியாத நிரட்சர குச்சிகள்ளானவர்களும், ஒரு வார்த்தைக்கா

வது பதவுரை தெரியாதவர்களுமாகிய சில பாடகர்கள் அன்னிய பாஷையில் ஒரு சிறிதும் அறியாத தமிழ்ப் பாஷை யுடையவர்களிடத்தில்,

மாத்தாட பாராதேனோ மாரமணனே!
மாத்தாட பாராதேனோ

என்னும் கன்னடியப் பாடலேயோ! வேறு பாஷைப் பாடல்களேயோ! தலையை ஆட்டி - ஆட்டிப் பாடிவிடுகிறார்கள். இதர பாஷை அறியாதவர்களுக்கு இதில் ஏதாவது அர்த்தம் புலப்படுமா? மாத்தாட-கூத்தாட என்று எதையோ புலம்புகிறானென எண்ணி மனமும் பரவசப்படாமல்? பாடகரின் பல்லைப் பார்த்துக்கொண்டிருந்து நகைக்க வேண்டியதே யன்றி, வேறொன்றும் விளங்காதல்லவா? அதற்குப் பதிலாக,

இராகம்—கமாஸ்—தாளம்—ரூபகம்.

பல்லவி.

ஆதாரம் வேறேதையா பன்னிருகையா!
ஆதாரம் வேறேதையா.

அநுபல்லவி.

மாதா பிதாவும் நீயே மகிழ்வோ டெனைக்காப் பாயே (ஆதா)

சரணங்கள்.

சொல்வ தெல்லாங்கே ளாதா சுதனோடின் னமும் வாதா
செல்வசற் குரு நாதா தேசோ மயவிநோதா (ஆதா)

மாதர்கள் விழியிணை மனதைத்து ளைக்குங் கணை
ஆதலால் நீயே துணை யானால் எனக்கே திணை (ஆதா)

கஞ்ச மலர்ப்பூங் காலா கருணையா னந்த சீலா
கொஞ்சும் குஞ்சரி லோலா கோபாலன் தவப் பாலா (ஆ)

என்பது போன்ற அர்த்த புஷ்டியுள்ள கீர்த்தனைகளை சங்கீத ஞான முடையவர்களால் பாடக் கேட்டிருந்தால் எவ்வளவு ஆனந்த பரவசம் அடைந்திருப்பார்கள்? எந்தப் பாடலையும் அந்தந்தப் பாஷை தெரிந்தவர்களிடத்தில் பாட வேண்டுமேயன்றி பாஷையை அறியாதவர்களிடத்தில் பாடுவதால் கேட்பவர்களுக்கு ஒரு பிரயோசனத்தையும் தாராது. 'முதலெழுத்தே மோட்டை எழுத்து' என்ற பழமொழிபோல் பாட்டைப் பாடுபவர்களுக்கே, நாம் பாடுவதற்கு இன்னது பொருள் என்று தெரியாவிட்டால், இதைப் பார்க்கிலும் அவமானம் என்ன வேண்டியிருக்கிறது?

பாடல்களைப் பாடுகிறவர்களுக்கே இது சுப கீர்த்தனை, இது அசுப கீர்த்தனை யென்று தோன்றாமல் 'குருடன் அளந்ததும்-கோணி கொண்டதும்' என்ற பழமொழிபோல் எதையாவது வாய்க்கு வந்தபடி கத்திவிட்டு, கச்சேரி முடிந்தவுடன் பணம் வாங்கிப் போவதிலே முழு நோக்கமாக வுடையவர்களுக்குப் பத்தியும்-பாவசமும் உண்டா? நாம் பாடுவது அன்னிய பாஷையாச்சே! இந்தப் பாட்டின் அருத்தம் நமக்குச் சரியாய் விளங்கவில்லையே! இதில் தவறுதலிருந்தால், அந்தப் பாஷையை அறிந்தவர்கள் கை கொட்டிச் சிரித்து நம்மைப் பரிகசிப்பார்களே யென்று கொஞ்சமேனும் முன்பின்யோசிக்காமல் கலியாண வீட்டில்,

தெலுங்கு—வேமன்ன பத்தியம்.

இராகம்—சங்கராபரணம்.

புண்யமன் தயகூடி புருஷுடைசென்மின்சே
பாபவச முனபுட்டே பரகசதியு
கஷ்டமா சதியனி கனிரோயரே மொகோ
விஸ்வதாபிராம வினுரவேமா.

(இ-ள்.) முன்செய்த புண்ணிய வசத்தால் ஆண் சென்மமும், பாப வசத்தால் பெண் சென்மமும் ஏற்படுகிறது. பெண்கள் பாப சென்மமென்று தெரிந்திருந்தும் இன்னும் ஏன் பெண்களை விரும்புகிறீர்கள். ஆகையால் பெண்களை வெறுத்து விடுங்கள்.

இராகம்—பைரவி.

*காந்தமேனுஜூசி கலவரபடியேரு*
*கடுபுலோஙிரோத கானலேரு*
*இந்தரோதப்தாதுகு ஈதேஹமேலயா*
*விஸ்வதாபிராம வினுரவேமா.*

(இ-ள்.) மங்கையரின் சரீரத்தைப் பார்த்து, ஏன் மயங்குகிறீர்கள்? மேலே தோலும், உள்ளே துர்க்கந்தமான மலமூத்திராதிகளும் இருப்பது தெரியவில்லையா? எலும்பை நாய் விரும்புவதுபோல், பெண்களை விரும்புவது ஈனமல்லவா?

மாதர்களையே தெய்வமென்று விரும்பி, விலங்கு போட்டுக் கொள்வதுபோல் ஒருவருக்கொருவர் பந்தப்படுத்திக் கொள்ளுகிற கலியாண வீட்டில், மாதர்களைக் கண்ணாலே கூடப் பார்க்கப்படாதென்று நிந்தித்துக் கூறும் இவ்விரண்டு தெலுங்கு சுலோகங்களையும், அவைகளின் பொருள் தோன்றாமல் கத்தினால், அந்தப் பாஷை தெரிந்தவர்கள் எவ்வளவு வருத்தப்படுவார்கள்!

ஒரு பாடகர் கலியாண வீட்டில் பாட்டுக் கச்சேரி நடத்தினர். சபையார்கள் தாயுமான சுவாமிகள் பாடல் பாடும்படியாகச் சொன்னார்கள். பாடகர் ஆழாழிகரை

யின்றி நிற்கவில்லையோ என்னும் பாடலை ஆரம்பித்து, அதின் மூன்றாவது அடியை அதாவது,

வாழாது வாழவே இராமனடி யார்சிலையும்
மடமங்கை யாக விலையோ?

என்கிற அடியை முதலில் ஒருதரம் பாடிவிட்டு அதன்பின், வாழாது, வாழவே வாழாது, வாஅஅ அஅழவே வாழாது, வாழவே வாஅ-அ-அ-அ-ழாது என்று மடக்கி-மடக்கி-அதாவது கலியாணப் பெண் வாழாவே வாழாது என்னும் பொருள் தோன்றும்படி தலையை ஆட்டி-ஆட்டிப் பாடினாராம். என்ன புத்திசாலித்தனம்!

## கிரகப்பிரவேசமும்—இராமநாடகமும்

கும்பகோணத்தில் ஒரு செட்டியார், அளவற்ற திரவியங்களைச் செலவழித்து, தாஜ்மஹால் என்று சொல்லும்படியாக ஒரு வீடு கட்டி முடித்தார். பிறகு கிரகப் பிரவேசம் செய்ய வெண்ணி அநேக சிற்றரசர்கள், முதலானவர்களைத் தருவித்திருந்தார். அந்த மகா சபையைச் சிறப்பித்தற் பொருட்டு, விசாகப்பட்டினத்தில் வசிப்பவரும், (அகத்தியர் சமுத்திரத்தை உளுந்தளவாகச் சாப்பிட்டதுபோல்) சங்கீதக் கடலை மடுத்தவரும், கோகிலமும், கந்தருவர்-கின்னார்-சரஸ்வதி முதலானவர்களும் நாணும்படி வீணையினது இனிய நாதம்போலும், வரகுணபாண்டியன் சபையில் ஏமநாத னென்னும் வீணைப்பாடகனுக்கு அஞ்சிய பாணபத்திரனுக்காக மதுரை சோமசுந்தரக்கடவுள்விறகுத்தலையராய் சாதாரி இராகத்தைப் பாடியதுபோலும், தேவகானம் போல் இனிமையாகப் பாடக் கூடியவருமாகிய ஓர் சங்கீத

வித்துவானையுந் தருவித்திருந்தார். அந்தப் பாடகர் ஆரம்ப முதல் தெலுங்கு பாஷையில் வெகு இரமணீகரமாகவே பாடினார். பிறகு, இது தமிழ் நாடான படியால் அநேகம் பேர்களுக்கு தெலுங்கு தெரியாமலிருக்கும்; தமிழ்ப் பாஷையில் ஒரு கீர்த்தனமாவது பாடினால்தான் ஆனந்தம் அடைவார்கள் என்று யூகித்து, தமிழ் அட்சரமும்-தமிழ்ப் பேசவும் அறியாத அவர், முன் எப்படியோ உருப்போட்டு வரப்பண்ணி யிருந்த ஒரு தமிழ்க் கீர்த்தனையைப் பாடினார். அது இராமநாடகம் உயுத்த காண்டம் 22-வது தரு, இலக்குமியின் அம்சமாகிய சீதாபிராட்டியை யெடுத்துச் சென்ற இராவணனை நோக்கி, அங்கதன் சொன்னவிடம்:—

இராகம்-மோகனம்-அடதாளச் சாப்பு.

பல்லவி:

அடடா வெளியேபுறப் படடா—இல்லை
யாகிற் சீதையைவிட்டு விடடா

சரணனு பல்லவி.

அரசும் உன்கொலுத்திருச் சட்டமும்—நாளை
அழியப்போகுதே யுந்தன் கொட்டமும்,

... ... ... ... (அடடா)

என்று உல்லாசமாகச் சிரக்கம்பம்-கரக்கம்பத்துடன் வெகு சாவகாசமாகப் பாடினார்.

வீடு புதிதாக கட்டி முடித்த செட்டியார், அந்த வீட்டில் தானும் தன் சந்ததிகளும் தலைமுறை - தலைமுறையாக வசிக்கவேண்டுமென்றும், பல ஐஸ்வரியங்களைக் கொடுக்கும் சீதாதேவியாகிய இலட்சுமியானவள் நீங்காமல்

நிலைபெற்றிருக்க வேண்டுமென்றும் எண்ணிக்கட்டி, கிரகப் பிரவேசம் பண்ணிக்கொண்டிருக்கிற சமயத்தில், அதற்கு இணக்கமான பாடல்களைப் பாடாமல், கலியாண வீட்டில் கட்டிக்கொண்டழுத கதைபோல் 'அடடா வெளியே புறப் படடா, இல்லையாகிற் சீதையை விட்டுவிடடா' என்று பாடினதானது, "நீ வீட்டில் வசிக்கப்படாது, வெளியேறி விடு; அப்படி வெளியேற மனமில்லாவிட்டால், சீதையாகிய மகாலெட்சுமியை வெளியேற்றிவிட்டு, மூதேவியுடனிருந்து வாழ்" என்று பொருள் தந்து நிற்பதால், செட்டியாருக்கு அடங்காத கோபம் வந்து, அடே! என் குடியைக் கெடுக்கவந்த துரோகிப் பயலே! என்று ஆரம்பித்துத் தெலுங்க பாஷையினால் வாயில் வந்தபடி வைது ஒரு தடிக் கொம்பை யெடுத்துப்போய் பாடகரை அடிக்க எத்தனித்தார். சபையார்கள், 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காகிவிட்ட கதைபோலிருக்கிறதே' என்று விசனமுற்றுச் செட்டியாரைப்பிடித்து, பாடகருக்கு அடிவிழாதபடி தடுத்தார்களாம்.

## காளமேகமும்—தெலுங்க தாசியும்.

'வசைபாடக் காளமேகம்' என்று வித்துவான்களாற் சிறப்பித்துக் கூறப்பெற்ற காளமேகப்புலவர், ஒருகாலத்தில், தமிழ் தெரியாத ஒரு தெலுங்க தாசி வீட்டிற்குக் காமியார்த்தமாகப் போயிருந்தார். அவர் அன்றிரவு கொக்கோக லீலைப்படி புணர வெண்ணி, தெலுங்கு பேசத்தெரியாத புலவர், தமிழ்ப் பாஷையில் அதற்கு வேண்டிய வார்த்தைகளைச் சொன்னார். அவள் தெலுங்க பாஷையில் என்ன சொல்லுகிறீர்? என்று கேட்டாள். ஒருவர் சொன்னது ஒருவருக்கு விளங்காமல் இராமுழுதும் கீரியும் - பாம்பும் போல் புரண்டுருண்டு எழுந்து வந்து,

ஏமிரா ஓரி யென்பாள் எந்துண்டி வஸ்தி வென்பாள்
தாமிராச் சொன்ன வெல்லாம் தலைகடை தெரிந்த தில்லை
போமிராச் சூழுஞ் சோலை பொருகொண்டைத் திம்மி கையில்
நாமிராப் பட்ட பாடு நமன்கையிற் பாடு தானே

என்று பாடித் துக்கித்தனராம். ஆகையால் பொருள் விளங்காமல் பாடும் பாடகர்கட்கு மேற்காட்டிய இரண்டு கதைகளின் பலனே கிடைக்கும் என்பது கவனித்தற்பாலதாம்.

சங்கீத பண்டிதர்களே! சங்கீதம் ஏற்பட்டது பத்தி மார்க்கத்துக்காக என்பதையும், பாடும் பாட்டின் பொருள் தெரியாமலும், பாடுபவர்கள் மனம் பாவசப்படாமலும், காட்டை-மேட்டை நினைத்துக்கொண்டு பாடுவதிலும் பிரயோசனமில்லை என்பது முதலானவைகளையும் நீங்கள் நன்குணர்ந்து, குற்றம் நீங்கி, குணத்துடன் பிரகாசித்து ஆன்ம லாபம் அடைய முயற்சி செய்யுங்கள்.

---

## பதினெட்டாவது அத்தியாயம்.

## சுயராச்சியம்.

தற்சம யத்திற் சாதித் தடிப்பையே படிப்பாய்க் கொண்ட
பற்சம யத்திலே ஞரும் பரபரப் புடனின் ஞளில்
நற்சுய ராச்யங் கேட்கு நலத்தையும் நம்முன் ஞான
சிற்சுய ராச்யந் தேடுஞ் சிறப்பையும் விளக்கு வாமால்.

சுயம் என்ருல் சொந்தம் என்றும் ராச்சியம் என்ருல் ஆளுகை அல்லது ஆட்சி - அரசு செல்லுமிடம் என்றும் பொருள். இதனுல் "சுயராச்சியம்" என்னும் பதத்திற்குச்

"சொந்த ஆளுகை" என்று விளங்கும். சுயஆட்சி என்னுஞ் சொல் அந்நிய ஆட்சியின் எதிர்மறையாகும். ஒவ்வொன்றும் அகம்-புறம் என இரு பிரிவினைகளை யுடைத்தாயிருக்கிறது. அது, அண்டம்-பிண்டம் எனவும், அந்தரங்கம்-பகிரங்கம் எனவும், லாஹிரு-பாத்தின் எனவும் வழங்கப் பெறுகின்றது. அகம் - அண்டம் - அந்தரங்கம் - பாத்தின் என்பவை உட் தோற்றங்கள். புறம்-பிண்டம்-பகிரங்கம் - லாஹிரு என்பவை வெளித்தோற்றங்கள். அதாவது, தானல்லாத புறக் கருமங்களுக்காக பாடுபடுதல் வெளித் தோற்றம். தன்னைத் தானறியப் பாடுபடுதல் உட்தோற்றம். புறத் தோற்றங்களுக்காகப் பாடுபடுவதால் சனன விருத்தியும், உட் தோற்றங்களுக்காகப் பாடுபடுவதால் முத்தி சாதனமும் வந்தெய்துமாகையால், நாம் எதற்காக இம் மகிதலத்தில் அவதரித்தோம்? நாம் செய்யவேண்டிய கடமைதான் என்ன? என்பதை ஆராய்ந்து கொள்ளல் வேண்டும்.

## நமது கடமை.

நமது கடமை என்பதில், நாம் நம்முடைய விஷயத்தில் செய்துகொள்ள வேண்டிய கடமை இன்னதென்றும், நாம் பிறர் விஷயத்தில், அதாவது மாதா-பிதா-குரு-தெய்வம்-மனைவி-மக்கள் - பந்து - மித்திரர்கள்-ஏழைகள்-தேசத்தார் முதலானவர்களுக்குச் செய்யவேண்டிய கடமை இன்னவையென்றும் இருவகையாகும். அவற்றுள், நாம் நமது விஷயத்தில் செய்துகொள்ளவேண்டிய கடமைகளையே முதன்முதல் அவசியம் செய்துகொண்டு, அதன் பின்னர் ஏனையோருக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்ய முயலவேண்டும். ஏனெனில்,

"வருமுன்றற் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்"

என்று நமது தெய்வப் புலவர் வசனமும், தனக்குப்போய்த் தான தருமம் என்று பழமொழியும் இருக்கின்றன. இதைப் பற்றி ஒரு சிறிய கதையுண்டு:—

ஒரு பிரபுவின் காரியஸ்தன், தான் அதிக சிரத்தை யோடு வேலைபார்த்து வருகிறேனென்பதை, அந்தப் பிரபு அறிந்து கொள்வதற்காக வெகுநாள் சவரம் செய்துகொள் ளாமலே யிருந்தான். ஒருநாள் அவனுடைய எசமான் அவனைச் சந்தித்தபோது, நீர் ஏன் தாடி-மீசை-தலைமயி ருடன் மகரிஷிகளைப் போலிருக்கிறீர்? உமது மனைவி கர்ப் பிணியா யிருக்கின்றனளா? காரணம் யாது? என வினவி னர். அதற்கவன் எசமானே! தங்கள் வேலையைப் பார்ப் பதற்கு நேரம் சரியாக இருக்கிறதேயன்றி, எனக்கு அவ காசம் ஏற்படவில்லையென்று தன்மேல் திருப்தியுண்டாகும் விதமாகக் கூறினன். அதைக்கேட்ட பிரபு, நீர் தன் வேலை யைச் சரிவரச் செய்துகொள்ள முடியாதபோது, பிறர் வேலையை எங்ஙனஞ் செய்ய வல்லவராவீர்? எனக் கூறி அவனைத் தன் வேலையிலிருந்து நீக்கி விட்டனராம்.

அதுபோல், மனிதனுகப் பிறந்ததன் பயன் என்ன? என்றுணர்ந்து தான்செய்யவேண்டிய கடமைகளைச்செய்ய முடியாதவனை, கடவுளென்னும் எசமானுனவர் மனிதப் பிறவி என்னும் உயர்ந்த உத்தியோகத்திலிருந்து நீக்கி விடு வர் என்பது தாற்பரியம்.

நாம் நமது விஷயத்தில் செய்துகொள்ளும் கடமை யிலும், சரீரத்தைப் பற்றிய தென்றும், ஆன்மாவைப்பற் றிய தென்றும் இருவகையாகும்.

ஆன்மா வென்னும் எசமான் வசிப்பதற்கு அனுகூல மாகிய வீடுபோன்ற நமது சரீரத்தை, உணவு-உடை முத லிய வற்றைக் கொண்டும், பிணி முதலாகிய துன்பங்கள் வராமலும் காத்துக்கொள்வது அவசியம். ஏனெனில், "சுவர் நிலைத்தன்றோ! சித்திரம் எழுதவேண்டும்" என்பது கவனிக்கற்பாலது. இவ்விதமாக நாம் நமது கடமையை மட்டும் செய்வதோடு போய் விடாமல், நமது சந்ததியார் களும் நன்மை யடையும் பொருட்டு சுக துக்கங்களைப் பாராட்டாமல் பாடுபட முன்வர வேண்டும்.

நாம், நமது கடமையை மட்டும் முடித்துக்கொண்டு மற்றவர்கள் எப்படிப் போனால்தான் நமக்கென்ன என்று சில கல்லுளிச் சித்தர்கள் சொல்வதே யன்றி? சீவகா ருண்ய முடைய மகான்கள் அவ்வாறு சொல்வதுமில்லை; செய்வதுமில்லை.

## அவதார புருடர்கள்.

இஸ்லாம் மதத்தாபகராகிய நபிகள் பெருமான் நாய கம் முஹம்மது (சல்) அலைஹிவசல்லம் அவர்கள், ஆரம்பத் தில் அபூஜஹில் முதலிய ஏழு தலைவர்களுடைய சங்கடத்துக் காக மக்கத்தை விட்டு மதீனத்துக்குப் புறப்பட்டும், புறப் படும்போது வழியில் அந்த ஏழுவர்களால் அநேக இடை யூறுகள் நேர அவற்றிற் கெல்லாம் தப்பித்தும், இருட்டு அமாவாசையில் பூரணச்சந்திரனை அழைத்தும், தசைக்கட்டி யைப் பெண்ணுருவாக அமைத்தும், இன்னம் எண்ணிறந்த அற்புதங்களை யெல்லாம் செய்தது போதா தென்று, ஆன்ம லாபத்திற்கு நேர் வழியைக் காண்பிப்பதற்குத் தகுதி யான நாலாவது (குர் ஆன் ஷரீபு) வேதத்தையும் விளக்க

மாக்கிச் சனங்களைச் சீர்திருத்தஞ் செய்தது சனங்களின் பிரதியுபகாரத்தைக் கருதியா?

சைவ சமயமானது சமண முனிவர்களால் மாறுதலடையுந் தறுவாயில் அதைச் சீர்திருத்துவதற்காகத் திருஞான சம்பந்தர் மதுரைமாநகரஞ் செல்ல எத்தனிக்கையில், சில மெய்யன்பர்கள் வந்து நின்று வணங்கி, சுவாமி! இன்று நாள் நல்லதாக இல்லை; மற்றொருநாளில் புறப்படலாம் என்று பிரார்த்திக்க,

"ஞாயிறு திங்கள் செவ்வாய் புதனுடன் வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல"

என்னும் பாசுரத்தைக்கூறி சமாதானஞ் செய்து உடனே மதுரைக்குப் புறப்பட்டுப் போய், பாண்டியனது சுர முதலான வியாதிகளை நிவர்த்தித்து சமணர்களது கொட்டத்தை அடக்கி வைகையில் ஏட்டை எதிர்த்து வரும்படிச் செய்து அனைவரையுஞ் சைவசமயத்தினராகச் செய்தது பிரதியுபகாரத்தைக் குறித்தா?

இராசகுமாரனாகிய சித்தார்த்தர் என்னும் கௌதம புத்தர் இராச்சிய பாரத்தை ஒழித்து, சந்நியாசந் தாங்கி உலகத்திற்கு போதிக்க வந்ததுதான் என்ன காரணம்? ஆகலால், கல்வி-அறிவு-உபசாந்த முடையவர்கள் உலகத்தில் தலையிட்டுக் கொள்வது இவ்வுலகத்திலுள்ள கோணலை நிமிர்த்தவேயாம். அவர்களே! இவ்வுலகத்தின் நடவடிக்கைகளை எண்ணி அஞ்சுவார்களாகில், கேவலம் இவ்வுலக வாழ்வையே சதமென் நினைத்து, உன்னுடையது என்னுடையது என்று விவ்கார பாணந் தொடுத்துக் கொண்

டிருக்கிற சாமானியர்கள் எவ்விதம் இவ்வுலகத்தைச் சீர் திருத்த முடியும்? அவர்கள் சுயநலப் புலியாயிருப்பதால், நீதி என்னும் கண் குருடாயிருக்குமே! குருடர்களை வழி நடத்துபவனும், அவர்களுக்கு வைத்தியம் செய்பவனும் கண்ணுள்ளவனல்லவா? அதுபோல், உலக இயல்பையும், அதற்கு வேறான தன் இயல்பையும், உணர்ந்தவர்களே உலகத்தின் நன்மைக்குப் பாடுபடும் கடமை பூண்டவர்கள். அவ்வாறு நன்மைசெய்யாமலிருக்க அவர்களால் முடியாது. ஏன்? ஒரு குழந்தை தவறிக்கீழே விழும்சமயத்தில் அதைத் தூக்காமலிருக்க எந்தக் கல் நெஞ்சுள்ளவனால்தான் முடியும்! அதுபோல் இவ்வுலகத்தாரின் கஷ்ட - நஷ்டங்களை உள்ளபடி யுணரும் காருணிய முடையவர்கள் பார்த்து விட்டு மௌனமா யிருப்பார்களா?

பிணத்தின்மேல் எத்தனை வண்டிகள் ஏறிச் சென்றாலும் அந்த உடலுக்கு எப்படி வருத்தமில்லையோ! அது போல், நம்முடையதல்ல வென்று ஒதுக்கிய இந்த உடலும் உள்ளமும் உலகத்தாரின் உபகாரத்தின் பொருட்டு எவ்வளவு வருந்தினாலும் ஞானிக்கு சிறிதும் கவலையில்லை. அவர்கள் உழைப்புக்கும் பயப்படார்; எவ்வித துன்பத்துக்கும் பயப்படார்.

நீதிநெறி விளக்கம்.

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

தேச சுயராச்சியம்.

இந்தியாவில் சுயராச்சியம் பெறுவதற்காக அநேக தேசாபிமானிகள் அதிக பிரயாசை எடுத்து வந்தார்கள்;

வருகிறார்கள். அத்தகைய முயற்சியானது நமது தாய் நாட்டிற்கு சிறந்த நன்மை பயக்கத் தக்கதே யாயினும், இந்தியாவில், அதிலும் தென்னிந்தியாவில் சுயராச்சியம் கிடைப்பது மகா அருமை. ஒருக்கால் கிடைப்பினும் பூனைக்கு யார் மணி கட்டுவது? என்னும் எலிக் கதைபோல் அதை எம்மதத்தினர்? யார்? வகிப்பது என்பது ஐயத்திற் கிடமாயிருக்கிறது.

ஒருவாறு சுயராச்சியம் கிடைப்பினும் இந்துதேசவாசிகள் வகிப்பது சிரம சாத்தியமேயாம். ஏன்? தென்னிந்திய வாசிகளுக்குள் மதத்துவேஷம், சாதித்துவேஷம் அதிகரித்து (நெல்லிக்காய் மூட்டையை அவிழ்த்துக் கொட்டினால் ஒன்றாக நிற்காமல் பல திசைகளிலும் உருண்டு ஓடுவது போல்) சகோதரத்துவம் இல்லாமற் போனதுதான் அதற்குக் காரணம்.

சகோதரத்துவம் என்பது ஒரு மதத்தினருக்குள், அதிலும் ஒரு வகுப்புக்குள்ளேயே இல்லாம லிருக்கும்போது, எல்லோரும் பிறமதத்தின ரிடத்தில் சகோதரத்துவம் பாராட்டுவார்க ளென்பது முக்காலத்திலு மில்லை. சற்று நிதானித்து யோசிப்பவர்கட்கு இது சரிதான் என்பது தெற்றெனெ விளங்கும்.

பத்திரிகைகளும், பிரசங்கங்களும் மலிந்த சென்னையிலுள்ள சிற்றுண்டிச் சாலைகளிற்கூட இந்து-முஸ்லிம் வேற்றுமை தலைகொழுத்து நிற்கிறது.

சகோதரத்துவம் என்னும் சமரசம் வந்து விடுவது சாமானியமா? சமரசம் வந்து விட்டால் மோட்சம் வெகு

தூரமில்லை! சமீபந்தான். ஆனால், எந்த மதத்தினரா யிருந்தாலும் ஞானிகளாயுள்ளவர்களே சமரசம் பொருந்தி யிருப்பார்கள். அவர்களிடத்திலுங்கூட சில சந்தர்ப்பங் களில் பிரிவினை காணப்படுவதா யிருந்தால் நமது தேசத் தில் எவ்வாறு சமரசம் ஏற்படும்? சமரசம் ஏற்படவே தேசாபிமானிகள் அரும்பாடு படுகிறார்கள். நீங்கள் அதைப் பார்த்தும் கேட்டும் இன்னும் சமரசம் கொள்ளாமலிருப் பது முறையல்ல. நமது தேசாபிமானிகட்கும் உற்சாக கம் உண்டாகும்படி கூடுமான வரையில் சமரசமடைந்துய் யுங்கள்.

சமரசமே சன்மார்க்க வழி! சமரசமே பிரம்ம ஞான சொருபம்!
சமரசமே ஆன்மஞானத்தின் உயிர்!
சமரசமே முத்திக்கு வித்தான மோனம்!
சமரசமே சாலோக-சாமீப-சாருப-சாயுச்சியம்!

### பொதுக் காரியமும்-அரச சன்மானமும்.

முன்னொரு காலத்தில் இந்துக்களும், முஸ்லிம்களு மாக நிறைந்த ஒரு கிராம வாசிகள், கிராமப் பொதுக்காரி யத்திற்காக அதிக பணச் செலவில், சில அரிய பொருட் களை தயாரித்து காணிக்கையாக அந்நாட்டு அரசனுக்கு சமர்ப்பித்து, தங்கள் விருப்பத்தை தெரிவித்துக் கொண்ட னர். அரசன் அவர்களை திருத்தி செய்ய நினைந்தும், அவர் களுக்குள் தலைவர் இன்னாரென்று கண்டுகொள்ள முடியாம லிருந்ததனால் அதைப்பற்றி மந்திரியுடன் கலந்து யோசித் தான்.

அதற்கு மந்திரி, அரசே! இன்றிரவு இவர்கள் படுக் கைக்கு சில பாய்களும், ஒரு கட்டிலும் கொடுப்போம்.

கட்டிலில் படுக்கிறவனைத் தலைவனென்று தெரிந்து, வேண்டியதைச் செய்வோமென்றனன். அது சரியான யோசனைதானென்று ஒரு அறையில் ஒரு கட்டிலும் பல பாய்களும் போடும்படி திட்டம் செய்யப்பட்டது. கிராமவாசிகள் அதைப்பார்த்து பின் வருமாறு யோசித்தார்கள்:—

இவ்வரசனுக்கு கொஞ்சமேனும் புத்தியில்லை. கொடுத்தால் எல்லோருக்கும் கட்டில் கொடுத்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் எல்லோருக்கும் பாயாக கொடுத்திருக்க வேண்டும். ஒரு கட்டிலும், பல பாயுங் கொடுத்தது என்ன அறியாமை! ஆகிலும் நாம் ஒவ்வொருவரும் சமமாகவே பொருள் செலவிட்டு அரசனை வந்து கண்டோம். இதில் பெரியவர் யார்? சிறியவர் யார்? அப்படியிருக்க ஒருவர் கட்டிலில் படுத்துக்கொள்ளுவதும், மற்றவர்கள் கீழே படுத்துக்கொள்ளுவதும் நியாயமா? கட்டிலை நடுவில் போட்டு, அதைச் சுற்றி எல்லோரும் பாயில் படுத்து, கட்டிலின்மீது ஆளுக்கொரு காலை வைத்துக் கொள்வதே பாரபட்சமில்லாத முறையாம் என்று ஏகோபித்து படுத்துக்கொண்டார்கள். இதை அரசன் முன்னதாகவே ஒற்றால் அறிந்து இவர்கள் அறியாமைக்காக விசனித்தான்.

காலையில் கிராமவாசிகள் அரசரிடம் வந்து அரசே! எங்களுக்கு விடைகொடுக்க வேண்டுமென்றார்கள். அரசன் உங்களுக்குள் தலைவர் யார்? என்றனன். எங்களுக்குள் பெரியவர் - சிறியவரில்லை. எல்லோரும் தலைவர்கள் தாம் என்றார்கள். உங்களுக்குள் தலைவரின்றென்று ஏற்படாவிட்டால், நான் யாரிடத்தில் சன்மானம் கொடுப்பது? தலைவரைத் தேர்ந்து வாருங்கள் என்றான். நாம் சன்மானம் வாங்காவிட்டாலும் போகிறது, அரசனறிய ஒருவர்

தலைவரென்றும், மற்றவர்கள் அதற்கு உட்பட்டவர்களென்றும் பதிவாகாமல் போனதே நல்ல காலமென்று சொல்லிக் கொள்ளாமல் ஊருக்குத் திரும்பிவிட்டார்களாம்.

இந்தக் கதையைப் போலவே இந்து - முஸ்லிம்கள் (உட்கலக முடையவர்களாய்) ஒற்றுமைக் குறைவாகவே யிருக்கிறார்கள். உலகம் தோன்றியது முதல் பொறாமையும் தோன்றி பாதாளம் வரையில் வேரூன்றி நிற்பதால், அதைப் பெயர்த்து விட்டு எல்லாரிடத்திலும் பொறுமையென்னும் ஒற்றுமையை வேரூன்றும்படி செய்ய முயல்வதானது, தீர்க்க தரிசிகளாலும் கூட ஏககாலத்தில் முடியாததாயிருந்திருக்கிறது.

சாதாரணமாக, அந்தந்த நகர சனங்களால் தேர்ந்தெடுக்கவேண்டிய நகரபரிபாலனசபை (Municipality) தேர்தல் முதலானவைகளுக்கு, அதிலும் சம்பளமில்லாத உத்தியோகத்திற்கு எத்தனை ஆட்சேபனை! எத்தனை சண்டை! எத்தனை விவகாரம்! எத்தனை பணச்செலவு! அந்தோ சொல்லத் தரத்ததன்று. இன்னும் உன்னத பதவிகளின் தேர்தல்களுக்கென்றால் சொல்லவா வேண்டும்? எல்லாம் சுயநலமே! எல்லாம் பொறாமையே!

## இந்து முஸ்லிம் சுயராச்சியம்.

சில தேசிய விளம்பரங்களிலும், பத்திரிகைகளிலும்,

அல்லாஹு அக்பர்! வந்தே மாதரம்!!

ஹிந்து முஸ்லிம்கே ஜே!!!

என்று எழுதி சகோதரத்துவம் வந்துவிட்டதாக ஆரவாரிக்கப் பெறுகின்றன. 'அல்லாஹு அக்பர்! வந்தே மாதரம்! ஹிந்து முஸ்லிம்கே ஜே!' என்று எழுதிக் கொடுத்தால் அச்

சாபீஸ்காரர்கள் கூலியை ஒன்றிற் கிரண்டாக வாங்கிக் கொண்டு, எப்படி எழுதிக்கொடுக்கிறார்களோ! அப்படியே அச்சடித்துக் கொடுத்துவிடுகிறார்கள். அதனால் இந்து முஸ்லிம்களுக்குள் சகோதரத்துவம் வந்துவிட்டதாகக் கரு துவதற்கு இடமுளதா? இல்லை. தேன் என்று காகிதத்தில் அச்சடித்திருந்தால் (ஏட்டுச்சுரைக்காய் கறிக் காகாதென் பதுபோல்) அவ்வார்த்தை தித்திக்குமா ? உண்மையான தேனைப் புசித்தாலல்லவோ தித்திக்கும். அதுபோல், செய் கையில் இந்து, முஸ்லிம்களுக்குள் சகோதரத்துவம் என் னும் ஒற்றுமையைக் காண்பிக்காமல் வாசா கைங்கரியம் பேசுவதாகத் தோற்றுகிறதே யன்றி, தற்காலம் உண்மை யில் அவ்வாறு நடைபெறுவதாகத் தெரியவில்லை.

இந்துக்கள், முஸ்லிம்களை நேரில் காணும்போது மாத் திரம், சாகிபு - ராவுத்தர் - மரைக்காயர் என்று மரியாதை யாக அழைக்கின்றனர். காணுதவிடத்தில் (சிலர் நேரிலும்) துலுக்கன் என்று இகழ்ச்சியாகப் பேசுகிறார்கள். துலுக் கர் என்பது-துருக்கர் என்பதன் திரிபு. அதாவது முற் காலத்தில் துருக்கி (Turkey) தேசத்தினின்றும் வந்து இந்தியாவில் இஸ்லாமிய மதத்தை ஸ்தாபித்ததால் துருக்கர் என சிலரால் வழங்கப் பெற்றுளது. அதைச் சரிவர உச்ச ரிக்கத் தெரியாமல் துருக்கரைத் துலுக்கர் என்றும், அஃ தொரு இகழ்ச்சிப் பதமென்றும் அறியாமையாற் புறமதத் தினர்கள் நினைக்கின்றனர். இவ்வாறே இஸ்லாமானவர் கள் இந்துக்களை நேரிற் கண்டால் ஐயர்-முதலியார்-பிள்ளை செட்டியார் முதலான பட்டங்களை வழங்குகிறார்கள். காணுதவிடத்து பாப்பான் - தம்மளன், கோவணங்கட்டி- மாவுக்காரன் என்று இகழுகிறார்கள். இந்தக் கன்ன கடூ ரமான வார்த்தைகளை இங்கே காண்ப தருமையாயினும்,

தீவாந்தரங்களுக்கு யாத்திரை செல்லும்போது, மரக்கலங்களில் பிரத்தியட்சமாகக் காணலாம்.

அன்றியும், இந்துக்களுக்குள் சைவ - வைஷ்ணவ தூஷணமோ நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றது. வேளாளர்களிற் சிலர் சிவனை ஆராதிப்பவர்களாயும், சிலர் விஷ்ணுவை ஆராதிப்பவர்களாயு மிருக்கிறார்கள். ஆனால் ஒருவருக்கொருவர் விவாக முதலிய சம்பந்தங்களுண்டு. அவர்களுக்குள் கலியாணம் ஏற்படும்போது, கலியாணப் பத்திரிகைகளில் சிவமயம் என்று போடக்கூடாது, ஸ்ரீ ராமஜெயம் என்றே போடவேண்டும் இல்லாவிட்டால் பெண் கொடுக்க மாட்டோம், அல்லது பெண் கொள்ளமாட்டோம் என்று கூறி, சில சமயங்களில் கலியாண முகூர்த்தங்கூடத் தவறிவிடுகிறதைக் காண்கிறோம். அந்த தூஷணமானது சைவர்களுக்குள் பெரும்பாலும் கிடையாதென்றே சொல்லலாம். ஏன்! ஒரு சுத்த சைவன் இராமகிருஷ்ண பிள்ளை என்பதுபோன்ற வைஷ்ணவ நாமங்களை சூடிக்கொள்வான். வைஷ்ணவர்களோ? நாய் - கழுதை போன்ற சாதாரண படங்களை அழகாக வைத்துக்கொண்டாலும் வைத்துக் கொள்வார்கள். சைவ சமய சம்பந்தமான படங்களை கண்ணால் கண்டாலுங்கூட அது பெரிய அபசாரமென நினைத்து, குளங் குட்டைகளுக்கு அதே நிமிடம் ஓடிப்போய் ஸ்நானஞ் செய்ய ஆரம்பிப்பார்கள். அதிலும் சிற்சில வடகலை நாமதாரிகளோ! வித விதமான ஆரவாரஞ் செய்வார்கள்.

பிராபுலிங்கலீலை.

எங்குரு நந்தி தோன்றுநாட் புதுமை
என்சொல்வாங் கண்டுமுட் டென்னும்

வெங்குண அமண ருளத்தெரி மழுவோன்
 வேடங்கண் டஞ்சலி செய்ய
அங்கொரு நேயம் பிறந்தது திருமால்
 அடியவ ருளத்தினில் எங்கள்
சங்கரன் இறைவன் என்றொரு ஞானம்
 சார்ந்தது தமையறி யாமல்.

துளசிதாசர் அநேக சாதுக்களுக்கு அன்னமிடுவதற்காக 2,000 பிராமணர்களுக்கு சந்தர்ப்பணம் செய்து, எல்லோரும் அன்னம் புசிக்குந் தருவாயில், மாயாவேதியனுகை வந்த பகவானுக்கு பிரம்மஹத்தி தீரவில்லையாதலால் அன்னமிடக்கூடாதென்று பிராமணர்கள் சொல்ல, துளசிதாசர் மாயாவேதியனை நோக்கி, ராமா என்று சொல்லும் என்ன, அவர் சிவநாமாவை யன்றி இதர நாமாவைச் சொல்ல மாட்டேனென்றனர். அதற்குத் துளசிதாசர் சொல்கிறார்:—அயோத்தியை பரிபாலித்து வந்த தசரத மகாராசன் மூத்த புதல்வருக்கு என்ன நாமகரண மிடலாமென யோசிக்க, அவர்கள் குலகுருவாகிய வசிட்டர், உலகமானது சிவ-சத்தி வடிவமா யிருப்பதால் இக் குழந்தைக்கு அவர்களிருவருடைய பெயரையே சூட்டவேண்டும். அதாவது (*) அரா என்பதன் இறுதி அக்கரமாகிய ரா என்பதையும், உமா என்பதன் இறுதி அக்கரமாகிய மா என்பதையும், சேர்த்து ராமா என்ற நாமதேய மிட்டார்களென்றும், இந்த இராம நாமத்தின் பெருமையை எண்பிப்பான் பொரு

(*) அரா என்பதன் முதலக்கரமும், உமா என்பதில் இறுதி அக்கரமும் ஆக இரண்டக்கரமுஞ் சேர்ந்தே அ - உ - ம என்னும் பிரணவமாயிருக்கிறது. அந்த இரண்டு பெயர்களின் முதலக்கரங்களே அ - உ என்னும் எட்டிரண்டாகிறது. "எட்டிரண்டறிந்தோர்க் கிடரில்லை" என்பது ஆன்றோர் வாக்கு.

ட்டு துளசிதாசர் ஸ்ரீகாசியிலுள்ள விசுவேசரையும்,நந்தீச்சுரரையும் சாட்டாங்கமாக வணங்கினரென்றும், இன்னும் பல சிவ மகத்துவங்களைப் பற்றியும் ஸ்ரீ மகா பக்த விஜயம் பதினோராவது துளசிதாசரைச் சோதித்த அத்தியாயத்தில் விபரமாகக் கூறப்பெற்றுள்ளது.

சைவசமயத்தின் எதிர்ச் சமயத்தினராகிய புத்த-சைன மதத்தினர்கள்கூட, சைவசமயத்தைப்பற்றி அவ்வளவு துவேஷங் கொள்ளவில்லை. சிவசம்பந்தத்திற் கலந்த தங்கை-மைத்துனன்-மருமகன் என்று முறைமை கொண்டாடும் மஹா விஷ்ணுவின் அடிமைகளாகிய வைஷ்ணவர்கள்! எல்லையில்லாத் துவேஷங் கொண்டாடுகிற காரணம் யாதோ?

திருவருட்பா.

பெருகியபே ரருளுடையார் அம்பலத்தே நடிக்கும்
பெருந்தகையென் கணவர்திருப் பேர்புகலென் கின்றாய்
அருகர்புத்த ராதியென்பேன் அயனென்பேன் நாரா
யணனென்பேன் அரனென்பேன் ஆதிசிவ னென்பேன்
பருகுசதா சிவனென்பேன் சத்திசிவ னென்பேன்
பரமமென்பேன் பிரமமென்பேன் பரப்பிரம மென்பேன்
துருவுசுத்தப் பிரமமென்பேன் துரியநிறை வென்பேன்
சுத்தசிவ னென்பனிவை சித்துவிளை யாட்டே.

முன்னொரு காலத்தில் அகத்திய மகாமுனிவர் சிவவேடத்துடன் திருக்குற்றாலத்திலுள்ள விஷ்ணு கோவிலுக்குள் நுழையும்போது எல்லா வைஷ்ணவர்களும் ஒன்றுகூடி சிவ மதத்தினர் கோயிலுக்குள் நுழைவது தகாது என்று தடுத்துவிட்டார்களாம். பின்னர் நமது மலய மகா

முனிவர் அவர்கள் அறியாமையாகிய மூடத் தனத்தையும், வீண் கருவத்தையும் அடியோடு தொலைக்கவேண்டுமெனத் திருவுள்ளத்திற் கொண்டு, துவர்தச நாமமிட்டு ஆச்சாரி யரைப்போல் வேடம் புனைந்து கோயிலுக்குள் நுழைந்து, நெடிய விக்கிரகத்தை தமது திருக்கரத்தால் சிவலிங்க வடிவ மாகும்படி செய்தனராம். அவ்வாலயம் திருக்குற்றால நாத ரின் சிவாலயமாக இன்றளவும் விளங்கி வருகிறது. இதன் முழு விபரம் கந்தப் புராணத்திலும், திருக்குற்றாலப் புரா ணத்திலும் காணலாம்.

ஸ்ரீ இராமபிரான் இராமேச்சுரம் என்னும் தலத்தில் தமது திருக்கரத்தால் பிரதிட்டை செய்த இலிங்க மூர்த் திக்கு, இராமலிங்கம் என நாமகரணஞ் சூட்டப்பெற்று இன்றளவும் விளங்கி வருகிறது. இவ்விதமாகவே அரி-பிரமாதி தேவர்களெல்லாம், மகாதேவ பூசையால் தத்தம் இடுக்கண் களைந்துள்ளார்களெனப் புராணங்கள் முழக்க மிடுகின்றன. ஸ்ரீ இராமபிரானே, சிவ பூசை செய்திருக்கிற போதுஅவருடைய பக்தகுழாங்கள் சிவத்துவேஷங்கொண் டாடுவதும் காலவிபரீதமே.

பிரபுலிங்கலீலை.

பயனிலை யருச்சனை பயின்று மென்றனை
யயனரி முதலிய வமரர்க் காயினு
நயமொடு சதாசிவ நாதன் பூசனை
முயலுத லன்றியோ ரெண்ண முற்றுமோ.

வாசவ னரியயன் வான நாட்டுளோர்
பாசமின் முனிவரர் பலரு மண்ணிடை
பூசனை விதிமுறை புரிந்த வாலயங்
காசணி யல்குலாய் காண்கி லாய்கொலோ.

மலைமகள் சூரர மகளிர் பாற்கட
லலைமகண் முனிவரில் லறக்கி ழத்தியர்
கலைமகள் விழிநுதற் கடவுட் பூசையா
னிலைமைக ளடைந்தமை நினைந்தி லாய்கொலோ.

சில வைணவர்கள் வீட்டில் சிவமதச் சீரியோர் உட்கார்ந்தெழுந்த விடத்திற்கூட சாணந் தெளிப்பதே துவேஷத்தின் அறிகுறியாகும். இவ்வாறு சில சிவமதத்தினர்கள் வீட்டிலும் நிகழ்கின்றது.

மஹா விஷ்ணுவுக்கே அடிமை பூண்டொழுகும் வைஷ்ணவர்களுக்குள்ளும் தென்கலை - வடகலை சண்டையோ அதிகரித்து வருகிறது. அதிலும் ஆச்சாரியர் உயர்ந்தவர் ஆழ்வார் உயர்ந்தவர் என்னும் சண்டையோ மண்டையுடைபடுகிறது. அன்றியும் விஷ்ணு பக்தர்களின் வடகலை தென்கலையாகிய நாமங்களின் கலக்மோ அலகிலாமல் நடைபெற்று வருகிறது. விஷ்ணு பாதத்தின் அறிகுறி யென்னும் நாமமானது விஷ்ணு பக்தர்கள் நெற்றியிலும்-அவயங்களிலும் இலக வேண்டியதே யன்றி, விஷ்ணு அல்லது விஷ்ணுவின் அவதாரமென்று கருதப் பெற்ற இராமர், கண்ணன் முதலானவர்கள் விக்கிரகத்தின்மீது தீட்டப் பெற்றுள்ளது எவ்வாறு பொருத்தமோ தெரியவில்லை அவ்வாறு விக்கிரங்களில் தீட்டியுள்ள நாம பேதங்களினால் சில விடங்களில் அடி-பிடி சண்டை நிகழ்ந்து விவகாரமானது நியாயத்தலத்திலும் நடைபெற்றிருக்கிறது.

சைவ சமயத்தினர்களுக்குள்ளும் வேதாந்த-சித்தாந்த கட்சி யதிகரித்து நிந்தையோ நிறைகின்றது. அதிலும் சைவம் - வீரசைவம் என்னும் உயுத்தமோ அதிகரிக்கின்றது. இஸ்லாமியர்களுக்குள்ளும், ஹனபி-ஷாபி-அப்புலி-மாலிக் என்கிற மதுஹபின் பேதங்களும், காதிறிய்யா முத

லான* தறீக்குகளின் பேதங்களும், சேர்ந்து பகை மூண்டு, மூலைக்கு மூலை பத்வாக்கள் (கண்டனம்) புறப்பட்டு விடுகின்றன. இந்துகளுக்குள்ளும் பார்ப்பனர்-பார்ப்பனரல்லாதார் என்றும், சைவப் பிராமணர்களுக்குள் ஆதி சைவர்களாகிய குருக்கள் வீட்டில் ஸ்மார்த்த சைவப் பிராமணர்கள் சாப்பிடுவதில்லை என்றும், வைஷ்ணவப் பிராமணர்களில் தென்கலை நாமதாரிகள் வீட்டில் வடகலை நாமதாரிகள் சாப்பிடுவதில்லை என்றும், சிலவேளாளர்களில் ஒருதாய் வயிற்றில் பிறந்த பிள்ளைகளில் ஒருவருக்கொருவர், "நீ கலியாணஞ் செய்த இடம் தாழ்ந்தது - நான் கலியாணம் செய்த இடம் உயர்ந்தது, நீ பெண்கொடுத்த இடம் தாழ்ந்தது-நான் பெண்கொடுத்த இடம் உயர்ந்தது, நீ ஏழைமாற்று-நான் பத்தரைமாற்று" என்றும் தாரதம்மியச் சண்டைகள் ஏற்பட்டு, நன்மை-தீமை ஏற்பட்ட காலத்திலுங்கூட ஒருவர் வீட்டில் ஒருவர் அன்னபானதிகள் அருந்தாதிருப்பதை நாம் பிரத்தியட்சமாகப் பார்க்கிறோம்

நமது தாய் நாடென்னும் கழனியில் இவ்விதமான குழப்ப மென்னும் களைகளாகிய புற்பூண்டுகள் நிரம்ப முளைத்திருக்கும்போது சுயராச்சியம் என்னும் பயிரானது வளர்ந்து, சேமமென்னும் கதிரை எவ்வாறு கொடுக்கும் என்பதுதான் ஆராய்ந்து கொள்ளக் கிடக்கின்றன. நமது முழுமுதற் கடவுள் நமது தாய்நாட்டின் பேதா பேதமென்னும் களைகளை நீக்கி, சுயராச்சிய மென்னும் பயிரால் நமக்கு இன்னருள் பாலிப்பாராக.

எல்லோரும் சகோதரத்துவமென்னும் சமரசம்
அடைய வேண்டியதுதான் எமது கோறிக்கை!

---

(*) தறீக்குகளின் முழு விபரம் நமது வேதாந்த பாஸ்கரன் அட்டாங்கயோக அத்தியாயத்திற் காண்க.

## ஆன்ம சுயராச்சியம்.

இதுவரையில் புறத்தோற்றமாகிய தேச சுயராச்சியத்தைப்பற்றிச் சொல்லி வந்தோம். இனி அகத் தோற்றமாகிய ஆன்ம சுயராச்சியத்தைப் பற்றி விவரிப்பாம்.

தேச சுயராச்சியம் பெறுவதென்றால், இலகுவிலில்லை. பல ஆண்டுகள் சென்றாலும் செல்லும். ஆனால் அநித்தியமாகிய தேச சுயராச்சியம் ஒன்றை மட்டுமே சதா விரும்பிக்கொண்டிருந்து விடாமல் அத்துடனாவது, அதை முற்றிலுங் கைவிட்டாவது,

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு

என்பதற் கிணங்க தமது பகுத்தறிவினால் நித்தியமான ஆன்ம சுயராச்சியம் என்பதைப் பற்றியும் அழுத்தமாக ஆராய்ச்சிசெய்து, தேக மென்னுங் காயாபுரியில் ஏகச் சக்கராதிபதியாக வீற்றிருந்து, அதை அடையவேண்டியது தான் ஆறறிவுடைய மக்கட் பிறப்பின் பயனும், கடமையுமாம்.

அவ்வாறு ஆன்ம சுயராச்சியம் புரிவதற்கு இடையூறாக, நல்லவனைப் போன்றிருக்கும் உட்பகையுடைய மனம் என்னும் அரசன் (*) தொண்ணூற்றாறு தத்துவங்களில் ஒருவனை, நான் என்னும் பேய் பிடித்தாடும் அகங்காரமாகிய பரம துஷ்டனைத் தனக்குச் சேனாதிபதியாகவும்,

(*) பூதம் 5, புலன் 5, ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, காரணம் 4 ஆக ஆன்மதத்துவம் 24ம், நாடி 10, அவத்தை 5, மலம்3, குணம் 3, மண்டலம் 3. பிணி 3, விகாரம் 8, ஆதாரம் 6, தாது 7, வாயு 10, கோசம் 5, வாயில் 9 இந்த 72ம் சேர்ந்துதத்துவங்கள் 96.

ஏனைய 95 தத்துவக் கூட்டங்களை சைனியங்களாகவும் சேர்த்துக் கொண்டு, நமக்கு அநுகூலமாக உதவிபுரியும் நண்பர்களாகிய ஞானம்-அருள் - தவம்-சாந்தம்-வாய்மை-மேன்மை - மோனம்-பஞ்சேந்திரிய மடக்குதல் என்னும் சத்துவகுணத்தின் செய்கையாகிய எண்மர்களையும், இயமம்-நியமம்-சாதன சதுட்டயம் முதலான பல உத்தமோத்தமர்களையும் தலை காட்டவிடாமல் அடக்கி, நமக்கு நன்மை செய்யும் பாவனைபோல், காம குரோத-லோப-மோக-மத-மாற்சரிய-இராகத்துவேஷ முதலான பல கடூரமான தீமைகளை விளைவித்து, நமது ஆன்மலாபத் திரவியங்களை யெல்லாம் தங்கள் மனோ பீஷ்டம்போல் துர்விநியோகஞ் செய்து, சின்னாட்களுக்குள் நம்மை (ஆன்மாவை) காயாபுரிக் கோட்டையை விட்டு வெளியேற்றி, எமனென்னும் விடாக்கண்டனாகிய கொலைஞனிடம் ஒப்புவிக்க, அவன் நம்மைப் பிடித்துப்போய் நரகம் என்னும் இருட்டறையில் போட்டுப் பூட்டிவிடுகிறான்.

வைராக்கிய ஞான வீரர்களாகவிருந்த பல தீர்க்கதரிசிகளுக்கும், பட்டினத்தடிகள் - தாயுமான வள்ளல்-குணங்குடி வள்ளல் முதலான பேரின்ப தேசாதிபதிகளுக்கும், சித்தர் குழாங்களாகிய யுத்த வீரர்களுக்கும் மாத்திரம் சுயராச்சியம் கொடுத்து, அவர்கள் இஷ்டம் போல் தானும் நடந்து, ஏனையோர்களை யேமாற்றி விட்டான். அந்த ஏமாற்றத்திற்குள்,

குலத்திலே சமயக் குழியிலே நரகக்
குழியிலே குமைந்துவீண் பொழுது
நிலத்திலே போக்கி மயங்கி யேமாந்து

என்ற அருட்பிரகாச வள்ளல் திருவாய் மலர்ந்தருளிய திருவருட்பாக் கருத்தின்படி நமது முன்னோர்களிற் சிலர்

அகப்பட்டு ஏமாந்து, நரகம் என்னும் பெரிய இருட்டறையில் சிக்கி வருந்துகின்றனர். அதுபோல் நம்மையும், நமது சந்ததியார்களையும் ஏமாற்றி அந்த இருட்டறையில் போட்டுப் பூட்டிவிட உத்தேசித்திருக்கிறான். அவனுடைய துட்டத்தனத்தை முளையிலேயே கிள்ளியெறிந்திருந்தால் இவ்வளவுக்கு இடந்தராது, "மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்" என்பதை நாம் அசட்டைசெய்து மனப்பகைவன் போன வழியிலேயே நாமும் போய்த் திரிந்தபடியாலும், துஷ்டர்களெல்லாம் அவனைச் சினேகங்கொண்டிருப்பதனாலும், அவனே சருவ அதிகாரங்களையும் வகித்து வந்ததாலும், இப்போது அந்த மனப்பகைவனை யடக்கியாள நம்மால் முடியவில்லை. வேலிக்கு நாட்டிய குச்சி ஆலமரமாகி, வாள்-கோடரி முதலிய ஆயுதங்களாலும் வெட்டித் தள்ளுவது சிரமமாவதுபோல் முதிர்ந்து விட்டபடியால், நாம் அது விஷயத்தில் ஆலசியமாயிருத்தல் கூடாது. இக்கருத்தை யமைத்தே யாக விபரத்தையும் பின்வருமாறு ஆன்றோர் கூறியுள்ளனர்.

### யாக சுயராச்சியம்.

யாகங்கள் ஐவகையாக பிரிக்கப்பெற்றுள்ளன. ஆனால் உட்பிரிவுகள் பலவுள. (1) கோமேதயாகம். (2) சேனயாகம் (3) இராசசூய யாகம். (4) அசுவமேத யாகம். (4) நரமேதயாகம் என்பவைகளாம்.

(1) கோமேதம்:--கோமேதம்-என்றால் பசுமேதம் பசு என்றால் பசுத்தன்மை. அதாவது, மிருகத்தன்மை என்றும் மேதம் என்றால் கொல்லுதல் என்றும், ஆக பசுமேதம் என்ற தொடர்மொழிக்கு, 'மிருகத்தன்மையைக் கொல்லு

தல்' என அருத்தமாம். புலன்களிற் செல்லுகின்ற ஐந்தாசைகளையும் ஒழித்தல், ஐம்புலன்களை அடக்குதல் இந்திரிய நிக்கிரகம்.

திருக்குறள்.

அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லாம் ஒருங்கு.

ஔவைக் குறள்.

அஞ்சும் அடக்கி அறிவோடு இருந்தபின்
துஞ்சுவ தில்லை உடம்பு.

சேனமேதம் :--சேனம் என்றால் கழுகு. மேதம் என்றால் கொல்லுதல். தொடர் மொழியினால் கழுகைக் கொல்லுதல் என அருத்தமாகும். பகைவர் அற்றுப்போக வேண்டுமென்பவர் இந்த யாகத்தைச் செய்யக் கடவர். பகைவரென்றால் மனத்தின் கண் உண்டாகும் தீயபாவனைகளாம். இத்தீய பாவனைகளே நித்திய சத்துருக்களாவர். வன்மீக மகரிஷி இராமாயணத்தில் சத்துருக்னோ நித்ய சத்ருக்னோ ;வென்று உரைத்ததானது, சத்துருக்கள் புறப்பகைவர் என இருவகுப்பின ரென்றும், அவருள் அகப்பகைவர்கள் நித்திய சத்துருக்களென்றும், அவர்களைக் கொல்ல வேண்டுமென்றும் குறிப்பதற்கேயாம்.

இராசசூயம் —இதன் வெளிப்படையான அருத்தமாவது ஒரு இராசா சிற்றரசர்களின் மீது படை யெடுத்து வென்று தேச முழுமையும் தன் குடைக்கீழ் அடங்கும்படி செய்து " சம்ராட்டு" அதாவது சக்கரவர்த்தி என்ற உயர்ந்த பட்டம் பெறவேண்டுமானால் அதன் அறிகுறியாக இந்த யாகத்தைச் செய்யவேண்டும் என்பதாம். அது

போல், முன் பிரஸ்தாபித்துள்ள நித்திய சத்துருக்களை வென்று, அதன்மேல் மனத் தூய்மை பெற்று, ஓரே பாவனை யுள்ளவனாகிய சுயராச்சியம் பெறவேண்டும். அதாவது மிருகத்தன்மை யற்று, இந்திரிய நிக்கிரகம் பெற்று, அசுத்த மனம் சுத்த மனமான நிலையிலும், சூட்சுமமான அகங்கார-மமகார பாவனைகள் உண்டாக, அவைகளுடன் போராடி வெற்றிபெற்றுத் தன்னைத் தனியனாக வுணர்தல் வேண்டு மென்பதாம்.

தைத்திரிய உபநிஷத்.

ஆப்நோதி ஸ்வாராஜ்யம்
நுப்நோதி மநஸ ஸ்பதிம்
வாக்பதி சட்சுஸ் பதிஹி
ஸ்ரோத்ரபதிர் விச்ஞான பதிஹி
ஏதத் ததோபவதி ஆகாஸஸரீரம் ப்ராஹ்மம்
சத்யாத்ம ப்ராண ராமம் மந ஆநந்தம்
ஸாந்திஸ் ம்ருத மமிர்தம்.

(இ-ள்.) சுயராச்சியம் பெறுகிறான், மனசின் எசமானனாகிறான், வாக்கின் எசமானனாகிறான், கண்ணின் எசமானனாகிறான், காதின் எசமானனாகிறான், விஞ்ஞானத்தின் எசமானனாகிறான்.

ஆகாயமே இலிங்கமாகவும், சத்தியமே ஆன்மாவாகவும், ஆனந்தமே பிராணனாகவும், சாந்தமயமாயும், மரணரகிதமாயுமுள்ள பிரம்மமாகவே ஆகிறான் என்றும் கூறப்பெற்றுள்ளது. இதனால் மனப்பகைவனை அடக்கியாளுவதுதான் சுயராச்சியம் என்றாகிறது.

ஆகையால், நாம் இனிமேலாவது சிரத்தை பாராட்டி நமது நண்பர்களாகிய இயம - நியம முதலானவர்களைக் கண்டு, அவர்களுக்கு உற்சாகம் வரும்படியாகவும், அவர்

கள் கருணை கொண்டு நமக்கு இரவும்-பகலும் துணைசெய்யும்படியாகவும் வேண்டிக்கொண்டு, ஏற்கனவே சுயராச்சியம் அடைந்திருக்கும் மகான்களை அடுத்து,

மருமலர்ச் சோலைசெறி நன்னீழன் மலையாதி
மன்னுமுனி வர்க்கேவலாய்
மந்த்ரமா விகைசொல்லு மியமநிய மாதியா
மார்க்கத்தி னின்றுகொண்டு
கருமருவு காயத்தை நிர்மலம தாகவே
கமலாச னாதிசேர்த்துக்
காலைப் பிடித்தனலை யம்மைகுண் டலியடிக்
கலைமதியி னூடுதாக்கி
உருகிவரு மமிர்தத்தை யுண்டுண் டுறங்காம
லுணர்வான விழியைநாடி
ஒன்றோ டிரண்டெனாச் சமரச சொரூபசுக
முற்றிடவென் மனதின்வண்ணம்
திருவருண் முடிக்கவித் தேகமொடு காண்பனோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே,

என்ற தாயுமான வள்ளல் கருத்தின்படி ஏவல்செய்து நமது பகைவர்களை யடக்கி, அவர்களை நமக்கு பாதுகாப்பாளராக நியமித்து, நமது காயாபுரிக் கோட்டையைக் கைவசப்படுத்தி, தன்னையும்-தனக்காதாரமான தலைவனையும் நன்குணர்ந்து, தவமுனைற்றி ஆன்ம சுயராச்சியம் அடைவோமாக.

தாயுமான வள்ளல்.

காக முறவு கலந்துண்ணக் கண்டீ ரகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமா
யேக வுருவாய்க் கிடக்குதையோ வின்புற் றிடநா மினியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாருஞ் செகத்தீரே.

## குணங்குடி மஸ்தான்.

### இராகம்-பரிசு-தாளம்-ஆதி.

#### பல்லவி.

போவோங் குணங்குடிக் கெல்லோரும்—புறப்படுங்கள்
போவோங் குணங்குடிக் கெல்லோரும்.

#### அநுபல்லவி.

பாவங்கள் சோர்ந்திடுங் காய்ந்திடு நீந்திடும்
மாய்ந்திடு மோய்ந்திடுந் தீய்ந்திடு மிக்கணம் (போ)

#### சரணங்கள்.

அண்டபுவனங்கொண்ட பிட்டை-சாதிக்கவறியா
முண்டமுழுதும்பட்ட கட்டை-மணித்தேரோடு
தண்டிகையானை குதிரை யொட்டை-வைத்தேறிவாழுஞ்
சண்டியுடலோலொட லொட்டை-மின்னார்களின்பங்
கொண்டுமயங்கிக்காம வெட்டை-நஞ்சுண்டுசாமி
ரெண்டுங்கெட்டவனேபேய் மட்டை-அவனுக்கந்த
தொண்டாசைக்கால்நண்டுந்தான் குட்டை-விழிகுருடர்
கண்டளந்தநாழியவர் நமக்கேன்காணந்தத் தெட்டை (போ)

கோத்திரளானகாயபொய்க் கூடு-ஒருவருக்குஞ்
சாற்றுக்காகாநாற்றக்கரு வாடு-சொறிமலமூ
மூத்திரமூமூற்றிவைத்த வோடு-இடுமடையர்
போற்றுவதற்கேற்றசண்டி மாடு-உயிர்விடுக்குங்
கூற்றுவன்கையாயுதத்திற் கிடு-எங்கெந்தத்திக்கிற்
பார்த்தாலும்பீற்றலுள்ள வீடு-சமைத்தெடுத்த
சோற்றூற்குவித்துவைத்த மேடு-இவையறியார்
ஏற்றபடிகெட்டலைவ ரேனமக்கந்தக்கேடு (போ)

செட்டுசெய்யவேண்டிய
சட்டியெடுப்பதுவுந்
திட்டமுடன்வேணுமோ
குட்டிச்சுவர்களிலுண்
பட்டினத்திலெவரு
மட்டியறியானிந்தக்
கட்டிவைத்தாலுங்காட்டும்
துட்டமாமாயைப்பசாசைத்

தில்லை-பரதேசிகள்
தொல்லை-பிச்சைக்கஞ்சிக்குத்
கல்லை-உறங்குதற்குக்
டெல்லை-ஈடுநமக்குப்
மில்லை-அறிவுகெட்ட
சொல்லை-மனக்குரங்கைக்
பல்லை-அதைப்பிடித்த
துரத்தித்துரத்திக்கொல்லப் (போ)

சோமனுதயம்பாடு
நாமமில்லாமலறத்
நேமமுடன்சுழினை
வாமமடைதிறந்து
காமக்குரோதங்களைத்
பூமிவிளையுமரு
நாமேகைக்கொள்ளும்படி
சாமுன்செத்தசற்குருபாதம்

சாயும்-எழுஞ்சூரியன்
தேயும்-பரவெளியில்
யாயும்-மதியமிர்த
பாயும்-தத்வாதியோடு
தீயும்—தீயாதுயோக
ணேயம்—விளைந்தபோகம்
ஞாயம்—கிடைப்பதற்குச்
சார்ந்திருப்பதுவேயுபாயம் (போ)

நொங்கும் நுரையுமாகப்
முங்கும்பாவியுடலைச்
வங்கும்நமநமென்று
தொங்குமினுமினுப்பு
சிங்கங்கட்டில்லைகாணும்
தங்கமயமாய்நின்றி
தங்குஞ்சாயுச்யபதந்
பங்குந்தந்துதவிப்

பொங்கும்—காமக்கடலுள்
சொங்கும்—சொரிசிரங்கும்
திங்கும்—நரம்புந்தோலுந்
மங்கும்—இல்லந்துறந்த
பங்கம்—மேனியுயர்ந்த
லங்கும்—அவர்கட்கன்றே
தங்கும்—நமக்குமதிற்
பராபரமருளிரங்கும் (போ)

## பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஞானத்தம்பட்டம்.

விருத்தம்.

அறந்தழைத் தோங்க வாய்த்தற் கருமையா மனிதராகப்
பிறந்தவ ரிளமை மூப்புப் பிணிகளி னியலும் நீங்கிச்
சிறந்தமெய்ப் பொருளைச் சோதி வடிவமாய்த் தெரிசித் தேனை
மறந்தணர் துய்யவேண்டும் வகைகளும் விளக்கு வாமால்.

(பால் வார்த்திகம்)

பல வருடங்களுக்கு முன் சுஞானந்தன் என்னுமோர் அரசன் செங்கோல் செலுத்தி வந்தான். அக்காலத்தில் நாடெங்கும் கள்ளர்கள் பயம் அதிகரித்திருந்தமையால் சனங்கள் எச்சரிக்கையாயிருக்கும் பொருட்டு, இரவில் நான்கு சாமங்களிலும், நான்கு வருணத்தார் வீதியிலும் பறையறைவிக்குமாறு கட்டளை யிட்டான். அவ்வாக்ஞையைச் சிரமேற்கொண்டு சுமுகன் என்பவன் ஒவ்வொரு இரவிலும் சாமங்கள் தோறும் தவறாது பறையடித்து, "சனங்களே! சாக்கிரதையாக இருங்கள்! நாடெங்கும் கள்ளர் பயம் அதிகரித்து அதே வதந்தியாக யிருக்கிறது; தங்கள்-தங்கள் பொருள்களையும், உயிர்களையும் அதிக் சாக்கிரதையோடு காத்துக் கொள்ளுங்கள் என எச்சரிக்கை செய்து வந்தான்.

ஒருநாள் சுமுகன் ஒரு அவசர காரிய நிமித்தம் வெளியூருக்குப் போக நேரிடவே, அதிகாலையிற் புறப்பட்டுப் போய் அவ்விதமே வந்து விடலாம் என்றெண்ணிச் சென்று மாலையில் தன் ஊருக்குத் திரும்பிவரும்போது

இடையிலுள்ள ஆற்றில் பிரவாகம் வரவே, எவ்விதத்தா லும் நதியைக் கடக்கமுடியாமல், அன்றிரவு பறையடிக்க வேண்டிய இராசாக்ஞையைப் பற்றி சிந்தித்து துக்கக் கட லில் ஆழ்ந்து கொண்டிருந்தான்.

சுமுகன் வாராததை யுணர்ந்த அவன் மனைவி (*) பிறவி ஊமையனென்று எண்ணப் பெற்று, வெகு காலமாக வாய் பேசாமலிருந்த தன் குமாரனை அன்றிரவு பறையடிக்கு மாறு சயிக்கினை செய்து காண்பித்து, அவன் கழுத்தில் பறையை மாட்டி அனுப்பித்தாள். அன்றிரவு மௌனி பின்வருமாறு பறையடிக்கலானான்:—

முதலாவது சாமம் (பறையறைதல்)

திடும்! திடும்!! திடும்!!!



அந்தகாரமான ஈடணாத்திரயங்களையே சொந்தமாகக் கருதி, சிந்தை மகிழ்ந்து வருந்தும் விந்தையான அன்பர்களே! தங் களுக்கோ நான் ஒரு புதிய மனிதன். என் தந்தை வெளி யூருக்குப் போயிருப்ப தால், அவருக்குப் பதிலாக நான் பறை சாற்ற வந்திருக்கிறேன். ஆனால் என் பிதாவடித்த பறையின் கருத்து வேறு; நான் அடிக்கும் கருத்து வேறு. இதுவும் பழைய பாட்டி கதைதான் என் றெண்ணி மோசம் போகாதீர்கள்? நான் சொல்லப்போவ

(*) பிறவிஞானம் உடையவரை - பிறவி ஊமையனென்று மாறாக எண்ணப்பெற்றது. இவ்விதமாகவே ஞானிகளை பேயனென் றும் - பித்தனென்றும் இவ்வுலகப் பேயர்கள் மாறுதலாக எண்ணித் துன்புறுகின்றனர்.

தைக் கவனமாகக் கேட்டு நடந்தால் எல்லாச் செல்வமும் பெறுவீர்கள்! ஆகையால் அஞ்ஞான நித்திரையை நீக்கி மெய்ஞ்ஞான விழிப்புடன் கேளுங்கள்!

ஒதாயியன் இலல்லாஹி பிஇதினிஹி ஒஸிராஜம் முனீரா. (குர்ஆன் 22-3)

அல்லாஹ்வுக்காக அவனுத்தரவி ஞல் பறையறைந்து அமைப்பவன் சோதிபெற்ற விளக்கை நிகர்ப்பான்.

கபிலர் அகவல்.

உலகத்தீரே! உலகத் தீரே!!
நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்து
சாற்றக் கேண்மின்! சாற்றக் கேண்மின்!
மனிதர்க்கு வயது நூறல்ல தில்லை
ஐம்ப திரவில் அகலுந் துயிலினால்
ஒட்டிய இளமையால் ஓரைந்து நீங்கும்
ஆக்கை யிளமையில் ஐம்மூன்று நீங்கும்
எழுபதுபோகநீக் கிருப்பன முப்பதே.

(அவற்றுள்)

இன்புறு நாளும் சிலவே அதா அன்று
துன்புறு நாளும் சிலவே யாதலால்
பெருக்கா றொத்தது செல்வம் பெருக்காறு
இடிகரை யொத்தது இளமை யிடிகரை
வாழ்மர மொத்தது வாழ்நா ளாதலால்
ஒன்றே செய்யவும் வேண்டுமவ் வொன்றும்
நன்றே செய்யவும் வேண்டும் நன்றும்
இன்றே செய்யவும் வேண்டும் அவ்வின்றும்
இன்னே செய்யவும் வேண்டும் அவ்வின்னும்
நாளை நாளை யென்பீ ராகில்
நம்முடை முறைநா ளாவதும் அறியீர்
நமனுடை முறைநா ளாவதும் அறியீர்

*எப்போ தாயினும் கூற்றுவன் வருவான்*
*அப்போ தந்தக் கூற்றுவன் தன்னைப்*
*போற்றவும் போகான் பொருளொடும் போகான்*
*சாற்றவும் போகான் தமரொடும் போகான்*
*நல்லா ரென்னான் நல்குர வறியான்*
*தீயா ரென்னான் செல்வரென் றுன்னான்*
*தரியா னொருகணம் தறுக ணாளன்*
*உயிர்கொடு போவான் உடல்கொடு போகான்.*

குறிப்பு:—மேற்காட்டிய அகவற்பாவில் மனிதர்க்கு வயது நூறல்லதில்லை யெனக் கூறியிருக்கின்றது; சிலர் நூற்றி யிருபது வயது என்றும் கூறுகின்றனர். அங்ஙன மிருக்க, நபிகள் நாயகம் முஹம்மது முஸ்தபா (சல்) அவர்கள் காலத்தில் திமஸ்கு (Damascus) தேசத்துக் கதிபதியா யிருந்த ஹபீபு என்னும் அரசர் நூற்றியறுபது (160) வயதுக்குமேல் இருந்தனர் என்பதை

*"மறுவற வுலகி னில்லா வயதொரு நூற்றின் மேலும்*
*அறுபது மிருந்தோய் நுந்தம் அறிவினு லறியாதில்லை"*

என்று சீறாப்புராணம் விளக்குகின்றது. கிளாஸ்கோ (Glasgow) நகரத்தில் முன்னிருந்த பிஷப் செயிண்ட் மங்கோ (Bishop Saint Mungow) என்பவரின் வயது 185 எனவும், ஷராப்ஷயரில் வசித்த தாம்ஸ்பார் என்பவரின் வயது 153 எனவும், டேஸ்மாண்டு கோவண்டஸ் காதரைன் என்பவளின் வயது 140 எனவும், இவளுக்கு மூன்று முறை பல் விழுந்து முளைத்துளதெனவும், பத்திரிகைகளால் தெரிய வருகிறது. நமது தேயத்தில் சில மகான்கள் 400 - 500 வருடங்கள் வரை உயிரோடிருந்ததாகவும், இருப்பதாகவும் சில ஆதாரங்களால் தெரியவருகிறது. அத்தகைய ஆயுள்

நீட்சியை மட்டும் அடைய முயலாமல், அவ்வாயுள் என்னும் பிரகாசமுள்ள ஞான்றே ஆன்மலாபமான பொருட்களைச் சேகரித்துக் கொள்வதற்கு, மனிதராகப் பிறந்த ஒவ்வொரு மாக்களும் அவசியம் முயலவேண்டுமே யன்றி, ஆடு- மாடு - வீடு வாசல்களே சதமென்று நம்பி காலத்தை வீணிற் போக்கிவிடக் கூடாது.

எண்சீரடியாசிரிய விருத்தம்.

*கட்டோடே கனத்தோடே வாழ்கின்றோ மென்பீர்*
*கண்ணோடே கருத்தோடே கருத்தனைநீர் கருதீர்*
*பட்டோடே பணியோடே திரிகின்றீர் தெருவில்*
*பசியோடே வந்தாரைப் பார்க்கவு நேரீர்*
*கொட்டோடே முழக்கோடே கோலங்காண் கின்றீர்*
*குணத்தோடே குறிப்போடே குறிப்பதைக் குறியீர்*
*எட்டோடே யிரண்டுசேர்த் தெண்ணவு மறியீ*
*ரெத்துணைகொள் கின்றீர் பித்துல கீரே.*

*ஆறுமலவியாமலடைந்தகோ பத்தீ*
*யடர்வுற வுலகிடை யஞ்சாது திரிவீர்*
*மாறாமல் மனஞ்சென்ற வழிசென்று திகைப்பீர்*
*வழிதுறை காண்கிலீர் பழிபடும் படிக்கே*
*நாறாத மலர்போலும் வாழ்கின்றீர் மூப்பு*
*நரைதிரை மரணத்துக் கென்செயக் கடவீர்*
*ஏறாமல் வீணிலே யிறக்குகின் றீரே*
*யெத்துணைகொள் கின்றீர் பித்துல கீரே.*

வெண்பா.

*தந்தைதாய் சுற்றந் தாரம் சகோதரம்பொய்*
*விந்து நிலையறியா வீணரே—விந்து*
*அறங்காத லாகி அரனடியைப் போற்றி*
*உறங்கி யுறங்கா திரு.*

சுலோகம்.

மாதா நாஸ்தி பிதா நாஸ்தி நாஸ்தி பந்து ஸகோதர
அர்த்தம் நாஸ்தி க்ருஹம் நாஸ்தி தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத:

ஆகையால் நமது மகா சனங்களே! எமனென்னுங் கள்வன், உயிர் என்னும் பொருளை கவர்ந்துபோக முயற்சித்து, ஒவ்வொரு நாளையும் எதிர்பார்த்த வண்ணமாகவே யிருக்கின்றான். நீங்கள் அவனிடத்தில் அகப்பட்டுக்கொள்ளாமலிருப்பதற்கு அஞ்ஞான நித்திரையைப் போக்கி, தேக வன்மையுள்ள ஞான்றே நித்தியானந்த வாழ்வுக்கு வித்தாகிய மெய்ஞ்ஞான விழிப்பை அடைந்து சாக்கிரதையாக இருங்கள்!

இராமலிங்க வள்ளல்.

ஆயாமை யாலேநீ ராதிய ஜோதி
யாகிய சோதியை யறிந்துகொள் கில்லீர்
மாயாமை பிறவாமை வழியொன்று முணரீர்
மறவாமை நினையாமை வகைசிறி தறியீர்
காயாமை பழுக்கின்ற கருத்தையுங் கருதீர்
கண்மூடித் திரிகின்றீர் கனிவோடு மிரப்போர்க்
கீயாமை யொன்றையே யின்றுணை யென்பீ
ரெத்துணைகொள் கின்றீர் பித்துல கீரே.

சாமாந்த ராகாத தருஞ்சிறி துணரீர்
தத்துவ ஞானத்தை யிற்றெனத் தெரியீர்
மாமாந்த நோயுற்ற குழவியிற் குழைந்தீர்
வாழ்க்கையி லற்ப மகிழ்ச்சியும் பெற்றீர்
காமாந்த காரத்திற் கண்மூடித் திரிவீர்
கற்பன கற்கிலீர் கருத்தனைக் கருதா
தேமாந்து தூங்குகின் றீர்விழிக் கின்றீ
ரெத்துணைகொள் கின்றீர் பித்துல கீரே.

## இரண்டாவது சாமம் (பறையறைதல்)

திடும்! திடும்!! திடும்!!!



சனங்களே! உலகத்தில் அரிதினு மரிதாகிய மானிடப் பிறவியை அடைந்த நீங்கள், இப் பிறப்பினு லடையத் தக்க ஆன்ம லாபத்தை, காலமுள்ள போதே யறிந்து அடையுங்கள்!

உலகமானது ஆசையாலும், வினையினுலும், பல சிந்தனைகளாலும் கட்டப்பட்டிருக்கிறது. ஆயுள் நாசத்தை அறிவதில்லை. அதனுல் நீங்கள் சாக்கிரதையாக இருங்கள்!

அந்த ஆன்ம லாபமானது எதுவெனில் எல்லா அண்டங்களையும், எல்லாப் புவனங்களையும், எல்லாப் பொருள்களையும், எல்லாச் சீவர்களையும், எல்லா வொழுக்கங்களையும், எல்லாப் பயன்களையும் தமது பூரண வியற்கை விளக்கமாகிய, அருட் சத்தியால் தோன்றி - விளங்க விளக்கஞ் செய்விக்கின்ற, இயற்கையுண்மை வடிவினராகிய கடவுளின் பூரண வியற்கை யின்பத்தைப் பெற்று, எக்காலத்தும் - எவ்விடத்தும் - எவ்விதத்தும் - எவ்வளவுந் தடைபடாமல் வாழ்கின்ற ஒப்பற்ற பெரிய வாழ்வே! இந்த மானிட யாக்கையைப் பெற்ற நீங்கள் அடையத்தக்க ஆன்மலாபம்.

அந்தப் பெரிய வாழ்வைக் கடவுளின் இயற்கை விளக்கமாகிய அருளைக்கொண்டே அடையக்கூடும். அவ்வருளை சீவகாருணிய வொழுக்கத்தினுலும், எந்தத் தவத்தைச்செய்தாலும் தனக்கன்னிய மில்லாத தன்னிலேயே பாடுபடுவ

தாலும் பெறக்கூடுமேயல்லாது, வேறெந்தப் புறக்கருமங்களாலும் ஒரு சிறிதும் பெறமுடியாது.

வெண்பா.

ஆலம் சரீரம் அநித்தியமென் றெண்ணுங்கள்
காலன் தினம்வருவான் காணுங்கள்—காலன்
கறங்காத கண்டன் கண்மணியைப் போற்றி
உறங்கி யுறங்கா திரு.

சுலோகம்.

ஆசயாபத்ததே லோகே கர்மணு பஹுசிந்தயா
ஆயுக்ஷீணம் நஜாநாதி தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத:

நமது மகா சனங்களே! சரீரமென்னும் வீட்டில் காம - குரோத - லோப - மோக - மத - மாற்சரியம் என்னும் ஆறு கள்வர்கள் நாம் ஏமாறும் சமயம் பார்த்து "ஞானம்" என்னும் இரத்தினத்தைக் கொள்ளைகொண்டு போக ஒவ்வொரு நிமிடத்தையும் எதிர்பார்த்த வண்ணமாக இருக்கின்றன ஆகையால், நீங்கள் அஞ்ஞான நித்திரையை நீக்கி மெய்ஞ்ஞான விழிப்படைந்து சாக்கிரதையாக இருங்கள்! இப்பொய்யுலகில் நமதென்று கருதப்படும் தாய் - தந்தை - பந்து - சகோதரர் - பொருள் - வீடு முதலியவை (நீர்மேற்குமிழிபோல்) அழிவுடையது. பிறப்பு - துக்கம், மூப்பு - துக்கம், மனைவி - துக்கம், உலக வாழ்க்கை - துக்கம். ஆகையால் நீங்கள் சாக்கிரதையாக இருங்கள்!.

இராமலிங்க வள்ளல்.

ஆற்றுவெள்ளம் வருவதன்முன் அணைபோட அறியீர்
அகங்காரப் பேய்பிடித்தீர் ஆடுதற்கே யறிவீர்
கூற்றுவருங் காலதனுக் கெதுபுரிவீ ரையோ!
கூற்றுதைத்த சேவடியைப் போற்றவிரும் பீரே

வேற்றுரைத்து வீணைபெருக்கி மெலிகின்ற வுலகீர்!
வீணுலகக் கொடுவழக்கை விட்டுவிட்டு வம்மின்
சாற்றுவக்க வெனதுதனித் தந்தைவரு கின்ற
தருணமிது சத்தியஞ்சிற் சத்தியைச்சார் வதற்கே.

பொய்விளக்கப் புகுகின்றீர் போதுகழிக் கின்றீர்
புலைகொலைகள் புரிகின்றீர் கலகலவென் கின்றீர்
கைவிளக்குப் பிடித்தொருபாழ்ங் கிணற்றில்விழு கின்ற
களியரெனக் களிக்கின்றீர் கருத்திருந்துங் கருதீர்
ஐவிளக்கு மூப்புமரணாதிகளை நினைத்தால்
அடிவயிற்றை முறுக்காதோ கொடியமுயற் றுலகீர்
மெய்விளக்க வெனதுதந்தை வருகின்ற தருணம்
மேவியதீண் டடைவீரேல் ஆவிபெறு வீரே.

---

## மூன்றுவது சாமம் (பறையறைதல்)

## திடும்! திடும்!! திடும்!!!

### வெண்பா.

ஆசையெல்லாம் பாசம் அளவிறந்த கோடிகன்மம்
ஆசையினூற் பாச மகலாது—ஆசை
அறங்காத லாகி அரனடியைப் போற்றி
உறங்கி யுறங்கா திரு.

### சுலோகம்.

ஜன்மதுக்கம் ஜராதுக்கம் ஜாயாதுக்கம் புந: புந:
ஸம்ஸார ஸாகரம் துக்கம் தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத:

மனிதராகப் பிறந்தவர்கட்கு, பாலியம் - எவ்வனம் - கௌமாரம் - வார்த்திகம் எனப் பருவம் நான்காம். அவற்றுள், 7 வயது வரை பாலியம் எனவும், 8 முதல் 16 வயது வரை எவ்வனம் எனவும், 17 முதல் 32 வயது வரை கௌமாரம் எனவும், 33 முதல் ஆயுள் வரை வார்த்திகம் எனவும் பெயர்.



வயதளவு 100-க்கு 10-வயதளவும் இளமை, 20-வய தளவும் வாலிபம், 25, 30, 40, இதுவரையில் யௌவனம், 45, 50 இவைகளில் கௌமார நிலையடைந்து ஒளிமழுங்க லுற்று பிருதிவி-அப்புவை நெருக்கும், அறுபதில் அப்பு-தேயுவை நெருக்கும். எழுபதில் தேயு-வாயுவை நெருக் குதலினால் காது மாயாவுணர்வு பண்டுபோலே செலுத்தும். எண்பது வயதில் வாயு ஆகாசத்தை நெருக்கும். தொண் ணூறு வயதில் ஆகாசம் ஆன்மாவை நெருக்கும். அதனால் மலசலம் இடைவிடாமல் ஒத்து நிற்கும். நூறு வயதில் ஆன்மா வந்த வழியை நோக்கும் என்பதுமுண்டு.

பாலப் பருவமானது, மாலைக் காலத்தில் தோன்றும் செவ்வானத்தைப் போன்றும், இந்திர தனுவைப் போன் றும் தோன்றி மறையும். பாலப்பருவத்தை யௌவனப் பருவம் விழுங்கிவிடும். அழகிய யௌவன பருவத்தை கௌமாரப் பருவம் விழுங்கிவிடும். போக போக்கியங்களை அநுபவிக்கும் கௌமாரப் பருவத்தைத் துன்பத்தை யுண் டாக்கும் மூப்பு விழுங்கிவிடும். மயக்கமும் - வியாதியும் மலிந் திருக்கும் வார்த்திகம் வந்துவிட்டால், இரண்டாம் விவாகத் தில் வந்த மனைவியால் முன்னுள்ள மனைவியானவள், நாய கன் மனதைவிட்டு நீங்கிவிடுவதுபோல் முதிர்ந்து சிறந்த பேறிவும் பிரிந்துபோம்.

மகாராசா துறவு.

விருத்த பருவ மிகத்துன்பும் விளங்கு மிளமை யிரண் டவையின்
வருத்து பிணியின் மிகத்துன்பம் வளமை யிளமை மூன்றதும்
கருத்த தறியாக் குழந்தையென்றுங் குமார மென்றும் காளையென்று
மருத்த மறியா ததிற்றுன்ப மடையும் பாலப் பருவத்தில்.

## ஆன்மலாபம் அடைவதற்கு கல்பு என்னும் மனித இருதயத்தின் சிரவத்தையும், சடரத்தையும் இரண்டாகப் பிளந்த வலது பாகம்.

1. மேலிருந்து இருதயத்திற்கு வரும் முக்கிய (இரத்தநாடி) ஊர்த்த பிரகன் நாளம். 2. கீழிருந்து இருதயத்திற்கு வரும் (இரத்த நாடி) அதோ பிரகன் நாளம். 3. இருதய வலது (சிரவம்) மேல் அறை. 4. சுவாசப்பைக்கு இருதயத்திலிருந்து செல்லும் இரத்தநாடியின் அர்த்த சந்திர கபாடங்கள். 5; A; B. இருதய வலதுபாகத்தின் உட்பக்கத்திலுள்ள மெல்லிய (சவ்வு) தசையினுலாகிய திரியங்கக் கபாடம். C. இருதய உட்பக்கத்தின் மிருதுவான நார்த்தசை. 6 இரத்தாசயத்திலிருந்து சுவாசப்பைக்குச் செல்லும்




இரத்தநாடி. 7; 8. சரீரத்தில் இரத்தத்தைப் பரப்பும் பெரிய இரத்த நாடி. 9. ஷை நாடியின் கிளைகள். 10. இருதய இடது (சிரவம்) மேல் அறை. 11. இருதய இடது (சடர் வெளிப்பாகம்) கீழ் அறை.

(537-ம் பக்கம் பார்க்க.)

## ஆன்மலாபம் அடைவதற்கு கல்பு என்னும் மனித இருதயத்தின் சிரவத்தையும், சடரத்தையும் இரண்டாகப் பிளந்த இடது பாகம்.

---

1. இருதயத்தின் இடது (சிரவம்) மேல் அறை. 2. இருயத்தின் இடதுபாகத்தை (சிரவம் - சடரம்) மேல் அறை - கீழ் அறையாகப் பிரிக்கும் தசை. 3. A3; B3. இடது (சடரம்) கீழ் அறையின் பக்கங்கள். 4. அந்த (சடரம்) கீழ் அறையின் உட் பக்கத்திற் பொருந்திய மிருது வான நார்த் தசையின் ஒரு பகுதி ஆரம்பிக்கும் இடம். 5. A5, B5 மிருது வான நார்த் தசைகள். 6. உட்பக்கத்தில் உள்ள மெல்லிய சவ்வு என்னும் தசையினுலாகிய இரட்டைக் கபாடத்தின் பகுதி. 7. சரீரத்தின் எல்லாப்பாகத்திற்கும் நல்ல இரத்தத்தைப் பரவச் செய்கிற முக்கிய பெரிய நாடி வளையுமிடம் 7. A. ஷை பெரியஇரத்த நாடி அதனுடையஅர்த்த சந்திரக் கபாடங் களுக்கு மேல் பாகத்திலுள்ளஉட் தோற்றம். 8. சுவாசப் பைக்குச் செல்லும் இரத்த நாடி ஆரம்பமும், அர்த்த சந்திரக் கபாடங்களும். 8 A. இருதயத்திற்குச் செல்லும் இரத்தநாடி, சரீரமெங்கும் இரத்தத்தை பரப்பும் பெரிய நாடியோடி இணைந்திருத்தல். 9. அப்படி இணையச்செய்யும் உறுப்பு. 10. சரீரத்தில் இரத்தத்தைப் பரப்பும் பெரிய இரத்தநாடியின் கிளைகள்.




(538-ம் பார்க்கம் பக்க.)

(1) பாலப்பருவமானது, பலவகை மாந்தம் - பட்சி தோஷம் - கணை - பிரளி முதலான வியாதிகளால் வருந்தவும், ஓடுகின்ற சர்ப்பம், தேள் முதலிய விட செந்துக்களையும் பிடிக்கவும், மண் முதலானவைகளைப் புசிக்கவும், ஆகாயத்திலுள்ள சந்திரனை வா! வா! வென்று கூப்பிடவும், நெருப்பு - விளக்கு முதலானவைகளைத் தீண்டவும், உபாத்தியாயர் - மாதா - பிதா - முன் பிறந்தார் - உறவினர் முதலானவர்களுக்குப் பயந்து நடுங்கவும், ஆகிய இவைகளை நன்று - தீது என்றுணராது அறியாமையால் செய்து வருந்தும்படிச் செய்யும்.

பிரகஸ் தோத்திர ரத்னகரம்,

பால்யே துக்காதி ரேகாது மலலுளி தவபு:
ஸதன்ய பானேபிபாஸா:
னோசக்யம் சேந்திரியேப்ய:
பவமலஜனிதா ஜந்தவோமாம்துதந்தி
நாநா ரோகாதி துக்காது துரித பாவச:
சங்கரம் நஸ்மராமி ... ...

(2) எவ்வனப் பருவமானது, பாலப் பருவத்திலுள்ள சிற்சில அனர்த்தங்களைக் கடந்து, மீட்டும் உபாத்தியாயர்- மாதா - பிதா முதலானவர்களின் தண்டனைக் குட்பட்டு வருந்தியும், விளையாடல் புரியும் காலத்துச் சிறுவர்களால் அடி - உதை பட்டும், சில ஆடல்களால் கை-கால் முறிந்தும் துன்புறச்செய்யும். இப்பருவத்தின் இறுதியில், மன்மதன் என்னும் பேய் பிடிக்க, மனமானது கலக்க முற்று நலியும். காமம் என்னும் தாகம் அதிகரிக்க, யுவதிப்பருவம் அடைந்த மாதர்களது சரீரமென்கிற பாலை நிலத்தில் ஓங்கி வளரும் அழகு என்னும் பேய்த்தோ

இய கானலை இனிய தண்ணீரென்று கருதிப் பருக விரும்பி யுழலும்.

மகாராசாதுறவு.

தந்தை தாயா ராசிரியர் தாங்கள் முனிதல் தனக்கஞ்சிச்
சிந்தை கலங்குங் கவுமாரஞ் சிறந்த காளைப் பருவத்தின்
முந்து பசிநோய் காமநோய் முழுகித் தணிக்கப் பொருள்தேட
இந்தப் புவனத் திரவபக விடைய ருத தொழிற்றுன்பம்.

பிரகஸ் தோத்திர ரத்னகரம்.

ப்ராப்டோஹம் யௌவனஸ்த:
விஷயா விஷதரை: பஞ்சபி:
மர்மஸந்தவ் தஷ்டோ நஷ்டோ
விவேக: சுத தா யுவதி:
ஸ்வாது ஸௌக்யே நிஷண்ண
சைவே சிந்தா விஹீந:
மமஹிர்தய மஹா மாந கர்வாதி ரூட:

(3) கௌமாரப் பருவமானது, எவ்வனப் பருவத்தின் இறுதியில் தோன்றி வளர்ந்த ஆசையால், மன்மதன் னென்கின்ற பேயோடு நோயும் பிடித்து மனங் கலங்கி,

காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டியென் கண்ணெதிரே
மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட
தூதென் றெண்ணமல் சுகமென்று நாடுமித் துர்ப்புத்திக்கு
ஏதென் றெடுத்துரைப்பே னிறைவா கச்சி யேகம்பனே.

என்று அருட்பெருஞ் சீவன் மூத்தராகிய நமது பட்டினத் தடிகள் கிருபாநோக்கம் பாலித்து, பிற்காலத்தவர்களாகிய நமக்காகத் திருவாய் மலர்ந்துள்ள வாக்கியாமிர்தத்தை கொஞ்சநேரமேனும் சிந்தித்துணர்ந்து, தஞ்சாவூராளும்

தலைமன்னார் தேயத்தின் - திருப்பரங்கிரிச் சிதம்பரத்தில் அறந்தாங்கி மேலூர் தொண்டிப் பாதையில் நடந்து, வெளிப்பாளையத்திற்கடுத்த குணங்குடியை அடைந்துய்ய முயலாமல்,

கண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்திற்
கொண்ட கருவழிக்குங் கொள்கைபோல்—ஒண்டொடீ
போதந் தனங்கல்வி பொன்றவருங் காலத்து
மாதர்மேல் வைப்பர் மனம்.

என்பதுபோலும், உலர்ந்த எலும்பைக் கடிக்கிற நாய், தன் எயிற்றிலிருந்து வருகிற இரத்தத்தை எலும்பிலிருந்து சுரக்கிற இரத்தமென்று கருதிப் பருகுகிறது போலும், மாதர்களது சையோகத்தையே மெய்யோகமெனக் கோறி விரகசன்னதமேறி யுழலும். அன்றியும் கௌமாரப் பருவமானது,

நாணி யென்பதை நாரியென் றுரைத்திடு நசையால்
வேணு வானது விளைந்துபோய்ப் புகுந்தது வென்றால்
காண லாவதோ ருருவமெய் நாரியைக் கண்டாற்
பூணு வார்மயல் தாளைய ரென்பதும் புதிதோ.

என்று கூறி, எண்ணெய் தடவி வாரிச்சீவி சிக்கெடுத்து ஒழுங்கு செய்யாத காலத்தில், மயிர்ச்சிக்குநாறி, ஈரும் - பேனும் வதியப்பெற்று அருவருக்கத்தக்க தலைமயிரை, மேகத்தையும் - கமுகம்பாளையையும் - கொன்றைக் காயையும் - கூந்தற்பனையையும் - உகாந்தவிருளையும் - கரியமணலையும் - கொடிப் பாசியையும் - கருமை பொருந்திய வண்டுக் கூட்டங்களையும் பழித்து, சாந்து - சவ்வாது - சம்பங்கி எண்ணெய் முதலிய வாசந்தடவி, மல்லிகை - முல்லை - இருவாட்சி - மருக்கொழுந்து - ரோசா முதலிய பலமலர்

கலேச் சூடி, சந்திரபிறை - சூரியபிறை அணிந்து விளங்கும் கூந்தல் எனக் காதல்கொள்ளும்.

சீறப்புராணம்,

மங்குலிற் பெருகி விடத்தினுங் கருகி
வரியற லினுமினு மினுத்துத்
தங்கிய விதழித் திரளினுந் திரண்டு
சைவலத் தொடரினுந் தழைத்துக்
கொங்குறக் குழன்று நெறிந்துவார்ந் தொழுகிக்
குவலயத் திளைஞர்கண் வழுக்க
எங்கணன் னயினர் முன்னைநாள் அழைத்த
இருளினும் இருண்டமைக் குழலாள்.

பூனே மயிர்கள் முளைத்து, அட்ட கோணலாயுள்ள மடந்தையர்கள் நெற்றியை, மூன்றாம் பிறையாகிய இளஞ் சந்திரனையும் - வளையுளியின் வளைவையும் - செவ்வ கத்தி மலரையும் பழித்து, கஸ்தூரித் திலதமிட்டுப் பிரகாசிக்கும் அழகிய நெற்றி யெனவும்; புழுவெட்டிய மயிர் கலந்து வளைவின்றிய புருவத்தை, இந்திர வில்லையும் - சேவலின் அலகையும் பழித்த புருவம் எனவும்; சீயொழுகி - குறும்பி மலிந்து நாறுகின்ற காதை, வள்ளைக் கொடியையும் - கத்தரிக்கோலையும் பழித்த செவிகள் எனவும்; நீரும் - சளியும் ஒழுகி மலம் உண்டாகின்ற மூக்கை, எள்ளின் பூவையும் - குமிழம் பூவையும் - சண்பக மலரையும் - பாரி சாத மலரையும் பழித்த நாசி எனவும்; பீளையும் - கா மாலை - காசம் - கண்வலி - கண் புகைச்சல் - கண் படலம் - மாலைக்கண் - ஒட்டுக் கண் - மலங்கு கண் - கண் கட்டி - குந்தம் - கண் குருடு - கண் குத்து - வெள்ளெ ழுத்து முதலான வியாதிகளும் வருத்தாநின்ற நேத்திரத்

தை வேலையும் - சேற்கெண்டையையும் - வாளாயுதத்தை யும் - நீலோற் பலத்தையும் - தாமரையையும் - எமனையும்- சமுத்திரத்தையும் - அம்பையும் - பாளையையும் - மாவடு வையும் - விடத்தையும் பழித்த மைதீட்டப்பெற்ற கண்கள் எனவும் கௌமாரப் பருவம் காமர்கொள்ளும்.

திருக்குறள்.

(1) கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண்.

(2) மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

(3) காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

சீறப்புராணம்.

கீற்றிளம் பிறையுங் கணிச்சியின் வளைவுங்
கிளர்தசெவ் வகத்திமென் மலரும்
தோற்றிடத் தோற்றி விளங்குநன் னுதலாள்
சுடருமுன் வாரணத் தலகு
மாற்றருந் தனுசுங் கருங்கொடி யெதிர்வு
மாற்றிமைக் கட்கடற் கரையின்
மேற்றிகழ் கரிய பவளமென் கொழுந்தாய்
விளங்கிய செழும்புரு வத்தாள்.

வள்ளையை வாட்டி யூசலை யசைத்து
மண்ணெழி லாடவ ருயிரைக்
கொள்ளைகொண் டுடலங் குழைப்பதற் றன்றே
குழையெனும் பெயரிடுங் குழையாள்

என்னையுஞ் சிறந்த குமிழையும் வாசத்
தினியசண் பகமலர் தனையும்
வின்னருங் காணத் திடையலர் படுத்தி
விலங்கிட விலங்கிய குமிழாள்.

மடற்குழை கிழித்துத் தடக்குழல் குழைத்து
வரியளி யினைச்சிறை படுத்திக்
கடற்குளந் தேறு தலைதாச் செய்து
கணையயில் கடைபடத் கறுவி
விடத்தினை யாவப் படத்திடை படுத்தி
மீனினம் பயப்படத் தாழ்த்தித்
திடக்கதிர் வடிவா னெனக்கொலை பழகிச்
செவந்தரி படர்ந்தமை விழியாள்.

முகப்பருக்கள் தோன்றி அவைகளிலிருந்து இரத்தமும் - சீழும் வெளியேறி முகத்தை விகாரப்படுத்தாநின்ற மாதர்கள் கன்னத்தை, சாணைக் கல்லையும் - கண்ணாடியையும் - நீர் நிலையையும் பழித்த கபோலமெனவும்; துர்க்கந்தமுள்ள எச்சில் - பித்தம் - கபம் முதலானவைகள் வெளியேறும் வழியிலுள்ள இதழை, கொவ்வைக் கனியையும் - இலவம் பூவையும் - பவளத்தையும் - முருக்க மலரையும் பழித்த அதரம் (உதடு) எனவும், அவர்களது துர்க்கந்தமுள்ள எச்சிலை,

திருக்குறள்.

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்

எனவும், தாம்பூலாதிகளை அருந்தாவிடின், துர்க்கந்தம் நாறும் ஊத்தைகள் தங்கியிராநின்ற பற்களை, முத்தையும் முல்லையரும்பையும் பழித்த தந்தபந்திகள் எனவும் கௌமாரப் பருவம் நினைக்கும்.

நைடதம்.

வேனில்வேள் வனப்பு நோக்குதற் கமைத்த
விளங்குகண் ணடியோ ஒளிரும்
பானலங் கண்வான் றீட்டிய கிடந்த
சாணையின் படிவமோ கபோலம்.

சீறப்புராணம்.

வெண்ணிலாத் தரள நகைநிரை பொதிந்து
விரிந்தசெம் பவளமோ இலவோ
மண்ணவாய்ச் செழுஞ்சே தாம்பலின் மலரோ
மடிவுறு தொண்டையங் கனியோ
எண்ணிநோக் கினருக் குவமைமி னடங்கா
தெழில்குடி யிருந்தமு தொழுகிப்
பண்ணெலாஞ் சுவற்றி யாடவ ரிருகட்
பார்வையிற் செவந்தமெல் லிதழாள்.

முல்லையு முருந்து நிரைத்தன போன்று
முத்தெனத் திகழ்ந்தற நெருங்கி
மெல்லெனச் செவந்த மணியினிற் பிரித்து
விளக்கியொப் பித்துவைத் தனபோல்
வில்லிடக் கவின்கொண் டிருபுறத் தொழுங்கும்
விரிந்தபூங் காவிகள் படர்ந்து
சொல்லரு மனத்தா டவர்மய் விருளைத்
துணித்திட நகைக்குமென் னகையாள்.

இக்குவாயலைப்போல் குளறிக் குளறிப் பேசாநின்ற பெண்கள் வசனங்களை, கருப்பஞ்சாற்றையும்-கற்கண்டையும்-வாழை-மா-பலா என்னும் முக்கனிகளையும், குயிற்குரலையும் - கிளிமொழியையும் - பாலையும் - பாகையும் தேனையும் - தேவாமிர்தத்தையும் பழித்த இனிய வார்த்

தைகள் எனவும்; மேற்கூறிவந்த அசுத்தங்களும் விகாரங்களும் நிறைந்த அவயவங்களைப் பொருந்திய முகத்தை

திருக்குறள்.

(1) மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

(2) அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

(3) மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி

என்பதற்கிணங்க சோடச கலைகள் நிறைந்த பூரணச் சந்திரனைப் பழித்த திருவதனம் எனவும் வேட்கையுண்டாக்கும்.

சீறப்புராணம்.

பாலென வெளிறுக் கனியென வழியாப்
பசுமடற் றேனெனச் சிதறு
வலவார் குழலார் செழுங்கரத் தேந்து
மிளங்கிளி மொழியெனக் குழறு
வேலைவா ழமுதம் பிறந்தென வுலகம்
விளங்கிடப் பொன்மழை பொழியச்
சாலவு மிறந்த தருவினந் தழைப்பத்
தரவரு மினியமென் மொழியான்.

வெய்யவ னலர்த்த விகசிதம் பொருந்தி
விரிநறைக் கமலமென் மலரிற்
செய்யவ ளிருப்ப தெனவெழில் சிறந்து
செழுங்களைக் கதிர்கள்கான் றொழுக
வையக மதிப்பத் திமஸ்நிறை யுரைத்த
வழிமுறை முகம்மதந் தழைத்த
துய்யவெண் மதிய நிகரென வுலகிற்
சொலும்படி சிறந்தமா முகத்தாள்.

அழுக்குகள் தங்கி வியர்வைநாற்றம் வீசுகின்ற தோகையர் கழுத்தை, வலம்புரிச் சங்கையும்-கமுக மரத்தையும் பழித்த கண்டம் எனவும்; கற்றாழை நாற்றமும் வியர்வை நாற்றமும் அழுக்கும் பொருந்திய அக்குளின் அண்மையிலிருக்கும் தோள்களை, மூங்கிலையும் - கருப்பங் கழியையும் - பஞ்சணையையும் பழித்த தோட்கள் எனவும், ஆடவர்களை இருகக் கட்டிப்பிடித்து ஆலிங்கனம் புரியும் வன்மையும், இதுவரையிற் சொல்லிவந்த அசுத்தம் பொ ருந்திய அவயவாதிகட்கு ஆடையாபரணங்களைத் தரிக்கச் செய்தலுமாகிய முன்கை - அங்கைகளை, வளையலணிந்த முன்னங்கைகள், தாமரைமலர் - காந்தள் புட்பம் இவைகளைப் பழித்த காங்கள் எனவும்; சினைக்கொ[illegible] ன்ற விரல்கள் எனவும்; அழுக்கடைந்த நகங்களை [illegible] பிரகாசம் எனவும் கௌமாரப்பருவம் கரு[illegible]



சீறப்புராணம்.

குலிகமார்ந் தனபோ லரக்கினுஞ் செவந்த
கொழுமடற் காந்தளங் காந்தள்
மலிசினைக் கொளிற்றின் வனப்பினும் வனப்பாய்
மணியணி சுமந்தமெல் விரலாள்
பொலிவுறச் செவந்தீந் திலையெனக் கிளர்ந்து
புனக்கிளி நாசியின் வடிவாய்
நலிவிலா திளைத்த வயிரவொண் கதிராய்
நலங்கிடந் திலங்கிய வுகிரான்.

சிலந்திபோலும், சுழலைபோலும் தடித்துத் திரண்டு சீழ் நிறைந்த இரத்தக்கட்டியாயும், சீழும் - இரத்தமும் வற்றியபின்னர் துணிப்பையைப்போல் தொங்கி ஊசலாடும் மங்கையர்களது நெடிய பாற்பையாகிய தோற்பையை,

பைங்குரும்பையோ! பம்பரமோ! பர்வதமோ! பூங்கலமோ! பூரணகுடமோ! தாமரை முகையோ! புற்புதமோ! சொர்ணச் செப்போ! சொக்கட்டான் காயோ! தாளமோ! சக்கரவாளமோ! யானைக்கொம்போ! இவைகளில் யாதோ! வென்று சந்தேகிக்கும்படி, கவிந்து குவிந்து, சிறுத்துப் பருத்து, உருண்டு திரண்டு, நிமிர்ந்து, தளர்ந்து, அண்ணாந்து இறுமாந்து, புடைத்துப் பூரித்துப் புளகாங்கிதங்கொண்டு, கமகமவென்று பரிமளம் பொருந்தியகளப கஸ்தூரிகள் திமிர்ந்து, அன்னரேகை - அரசரேகை - மயில்ரேகை - குயில்ரேகை - கிளிரேகை முதலிய சித்திரங்கள் எழுதி, முத்துக்கச்சிட்டிறுக்கி, பொற்சரிகைத்தாள் கொண்டு மூடி, வாகுமாலை - வச்சிரமாலை - பச்சைமாலை - பவளமாலை - முத்துமாலை - மோகனமாலை முதலான நவரத்தின மாலைகள் அணிந்து,

திருக்குறள்.

கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில்

என்பதற் கிணங்க, இரத்தினங்களைக் கோர்த்த மேகலையைத்தரித்து தேமல் படர்ந்து, பட்டுக்கச்சைக் கிழித்து வெளிக்கிளம்பிப் பிரகாசிக்கின்ற கொங்கைகள் என்று கௌமாரப்பருவம் எண்ணும்.

சீறப்புராணம்.

தடித்தடி பரந்திட் டெழுந்துபூ ரித்துத்
தளதளத் தொன்றோடொன் றமையா
தடர்த்திமை யாத கறுத்தகண் ணதனல்
அருந்தவத் தவருயிர் குடித்து

வடத்தினு ளடங்கா திணைத்தகச் சிறுத்து
மதகரிக் கோட்டினுங் கதித்துப்
படத்தினும் பிறங்குஞ் சுணங்கணி படர்ந்த
பருமிதத் துணைக்கன தனத்தாள்.

பரிமளச் சிமிழோ குலிகசெப் பினமோ
பசுமதுக் கலசமோ அமிர்தம்
பெருகிய குடமோ காமநீ ருறைந்த
பேரிளங் குரும்பையோ கதிரின்
முருகுகொப் பளிக்கும் வனசமென் முகையோ
முழுமணி பதித்தமென் முடியோ
கன்ரயிலா வழகா ரொழுகிய வரையோ
கவலுதற் கரிதெனுந் தனத்தாள்.

நைடதம்.

இழையிடை புகாது மார்பிடங் கொண்ட
ஏரின வனமுலை வள்ளைக்
குழைபொருங் கண்ணி யெளிற்கடற் பிறந்த
குமிழியோ அதனிடை நீந்த
விழைவுறு மதனும் பருவமு மமைத்து
விளங்குபொற் குடங்கொலோ அதனில்
தழைசிறை நேமிப் புட்கொலோ கமல
முகைகொலோ என்கொல்சாற் றுவதே.

கந்தபுராணச் சுருக்கம்.

அரும்பு கண்கறுத் தாரமு தகம்பொதிந் தமிழ்தின்
குரும்பை யொத்தனி திதலைமீப் பொடித்தறக் குழைந்த
மருங்கி னுக்கிரங் காதிரு மருங்கொளி பழுத்து
முருங்கு தன்மைபெற் றெழுந்தன முகிழ்த்தவெம் முலையாள்

வருணகுலாதித்தன்மடல்.

சீதவன சத்தரும்பைச் செப்பலாம் அவ்வரும்பு
ஆதவனைக் கண்டால் அலருமே—சூதாடு

வட்டென் றுவமை மதிக்கலாம் வட்டதனை
வெட்டென்று சொல்ல விதியுண்டே—நெட்டுடலச்

சக்கரவா கத்தைச் சரியுரைக்க லாமதுவும்
மிக்க சிறகுடைத்தாய் விட்டதே—ஒக்குமெனப்

பாரப் பருவநல பச்சினநீ ரென்னலாம்
ஆரப் புளக மரும்பாதே—வீரமதன்

வண்ணமுடி யென்று மதிக்கலா மம்மகுடந்
தண்ணெனவும் வெச்செனவுந் தாராதே—பண்ணரிய

சித்ரமணிச் செப்பென்று செப்பலா மச்செப்பு
புத்தமிர்த போகம் பொசியாதே—சுத்தநதிச்

சுந்தரஞ்சே ரற்புதத்தைச் சொன்னாற் பனிநீருஞ்
சந்தனமுங் குங்குமமுந் தாங்காதே—விந்தைசெறி

அந்தநறுங் கோங்கி னரும்பெனலா மவ்வரும்புக்
கிந்த முகக்கருமை யெய்தாதே—சந்தமிகும்

பூரணகும் பங்களெனப் போற்றலா மக்கும்பந்
தாரணியு மெண்சுணங்கு தாராதே—சீரணியும்

மாகனக வெற்பெனலா மற்றந்த வெற்பானோர்
கோகனகக் கையாற் குனித்ததே—வாகுசெறி

பந்திணைக ளென்று பகரலா மப்பந்து
இந்துநுத லார்கைக் கிடைந்தெழுமே—கந்தமிகும்

பூங்கொத் திணையாப் புகலலாம் பூங்கொத்துந்
தேங்குதென்றல் வீசச் சிதறுமே—ஈங்கெவரும்

மெச்சு கலைமதியின் வெண்ணிலா வீசுமுத்தின்
கச்சு முலைக்குவமை காணேனே.

குடரும் - கொழுப்பும் - மலமும் - சலமும் - அசுத்தங்களும் நிறைந்த மலக்குழியாகிய பின்னோர்கள் வயிற்றை ஆலிலை யெனவும்; அருவருக்து வாந்தி பண்ணத்தக்க துர்க்கந்தமுடைய நாபியை நீர்ச்சுழி - மகிழம்பூ எனவும்; நாபியினது துர்க்கந்தம் வீசும் வயிற்றிலுள்ள சிறுசங்கிலி போன்ற உரோமத்தொடரை மன்மதனது மலையாகிய முலைக்கும், அவனது வீடாகிய நிதம்பத்துக்கும் நடுவாகச் சேர்ந்த நூலேணியோ! தனம் என்னும் தாமரை முகையில் வந்து விழுகின்ற வண்டுகளின் மாலையோ! இடையானது ஒடியாதிருக்குமாறு மன்மதனால் சேர்த்த இருப்புச் சலாகையோ! மேகலாபரணத்தினது நீல மணியின் ஒரு சுடரோ! கொங்கைகள் என்னும் இரு கொம்புகளையுடைய யானையைக் கட்டிய சங்கிலியோ! கடிதடம் என்னும் சர்ப்பத்தினது வாலணியோ! எனவும் கௌமாரப்பருவமானது விரும்பும்.

சீறப்புராணம்.

தனமெனு மிருகோட் டத்தியோ ராலிற்
றளைபடப் பிணித்தசங் கிலியோ
மனநிலை கவருங் கடிதட அரவின்
வாலணி கிடந்ததோ அலது
சினவுவிற் காமன் மலைக்குந்தன் மனைக்கும்
சேர்த்திய மயநடு நூலோ
இனனுட னழகு நிறைகுடி யிருந்த
இவள்வயி றணிமயி ரொழுங்கே.

நைடதம்.

மாய்புரி முலைமென் கமலநாண் முகையில்
வண்டுவீழ் மாலையோ பசும்பொற்

சேலமீ தணிந்த மேகலை மணியின்
ஒருசுடர் செவ்வனின் றதுவோ
நூலினு நுடங்கு மருங்கிரு தனங்கன்
நுண்ணிதிற் சலாகைசேர்த் தியதோ
ஆலிளந் தளிரின் அழகுவீற் றிருந்த
அவ்வயி றணிமயி ரொழுங்கே.

மேற்கூறிய குற்றம்பொருந்திய கொங்கைகளை, சுமந்து தேய்ந்து சுமை பொறுக்கமாட்டாமல் ஒடிந்து விழுவதைப் போன்று மெலிந்து கேவலமாய், நிற்கும் இடையை, சிற்றுடுக்கையையும்- மின்னற்கொடியையும்-பூங்கொம்பையும்- மன்மதன் உடலையும் - நூல்இழையையும் - மூன்றாம்பிறைக் கொழுந்தையும் - சிங்கத்தையும் வென்ற இடையெனவும் கௌமாரப்பருவமானது இச்சைப்படும்.

சீறப்புராணம்.

பெருவரை யிடத்தி னடியுறைந் திலங்கும்
பேரெழிற் சுமந்தபொற் கொடியோ
விரிகதிர் மணிமே கலைநடுக் கோத்து
விளங்கிட நுடங்குமெல் லிழையோ
குருமுகம் மதுநன் மொழிவழி யடங்காக்
குபிர்க்குலந் தேய்ந்தெனத் தேய்ந்து
தெரிவரி தெனலா யுவமையிற் பொருவாச்
சேயிழை மடந்தைசிற் றிடையே.

பட்டினத்தடிகள்.

நாறுங் குருதிச் சலதாரை-தோற்புரை நாடொறுஞ்சீ
யூறு மலக்குழி காமத் துவார மொளித்திடும்புண்
தேறுந் தசைப்பிளப்பு... ...எனவும்

எருவாய்க் கிருவிரன்மேல் ஏறுண் டிருக்கும்
கருவாய் ... ... ...

எனவும் இகழ்ந்துரைத்துள்ள நீர்த்தாரையை சேர்ணத் தட்டு - அரவப்படம் - மான்குளம்பு இவைகளை நிகர்த்த அல்குல் என்று கௌமாரப் பருவமானது விழையும்.

நைடதம்.

வெங்கதிர்க் கடவுள் கொடிஞ்சியந் தேர்க்கு
வியப்புற வாழியொன் றமைத்த
பங்கமில் தொழிலின் பயிற்சியா லனங்கன்
பைங்கிளிக் கூந்தன்மான் தேர்க்குச்
செங்கரம் வருந்த மலரயன் வகுத்த
திகிரியோ செய்யபொற் றட்டோ
அங்கர வல்குல் அதனள வுரைக்கின்
ஆடவர் அவாவின தளவே.

கந்தபுராணச் சுருக்கம்.

அருப்பி னந்தனத் தாருயி ரளித்தவ ராசை
விருப்ப மெவ்வள வவ்வள வரகிய விரிவா
யுருத்து ருத்தமூ னூற்றிருந் தன்னவ ருளம்போற்
பெருத்த றக்கனிந் தகவிய வல்குல்பெற் றுடையாள்.

போகமிகுதியால் மேகச்சூடு அதிகரித்து அரையாப்பு - தொடைவாழை முதலிய சீழ்ப்புண்கள் வெடித்தும், இரத்தாதி மூத்திரங்கள் வடிந்தும் அருவருக்கத்தக்க தொடையை இளவாழைத்தண்டையும் - யானைத் துதிக்கையையும் வென்ற குறங்கு எனவும்; நரம்பும் தோலும் - வெள்ளெலும்பும் மிகுந்து பிறர் தொடுவதற்கு அருவருப்புப்படும் கணைக்கால்களை அம்பறாத்தூணி - சினை

வாால்மீன் - எக்காளம் எனவும், கல்லிலும் - முள்ளிலும் ஏனைய அசுத்தங்களிலும் நடந்து திரியும் கடினமான பாதங்களை

திருக்குறள்.

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசிப்பிற்கு
நல்ல படாஅ பறை.

அனிச்சமு மன்னத்தின் தூவியு மாதர்
அடிக்கு நெரிஞ்சிப் பழம்

என்பதற்கிணங்க மிருதுவான அனிச்சப் புட்பம், அன்னத் தூவி எனவும் கௌமாரப்பருவமானது அருத்தியுண் டாக்கும்.

நைடதம்.

பூங்கழை குழைக்கும் வேனில்வேள் பகழி
பொதிந்தபொன் ஞவம்வென் கொடுப்ப
ஆங்கவன் வெற்றி குறித்திட விரிஞ்சன்
அதைத்தகா கனம்வெரீஇ யாற்றத்
தேங்கமழ் வாவி நீரிடைக் குளித்துச்
சினைவரால் மறைந்திட வ்ரையில்
தூங்குதேன் பெய்த பச்சிளங் கழையைத்
தோழமை கொண்டன் கணைக்கால்.

முருகவிழ் செய்ய கமலமுண் ணெகிழ்ந்து
முகமலர்ந் துறுகணீர் சிந்த
ஒருபசுந் தாளின் வனத்தினின் றரிதின்
உஞற்றிய தவத்தினு லன்றே
விரிமல ரசோகின் தளிர்நலங் கவற்றி
மென்சிறை யனமென மிழற்றும்
பரிபுர மணிந்து பஞ்சியூட் டியபொற்
பதத்தினைச் சிறிதுபோன் றனவே.

மோகக் கடலில்மூழ்கி, நீச்சுநிலையற்று, தத்தளிப்பதற்கேற்ப, மன்மதனது திருவிழா மகோற்சவம் கொண்டாடி, காமலீலாவிநோத தீர்த்தத்தில் மூழ்கி மூழ்கி கரைகாணாது மயக்கமுற்று, புணர்ச்சி மிகுதியால் இரத்தம் வற்றி, மேகச்சூடு அதிகரித்து, பலவித மேகம் - சூலை - வெட்டை குஷ்டம் - பவுந்திரம் - பிரமியம் - அரையாப்பு முதலான கொடிய ரோகங்களுக்கு ஆளாக்கி, தோலும் - துருத்தியும் - நரையும் - திரையும் வருவதற்கு ஆரம்பித்து, இடைப்பிணமாக்கிவிடும்.

சிவஞானவள்ளல்.

மூத்திரத்தி ஞல்நனையப் பட்டமுடை யோனிக்காய்
காத்திரத்தை விட்டார் கணக்கில்லை - சாத்திரத்தால்
வானைக்கால் தீநீரை மண்ணைப் பிரித்துசிவன்
ஆனக்கால் ஆசை யறும்.

மாதரைப் பழித்தல்.

பட்டினத்தடிகள்—கச்சித் திருஅகவல்.

மாதரை மகிழ்ந்து காதல் கொண்டாடும்
மானுடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்
விளிவெளி மாக்க டெளிவுறக் கேண்மின் !
முள்ளுங் கல்லு முயன்று நடக்கும்
உள்ளங் காலைப் பஞ்செனவுரைத்தும்
வெள்ளெலும் பாலே மேவிய கணைக்கால்
துள்ளும் வராலெனச் சொல்லித் துதித்தும்
தசையு மெலும்புந் தக்கபுன் குறங்கை
இசையுங் கதலித் தண்டென வியம்பியும்
நெடுமுடல் தாங்கி நின்றிடு மிடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும்

மலமும் சலமும் வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை ஆலிலை யென்றும்

இலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீப்பாய்ந் தேறி

உதிராற் கிற வலர்ந்துள் ளுருகி
கருவார்க்கிடமாம் நான்று வற்றும்

முலையைப் பார்த்து முளரிமொட் டென்று
குலையுங் காமக் குருடர்க் குரைப்பேன்

நீட்டவு முடக்கவு நெடும்பொருள் வாங்கவும்
ஊட்டவும் பிசையவும் உதவியிங் கியற்றும்
அங்கையைப்பார்த்துக் காந்தளென் றுரைத்தும்

வேர்வையு மழுக்கு மேவிய கழுத்தைப்
பாரினி லினிய கமுகெனப் பகர்ந்தும்

வெப்ப மூத்தையு மேவிய வாயைத்
துப்பு முருக்கின் தூய்மல ரென்றும்

அன்னமுங் கறியு மசைவிட் டிறக்கும்
முன்னிய பல்லை முத்தென மொழிந்தும்

நீரும் சளியு நின்றுநின் றொழுகும்
கூரிய மூக்கைக் குமிழெனக் கூறியும்

தண்ணீர் பீளை தவிரா தொழுகும்
கண்ணைப் பார்த்துக் கழுநீ ரென்றும்

உள்ளுங் குறும்பி யொழுகுங் காதை
வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியும்

கையு மெண்ணெயும் கலவா தொழியில்
வெய்ய வதரும் பேனும் விளையத்

தக்க தலையோட் டின்மூளைத் தெழுந்த
சிக்கின் மயிரைத் திரண்முகி லென்றும்
சொற்பல பேசித் துதித்து நீங்கள்
நச்சிச் செல்லு நரக வாயில்

தோலு மிறைச்சியுந் துதைந்துசீப் பாயும்
காமப் பாழி கருவிளை கழனி
தூமைக் கடவழி தொலைபெற்று வாயில்

எண்சா ணுடம்பு மிழியும் பெருவழி
மண்பாற் காமங் கழிக்கு மற்றவிடம்

நச்சிக் காமுக ஞய்நா னென்றும்
இச்சித்திருக்கு மிடைகழி வாயில்

திங்கட் சடையோன் றிருவரு ளில்லார்
தங்கித் திரியுஞ் சவலைப் பெருவழி

புண்ணிது வென்று புடைவையை மூடி
உண்ணீர் பாயு மோசைச் செழும்புண்

மால்கொண் டறியா மாந்தர் புகும்வழி
நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி

தருக்கிய காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி
பெண்ணு மாணும் பிறக்கும் பெருவழி

மலஞ்சொரிந் திழியும் வாயிற் கருகே
சலஞ்சொரிந் திழியும் தண்ணீர் வாயில்

இத்தை நீங்கள் இனிதென வேண்டா
பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி

மெச்சிச் சிவபத வீடருள் பவனை
முத்தி நாதனை மூவா முதல்வனை

அண்ட ரண்டமு மீனைத்துள புவனமும்
கண்ட வண்ணலைக் கச்சியிற் கடவுளை
ஏக நாதனை யிணையடி யிறைஞ்சுமின்
போக மாதரைப் போற்றுத லொழிந்தே.

கௌமாரம் என்கின்ற விக்கினத்தை விடுத்து, முத்தியிற்சேர வலியுள்ளவர்கள் எவர்களோ! அவர்களே புமான்கள்; அவர்களே சான்றோர்கள். நரம்பும் எலும்பும்-மாமிசமும் பொருந்திய தோற்பிரதிமையை நிகர்த்த மாதர்களது சரீரமாகிய கூட்டைப்பரிசித்து மருவுவதால் கிடைத்த சுகம் யாது? அவர்களது சரீரத்திலுள்ள அசுத்தங்களையும், அவர்களது நடையையும் சற்று ஆராய்ந்து பார்ப்போமாயின், அவர்கள் கையால் உணவு முதலானவைகள் வாங்கிப் புசிப்பதற்கே அருவருப்பாகத் தோற்றும். வஞ்சக நெஞ்சமும், கரியவிழிகளால் கொலைத்தொழிலும் பொருந்திய மடமாதர் என்னும் வேடர்கள் சிரசாகிய பூமியில், கூந்தலாகிய கண்ணிகளைப் பதித்துவைத்து, கொங்கை முதலாகிய அவயவங்கள் என்னும் இரையைக் காண்பித்து, ஆடவர் என்னும் பறவைகளைப் பிடித்துப் புசிப்பார்கள்.

புண்ணிய கருமங்களுக்கு ஒரு பைசாவேனும் செலவு செய்ய மனமில்லாத ஆடவர்களோ! தங்களைப்பிடித்துக் காமவிகாரக் கருங்கடலுள் அழுத்தி, வெளியேறாதபடி துக்கம் விளைவித்து, மரிக்கச்செய்யும் தன்மையுள்ள மாதருக்கென்றால் ஆயிரம் - பதினாயிரம் செலவழித்து, மேள - தாள முதலிய கோலாகலத்துடன், மாயாபந்தம் என்னும் சென்மத்தீர்ப்பாகிய விலங்கை, அதிக விருப்பத்தோடு தரித்துக்கொள்ளுகின்றனர். இப்படிச் செய்து கொள்ளும் விவாகபந்தமான்றி, "வேளாங்கண்ணிக்குப்

போகிற சனியனே ! என் வீட்டுவரையில் வந்துவிட்டுப் போ" என்று அழைப்பது போன்றதேயன்றி, வேறன்று.

வேலையசுவாமிகள்.

சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்
பாய்கொண்டா ரும்பணியும் பட்டீச் சுரத்தானே
நோய்கொண்டா லுங்கொளலாம் நூறுவய தாமளவும்
பேய்கொண்டா லுங்கொளலாம் பெண்கொள்ள லாகாதே.

சிவப்பிரகாச சுவாமிகள்.

நிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த பெரியோர்கள் நிமலன் றாளைக்
கிட்டையிலே தொடுத்துமுத்தி பெறுமளவும் பெரியசுகம் கிடைக்குங் காம
வெட்டையிலே மதிமயங்கிச் சிறுவருக்கு மணம்பேசி விரும்பித் தாலி
கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே கிடத்துமட்டும் கவலை தானே

என்பதைச் சிந்தித்து மாதவர் விலக்கவேண்டு மென்றிருக்க, எலியும், தவளையும் ஒன்றைவிட்டொன்று பிரியாமல் இருக்கும்பொருட்டு, கால்லில் தளையிட்டுக்கொண்டு ஒரு தடாகத்தில் சஞ்சரிக்கும்போது, தவளை சலத்திற்குள் செல்ல, எலி வயிறு பொருமி மிதக்க, அதை ஒரு கருடன் கண்டு வைகுந்த பதவியிற் சேர்க்க எடுத்துக்கொண்டு போம்போது, தளையுற்றிருந்த தவளையும் உயிருடன் வைகுந்தபதவியில் சேர்ந்தது என்னும் கதைபோல், ஆடவரும், யுவதிப்பருவ மாதரும், தாலிகட்டுதல் என்னும் தளையைப் பூட்டிக்கொண்டு, கடிதடத் தடாகத்தில் அழுந்தி, மெலித்து, வருந்துங்கால், எமன் என்னுங் கருடன் அடித்துக்

கொண்டுபோய், மயானம் என்னும் வைகுந்த பதவியில் சேர்ப்பதற்கு முதற்காரணமாயுள்ள மாதர்களை, மனைவியாகக் கொணர்ந்து, சதாகாலமும் பக்கத்திலேயே வைத்துக்கொள்வதால், நோக்குந்தோறும் காமவெறி மிகுந்து அறிவை இழக்க நேரிடுகிறது.

திருவருட்பா.

புண்ணைக் கட்டிக்கொண் டேயதன் மேலொரு
புடவை கட்டிப் புதுமைகள் காட்டிடும்
பெண்ணைக் கட்டிக்கொள் வாரிவர் கொள்ளிவாய்ப்
பேயைக் கட்டிக்கொண் டாலும் பிழைப்பர்காண்
மண்ணைக் கட்டிக்கொண் டேயழு கின்றவிம்
மடையப் பிள்ளைகள் வாழ்வினை நோக்குங்கால்
கண்ணைக் கட்டிக்கொண் டூர்வழி போங்கிழக்
கழுதை வாழ்விற் கடையென லாகுமே.

மனமே முன்னர் வழிகாட்டப் பின்னே சென்று மங்கையர்தம்
தனமே யென்னு மலையேறிப் பார்த்தே னிருண்ட சலதியொன்று
முனமே தோன்ற மதிமயங்கி விழுந்தே னெழுவான் முயலுகின்றேன்
இனமே யென்னை நீயன்றி யெடுப்பா ரில்லை யென்னரசே.

ஷை கலிவெண்பா.

காரிருளிற் செல்லக் கலங்குகின்றாய் மாதர்குழற்
பேரிருளிற் செல்வதனைப் பேர்த்திலையே—பாரிடையோர்
எண்வா ளெனிலஞ்சி யேகின்றா யேந்திழையார்
கண்வா ளறுப்பக் கனிந்தனையே—மண்வாழும்
ஓரானை யைக்கண்டா லோடுகின்றாய் மாதர்முலை
யீரானை யைக்கண் டிசைந்தனையே—சீரான
வெற்பென்றா லேற விரைந்தறியாய் மாதர்முலை
வெற்பென்றா லேற விரைந்தனையே—பொற்பொன்றுஞ்

சிங்கமென்றால் வாடித் தியங்குகின்றாய் மாதரிடைச்
சிங்கமெனிற் காணத் திரும்பினையே—யிங்குசிறு

பாம்பென்று லோடிப் பதுங்குகின்றாய் மாதால்குற்
பாம்பென்றாற் சற்றும் பயந்திலையே—யாம்பண்மைக்

கீழ்க்கடலி லாடென்றாற் கேட்கிலை நீ மாதால்குற்
பாழ்க்கடலிற் கேளாது பாய்ந்தனையே—கீழ்க்கதுவுங்

கல்லென்றாற் பின்னிடுவாய் காரிகையார் காற்சிலம்பு
கல்லென்றான் மேலெழும்பக் கற்றனையே.

மனைவி யில்லாதவனுக்கு புணர்ச்சியின்பம் ஒருக்கால் தோன்றிடினும் நீடித்திராமல், சிற்சில பாக்கினால் மாறிப் போம். பெரும்பாலும் மனைவியை யுடையவன் எவனோ! அடிக்கடி யுவதிப்பெண்களைத் தரிசிப்பவன் எவனோ! சிற்றின்பநூற்களையும், படங்களையும் பார்ப்பவன் எவனோ! அவனுக்கே கலவியில் ஆசை உண்டாகின்றது. பரிபக்குவம் வருவதற்கு முன்னர், அறியாமையால் ஒருவனுக்கு மனைவி வாய்க்கப்பட்டிருப்பினும், அவளைக் காணுந்தோறும் ஆசையெழும்போது அவளுடைய சரீரத்தை நோக்கி, இது தோல் - இது மாமிசம் - இது நரம்பு - இது எலும்பு- இது இரத்தக்கட்டி - இது துர்க்கந்தமுள்ள ஓர் துவாரம் என்று பிரித்தறிய முடியுமானால், போகத்துக்கிடமான ஆசையானது நசிக்கும். அவ்வாசை நசித்தபோது, விடயானந்தமாகிய உலகபந்தம் நீங்கும். அது நீங்கியபோது ஞானோதயமாகும். அதனால் சீவப்பிரம்மைக்கிய சுகாதீத பதம் வந்து பொருந்தும்.

தணங்குடி வள்ளல்.

கொட்டிய கருந்தேன் நிகர்த்தவிழி மின்னார்
குவித்தவிரு பொற்கொங்கையும்

கோசமொடு மும்மத மிறைக்கின்ற கர்விதக்
குஞ்சரக் கொம்புதானோ ?
கொஞ்சுகிளி மொழியார்கள் நாவுநல் லரவினது
கொடியநஞ் சுப்பையதோ ?
கூரிருட் கூந்தலென் சொல்லுகேன் கோடையிடி
குடிகொண்ட கருமேகமோ ?
கோதையின மின்னார்கள் யோனிப் பெருங்கேணி
குறையாத யானைமடுவோ ?
கூறுமுகி லேழும் படர்ந்துவரு டிக்கினும்
குறையாக் கெடுபள்ளமோ ?
கொத்துக் கடங்காத மதகரி தனக்குமது
கொப்பமோ படுபள்ளமோ ?
குருவைத் தொழாமனுக் குப்பைகள் ஒதுங்குமோர்
குப்பைக் கிடங்குதானோ ?
கொலைசெயெம னிருக் கின்றபடு களமோ ?
கொடுஞ்சிங்க மிடிபொதும்போ ?
குழுகுமென அதிரசத் தேனூறு கனியெனக்
கொண்டுநெஞ் சினைவாட்டுதே
கோளடப் பொன்னிலத் தாசைதரு கின்றதே
கோதையர்கள் காதலாலே
கூளம் தரிப்பதே யல்லா திருந்துநான்
குளிர்காய நேரமிலையே
கூர்குணம் சத்துமிற் கின்றபர வெளியெலாம்
குடிகொண் டிருந்தகுருவே
கொடியநெடு மாயையைக் கூடா திருக்கின்ற
குறியருள்வ தென்றுபுகலாய்
கோடானு கோடிமறை யாலும்றி யாக்குணங்
குடிகொண்ட கருணைவடிவே!
கூலாயி லாகஇல் லல்லாகு என்பதற்
குரியமகு மூதுநபியே!

(ஷை வேறு.)

எமனைப் பழித்தமட வாரல்கு லென்றபாழ்
இடிகிணறு வீழ்ந்தழுவனோ ?
இருகொங்கை யென்றதேள் கொட்டிமண் டைக்கேறி
எரியுதே யென்றழுவனோ ?
நிமையா விழிக்கணை தொடுத்துத் துளைக்கவென்
னெஞ்சந் துடித்தழுவனோ ?
நெகிழுங் குழன்மயிர்க் கண்ணியிற் சிக்கியதை
நீக்கமுடி யாதழுவனோ ?

தந்தை - தாய் - தமர் - தாரம் - மகவாதி பந்துமித்திரர்களுடன் ஒன்றுசேர்ந்து வாழ்ந்தாலும், தாமரையிலைத் தண்ணீர்போல் ஒட்டியும், ஒட்டாமலிருக்கும் மனப்பாக்கியம் ஒருவனுக்குக் கிடைத்திருக்குமானால், அவனே யோகசாலி. அங்ஙன மில்லாதவன் மனைவி மக்களுடனிருந்தாலும் அவர்கள் தன்னை இம்சிக்காதபடி காத்துக்கொள்ள உபாயந் தேடிக்கொள்ளல் வேண்டும். அதற்கு முடியாதவன் அவர்களைக் கைவிட்டு விலகிவிடவேண்டும். இப்படிச் செய்து கொள்ள முடியாமல் சேற்றில் சிக்கிய நரிபோல்சிக்கி விழிப்பவர்களதுகதி விசனத்துக்கிடமானதேயாம்.

பட்டினத்தடிகள்.

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியந் தேடி
நலமொன்று மறியாத நாரியரைக் கூடி
பூப்பிளக்க வருமேழைப் புற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்
காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு மாட்டீர்
கவட்டுத்தோல் மாத்துளையில் கால்நுழைத்துக்கொண்டீர்
ஆப்பதனை அசைத்துவிட்ட பேய்க்குரங்கு போல
அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட்டீரே.

எவ்வனப்பருவம் முடிந்து கௌமாரப்பருவம் வந்தவுடனே "கற்றனர் ஞானமின்றேல் காமத்தைக் கடக்கலாமோ" என்றபடி மெய்ஞ்ஞான நூற்களின் கற்றல் கேட்டலாலும், சற்சாதுசங்கப் பழக்கத்தினாலும் விடய இச்சைகள் நெருங்காதபடி தூரத்தியடித்துவிட்டு, அவ்விடயமென்னும் பயிர்களை வளர்க்க விரும்பிய ஆசையென்னும் தண்ணீரை, ஆன்மலாபமாகிய ஞானப் பயிர்க்குப் பாய்ச்சி வளரச்செய்து, முத்தி யென்னும் பலனை யடைந்து, ஞான சமுசாரியென்றபேர் வாங்குதல் வேண்டும். அங்ஙனமின்றி இந்த கௌமாரப்பருவத்தில் போக போக்கியங்களை அனுபவித்துவிட்டு, வானப்பிரத்தம் - சன்னியாசம் என்னும் ஆச்சிரமங்களின் விதிப்படி (50—75) வயதுக்குமேல் அதாவது வார்த்திக பருவத்தில் பார்த்துக் கொள்ளலாம் என்று அலட்சியமாயிருப்பின், சத்தியற்ற வார்த்திகபருவத்தில் நிட்டை கூடித்தவம் செய்வதற்கோ சரீரம் கட்டையைப்போல் வளையாதிருக்க முடியாமல் தளர்ந்து, ஒரு காரியத்தையும் செய்து முடிக்க முடியாமல் போய்விடும். தாகம் வந்தபின் கிணறு வெட்டவும்; பசிவந்தபின் நெல்விதைக்கவும் முயல்வது போல், ஆவி பிரியும்போது அல்லா(ஹ்) அல்லா(ஹ்) என்றும்; சாகும் நாளையில் சங்கரா!, சங்கரா!! என்றும்; கூற்றுவன் வரும்போது கோவிந்தா! கோவிந்தா!! என்றும் புலம்புவதாற் பிரயோசன மில்லை.

இது காரணம்பற்றியே ஔவைப்பிராட்டியார் 'பருவத்தே பயிர் செய்' என்றனர்.

மூதுரை.

நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்  
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்  
எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே  
வழுத்தாத தெம்பிரான் மன்று.

அருணகிரியந்தாதி.

காயம் நெகிழாமுன் கண்கள் இருளாமுன்
வாயிலுள்ள பற்கள் விழுவாமுன்—காயம்பார்த்
தோடிநமன் வாராமுன் உள்ளமே சோணகிரி
நாடிநம் வென்றே நட.

குறுந்திரட்டு.

காயநீர்க் குமிழி யதிலுறு மின்பங்
கானலிற் புனலிது தனக்கிங்
காயவித் துயர மளவிலை யிதைநீ
யாய்வுறா மையிலழிந் தற்றாய்
நீயினிக் கவலை நினைவெலா மொழித்து
நெஞ்சமே வந்தெனக் குடன்பட்
டாயநற் சொருபர்க் கன்பதே யிசைந்தா
லரியதே தார்நமக் கெதிரே.

திருக்குறள்.

வருமுன்னற் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

(1) வார்த்திகப்பருவமானது எமன் என்னும் அரசனை நரை - திரையாகிய வெண்சாமரைகளை வீசி எதிர்கொண்டழைக்கும். வார்த்திக பருவத்தில் உண்டாகும் தேகதளர்ச்சியால் வருந்துங்காலத்தில், நடனத்தை முயற்சித்து, மனக் களிப்பில்லாமல் பாதம் செய்கின்ற நாடகக்கணிகையைப்போல், சரீரம் தளர்ந்த பின் தவஞ்செய்ய முயற்சி செய்தால் இச்சையானது வருத்தும்.

நரை - திரை பொருந்திய முதிர் வயது என்னும் பைசாசத்தோடு கூடிவாழ்வதினால் என்ன பிரயோசனம். மூப்

யைக் கெடுப்பதற்கு எவர்க்கும் அரிதாகும். அஞ்ஞான மயமாய் விளங்காநின்ற சிறிய சுக வஸ்துக்கள் எல்லாம் எலிப் பல்லால் நறுக்கப்பட்ட நூலைப்போல், இயமன் என் பவனால் நசித்துப்போகும். மகா மச்சங்கள் உறைகின்ற சமுத்திரத்தின் சலத்தைப் பானம் செய்யாநின்ற வடவா முகாக்கினியைப்போல், காலன் என்பவனால் உலகத்தின் கண் புசிக்கப்படாத வஸ்துக்கள் இல்லை. மகத்துக்களாய் இருப்பினும் ஊழுக்குப் பின்னர் ஒரு க்ஷணநேரமும் சீவித் திருக்க முடியாது.

திருமந்திரம்.

கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்
குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்
விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே.

பாலன் இளையன் விருத்த னெனநின்ற
காலங் கழிவன கண்டு மறிகிலார்
ஞாலங் கடந்தண்டம் ஊடறுத் தானடி
மேலுங் கிடந்து விரும்புவ னவனே.

மகாராஜாதுறவு.

பால னென பருவம்போம் பன்னு குமாரப் பருவம்போம்
சீால மான தருணம்போம் கோலை யூன்றிக் குனிந்தெழுந்து
காலன் மாய்க்க அனைவர்களும் கல்லென் றழுது பேர்மாற்றி
ஏலப் பிணமென் றொருபெயரிட் டிடுகாட் டிடுத லொருதலையே

"காலம் அருமையோ? பணம் அருமையோ!" என்ற கேள்வி உண்டாயின் எதை அருமையென்று சொல் லுவோம்? காலத்தையன்றோ? ஏன்? "இலட்சம் ரூபாய்

பணம் தருகிறேன். இப்போதே இறந்துபோ" என்றால் இறக்கச் சம்மதிப்போமா? திருடன் நடுராத்திரியில் நம்மை மடக்கிக்கொண்டு, "உள்ள பொருளைக் கொடுக்கிறாயா?" அல்லது "உயிரை இழக்கிறாயா?" எனின் எதைக் கொடுக்க இசைவோம்? பொருளையன்றோ? உலகத்தில் வறுமையால் வாடினாலும், நோயால் மெலிந்தாலும், மகத்தான சங்கடத்தை அனுபவித்தாலும், இன்னும் சிலகாலம் சீவனோடிருப்போம் என்ற ஆசை தோன்றிக்கொண்டே இருக்கும். இப்படி எல்லாவற்றிலும் அருமையான காலத்தை வியர்த்த மாக்குவது பிசகன்றோ?

மாணாக்கர், வியாபாரி, உத்தியோகத்தர், வியவசாயி முதலியவர்கள், காலத்தை வீணாகக் கழிக்காமல் இலாபத்திலேயே திருஷ்டி யுள்ளவர்களாய் இருக்கின்றனர். அதுபோல் யோகஞான சாதகர்கள், தத்தம் கருமங்களில் அதிக திருஷ்டி யுடையவர்களாய் இருத்தல் வேண்டும். ஒரு ரூபாயைச் செலவழிப்பதைவிட ஒருமணி நேரத்தைச் செலவழிப்பது அதிக நஷ்டமாம். ரூபாயைத் திரும்பவும் சம்பாதித்து விடலாம், சென்ற நேரத்தைச் சம்பாதிப்பது எவராலும் முடியாத காரியம்.

"இனிது இனிது ஏகாந்தமினிது" என் ஔவைப் பெருமாட்டி கூறியதையும், "மவுனம் கலக நாசம்" என்பதையும் மறந்து விட்டு, பிறரோடு அளவுக்குமேல் பேசிய பின்னர் ஏன் இப்படிப் பேசினோம் எனவருந்தாமல், முன் யோசனையுடன் துர்ச்சங்கத்தைத் தணந்து, சற்சங்கத்தைக் கலந்து சதாப்பியாசம் செய்யவேண்டும்.

பட்டினத்தடிகள்.

காலன் வருமுன்னே கண்பஞ் சடையுமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே—மேல்விழுந்து

உற்றா ரழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு.

எத்தனைநாட் கூடி யெடுத்த சரீரமித்
அத்தனையும் மண்தின்ப தல்லவோ—வித்தகனார்
காலைப் பிடித்துமெள்ளக் கங்குல்பக லற்றிடத்தே
மேலைக் குடியிருப்போ மே.

விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுட னேயுடலைச்
சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார்—பட்டதுபட்
டென்னோ முஞ்சிவனை யேத்துங்கள் போற்றுங்கள்
சொன்னே னதுவே சுகம்.

பொற் கொல்லர்களாகிய கம்மியர், பொன்னில் ஒரு சிறிதும் வீண்போகாதபடி எவ்வளவு சாக்கிரதையாய் இருக்கிறார்களோ, அதேவிதமாக நாமும் காலத்தை அதிக அருமையாக வீண் போகாதபடி பாராட்ட வேண்டும். சொற்ப காலத்தையும் வீணிலே செலுத்தலாகாது. அதி காலையில் நித்திரைவிட்டு எழுக. எந்தக்காரியத்தையும் அத தற்கு இன்னின்ன காலம் தக்கதென்று வரையறுத்துக் கொண்டு, அவ்வக்காரியத்தை அவ்வக்காலத்தில் செய்திடுக. நீராடத்தக்க வேளையில் நீராடுக. உண்ணத்தக்க வேளையில் உண்க. வாசித்தற்குரியகாலத்தில் வாசிக்க. பெட்டியை வைக்கத் தகுந்த இடத்தில் சட்டியையும் சட்டியை வைத் திருந்த விடத்தில் பெட்டியையும் வைக்காமல், எவ்வெப் பொருளை எவ்வெவ்விடத்தில் வைத்தற்பாலதோ, அவ் வவ்விடத்தில் அவ்வப்பொருளை வைக்க, இங்ஙனம் காலக் கிரமத்தை அனுசரித்தும், இடக்கிரமத்தை அனுசரித்தும் ஒழுங்காக வேலை செய்கிறவர்கள், ஏனையோரைக்காட்டி லும் அதிகமாய் வேலை செய்யக் கூடியவர்களாவார்கள்.

அவர்கள் செயற்பாலதாகிய காரியமும் ஒழுங்காக பட்டுக் கத்தரித்தாற்போலச் செவ்வனே முடிவு பெறும்.

இங்ஙனம் உலக காரியங்களை, வீண்காலம் போக்காமல் புரிந்துவருவதே சாலுமென அமைந்திராமல், ஆன்மார்த்தமான காரியங்களையும் வழுவாமல், காலக்கிரமத்தை அனுசரித்துச் செய்துவருதல் வேண்டும். அநேகர் ஆன்மார்த்தத்துக்குரிய காரியங்களில் சற்றும் ஊக்கமின்றி வாளா இருந்து விடுகிறார்கள்.

இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
ஒருவுமின் தீயவை யொல்லும் வகையால்
மருவுமின் மாண்டா ரறம்

என்னும் நீதியை இவர்கள் மேற்கொள்ளாவிட்டால், அந்தோ! மரணகாலம் குறுகும்போது யாது செய்வார்கள்!

திருக்குறள்.

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

சிறு வயதிலேயே முழுமுதற் கடவுளை இடைவிடாது தயிலதாரைபோல் சிந்தித்து வருவோமாயின், அவர் நம்மைக் கைவிடாமல் ஆதரித்து வருவார் என்பது திண்ணம். இதற்குக் 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்னும் பழமொழியே போதிய சான்றாகும்

துணங்குடியார்.

தாடிமீ சைகள்நரைத் தந்தவமி லாருறவு
சையென்ப தெக்கால மோ.

ஒசியத்து.

காசையும் பணத்தையும் கவிந்து தேடியே
பூசவும் புலர்த்தவும் பொழுது போக்கியே
மீசையும் தாடியும் வெளுத்து மேதொழார்
ஆசையும் அசதியும் அகற்று நாயனே.

சில வருடங்கட்கு முன்னர், ஞானசம்பந்தன் என்னும் ஓர் வாலிபன், சட்டப் பரீட்சைக்கு வாசிப்பதற்காக ஐரோப்பாவில் பிரசித்திபெற்ற சருவகலாசாலைக்குப் போயிருந்தான். அவன் நிரம்பவும் புத்திகூர்மை உள்ளவன். அதிக ஊக்கத்துடன் பெரும்பேறு விரைவில் அடையக் கருதி, வித்தியாரம்பம் செய்தான்.

## ஸ்காட்ஸ் துரையும் மாணவனும்.

ஒருநாள் அவ்விளைஞன் அவ்வூரிலுள்ள ஸ்காட்ஸ் (Scotts) என்னும் ஆங்கிலேய வயோதிகரிடம் போயிருந்தான். அவரோ பிறருக்கு எக்காலத்தும் கூடுமான வரையில் நன்மை செய்து வருவதே தம்வாணாள் வேலையாகக் கருதி, நன்னெறியிற் காலம் போக்கி வந்தனர். அவர் தம்மை நோக்கிவந்த அவ்விளைஞனுடன் பின்வருமாறு சம்பாஷனை புரியலானார்: —

ஸ்காட்ஸ் — 'நீ இவ்வூருக்கு வந்த காரணம் யாது?'

சம்பந்தன்—'ஐய! இச்சருவ கலாசாலையில் யான் வாசித்துச் சட்டப் பரீட்சை கொடுத்துப் பெரும் புகழ் அடைவான் எண்ணி வந்தனன்: யான் இரவும் பகலும் அயர்விலா ஊக்கத்துடன் என் பாடங்களைச் சிந்தித்து வருகின்றேன்.'

# இருதயச்சுடர் (ஷுக்லு) அப்பியாசம்.



மார்பின் இடதுபக்கம் "ஹூ" வட்டமிட்டு இரவியைப்போல் சிந்தித்து பார்வைகளை ஒன்ருக நிறுத்தி அழுத்தமாக மனதை நோக்க பிரமப் பிரகாசம் வெளியாகும்.

539-ம் பக்கம் பார்க்க.

PICTURE: OF K. G. P. 1927.

ஸ்காட்ஸ்—'நல்லது! நீ விரும்பியபடி பரீட்சை கொடுத்தபின் என்ன செய்யப்போகிறாய்?'

சம்பந்தன்—'பிறகு நான் சிறந்த வித்தியாபட்டம் பெறுவேன்.'

ஸ்காட்ஸ்—'பிறகென் செய்வாய்?'

சம்பந்தன்—'என் சொல் வன்மையாலும், மனத்திட்பத்தாலும், கல்வித்தேர்ச்சியாலும், நுட்ப புத்தியாலும், சனங்களால் நன்கு மதிக்கப்பெற்றுப் பெரும்புகழ் அடைவேன்.'

ஸ்காட்ஸ்—'பிறகென் செய்வாய்?'

சம்பந்தன்—'ஏதேனும் ஓர் உயர்ந்த உத்தியோகத்தைப் பெற்றுக் குபேர சம்பத்துடையேன் ஆவேன்.'

ஸ்காட்ஸ்—பிறகென் செய்வாய்?

சம்பந்தன்—'பிறகு—பிறகு நான் மரிப்பேன்.'

இம்மொழியைக் கேட்டதும் அவ்வயோகிகர், சற்றே உரத்த குரலோடு, 'பிள்ளாய்! பிறகென் செய்வாய்' என்றபோது, அவ்வாலிபன் ஒன்றும் விடைகூறாது தலையிரக்கத்தோடு போய்விட்டான். வயோதிக ஸ்காட்ஸ் இறுதியில் கேட்ட வினாவானது ஞானசம்பந்தனது மனதில் ப்சுமாத்தாணிபோல் பாய்ந்து, அவனைச் சிந்தாகுலப்படுத்தியது. அவ்வினாவை அவன் சிந்திக்கச் சிந்திக்க இவ்வுலக வாழ்வும், செல்வமும், பெருமையும் உள்ளனபோற் காட்டி, விரைவில் மறைந்துபோகத் தக்கன வென்பதை அவன் நன்குணர்ந்து, சுய நலத்தை விடுத்து, செகதீசருடைய பெருமையைப் பலகாலும் புகழ்ந்து ஆன்மலாபம் அடையவும், தன் தேசத்தாருடைய நன்மையை நாடவும் தலைப்பட்டான்.

திருக்குறள்.

" நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"

தாயுமானவள்ளல்.

நேற்றுளா ரின்று மாளா நின்றனர் அதனைக் கண்டும்
போற்றிலேன் நின்னை யந்தோ போக்கினேன் வீணே காலம்
ஆற்றிலேன் அகண்டா னந்த அண்ணலே அளவின் மாயைச்
சேற்றிலே யின்னும் வீழ்ந்து திளைக்கவோ சிறிய னேனே.

தினமே செலச்செல வாழ்நாளு நீங்கச் செகத்திருள்சொப்
பனமே யெனவெள்ளி கண்டே யிருக்கவும் பாசபந்த
இனமே துணையென் றிருந்தோம் நமன்வரி னென்செய்குவோம்
மனமே நம்போலவுண் டோசுத்த மூடரிவ் வையகத்தே.

இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
றெண்ணவோ திடமில்லையே

என்று கூறிய வசனங்கள் ஒவ்வொருவருக்கும் பிரத்தி யிட்சப் பிரமாணமாய் இருத்தலின், நிலையில்லாத் தேகத்தை யும், செல்வத்தையும், புகழையுமே பெரும் பொருளென மதிமயக்கங்கொண்டு, உலக விஷயங்களிலேயே ஆழ்ந்து, வாழ்நாளை வீணாக்கப் படுத்தாமல், ஆண்டவன் அருளும், நித்தி யானந்த வாழ்க்கையை யெய்துவதற்கேற்ற ஆன்ம சுத்தி யையும் பெற முயலவேண்டும்.

| | |
|---|---|
| கல்லா வெள் தலீழ்மன் இல்மூல்யகின். (குர்ஆன் 30-27) | உண்மையாய் முடிவு நாளை அறிந்தவர்கள் உலக விஷயத்தில் பற்றாக்காக மாட்டார்கள். |

நல்வழி.

உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பதுகோடி நினைந்தெண்ணுவன—கண்புதைந்த

மாந்தர் குடிவாழ்க்கை நன்னீரின் கல்ம்போலுக்
சாந்துணையுஞ் சஞ்சலமே தான்

மறதியும்-சோம்பலும், பேர்க்கபோக்கியங்களில் அதிக விருப்பமும், அதை அனுபவிக்க முடியாத காரணத்தால் அதிக துன்பமும், ஆசைப்பட்ட பொருளைச் சம்பாதிக்க முடியாத தடுமாற்றமும், அதைக்கொடு, இதைக்கொடு என்று பந்து மித்திரர்களைக் கேட்குந்தோறும் அவர்களால் நிந்தித்தலும் வார்த்திகத்திலுண்டாகும்.

### பிரகஸ்பதி ரத்னகரம்.

வார்த்திக்யே சேந்த்ரி யாணும்
விகல கதிமதி: சாதி தேஹாதி தார்யை
ப்ராப்தை: ரோகை: வியோகை:
வ்யஸந க்ருசதநு: ஞப்தி ஹீனஸ்தின: ஹீந: சதீநை:
மித்யா மோஹா பிலாஷை:
ப்ரமதி மமமந: தூர்ஜடே
தியாந சூன்யம்:

பல்லுதிர்ந்த கிழவன் (எத்தனை பணம் படைத்திருப்பினும்) கடின பதார்த்தங்களைப் புசிக்கமுடியாது; புசித்த உணவும் சரியானபடி ஜீரணமாகாது. அதிலும் அதிக வயது சென்ற கிழவனே! உலக இன்பங்களில் ஒரு எட்டுணையேனும் அனுபவிக்க இடந்தராமல், வைக்கோற் போரைக் காக்கும் நாயானது வைக்கோலைத் தானும் தின்னாமல், தின்னவரும் மாடுகளையும் சள்! சள்!! என்று குரைத்து வருந்துவதுபோல, பிறர் அநுபவிக்குந்தோறும் கண்டு பொறாமையால் உள்ளம் வெதும்பி வருந்துவன். வயது ஏற ஏற அன்னம் முதலிய உணவுகள் வேப்பங்காய்போல் தோன்றும்; உணவு செல்லாதலின், சரீரம்

இளைத்து, மெலிந்து மினுமினுப்பு மங்கி, நரம்புந்தோலுந் தொங்கி, கபம் மேலிட்டு, கொக்கு-கொக்கு என்று இருமி வீடென்றும் வாசலென்றும் பாராமல், கண்ட விடமெலாம் சளியைத் துப்புவான். அதைக்கண்ட மனைவி மக்கள், அருவருத்து கிழவனை வெளித்திண்ணையிற் படுக்கச் சொல் என்று குரூரமாக நிந்திக்க, அதனால் மனம் தாளாமல் ஆ! கடவுளே! இவ்விதமான சங்கடங்கள் வருமென்று கனவிலும் நினைந்திலனே! என்று புலம்பிக் கண்ணீர் விட்டு அழுக நேரிடும்.

### திருப்புகழ்.

#### திருகிரி—(சுவாமிமலை)

தலைமயிர் கொக்குக் கொக்க நரைத்துக்
கலகலெ னப்பற் கட்டது விட்டுத்
தளர்நடை பட்டுத் தத்தடி யிட்டுத்— தடுமாறித்

தடிகொடு தத்திக் கக்கல் பெருத்திட்
டசனமும் விக்கிச் சத்தி யெடுத்துச்
சளியுமி குத்துப் பித்தமு முற்றிப் — பலகாலும்

திலதயி லத்திட் டொக்க வுரிக்கத்
திரிபலை சுக்குத் திப்பிலி யிட்டுத்
தெளிய வடித்துற் றுய்த்துடல் செத்திட்—டுயிர்போமுன்

திகழ்புகழ் கற்றுச் சொற்கள் பயிற்றித்
திருவடி யைப்பற் றித்தொழு துற்றுச்
செனனம றுக்கைக் குப்புர முத்திக் — கருள்தாராய்.

சிலர் தம்து யௌவனம்—இளமைக்காலம் முழுவதும் செய்யத்தகாத அநியாய அக்கிரமங்களை கணக்குவழக்கில்லாமல் செய்துவிட்டு, வார்த்திகம் (விருத்தாப்பியம்) வந்த பின்னர் நாற்பதுக்குமேல் நாய்க்குணம் என்றபடி இன்

ன்று பேசலாம், இன்னது பேசக்கூடாதென்று தோன்றாமல் அறிவு மயங்கி, குடும்பத்திலுள்ளவர்களிடம் மொணமொணவென்று பிதற்றுவதால், வீட்டிலுள்ளவர்கள் இதுபயலை வெளியே பிடித்துத் தள்ளு என்று கூற, அதற்காற்றாமல் இனி யெங்கே போனாலும் இந்தச் சங்கடந்தான், பொதுத் தலங்கட்குப் போய்விட்டால் இந்தச் சங்கடமில்லை. சாப்பாட்டு நேரத்திற்கு கோலூன்றிக்கொண்டாவது வந்துவிடலாம் என்றெண்ணி செபமாலையுங் கையுமாக பள்ளிவாசல் (கோயில்) மடாலய முதலியவைகளின் முன் மண்டபத்தில் உட்கார்ந்துகொண்டு, இவரும் ஒரு பெரியவாள்தான்! என்று அயலூரார் மெச்சிக்கொள்ளும் விதமாக, பந்தயக் கடிகாரத்தின் விநாடி (second) முள் சுழல்வதுபோல் செபமாலை மணிகளை உருட்டி, உதடுகள் படபடவென்று அடிக்க, இடைக்கிடையே அது இப்படி - இது அப்படி, அவன் நெட்டையன் - இவன் குட்டையன், அவன் சரிதையைப் பேணாதவன் - இவன் கிரியையைக் காணாதவன் என்று நிந்திப்பதே நோக்கமாக அனேக கிழப்பிணங்கள் புலம்புகின்றதை பலகாலும் பார்த்திருக்கிறோம்.

பெருந்திரட்டு.

பரண மாகிய பெண்டிருஞ் சுற்றமும் பண்டுதங் கையிற்றந்த
விரண மானவை கொண்டிட விவரைவிட் டியம்பிடா திவனேகு
மரண வேதனை யாவரா லறியலா மயங்கியைம் புலனந்தக்
கரண மியாவையுங் கலங்கிட வருந்துயர் கடவுளே யறிகிற்பான்.

வந்திடு மரணத் துன்ப மறித்திடச் செய்யப் போமோ
உந்திமே லையும் பித்து முண்ணவொடு பொறி கலங்கி
சந்திடா விருளே மூடி நாவுலர்ந் தலமந் தென்னே
யிந்தமா விறப்பிற் றுன்பம் பவத்துன்பத் தெண்மடங்கே.

ஆனந்தத்திரட்டு. [யான்

கருவிடையிழுந்துந்துன்பமுநிலத்தின் கண்ணுறிற்கொடிய வெந்நோ
மருவுவெந்துயருநரைதிரையெய்திவருந்திடுந்துன்பமுங்கூற்றால்
உருவினையொருவுந்துன்பமுமீட்டுங்கருக்குழியொன்றுறுதுயரும்
வெருவுரவெண்ணியின்புவீடதனைமேவநன்குணர்தலேவேண்டும்.

சுவாசமானது தங்கு தடையில்லாமல் சிறிப்பாய, இழுப்பு - வலிப்பு முதலிய பிணிகள் வருத்த, கூனிக்குறுகி, நடக்க சக்தி குன்றி, கடிக்கொம்பை யூன்றி, வெளுத்த மயிரும் - குழிந்த கண்ணும் - சுருங்கிய கன்னமும் - வெளியே புறப்பட்ட எலும்பும் - முதுகோடொட்டிய வயிறும் பிறர் நகைத்து இகழும்படி தோன்ற, கண்ணொளி மழுங்கி - காது செவிடடைந்து - மானம் அழிந்து, தன்னை அறியாமல் மலசலங்கள் ஓட, அதைக்கண்டு பந்து - மித்திரர்களும், மனைவி - மக்களும், பேரன் - பேத்திகளும், அடிமைகளும், ஏனைய ஆண் - பெண்களும் இந்தக் கிழவனைப் பாருங்கள்' என்று பரிகசித்துச் சிரிப்பார்கள்.

இடையிற் கட்டிய ஆடை நழுவியதும் தெரியாமல் உணர்வு கலங்கி, வாத - பித்த நாடிகள் அடங்கி, ஐய நாடி பேசத்தொடங்கி, சுவாசமானது தொண்டைக்கும் நெஞ்சுக்கும் "கறட்டு கறட்டு" என்றிழுக்க, ஊட்டிய பால் உட்செல்லாமல் கடைவாய் வழியாய் ஒழுகும். அதைப் பார்த்து சிலர் 'இன்னும் ஒரு மணி நேரத்தில் அடங்கி விடும்' என்பார்கள்.

உணர்வு கலங்கி, பிரக்ஞை யடங்கி, சாகப்போகிறவன் காதில், சிலர் (செவிடன் காதில் சங்கநாதம் ஊதியது போல்) அல்லா(ஹ்)! அல்லா(ஹ்)!! என்று நினைத்துக் கொள் ; கலிமாவைச் சொல்! என்பார்கள். சிலர், ஆஹா!

வென்று நினைத்துக்கொள்! பஞ்சாட்சரத்தைச் செபித்துக் கொள்! முருகா! முருகா!! என்று நினைத்துக்கொள்! சடாட்சரத்தைச் செபித்துக்கொள்! நாராயணா! கோவிந்தா! என்று நினைத்துக்கொள்! அட்டாட்சரத்தை தியானித்துக்கொள்! என்று வாய்க்கு வந்தபடி பிதற்றுவார்கள். சிலர், 'உயிர் அடங்கிவிட்டது' என்பார்கள். சிலர் 'உயிர் நீங்கிவிட்டது' என்பார்கள். சிலர் 'இன்னும் கொஞ்சம் உயிர் இருக்கிறது, கை ஆடுகிறது, கால் அசைகிறது' என்பார்கள். சிலர் 'மனைவி மக்கள் வாஞ்சையால் உயிர்போகாமல் தடைப்பட்டு சங்கடப்படுகிறது; பெண்சாதியைக் கூப்பிடு! பிள்ளையைக் கூப்பிடு! என்று ஓலமிடுவார்கள். சிலர் குய்யோ! முறையோ! வென்று பேரோலமிட்டு ஒப்பாரி சொல்லி அழுவார்கள். சிலர் பிராணன் போய்விட்டது; இனி ஆகவேண்டிய காரியங்களைப் பார்க்காமல் அழுது புலம்புவதால் பயனென்னை? குழி வெட்ட ஆளனுப்புங்கள்! அதை வாங்குங்கள்! இதைப் பாருங்கள் என்று சனங்கள் கும்பல்கூடிப் பிணத்தை எடுப்பித்து மயானம் சேர்ப்பித்துச் சகல கிரியைகளையும் முடித்து விடுவார்கள்.

## பட்டினத்தடிகள் உடற்கூற்றுவண்ணம்.

ஒருமடமாதும் ஒருவனுமாகி இன்பசுகந்தரு மன்புபொருந்தி
உணர்வுகலங்கி ஒழுகியவிந்து ஊறுசுரோணித மீதுகலந்து
பனியிலொர்பாதி சிறுதுளிமாது பண்டியில்வந்து புகுந்துதிரண்டு
பதுமவரும்பு கமடமிதென்று பார்வைமெய்வாய்செவி கால்கைகளென்று
ஊருவுமுமாகி உயிர்வளர்மாதம் ஒன்பதுமொன்றுநி றைந்துமடந்தை
உதரமகன்று புவியில்விழுந்து யோகமும்வாரமு நாளுமறிந்து
மகளிர்கள்சேனை தரவணையாடை மண்படவுந்தியு தைந்துகவிழ்ந்து

யுடமயில்கிெரங்ஞைகூயமுதமருந்தி ஓரறிவீரறி வாகிவளர்ந்து
ஒளிநகைபூற விதழ்மடவாரும் வந்துமுகந்திட வந்துதவழ்ந்து
மடியிலிருந்து மழலைமொழிந்து வாவிருபோவென நாமம்விளம்ப
உடைமணியாடை அரைவடமாட உண்பவர்தின்பவர் தங்களொ
[டுண்டு
தெருவிலிருந்து புழுதியளைந்து தேடியபாலரொ டோடிநடந்து
அஞ்சுவய தாகிவிளை யாடியே, (¼)

உயர்தருஞான குருவுபதேச முந்தமிழின்கலை யுங்கரைகண்டு
வளர்பிறையென்று பலரும்விளம்ப வாழ்பதினாறு பிராயமும்வந்து
மயிர்முடிகோதி அறுபதநீல வண்டிமிர்தண்டொடை கொண்டை
[புனைந்து
மணிபொனிலங்கு பணிகளணிந்து மாகதர்போகதர் கூடிவணங்க
மதனசொரூப னிவனெனமோக மங்கையர்கண்டும ருண்டுதிரண்டு
வரிவிழிகொண்டு சுழியவெறிந்து மாமயில்போலவர் போவதுகண்டு
மனதுபொறாமல் அவர்பிறகோடி மங்கலசெங்கல சந்திகழ்கொங்கை
மருவமயங்கி இதழமுதுண்டு தேடியமாமுதல் சேரவழங்கி
ஒருமுதலாகி முதுபொருளாயி ருந்ததனங்களும் வம்பிலிழந்து
மதனசுகந்த விதனமிதென்று வாலிபகோலமும் வேறுபிரிந்து
வளமையுமாறி இளமையுமாறி வன்பல்விழுந்திரு கண்களிருண்டு
வயதுமுதிர்ந்து நரைதிரைவந்து வாதவிரோதகு ரோதமடைந்து
செங்கையினி லோர்தடியு மாகியே, (½)

வருவதுபோவ தொருமுதுகூனு மந்தியெனும்படி குந்திநடந்து
மதியுமழிந்து செவிதிமிர்வந்து வாயறியாமல்வி டாமன்மொழிந்து
துயில்வருநேரம் இருமல்பொறாது தொண்டையுநெஞ்சமு லர்ந்து
[வறண்டு
துகிலுமிழந்து சுணையுமழிந்து தோகையர் பாலர்கள் கோரணி
[கொண்டு
கலியுகமீதி லிவர்மரியாதை கண்டிடுமென்பவர் சஞ்சலமிஞ்ச
கலகலவென்று மலசலம்வந்து கால்வழிமேல்வழி சாரநடந்து

தெளிவுமிராம லுனைதடுமாறி சிந்தையுநெஞ்சு முலைந்துமருண்டு
திடமுமலைந்து மிகவுமலைந்து தேறிநல்லுதர வேதெனநொந்து
மறையவன்வேத னெழுதியவாறு வந்ததுகண்டமும் என்றுதெளிந்து
இனியெனகண்டம் இனியெனதொந்தம் மேதினிவாழ்வு மிலாதினி [நின்று
கடன்முறைபேசும் எனவுரைநாவு றங்கிவிழுந்துகை கொண்டுமொ
கடைவழிகஞ்சி யொழுகிடவந்து பூதமுநாலுசுவாசமுநின்று [ழிந்து
நெஞ்சுதடுமாறிவரு நேரமே, (3)

வளர்பிறைபோல எயிறுமுரோம முஞ்சடையுஞ்சிறு குஞ்சியும்விஞ்ச
மனதுமிரண்ட வடிவுமிலங்க மாமலைபோல்யம தூதர்கள்வந்து
வலைகொடுவீசி உயிர்கொடுபோக மைந்தரும்வந்து குனிந்தழநொந்து
மடியில்விழுந்து மனைவிபுலம்ப மாழ்கினரேயிவர் காலமறிந்து
பழையவர்காணு மெனுமயலார்கள் பஞ்சுபறந்திட நின்றவர்பந்த
ரிடுமெனவந்து பறையிடமுந்த வேபிணம்வேகவி சாரியு மென்று
பலரையுமேவி முதியவர்தாமி ருந்தசவங்கழு வுஞ்சிலரொன்று
பணிதுகில் தொங்கல் களபமணிந்து பாதகமேசெய்துநாறுமுடம்பை
வரிசைகெடாமல் எடுமெனஓடி வந்திளமைந்தர்கு னிந்துசுமந்து
கடுகிநடந்து சுடலையடைந்து மானிடவாழ்வென வாழ்வெனநொந்து
விறகிடைமூடி அழல்கொடுபோட வெந்துவிழுந்து முறிந்து நிணங்கள்
உருகியெலும்பு கருகியடங்கி ஓர்பிடிநீறுமி லாதவுடம்பை
நம்புமடியேனையினி யாளுமே. (1)

என்னும் மகான்களது அமுத வாக்கியங்களை, கட்டிக் கருட்டி கக்கத்தில் வைக்காமல், கருத்தில் வைத்துப் பதித்தல் வேண்டும்.

வெண்ணெய்க் கட்டியுஞ் சீனியும் ஊட்டலாம்
விக்கிக் கொள்வதற் கென்செய லாம்ஒரு
பெண்ணைக் கட்டிக் கொடுத்திட லாம்பிள்ளை
பெறுவ தற்கு முடன்படு வார்களோ.

என்றபடி நூலாசிரியர்கள் உலகத்துக்கு வேண்டிய விஷயங்களை சாங்கோபசாங்கமாகப் போதிக்கத்தான் செய்வார்கள். போதித்தபடி நடக்காவிட்டால் அதற்கு அவர்கள் என்ன செய்வார்கள், நன்மார்க்கத்தை யடையவேண்டியது நூலை வாசித்துணர்பவர்கள் கடமையேயாம்.

நான்காவது சாமம் (பறையறைதல்)

திடும் ! திடும் !! திடும் !!!

வெண்பா.

வானமணி தேவர் வனத்திலுள ஐவேடர்
ஞானமணி யைத்திருட நல்கினர்—ஞானம்
அறங்காத லாகி அரனடியைப் போற்றி
உறங்கி யுறங்கா திரு.

சுலோகம்.

"காம: க்ரோதஞ்ச லோபஞ்ச தேஹே திஷ்டந்தி தஸ்கரா:
ஜ்ஞாநரத்நா பஹாரேண தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத:"

ஜனங்களே! இன்னுமா தூங்குகிறீர்கள்? நமது மெய்ஞ்ஞான சூரியன் உதயமாகுந் தருணத்திலும் தூங்குவது ஞாயமா! அஞ்ஞான நித்திரை நீங்கி! மெய்ஞ்ஞான விழிப்பை யடையுங்கள்!!



இவ்வுலகின்கண் ஆன்மலாபம் அடைய அனேகபக்குவிகள் எண்ணியும் (தூணைக்கட்டிப்பிடித்துக்கொண்டுவிடமாட்டேனென்கிறதே! விடமாட்டேனென்கிறதே!! என ஓலமிடுபவரைப்போல்) பிரபஞ்ச வாழ்க்கையில் அதிகமாக மனதை

நழைத்துக்கொண்டு ஐயோ! பிரபஞ்சம் விடமாட்டே னென்கிறதே? என் செய்வேன்! என்று வருந்துகின்றனர்.

தானே நாம் பிடித்துக்கொண்டு விடமாட்டே னென்கிறோமா? தான் நம்மைப் பிடித்துக்கொண்டு விடமாட் டேன் என்கிறதா? என்றறிந்தவர் சிலரே. ஆதலின் காட் டிலிருப்பினும் நாட்டிலிருப்பினும் கமலநீர்போல் பற்றற் ருக்க வேண்டுமேயன்றி, மலை-குகை முதலானவைகளில் வசிக்கவேண்டு மென்கிற நிர்ப்பந்தமில்லை.

மரணமாவதோ இன்ன நேரமென்று காணுவது அசாத்தியமாயிருக்கிறது. "அறுப்பதற்கு கத்தி தீட்டுகிற போதும் ஆடு அசை போடுவதுபோல்" காலமெல்லாம் - கதை-காவியம்-பகடி-பரிகாச வேடிக்கை விளையாட்டுகளில் பொழுதைப் போக்கிவிட்டு, சாகிற காலத்தில் "சங்கரா! கோவிந்தா!" என்று பிதற்றுவதிற் பயனில்லை என்பதை ஆலோசித்து ஆன்மலாபம் பெற முயலுங்கள்.

சில அறிவீனர்கள் பிரபஞ்சத்தையே சதமாக நினைந்து கெட்டுப் போவதுமன்றி, இத்தகைய மூடர்கள் ஒரு வழியும் - ஒரு பிரயோசனமும் காணமல் கெட்டுப்போகா தபடி, பெரியோர்கள் இவர்களுக்குப் போதித்து அநுஷ் டிக்கச்செய்து, எழுதியும் வைத்துப்போன சில மனு நீதி யான புறக்கிரியைகளை, இதுமட்டுந்தான் மோட்சத்துக்கு நேர்வழி! இதைவிட்டால் மோட்சத்துக்கு சரியான வழி யே கிடையாது! என்று கருதிக் கெட்டுப்போகின்றனர். இத்தகைய மூடர்கள் சங்கம் உலகத்தில் அதிகமாயிருப்ப தால், இவ்வழிகேட்டிலகப்படாமல் உண்மை வழியிற்சென் றுகொண்டிருக்கும் அப்பியாசிகளையும் நிந்தித்து, சில வேளை களில் அதிகதுன்பமும் படுத்துகிறார்கள்.

ஆகையால், நீங்கள் உண்மையான சற்குருவை யடைந்து, ஆத்மானுசந்தானஞ் செய்ய முயலுங்கள். அப்படி முயல உங்களுக் கிஷ்டமில்லாவிடினும், முயற்சி செய்பவர்களுக்கு உங்களால் கூடுமான ஒத்தாசையைச் செய்யுங்கள். அவ்விதம் செய்ய இஷ்டமில்லாவிடினும்! அத்தகையோருக்கு எவ்விதத் தீங்கும் இழைக்காமலும், அவர்களைத் தடுக்க முயலாமலு மிருங்கள். அவர்கள் என்ன செய்கிறார்கள்! எங்கே போகிறார்கள்! என்பதை, கெட்ட அபிப்பிராயத்தோடு கவனிக்காதீர்கள். இப்படிச் செய்து வருவீர்களாகில் சாமானியர்களான நீங்களும் சில காலங்களில் நல்ல நிலைமைக்கு வந்து ஆண்டவனது திருவருளுக்குப் பாத்திராவீர்கள்.

இஸ்லாமியர்கள், இந்துக்கள், பௌத்தர்கள், சமணர்கள், கிறிஸ்துவர்கள், முதலான உலகத்திலுள்ள எல்லா மதஸ்தர்களும் ஆண்டவனது அருளுக்குப் பாத்திரமானவர்கள். நீங்கள் ஆன்மானுசந்தானம் பெறவேண்டுமானால் இதுவே தக்க சமயம். இது சமயம் தவறினால், மறுசமயம் வாய்ப்பது அரிது! அரிது!!

அன்பர்களே! ஒரு இரவின் நான்கு சாமங்களிலும் கடைசிச் சாமமாகிய இந்த சாமத்தை அதி சிரேட்டமென்றும், அதனுள் சூரியோதயத்திற்கு முன் 5-நாழிகை அதாவது(*)காலை மணி 4-முதல் 6 வரையில் இராப்பகலற்ற நேரமென்றும், இந்த நேரத்தில் செய்யுந் தவ முயற்சியானது எளிதிற் கைகூடுமென்றும், இந்த நேரத்தில் நாடிகளும் மன

(*) இதன் முழுவிபரம் வேதாந்த பாஸ்கரன் கடவுளியல் அத்தியாயம் காலையில் எழுதலும் கடவுளைத் தொழுதலும் என்ற தலைப்பிற்காண்க.

மும் பரிசுத்தமா யிருப்பதால் ஏகாக்கிரசித்தத்திற்கு இன்றி யமையாத சந்தர்ப்ப மென்றும் அனுபவசாலிகளான நமது ஆன்றோர்கள் வற்புறுத்திப் பிரத்தியட்சப்பிரமாணத்துடன் கூறியுள்ளார்கள். ஆகையால் நீங்கள் இந்தச் சாமத்திலாவது அவசியம் நித்திரையை விட்டெழுந்து ஆன்மலாப சம்பந்தமான முயற்சியை செய்யாமலிருந்துவிட்டால் பின்னர் பெரிய ஆபத்துக் குள்ளாவீர்கள் சாக்கிரதை!

இருப்புப்பாதைத் தொடர்பான ரயில்வே வண்டிகளில் சனங்கள் பிரயாணஞ் செய்யுங் காலத்தில் பெஞ்சில் உட்கார்ந்திருக்கும்போது, வேறொருவர் வந்து உட்காருவதற்குச் சிறிது இடங் கேட்டால், இது என்னுடைய இடம், இதில் ஒருவரும் உட்காரக்கூடாது, இத்தனைபேர் என்று அதோ எழுதியிருப்பதை நீர் பார்க்கவில்லையா? என்று சட்டம் (Rule) பேசுகிறார்கள். சிறிது நேரத்திற்குள் தான் இறங்கவேண்டிய ஸ்டேஷன் வந்தவுடன் எங்கே வண்டி புறப்பட்டுவிடுகிறதோ! என்கிற பயத்தால் அவசரம் அவசரமாக இறங்கி, தான் போகவேண்டிய இடத்திற்குப் போய் விடுவார்கள். சிலர் வண்டி ஓடும்போதே இறங்கத் தெரியாமல் கீழே விழுந்தும், சிலர் கால்கை முறிந்தும், பற்கள் நகரப்பெற்றும்; சிலர் வண்டிச் சக்கரங்களில், அகப்பட்டு உயிர் துறந்தும் துன்புறுகின்றனர். அதுபோல் பிரபஞ்சத்தையே பெரிதும் விரும்பியவர்கள்; தனக்கு மட்டும் சொந்தமென் றெண்ணி யிருக்கின்ற இந்த அருமையான சரீரமே சொந்தமில்லாமல் நீங்கும்போது, பலபேர் கை யாண்டு ஒருவருக்குஞ் சொந்தமில்லாமல் இரவும் பகலும் போல் மாறிமாறி வந்த சடைத்திரயங்களை, என் வீடு! என் வாசல்! என் தோட்டம்! என் வயல்! எனது ஆடு! எனது மாடு! என்று சாசுவத சொந்தம் பாராட்டி, மற்றொருவரு

னுடைய நிலத்தையும் தன் நிலமென்று தருக்கம் புரிந்து, நியாய (Court) தலங்களுக்குச் சென்று, பகற் கொள்ளை யடிக்கும் வக்கீல் முதலியவர்கட்கு அவர்கள் கேட்ட பொருளைக் கொடுத்து, அதே கவலையாக இரவும் பகலும் அலைந்து சரீரம் மெலிந்து, முடிவில் தன் வழக்கு அபசயமடைந்து போனால், (பொருளை வீண் விரயஞ் செய்ததுமன்றி) பிரதிவாதிக்கு நேரிட்ட செலவு தொகையுங் கொடுக்க நேரிட, தன்னிடத்தில் பொருளில்லாமல் எஞ்சிய நிலங்களைத் தாழ்ந்த விலைக்கு விற்பனை செய்து ஏழையாகி, சீவனம் சைக்கு யாதொரு வழியுந் தெரியாமல் மயங்குவார்கள்.

வைராக்கிய சதகம்.

காணி யீதெம திடமது வெனமண்ணைக் கருதிமண் ணுகின்றாய்
நாணி லாய்மட நெஞ்சமே வுடலிது நமதிட மலவென்றுற்
பேண வும்படு மோயிதற் கிடமதாம் பிரிதிவி தனைநாகப்
பூணி னன்றிருச் சரணமே யுயிர்க்கெலாம் புகலிட மதுதேறே.

இவ்விதப் பேராசையுள்ள சில மனிதப் பசாசுகள் சதா உலக விவகாரங்களைப் பேசிப் பேசிப் பொழுது போக்கி, நாம் எதற்காக இவ்வுலகில் அவதரித்தோம்? என்பது போன்ற ஆன்மவிசாரம் உதயமாகாமல் காமாக்கினி யென்னும் படுகுழியையே சுவர்க்காதிபோகமாக எண்ணுவார்கள். மரணம் வருவதைக் குறித்து ஓர் கனவிலேனும் நினைப்பதில்லை.

தாயுமான வள்ளால்.

பொய்திகழு முலகநடை யென்சொல்கே னென்சொல்கேன்
பொழுதுபோக் கேதென்னிலோ
பொய்யுடலை நிமித்தம் புசிப்புக் கலைந்திடல்
புசித்தபின் கண்ணுறங்கல்

கைதவம லாமலித் செய்தவம் தில்லவே
கண்கெட்ட பேர்க்கும் வெளியாய்க்
கண்டதிந் விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்
காலமோ வதையுறுகிறேன்.

ஆற்றங்கரையில் வீடு கட்டிக் குடியேறி வாசஞ் செய்பவர்கள், சாற்காலத்தில் வாட்ட முதலியன்களால் வருந்துவார்கள். அதுபோல் வாணாள் முழுவதும் மூவாசைச் சேற்றில் சிக்கிக் காலங்கழித்துவிட்டு, நல்வழியிற் சிறந்த காலமேனும் முயலாதவர்கள், கொல்லவரும் இயமனது கொடுமையைக் கண்டு யாது தான் செய்வார்கள்!

இராமலிங்க வள்ளல்.

காடுவெட்டி நிலந்திருத்திக் காட்டெருவும் போட்டுக்
கரும்பைவிட்டுக் கடுவிதைத்துக் களிக்கின்ற வுலகீர்
கூடுவிட்டுப் போயினபின் எதுபுரிவீர்? எங்கே
குடியிருப்பீர்? ஐயோ! நீர் குறித்தறியீர் ஈங்கே
பாடுபட்டீர் பயனறியீர் பாழ்க்கிறைத்துக் களித்தீர்
பட்டதெல்லாம் போதுமிது பரமர்வரு தருணம்
ஈடுகட்டி வருவீரேல் இன்புறுகப் பெறுவீர்
எண்மையுரைத் தேனலநான் உண்மையுரைத் தேனே.

கண்ணீர் முகந்துகொண்டுவரும் ஓர் மட்பாத்திரத்திற்குத் தண்ணீர்க் குடமென்று பெயர் வழங்கி, குடம் உடைந்தபின்னர், அதனை ஓடு என்று வழங்கப்பெறும். அதுபோல், சரீரத்தில் பிராணவாயுவுள்ள வரையில் கண்ணன் - பொன்னன் - முருகன் - இராமன் - ஐதர் - காதர் என்று வழங்கப்பெற்று, உயிர் நீங்கியபின் பிணம் - பிரேதம் - சவம் (மையித்) என வழங்கப்பெறுகிறது. ஆதலால் கேவலம் ஓரணா விலையுள்ள தண்ணீர்க்குடத்தை உடைந்து விடாதபடி காப்பாற்றுகிறசனங்கள்,

துணங்குடி வள்ளல்.

எத்தனை யெத்தனை காலம்—இந்த
என்பு தசையா லெடுக்கின்ற கூலம்.

சிவவாக்கியர்.

ஓடமுள்ள போதெலாம் ஓடியே யுலாவலாம்
ஓடமுள்ள போதெலாம் உறுதிபண்ணிக் கொள்ளலாம்
ஓடமும் உடைந்தபோது ஒப்பிலாத வெளியிலே
ஆடுமில்லை கோலுமில்லை யாருமில்லை யானதே.

என வியந்து பாராட்டக்கூடிய இந்த அருமையான சரீரத்தை, எமன் என்னும் வழிபறிக் கொள்ளைக்காரனிடத்தில் பறிகொடுப்பதற்குமுன் ஆன்மலாபம் அடையவேண்டுமே யென உண்மையாக நினைப்பவர்கள் பெரும்பாலும் காணவில்லையே. இது என்ன பரிதாபம்.

சிவஞான வள்ளல்

மக்க ளாக்கையிற் பிறத்தலே யரிதுமற் றதிலுந்
துக்க மின்றுரு வெய்தலுந் துறத்தலு மரிது
நற்கு லத்தினில் வருதலு மரிதுஞா னத்தால்
முக்க ணீசனுக் காட்படல் முற்றிலு மரிதே.

கடுவெளிச்சித்தர்

நந்த வனத்திலோர் ஆண்டி—அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டுவந் தானொரு தோண்டி—மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி.

இராமலிங்க வள்ளல்.

நின்முடையேற் கட்டுடையே யென்றுநினைந் திங்கே
களித்திருமார் திருக்கின்றீர் ஒளித்திடுமு மறியீர்
சினமுடைய கூற்றுவருஞ் செய்தியறி யீரோ
செத்தநம தினத்தாரைச் சிறிதுநினை யீரோ

தினகரன்போற் சாகாத தேகமுடையவரே
திருவுடையா ரெனவறிந்தே சேர்ந்திடுமி னீண்டே
மனமகிழ்ந்து கேட்கின்ற வரமெல்லா மெனக்கே
வழங்குதற்கென் றனித்தந்தை வருதருண மிதுவே.

வையகத்தீர் வானகத்தீர் மற்றகத்தீர் நுமது
வாழ்க்கையெல்லாம் வாழ்க்கையென மதித்துமயங் காதீர்
மையகத்தே யுறுமரண வாதனையைத் தவிர்த்த
வாழ்க்கையதே வாழ்க்கையென மதித்ததனைப் பெறவே
மெய்யகத்தே விரும்பியிங்கே வந்திடுமின் எனது
மெய்ப்பொருளாந் தனித்தந்தை யித்தருணந் தனிலே
செய்யகத்தே வளர்ஞான சித்திபுரந் தனிலே
சித்தாடல் புரிகின்றார் திண்ணமிது தானே.

அமெரிக்காவில் ஒரு ஆடு ஆறேமுக்கால் (6¾) குட்டி போட்டது. ஜர்மனியில் ஒரு பெண் முப்பத்தெட்டே காலேயரைக்கால் (38⅜) பிள்ளை பெற்றிருக்கிறாள் என்பது போன்ற வீண் கதை - காவியம் முதலானவைகளை வாசித்து பொழுதுபோக்கும் பிரபுக்களே! இன்றிரவு உங்களை ஒரு துஷ்டன் கொல்ல நினைத்திருக்கிறான் என்று கேள்விப் பட்டால் நித்திரையும் வருமா? வராதல்லவா? அன்றியும், துஷ்டனே! ஒரு வேளை வந்தாலும் வருவான், வராவிட்டாலுமில்லை. எமனென்னும் பரம துஷ்டனோ! குறித்த காலத்தில் கட்டாயம் வந்தே தீருவான். அதற்கு மார்க் கண்டேயர் முதலியவர்களைப்போல் நீங்கள் என்ன ஆதரவு தேடிக்கொண்டீர்கள்! இதைச் சற்று கவனித்து, நீங்கா தஆன்ம விசாரத்தி லழுந்தினால் நீங்கள் முத்தி பெறுவது நிச்சயம்! நிச்சயம்!! முக்காலும் நிச்சயம்!!!

தாயுமானவள்ளல்

நினைவொன்று நிலையாம னிற்கினக மென்பார்
நிற்குமிட மேயருளா நிட்டையரு ளொட்டும்
தனையென்று மறந்திருப்ப வருள்வடிவா னதுமேல்
தட்டியெழுந் திருக்குமின்பந் தன்மயமே யதுவாம்
பினையொன்று மிலையந்த வின்பமெனு நிலயம்
பெற்றாரே பிறவாமை பெற்றார்மற் றுந்தான்
மனையென்று மகவென்றுஞ் சுற்றமென்று மசுத்த
வாதனையா மாசையொழி மன்னொருசொற் கொண்டே.

ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கு மந்த
வொருமொழியே மலமொழிக்கு மொழிக்குமென மொழிந்த
குருமொழியே மலையிலக்கு மற்றைமொழி யெல்லாம்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்
கருமொழியிங் குனக்கில்லை மொழிக்குமொழி ருசிக்கக்
கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங்கண் டனைமேல்
தருமொழியிங் குனக்கில்லை யுன்னைவிட்டு நீங்காத்
தற்பரமா யானந்தப் பொற்பொதுவாய் நில்லே.

நில்லாத வாக்கைநிலை யன்றெனவே கண்டாய்
நேயவருண் மெய்யன்றோ நிலயமதா நிற்கக்
கல்லாதே யேன்படித்தாய் கற்றதெல்லா மூடம்
கற்றதெல்லா மூடமென்றே கண்டனையு மன்று
சொல்லாலே பயனில்லை சொன்முடிவைத் தானே
தொடர்ந்துபிடி மர்க்கடம்போற் றொட்டதுபற் றாநில்
எல்லாரு மறிந்திடவே வாய்ப்பறைகொண் டடிநீ
யிராப்பகலில் லாவிடமே யெமக்கிடமென் றறிந்தே.

இடம்பொருளே வலைக்குறித்து மடம்புகுநா யெனவே
யெங்கேநீ யகப்பட்டா யிங்கேநீ வாடா
மடம்பெறுபாழ் நெஞ்சாலே யஞ்சாதே நிராசை
மன்னிடமே யிடமந்த மாநிலத்தே பொருளுந்

திடம்பெறவே நிற்கினெல்லா வுலகமும்வந் தேவல்
செய்யுமிந்த நிலைநின்றோர் சனகன்முதன் முனிவர்
கடம்பெறுமா மதயானை யென்னவுநீ பாசக்
கட்டான நிகளபந்தக் கட்டவிழப் பாரே.

பாராதி யண்டமெலாம் படர்கானற் சலம்போற்
பார்த்தனையே முடிவினின்று பாரொதுதா னின்ற
தாரானு மறியாத சத்தன்றோ வதுவா
யங்கிருநீ யெங்கிருந்து மதுவாவை கண்டாய்
பூராய மாகவுநீ மற்றொன்றை விரித்துப்
புலம்பாதே சஞ்சலமாப் புத்தியைகாட் டாதே
ஓராதே யொன்றையுநீ முன்னிலைவை யாதே
யுள்ளபடி முடியுமெலா முள்ளபடி காணே.

உள்ளபடி யென்னவுநீ மற்றொன்றைத் தொடர்ந்திட்
டுளங்கருத வேண்டாநிட் களங்கமதி யாகிக்
கள்ளமனத் துறவைவிட்டெல் லாந்துறந்த துறவோர்
கற்பித்த மொழிப்படியே கங்குல்பக லற்ற
வெள்ளவெளிக் கடன்மூழ்கி யின்பமயப் பொருளாய்
விரவியெடுத் தெடுத்தெடுத்து விள்ளவும்வா யின்றிக்
கொள்ளைகொண்ட கண்ணீருங் கம்பலையு மாகிக்
கும்பிட்டுச் சகம்பொயெனத் தம்பட்ட மடியே.

அடிமுடியு நடுவுமற்ற பரவெளிமேற் கொண்டா
லத்துவித வானந்த சித்தமுண்டா நமது
குடிமுழுதும் பிழைக்குமொரு குறையுமில்லை யெடுத்த
கோலமெல்லா நன்றாகும் குறைவுநிறை வறவே
விடியுமுத யம்போல வருளுதயம் பெற்ற
வித்தகரோ டுங்கூடி விளையாட லாகும்
படிமுழுதும் விண்முழுதுந் தந்தாலுங் களியாப்
பாலருட னுன்மத்தர் பசாசர்குணம் வருமே.

## இருபதாவது அத்தியாயம்.

## சமாதிக் கிரியை.

—o:o:o—

### விருத்தம்.

துதிக்கு மானிட யாக்கையை விட்டுயிர் துறப்பிற்
பதைக்க மீறெறி கொடுதகிப் பதிபெறும் பாவம்
புதைக்கும் ஞாயமே நன்றெனு மெவர்க்குமெய்ப் போதம்
உதிக்கு மாறுப மானமுங் கொடுத்தெடுத் துரைப்பாம்.

மனிதராகப் பிறந்த ஒவ்வொரு மக்கட்கும், முன் ஞானத்தம்பட்ட அத்தியாயத்தில் விவரித்துள்ளபடி பற்பல துன்பங்களும், மரணமும் வந்து பொருந்துகின்றன. அந்த மரணம் இன்ன நேரந்தான் வரும் என்கின்ற கால நிருணயம் அநேகமாய் ஒருவரிடத்திலும் அகப்படவில்லை யென்பது வெளிப்படை.

அத்தகைய மரண பயத்தைச் சிந்தித்தவர்கள் "ஆற்று வெள்ளம் வருவதன்முன் அணைபோட்டுத் தடுத்துக்கொள் வதுபோல்" கடவுளது திருவடிக் கமலங்களை யடைந்து, கூற்றுவன் என்னும் ஆற்று வெள்ளம்வாரதபடி, திருவருள் என்னும் அணை போட்டுக் கொள்வார்கள். இத்தன்மை யுடையவர்கள் புறத்தோற்றத்திற்கு உயிர் நீங்கியவர்கள் போற் காணப்படினும், அவர்கள் உயிர் நீங்கியவர்கள் அல்லர்; உயிர் அடங்கினவர்களாவார்கள்.

மரண பயம் என்பதைக் கனவிலுங் கண்டுங் கேட்டு முணராமல், மனைவி மக்கள் வலையில் அகப்பட்டு, சதா பிரபஞ்சக் கருமங்களையே புரிந்துகொண்டிருந்து, கடவு

ஞானிகளின் ஜோதி சொரூபம் இன்னதென்றே அறியாத மாந்தர்கள், உயிர் நீங்கிய பின்னர் பிணம் என்று கூறித்திரிகின்றார்கள். அவர்கள் இங்கும் அந்தகர், அங்கும் அந்தகர்.

இவ்விரு வகைத்தானவர்களில், உயிர் அடங்கியவர்கள் என்று மேற்கூறப்பெற்ற ஞானிகளை மாத்திரம் சமாதி செய்து (புதைத்து) விட்டு உயிர் நீங்கியவர்களாகிய ஏனையவர்களை அக்கினியில் தகனஞ் செய்துவிடுவது தொன்று தொட்டு இந்துக்களிற் சிலருடைய வழக்கமாக இருந்து வருகிறது. இப்படிச் செய்யாவிட்டால் சுகாதாரக்குறைவு ஏற்படுமென்றும், அதற்காகத்தான் அப்படிச் செய்கிறோமென்றும் சிலர் சொல்லுகிறார்கள். சிலர் பட்டினத்தார் சிறந்த சிவஞானியாக இருந்தும் தன் தாயாரைத் தகனம் செய்யவில்லையா? என்கிறார்கள். ஆனால் பட்டினத்தடிகள் தன் தாயாரை மனப்பூர்வமாகச் சுட ஆரம்பித்ததாகத் தெரியவில்லை.

விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுட னேயுடலைச்
சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார்—

என்று சுற்றத்தாரைக் குறிப்பிட்டிருக்கின்றாரே யன்றி தான் சுடப்போவதாகச் சொல்லவில்லை. அன்றியும்

அள்ளி யிடுவ தரிசியோ தாய்தலைமேல்
கொள்ளிதனை வைப்பேனோ கூசாமல்—

எனப் பயந்து கூறியிருப்பதை, காய்தல் உவத்தலின்றி யோசிப்பவர்கட்கு உண்மை விளங்காமற் போகாது.

பிரேதங்களைச் சுட்டு சாம்பலாக்காவிட்டால்சுகாதாரக் குறைவு ஏற்படுமென்று சிலர் கருதுகிறார்கள். பிணங்களைச் சுடுவதனுல் சுகாதாரக் குறைவு ஏற்படுகிறதா? சுட

விட்டால் சுகாதாரக் குறைவு ஏற்படுகிறதா? என்பதைப் பற்றிச் சிந்தித்துப் பார்ப்போம்:—

பிரேதங்களைச் சமாதி வைப்பதனால் எவ்வித துர்க்கந்தமும் உண்டாவதைக் காணோம். நீர் நிலை முதலியவைகளும் பூமியினுடைய ஆகருட்ண சத்தியால் கெடுவதாகவும் தெரியவில்லை. தகனஞ் செய்வதனாலோ ஊர் முழுவதும் சகித்தற்கியலாத துர்க்கந்தம்வீசி சுகாதாரக் குறைவும் ஏற்பட்டு வைத்திய சாத்திர ஆதாரத்தின்படி வியாதியாளர்கள் பலர் பிணவாடையால் மாணவத்தை அடைகிறார்கள். இந்தச் சுகாதாரக் குறைவை அநேகர் தெரிந்திருந்தும் “ தன் ஊத்தை தனக்கு நாறாது” என்பதுபோல் தமது முன்னோர்கள் வழக்கமென்று வாளா விருந்து விடுகின்றனர். அநேக துரைத்தன வைத்தியர் (Doctor) களும் இது விஷயத்தில் கவலையெடுத்து நிவர்த்திக்க முன்வந்ததாகத் தெரியவில்லை. துரைத்தனத்தார் அவர்களும் இது விஷயத்தில் தலையிட்டு உசிதாநுசிதத்தையுணர்ந்து ஒரு முடிவை அநுட்டானத்திற்கு கொணர்வார்களேயாகில், அது இந்தியதேசம் செய்த பாக்கியமென்று கருத இடந்தருகிறது.

பல ஆயிரம் வருடங்கட்கு முன்னர் ஒரு மூர்க்கன், தன் குடும்பத்தினர் ஊரார் உறவின் முறையார் முதலானவர்களுக்கு தாங்கொணாத அக்கிரமங்களைச் செய்துவந்தானாம். அவனை அடக்குவதற்கு எவராலும் முடியாமல் துக்கமடைந்து கொண்டிருக்கும்போது, அவனுக்கு ஏதோ வியாதி யேற்பட வயித்தியர்களைக் கொண்டு மயக்க மருந்துகளைக் கொடுத்து, அவன் பிரக்ஞையற்றிருக்கும் போது எல்லோரும் ஒன்று சேர்ந்து கை கால் முதலானவைகளைக்கட்டித் தூக்கி, புதைத்து விட்டால் எங்கே வெளி

யேறிவந்து விடுகிறானோ என்கிற பயத்தால் விறகையடுக்கி நெருப்பை வைத்து, பராக்கிரமம் பொருந்திய ஒரு தடியனுக்கு உண்மையைச் சொல்லி அனேக திரவியங்களை கொடுத்து அம்மூர்க்கனைச் சுட்டுச் சாம்பலாக்கிவிடும் படியாகவும், நெருப்பின் உஷ்ணம் பட்டவுடன் எங்கே வெளியேறிவந்து நம்மை நிர்மூலமாக்கி விடுகிறானோ என்ற அச்சத்தால் சுடுகிறவனுக்கு தடிமுதலான துணைக்கருவிகளையும் கொடுத்தார்கள்.

மறுநாள் எல்லோரும் சுட்டவிடத்தை வந்துபார்க்கையில் சில எலும்புகள் கிடக்கக்கண்டு இது எங்கே உயிர்த்தெழுந்து வந்து நம்மை இம்சிக்கப் போகிறதோ! இதையும் சும்மா விடக்கூடாதென்று தெரிந்து ஆழமான கங்கா நதியில் எறிந்துவிட்டு, (தீபாவளியில் நாகாசுரனுக்கு முழுகுவதுபோல்) இந்தப் பாவி இன்றோடு தொலைந்தான் என்று எல்லோரும் கங்கா ஸ்நானம் செய்தார்களாம்.

சிலகாலத்தின் பின்னர் இதேமாதிரி மற்றோர் துஷ்டனை மேற்கண்டபடி அவ்வழக்கத்தை அநுசரித்து சுடும்போது வெட்டியான் தூங்கிவிட்டபடியால், நெருப்பின் உஷ்ணம் பட்டவுடன் பிரேதம் கிளம்பி வீட்டுக்குப்போக, அவனைப் பசாசென்றும், மயானத்திற்குப்போன பிரேதம் வீட்டுக்கு வரகூடாதென்றும் எல்லோரும் ஒன்று சேர்ந்து அடித்துத் துறத்திவிட்டார்களாம்.

இந்த வஞ்சச் செய்கையானது நாளுக்குநாள் எங்கும் அதிகரிக்கவே, வெகுகாலங்களுக்குப்பின்னங்களப்பன் செய்ததை நாங்களும் செய்கிறோம் என்று வழக்கமாக ஏற்பட்டுவிட்டது. இதையே பிற்காலத்தவர்களிற் சில வகுப்பார் அநுட்டானமாகச் செய்து வருகின்றனர்.

மகான்களைப்போல் மற்றவர்களையும் சமாதிசெய்து விடுவது சிறந்ததேயன்றி, தகனஞ்செய்து விடுவது உசிதமாகத் தெரியவில்லை. ஏனெனில், நமது அருமையான உறவினர்களைக் காருண்யத்தோடு மண்ணில் ஆழமாகக் குழிவெட்டிப் புதைத்து விடவேண்டுமேயன்றி காருண்யமில்லாமல் சுட்டுச்சாம்பலாக்கிப் புன்செய்-நன்செய் முதலானவைகளுக்குக்கூட எருவாகாதபடி, ஆற்றிலும்-குளத்திலும் கலக்கிவிடுவதால் இதுவரையில் யாது பிரயோசனத்தை அடைந்தார்கள்? ஒன்றுமில்லையே! சுடாவிட்டால், ஒருக்கால் முஹம்மது நபி (சல்) அவர்கள் தசைக்கட்டியைப் பெண்ணுருவாக்கியது போலவும், திருஞான சம்பந்த மூர்த்திநாயனார் எலும்பைப் பெண்ணாக்கியது போலவும் இனிவரும் அவதார புருடர்களால் பிரேதம் உயிர்ப்பித்தெழுதலுங் கூடும்.

திருவருட்பா.

அணங்கமுபே ரோசையொடும் பறையோசை பொங்கக்கோ
 ரணிகொண் டிந்தோ
பிணங்கழுவி யெடுத்துப்போய்ச் சுடுகின்றீ ரினிச்சாகும்
 பிணங்க ளேநீர்
கணங்கழுகுண் டாலுமொரு பயனுண்டே யென்பயன்
 கண்டீர் சுட்டே
எணங்கழுசாம் புலைக்கண்டீ ரதுபுன்செ யெருவுக்கு
 மியலா தன்றே. (1)

குணம்புதைக்க வுயிரடக்கங் கொண்டதுசுட் டாலதுதான்
 கொலையா மென்றே
மணம்புதைக்க வேண்டுமென வாய்த்திடக்கச் சொல்கின்றேன்
 வார்த்தை கேட்டும்
பிணம்புதைக்கச் சம்மதியீர் பணம்புதைக்கச் சம்மதிக்கும்
 பேய ரேநீர்
எணம்புதைக்கத் துயில்வாரும் பாற்றுயிலற் கஞ்சுவரோ
 யிழுதை யீரே. (2)

ஆகையால், உயிர் நீங்கப்பெற்ற சாதாரண ஜனங்களையும் கலியாணக்கோலம்போல் அலங்கரித்து, இடுகாட்டிற்குக் கொண்டுபோய்ச் சமாதி (அடக்கம்) செய்து, கிரியாதிகளைச் செய்ய முயல்வது மேலானதே யன்றி, தகித்துவிடுவது நல்ல நெறியன்று. இப்படி தகனஞ் செய்வதால் இலைமறைகாய்போல் இருக்கப்பெற்ற இல்லறஞானிகளும், பயித்தியக்காரர் போலிருக்கும் ஞானிகளும் அக்கினியில் வெந்து நீறாக நேரிடுவதால் உலகம்பாழ்படைய நேரிடும்.

முற்காலத்தில் கல்வி வாசனை யின்னதென்றே அறியாத ஒரு தெலுங்கு தேசத்து நாட்டுப்புறத்தான், சித்திரை-வைகாசி மாதமாகிய வசந்த காலத்தில் சரீர ஆரோக்கியத்தின் பொருட்டு, தற்கால நாகரீகமுள்ள பிரபுக்களெல்லாம் திருக்குற்றால மலை, கொடைக் கானல் மலை, முதலிய இடங்களுக்குப் போகிறார்கள் என்பதைக் கேள்வியுற்று, அவனும் புதுநாகரீகம் அடைய விரும்பி, தென்றற்காற்று வாங்குவதற்கு நீலகிரி மலைக்குப் போகப் பிரயாணமாகி, விசாகப்பட்டினம் கடைவீதிவழியாகப் போய்க்கொண்டிருந்தான். ஒரு கடையில் புதுமிளகாய்ப் பழம் செக்கச் செவேலென்று மிக அழகாய் இருந்ததால் அதில் சில பழத்தை வாங்கி ஆவலோடு தின்றான். அப்பொழுது நண்பகலாயும், அதிக வெய்யிலாயு மிருந்தபடியால், உறைப்பைத் தாங்கமுடியாமல் நாக்கைத் தொங்கவிட்டு வாயிலிருந்து நீர் நீராக வடித்துக்கொண்டிருந்தான். அதுசமயம் அவன் முன்னே ஒரு நாய், வெய்யிற்கொடுமையால் வருந்தி, நீர் வேட்கையால் நாக்கைத் தொங்கவிட்டுக்கொண்டு வந்தது. அவன் நாயை நோக்கி, "நாயே! நீ கண்டகடையிலே நீ கொண்டிருக்கலா!" என்று திக்கிப்பட்டானும்.

இக்கதையைப்போல், பிரபஞ்சத்தில் வருந்துகிற மனிதர்கள், பிரபஞ்சத்திற் பற்றுமல் பிரபஞ்சத்தவர்களுள் ஒருவராகக் காணப்பெறும் இல்லற ஞானிகளையும் தம்மைப் போலவே சாதாரண மனிதர்களாக மதிக்க நேரிடுகிறது.

நாகபட்டினம் தாலூக்கா கீழ்வேளூருக்கு மேற்கே சுமார் ஒருமைல் தூரத்தில், நாகபட்டினமிருந்து திருவாரூருக்குப் போகும் சாலைமார்க்கத்திலுள்ள பீர்கள்பள்ளி என்னும் சிற்றூரிலுள்ள இஸ்லாமானவர்கள் இடுகாட்டி (கபுருஸ்தானி)ல் சமீப காலத்தில் சில வருடங்களுக்குமுன் ஒரு இலுப்பை மரத்தை வெட்டி, வேர் தோண்டுகையில் அதன் கீழ் ஒரு பிரேதம் (ஸஹஸா) அன்று வைத்ததுபோலவே இருக்கக்கண்டு பயந்து உடனே மூடிவிட்டார்கள். சென்னை மவுண்ரோட்டிலுள்ள தருகாவும் சிந்திக்கற்பாலது.

இராமநாதபுரம் ஜில்லா கமுதி (Kamuti) என்னும் பட்டினத்திலுள்ள இஸ்லாமானவர்கள் பெரிய பள்ளி வாசல் இடுகாட்டில் ஒரு பிரேதத்தை புதைப்பதற்கு குழி தோண்டும்போது, மேற்கூறியவாறு ஒரு பெரியவருடைய சரீரம் இருந்ததாகத் தெரியவருகிறது. இப்படியே இன்னும் அநேக விடங்களிலிருந்ததாகத்தெரியவருகிறது.

இவ்வாறு சூக்குமசரீரத்தில் வசிக்க விரும்பி தூலசரீரத்தை விட்டுவிட்ட பெரியோர்கள் சரீரங்களை, ஏற்கனவே மகானுடைய சரீரமென்று அறிந்திருந்தால் கோரி முதலானவைகள் கட்டி, கந்தூரி (குருபூசை) விழாவும் நடத்தி வந்திருப்பார்கள். அவர்களை மகானுபாவரென்று எண்ணுததனுலேயே சாதாரணமாக இறந்த மனிதனைப் புதைப்பது போலவே புதைக்கப் பெற்றிருந்தது. அவ்வாறிருந்தற்கு இந்துக்களாயிருந்தால், கட்டை யடுக்கிச் சுட்டுச் சாம்ப

லாக்காமல் விடுவார்களா? சுட்டிருந்தால் உலகம் என்ன கதியாகும்?

திருமந்திரம்.

அந்தமின் ஞானிதன் னாகந் தீயினில்
வெந்திடி னாடெலாம் வெப்புத் தீயினி
னொந்தது நாய்நரி நுகரி னுண்செரு
வந்துநாய் நரிக்குண வாகும் வையமே.

புண்ணிய மாமவர் தம்மைப் புதைப்பது
நண்ணி யனல்கோக்கி நாட்டி லழிவாகு
மண்ணி லழியி லலங்கார பங்கமா
மண்ணுல கெல்லா மங்குமனன் மண்டியே.

அந்தமின் ஞானி யருளை யடைந்தக்கா
லந்த வுடறன் குகைசெய் திருத்திடிற்
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரு
மந்தமி லின்ப வருள்பெறு வாரே.

மெய்ஞ்ஞானக் கல்விக் களஞ்சியமான ஸ்ரீ தாயுமான வள்ளல் திரிசிரபுரத்து இராசபத்தினியின் துர் அபிப்பிராயத்திற்காக அந்நகரைவிட்டு நீங்கி, இராமநாதபுரம் சென்று, அரண்மனை ஊழியஞ் செய்பவளாகிய ஒரு விருத்தை வீட்டில் பன்னாள்வரை அமர்ந்திருந்தனர். அவ்விருத்தைக்கு நீண்டகாலமாக வயிற்றுவலி யேற்பட்டிருந்ததால் அரண்மனை வயித்தியரொருவரிடம் மருந்து வாங்கிப் புசித்தும் குணமடையாமல் வருந்திக்கொண்டிருந்தனள்.

அவ்வாறுய நாட்களுள் ஒருநாள் அவளுக்கு சகித்தற்கியலாத வயிற்றுவலி நேர்ந்து வருந்தக் கண்ணுற்ற சுவாமிகள், ஓர் பச்சிலையைப் புசிக்கச்செய்ய வலி நின்று பூரண சௌக்கியம் அடைந்தனள். அவ்வற்புதத்தை அவள் பல

ரீட்த்திலும் சொல்லிச் சொல்லி இறும்பூதடைந்தனள்.
அதை அரண்மனை வயித்தியனுணர்ந்து இவ்விதமான பண்டிதனை அருகாண்மையில் வைத்துக்கொண்டிருப்போமாயின் நமக்கு எங்ஙனம் புகழ் ஏற்படும்? இவனை எவ்விதத்திலாவது வெகு தூரத்திற்குத் துரத்திவிட வேண்டுமென்று பொறாமைமேலிட்டு, அதற்காக அந்த கிழவியிடம் முகநட்புக்கொண்டு "இனிமேல் நடக்கும் அற்புதங்களையும் பார்த்துவந்து எனக்குச்சொல்" என்று கேட்டுக்கொண்டான்.

ஒரு முறை ஸ்ரீ தாயுமான வள்ளல் 10–15 நாள்வரையில் நிட்டைகூடிக் கலையாமல் சொக்கியிருந்தனர். அதைக் கண்ட கிழவி அதிசயித்து, அரண்மனை வயித்தியனிடம் போய் தெரிவித்தாள். அவன் இதுதான் சமயம் என்று கருதி அரசனிடம் சென்று, மகாராஜா! ஒரு அநாதைப் பிணம் கிடக்கிறது. அதைத் தகனம் பண்ணும்படி உத்தரவு செய்யுங்கள் என்றனன். அரசன் எண்ணித் துணிக கருமம்" என்வும்;

நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர் பண்பறிந் தாற்றாக் கடை

எனவுங் கூறிய திருக்குறட் கருத்தை சற்றும் சிந்திக்காமல், தகனஞ்செய்துவிடும்படி ஆக்ஞாபித்ததால் வயித்தியன் மகிழ்வடைந்து, தானுங்கூடவிருந்து சுவாமிகளை யெடுப்பித்துக்கொண்டுபோய்க் காட்டத்திற்கிடத்தி நெருப்புமூட்டும்படிச் செய்தனன். சுவாமிகள் சரீரத்தில் நெருப்பு பற்றியவுடன், நிட்டைக்கலந்துபார்க்கமயிரிணமாயிருக்கக்கண்டு தமது ஞானதிருஷ்டியாலுணர்ந்து, இது "வயித்தியனுடைய குற்றமேயன்று; எல்லாம் கடவுள் செயல்" என்றுணர்ந்து

எழுந்திராமல் இருந்து நீரேறினாராம். அக்குற்றத்தாலேயே அந்த நாடு முழுவதும் பஞ்சம் அதிகரித்ததுமன்றி, சந்ததிகளும் அற்றுப்போய், பின்பு தவிசாரம் எடுக்க நேர்ந்தது என்பது கன்ன பரம்பரை.

### திருமந்திரம்.

எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடில்
அண்ணல்தங் கோயி லழிவிட்ட தாங்கொக்கு
மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமா
மெண்ணரு மன்ன ரிழப்பா ராசே.

### திருவருட்பா.

பிறந்தவரை நீராட்டிப் பெருகவளர்த் திடுகின்றீர்
பேய ரேநீர்
இறந்தவரைச் சுடுகின்றீ ரெவ்வணஞ்சம் மதித்தீரோ
விரவிற் றூங்கி
மறந்தவரைத் தீமூட்ட வல்லீரால் நும்மனத்தை
வயிர மான
சிறந்தவரை யெனப்புகழச் செய்துகொண்டீ ரென்பிறந்து
திரிகின் றீரே.

இந்துக்கள் இவ்வாறு எவரையும் முன்பின் யோசிக்காமல் தகனம் செய்து விடுகிறார்கள் என்பதைக் கருதியே ஸ்ரீ தாயுமான சுவாமிகள் புனர் ஜென்மம் புகுந்து, தகனக் கிரியை யின்றிய இஸ்லாம் மதத்தில் குணங்குடி மஸ்தானாகப் பிறந்தனர் என்றும், அது காரணத்தாலேயே ஸ்ரீ தாயுமானவர் பாடலும் குணங்குடியார் பாடலும் ஏகதேசம் ஒத்திருக்கிறதென்றும் இவர் சொல்வது கன்ன பரம்பரை. சுடுகிற காரணத்தினால் இந்துக்களுடைய வீட்டில் இராத் தங்குவதற்குக்கூட சந்தேகமுடைய நேரிடுகிறது. ஏனென்

ருல், சுவாசத்தை அதிகமாக விடாமல் கொஞ்ச நாழிகை தூங்கிவிட்டால், எங்கே! அழுதப் பிணம்! என்று எடுத்துச் சுட்டுவிடப் போகிறார்களோ! என்கிற பயந்தான்.

திருவருட்பா.

புலைத்தொழிலே புரிகின்றீர் புண்ணியத்தைக் கருங்கடலிற்
போக விட்டீர்
கொலைத்தொழிலிற் கொடியீர்நீர் செத்தாரைச் சுடுகின்ற
கொடுமை நோக்கிக்
கலைத்தொழிலிற் பெரியருளங் கலங்கினரக் கலக்கமெலாங்
கடவு ணீக்கித்
தலைத்தொழில்செய் சன்மார்க்கந் தலையெடுக்கப் புரிகுவதித்
தருணந் தானே.

கிடைத்தற் கரிதாகிய மனித சரீரத்தைத் தகனஞ் செய்வதைப்போல் பாபமான காரியம் வேறில்லை. இந்த வழக்கம் பெரும்பாலும் இந்துக்களிடத்திலேயே அதிகமாகக் காணப்படுகிறது. ஜீவகாருணியம் உடையவர்களைப் போலாக வேண்டுமென மேன் மேலும் முயன்று வரும் இந்துக்கள், (பிள்ளையைப்போல் வளர்த்த ஆடு, கோழிகளை புலாலுண்பவர் கொஞ்சமுங் காருணிய மில்லாமல் கழுத்தில் கத்தியை வைத்து அறுப்பதுபோல்) மாதா - பிதா - அண்ணன் - தம்பி யென்று அன்பு பாராட்டியவர்கள் இறந்துபோனால் அவர்களை மயானத்திற்குக் கொண்டு போய் நீசனென வெட்டியானிடம் ஒப்புவித்து, (புலாலுண்போர் கருவாடு சுடுகிற பாவனைபோல்) சுட்டுச் சாம்பலாக்கித் தண்ணீரிற் கலக்கி விடுகிறார்கள். இந்தச் செய்கையை மேற்கொண்டவர்கள் எப்படி ஜீவகாருணிய முடையவர்களாவார்களோ தெரியவில்லை. இது காரணத்தால் புலா

லுண்போர் என்று சில இந்துக்களால் இகழ்ந்து கூறப் பெற்ற இஸ்லாமானவர்களும், கிறிஸ்தவர்களும் தங்கள் வருணத்தவர் எவராயிருந்தாலும் மேல் - கீழ் என்று ஆரா யாமல் இறந்துபோன எல்லோரையும் ஒரே படித்தாய் அடக்கமே செய்து வருவதால், அவர்கள் இந்துக்களைப் பார்க்கினும் எத்தனையோ மடங்கு க்ாருணிய முடையவர்க ளென்று மதிக்க இடந்தருகின்ற தல்லவா? ஆனால் இந்துக் கள் தங்கள் சுற்றத்தார் இறந்துவிட்டால், அவர்களை அவ சியம் தகனஞ் செய்யத்தான் வேண்டுமென்கிற நிர்ப்பந்தமு மில்லை. ஏன்? இந்துக்களில் அநேக பிரிவினர்கள் புதைப் பதையே வழக்கமாகக் கொண்டுள்ளார்கள். அங்ஙனமி ருந்தும் இரக்க மில்லாமல் சுடுவதற்குத் துணிவுவந்தது என்கொண்டோ! அறியேம்.

திருவருட்பா.

கட்டாலுங் கனத்தாலுங் களிக்கின்ற பேயுலகீர்
　　கலைசோர்ந் தாரைப்
பொட்டாலுந் துகிலாலும் புனைவித்துச் சுடுகின்றீர்
　　புதைக்க நேரீர்
சுட்டாலுஞ் சுடுமெனுகண் டுமதுடம்பு துடியாதென்
　　சொல்வீர் நும்மைத்
தொட்டாலுந் தோடமுறும் விட்டாலுங் கதியிலைமேற்
　　சூழ்வீ ரன்றே.

இறந்தவர்களைக் கடவுள் கியாம (தீர்ப்பு) நாளில் எழுப்பி மஹ்ஷர் வெளியில் நிறுத்தி, அவரவர்கள் பாவபுண் ணிய சம்பந்தமான கேள்வி கணக்குகளைக் கேட்கப்போகி றார் என்றே, இஸ்லாமியர்கள் தங்கள் பிரேதங்களை பரிசுத் தத்தோடு அடக்கஞ் செய்கின்றனர். கிறிஸ்தவர்களும்

அதை யுத்தேசித்தே புதைக்கின்றனர். மகான்களும் அது காரணத்திற்காகவே தங்கள் சரீரங்களை திருமூலர் திருமந்திரம், அகஸ்தியர் வாதசௌமியம் முதலிய நூற்களிற் கூறியுள்ள சமாதிக்கிரியா லட்சணப்படி சமாதி வைக்கும்படி விதித்திருக்கின்றனர். அதை யுத்தேசித்தே வடலூர் இராமலிங்கப் பெருமானும் கண்டனமாகத் தமது திருவருட்பாவிற் கூறியுள்ளனர்.

திருவருட்பாவின் மகிமையையும், அந் நூலாசிரியர் பெருந் தன்மையையும் தமிழ்நாட்டு வாசிகளும், பிறரும் நன்கறிவார்கள். அப் பெரியார் இயற்றிய திருவருட்பாவிலிருந்து இந்த அத்தியாயத்திற் காட்டியுள்ள செய்யுட்களின் அபிப்பிராயப்படி, இல்லறம் - துறவற முடைய எவர்களையும் அவரவர் மதக் கோட்பாட்டின்படி பரிசுத்தமாக அடக்கம் செய்வதே சிறந்த கொள்கை. அங்ஙனம் செய்வதால், மகானாயிருந்தால் சரீரம் அழியாமலும், சாதாரண மனிதனா யிருந்தால் சரீரம் அழியப் பெற்றுமிருக்கும். அது அவரவர்களுடைய நன்மை-தீமையைப் பொறுத்ததே யன்றி நம்முடைய குற்றமாகா.

பிரேதங்களுக்கு சிலநாள் வரையில் தனஞ்செயன் என்கின்ற வாய்வு நீங்காமல் உள்ளடங்கி யிருப்பதால் சரீரமானது வீங்குதல் - வடிதல் என்ற நிகழ்ச்சியுண்டாகிக் கொண்டிருக்கிறது. அந்த வாய்வு வெளியேறுகின்ற வரையிலும், ஒருவித முடிவும் செய்யப்படாதென்று கருத வேண்டியதாயிருக்கிறது. அந்த வாய்வு வெளியேறுவது 3 நாளிலென்றும், கூடுதலாகவும் மதிக்கப் பெறுகிறது. வாய்வு வெளியேறிய நிச்சயம் தெரிகிற வரையில் பிரேதத்தை புதைக்கவாவது, சுடவாவது கூடாதென்று யுத்த

மத்தைத் தழுவிய பார்மியர்களும், சிங்களர் முதலானவர்களும் பலநாள் வரையில் பாதுகாத்து வைத்திருக்கின்றனர். அவர்களில் மிக்க ஏழைகளா யுள்ளவர்கள் 3 நாள் வரையிலாவது சுடாமல் வைத்திருந்து பார்த்து அதன் பின்னரே தகனஞ் செய்கிறார்கள். அன்றியும் அவர்களுக்குள் சண்டை சச்சரவு நேரிடும்போது "மூன்று நாளைக்குக் கூட பிரேதத்தை வீட்டில் வைத்துக்கொள்ள சக்தியற்றவன்" என்று வசை கூறுவதும் பழக்கமாக நிகழ்ந்து வருகிறது.

இஸ்லாமியர்களும், இந்துக்களும் மூன்றும் குழி மூடுதல் என்னும் வழக்கத்தை இன்றளவும் செய்து வருவதும் பிரத்தியட்சம். சிலர் பத்தாம் நாள் கிரியை என்றும், பதினாறும் நாள் கிரியை என்றும், நாற்பதாம் நாள் கிரியையென்றும் செய்துவருவதாலும், தனஞ்செயன் என்னும் வாய்வு இத்தனை நாளில்தான் பிரிந்து வெளியேறுகின்றதென்ற முடிவு நிருணயிக்க முடியாததாகவே யிருப்பதாலும் இந்த பாவமான காரியத்துக்கு ஆளாகாமல் புதைத்துவிடுகிறார்கள். அங்ஙனமிருக்க பிரேதத்தின் சிரசு முதலான அங்கங்கள் நெளிக்கும்படி தகனஞ் செய்வது என்ன பரிதாபம்!

குர்-ஆன் திருவேதத்தில், லக்த் கலக்னல் இன்சான் பீ அஹ்சனி தக்வீமின் தும்மர தத்னாகு அஸ்பல சாபிலீன் இல்லல்லதீன ஆமனூ வ அமிலுஸ்ஸாலிஹாத்தி என்று கூறப்பெற்றிருக்கிறது. அதாவது மனிதனை அழகான வடிவத்தில் சிருட்டித்தோம். அவர்களில் நல்வழியில் பாடுபட்டவர்கள் தவிர ஏனையவர்களை தாழ்ந்தவர்களிலும் தாழ்ந்தவர்களாகச் செய்து மீட்டிடுவோம் என்பதாம்.

நல்வழியில் சென்றவர்களாகிய மெய்ஞ்ஞானிகளுக்கு நெருப்பின் உபாதை கூடாதென்பதை யுணர்ந்தே இந்துக் கள் தமது பெரியார்களைச் சமாதி செய்கிறார்கள். அங்ஙன மில்லாத தமது மரபினரில் அஞ்ஞானிகளா யுள்ளவர்கள் நெருப்பு மயமான நரகத்துக்குப் போகிறார்கள் என்பதை நிரூபிக்கும் பொருட்டே பிரேதத்துடன் கையில் நெருப்பு கலசம் கொண்டு போகிறார்கள் என்று வியாக்கியானம் செய்யப் பெற்றிருக்கிறது.

திருவருட்பா.

பரனளிக்குந் தேகமிது சுடுவதப ராதமெனப்
 பகர்கின் றேனீர்
சிரனெளிக்கச் சுடுகின்றீர் செத்தவர்கள் பற்பலருஞ்
 சித்தசாமி
உரனளிக்க வெழுகின்ற திருநாள்வந் தடுத்தனவீ
 துணர்ந்து நல்லோர்
வரனளிக்கப் புதைத்ததிலை காணீரோ கண்கெட்ட
 மாட்டி னீரே.

பிரேதத்தைப் புதைப்பதால், ஆன்மாவானது மோட்சத்துக்குப் போகாமல் பிரேதத்தையே சுற்றிக்கொண்டிருக்கிறதென்றும், சுட்டுக் கொளுத்தி விடுவதால் நேரே மோட்சத்திற்குப் போய்விடுகின்றதென்றும், அதற்காகத் தான் கொளுத்துகிற வழக்கம் ஏற்பட்டிருக்கிறதென்றும் பெரும்பாலோர் எண்ணுகிறார்கள்.

ஆன்மாவானது மற்றொரு சரீரத்தைப் பற்றிக்கொண்டுதான் இந்த சரீரத்தை விடுகிறது என்றும், பிரேதத்தைச் சுடாவிட்டால் சரீரத்திற்குள்ளிருந்து வெளியேறிய ஆசாபாச மென்னும் (நப்சு) தீர் ஆவியானது பேய் பசாசாய்க்

கிளம்பி அவ்வுடலில் திரும்பவும் பிரவேசித்து அனேகருக்கு துன்பத்தை யுண்டாக்குமென்றும், அதனாலேதான் பிரேதத்தை தகனஞ் செய்கிறோமென்றும் கூறுகிறார்கள்.

சரீரத்தை விட்டு வெளியேறிய ஆசாபாச ஆவி முதலானவைகள் சூக்குமமாய்ச் சஞ்சரிக்கு மென்றும், நல்லோர் ஆவி முதலானவைகள் சூக்கும ஆன்மலோகங்களில் வசிக்குமென்றும், உலகப்போரசை யுடையவர்கள் ஆசாபாசமானது சிலகாலம் பேயாய் பசாசாய் அலையுமென்றும் புலனாகிறதே யன்றி பிணத்தினுள் பிரவேசிக்குமென்று ஞாயமிருப்பதாகத் தெரியவில்லை.

பட்டினத்தடிகள்.

அத்தமும் வாழ்வும் அகத்துமட் டேவிழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மியிரு
கைத்தல மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே
பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே.

ஔவை.

தாந்தாமுன் செய்தவினை தாமே யனுபவிப்பார்
... ... ... —வேந்தே
ஒறுத்தாரை யென்செயலாம் ஊரெல்லாம் ஒன்றாய்
வெறுத்தாலும் போமோ விதி

என்பதனால் அவரவர் வினையை அவரவர்களே அனுபவித்து தீரவேண்டும் என்று புலப்படுகிறது.

அங்ஙனமிருக்க செத்தவன் சூத்தில் சுக்குப்பொடியை ஊதினதுபோல் தன்னுணர்வில்லாமல் இறந்தவனுடைய ஆன்மாவுக்கு மோட்சம் கொடுப்பதாக நினைந்து, பிரேதத்தின் தலையில் தேங்காயாலடித்தும், மாங்காயாலடித்தும்,

கல்லாலடித்தும், நெல்லாலடித்தும் கபால மோட்சங்கொடுக்க நினைப்பதும், இவர்கள் செய்யும் பற்பல கிரியாம்சங்களால் இறந்தவனுக்கு முத்தி கிடைப்பதாக நினைப்பதும் என்ன விபரீதம்! என்ன பரிதாபம்!

ஒருவனுடைய பசிக்கு மற்றொரு சாதாரண மனிதன் சாப்பிட்ட கதைபோல், ஒருவன் ஆன்மாவுக்கு மற்றொருவன் செய்யுங் கிரியைகளால் மோட்சங் கிடைக்குமென்றெண்ணுமிந்த உபாயத்தை எந்தப் பரம குருவிடத்திற் கேட்டுணர்ந்தார்களோ தெரியவில்லை.

அப்படியானல் பணம் படைத்தவன் தன் வாணுள் முழுவதும் வீணை பற்பல துர்க்கிருத்தியங்களைச் செய்துவிட்டு இறந்துபோனுல், அவன் சந்ததிகள் தினந் தினம் செய்யுங் கிரியைகளினுல் பூரணமான மோட்சத்தைக் கொடுத்துவிடலாம் போலிருக்கிறதே?

அன்றியும், சன்னியாசந் தாங்கிய பிராமணப் பிரேதத்தைச் சமாதி வைக்கும்போது தேங்காயைக்கொண்டு மண்டையை உடைத்து, கொஞ்சமேனும் இரக்கமில்லாமல் பிரேதத்தின் சிரசைப் பிளந்துவிடுகின்றனர். ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? என்று கேட்டால், சிரசைப் பிளந்து பிரம்மரந்திரத்தின் வழியாக, உள்ளடங்கிய வாயுவை வெளியேற்றி கபால மோட்சம் கொடுக்கிறோமென்கின்றனர். ஆனுல் சன்னியாசம் பெருத ஏனைய பிராமணப் பிரேதங்களை என்ன மோட்சத்திற்கு அனுப்புகிறார்களோ தெரியவில்லை!

மோட்சமென்றால் வாயைப் பிளந்துகொண்டு பிராணனை விட்டுவிடுவதல்ல! இந்தநேரத்தில்தான் தனக்கு உயிர் நீங்கிவிடப்போகிறதென்று உணராதவர்கட்கு நாம்

செய்கிற கிரியைகளால் மோட்சமும் உண்டாகுமோ ? சிந்தித்துப்பாருங்கள்.

ஞானவெட்டி.

யோனிக்கு ளாசை யொழியா தனித்தியம் உங்களுயிர்
தேனுக்கு ளின்ப சுகாதீத மோவரும் சிற்றின்பத்தில்
ஊனற்றுக் காயம் உடலற்றுப் போம்பொழு தொன்றறியா
ஈனர்க்குச் சொர்க்கம் சுடுகா டொழிய இனியில்லையே.

தங்கமும் - செங்கல்லும், வயிரமும் - கூழாங்கல்லும், உறவினரும் - பகைவரும், வறுமையும் - செல்வமும், காடும் - வீடும், வைதவனும் - வாழ்த்தினவனும் - பெரியோரும் - சிறியோரும் சமமாக ஒருவனுக்கு எப்போது மனதில் உண்மையாகத் தோன்றுமோ, அப்போதுதான் மோட்சம் என்பது இத்தன்மையானது என அவனுக்கு புலப்படும்.

ஞானபூபதிகள்—தோத்திர மஞ்சரி.

காடு வீடுபொன் ளோடு பெரும்பகை
காதல் நட்பு கனிந்துசெய் நல்வினை
ஆடு தீவினை யின்பதுன் பஞ்சம
ஞக்கி யாசை யகற்றியெ னுள்ளமொன்
றோடு சம்பந்த மாய்க்கல வாமலே
உண்மை சேரும் படிவழி காட்டுவாய்
கோடி மங்கல மாநகர் வாசனே !
கோல மாமயி லூர்முரு கேசனே !

மோட்சம் என்பது சொர்க்கலோகத்தில் அரம்பா ஸ்திரீகளுடன் பொற்கட்டிலில் அம்சதூளிகா மஞ்சத்தில் சயனித்து வாழ்வதென்று சிலர் எண்ணிக் கொள்ளுகின்றனர். வேதாந்த நூற்களிலும், மகான்கள் திருவாக்காலும் இதால்

லிப்பெறுகின்ற-மோட்சமானது அத்தன்மைத்தல்ல. சகல ஆசையும், மனமும் நசித்து, விருப்பு - வெறுப்பற்று பரப்பிரம்மத்தில் இரண்டறக்கலத்தலே உண்மையான அந்தரங்க மோட்சமாகும். ஒருவன் மனம் எவ்வளவுநேரம் ஆனந்தத்தோடிருந்ததோ அதுவே சொர்க்கம் என்றும், எவ்வளவு நேரம் துக்கத்தோடிருந்ததோ அதுவே நாகம் என்றும் நிச்சயிக்கப்பெற்றிருக்கிறது.

செத்தபிணத்தின் சாம்பலை கங்கையில் கலக்கிவிட்டால் மோட்சம் கபாலத்தை யுடைத்துப் பிளந்துவிட்டால் மோட்சம் என்று கருதும் அநியாயச் செய்கையானது எந்த மகானுடைய உபதேசமோ! இந்த அநுட்டானத்தை எந்தப் புண்ணியவான் பழக்கினனோ! எந்தக் கருமகாண்டத்தின் துர்ப்போதனையோ! தெரியவில்லை. இப்படி மண்டையை யுடைத்துப் பிளப்பதால் இலகுவாக மோட்சத்துக்கு வழியிருந்தால் அடியிற் கண்டபடி,

தாயுமானவர்.

மரவுரி யுடுத்துமலை வனநெற் கொறித்து முதிர்
வனசருகு வாயில்வந்தால்
வன்பசி தவிர்த்துமனல் வெயிலாதி மழையால்
வருந்தியும் மூலவனலைச்
சிரமன வெழுப்பியு நீரினிடை மூழ்கியும்

பலநாள் மகான்கள் வருந்தி ஏன் தவஞ்செய்ய வேண்டும் என்பது மிகவும் கவனித்தற்பாலதாம்.

சில ஞானிகள் நடை-உடை பாவனைகளால் உலகத்தாரைப்போல் நடிக்கிறார்கள். அவர்களை உலகத்தாரெண்ணிக் குறைவுசெய்துவிட்டால், உலகம் பாழாகி

விடுமே என்கிற் காருண்ணிய மேலீட்டால் இவ்வாறு ஆத்திரத்துடன் கூற நேர்ந்ததே யன்றி, வேறெவ்வித துவேஷமுமில்லை. ஆகையால் உண்மை இன்னதென்றுணர்ந்து நன்னெறியைக் கைக்கொண்டுய்யுங்கள்.

மறந்துபோன சரீரத்தை இறந்துபோனதாகக் கருதி சனங்கள் தத்தம் மனம் போனபடி சுட்டுக் கொளுத்துவதால் அறிவுடையார் எச்சரிக்கையாயிருந்து, வந்த காரியத்தைப் பூர்த்திசெய்து கொள்வார்களாக.

குணங்குடி வள்ளல்.

பாடையிலே துறவடைந்து பரமடைந்த குணங்குடியார்
பகர்ந்த ஞானம்
பாடையிலே துறவடைந்து பரமடைந்தா னந்தசுகம்
படைத்தி டாரைப்
பாடையிலே போட்டுமிடு காட்டிலிடப் படுமுனையும்
பலரு மந்தப்
பாடையிலே போட்டெடுக்க நாள்வருமென் றறிந்திலையே
பாவி நெஞ்சே.

சாகாமற் செத்திருக்குஞ் சற்குருவின் குணங்குடியைச்
சார்ந்தோ மாகிற்
சாகாமற் செத்திருக்குஞ் சாயுச்ய பதந்தருஞ்சாட்
சாதி யாக்குஞ்
சாகாமற் செத்திருக்குந் தன்மயத்தோர்க் குற்றபெருந்
தகையுங் காட்டுஞ்
சாகாமற் செத்திருக்கு முத்தியுஞ்சித் தித்திடுங்காண்
டனக்குத் தானே.

## இருபத்தோராவது அத்தியாயம்.

## ஆன்ம விளக்கம்.

---

### பதினான்குசீர் விருத்தம்.

பூமிநீர் முதலாய்ச் சித்தமீ ருகப்
புகன்றதத் துவங்களா றாறும்
பொருந்தகக் கருவி யாகவு மோரைம்
பூதகா ரியங்கள்கா ணாறும்
வாமமார் வாயு தசந்தச நாடி
வசனமைந் தொருசதுர் வாக்கு
மன்னுமுக் குணங்கள் வைதசத முதலாய்
வழுத்தகங் காரமோர் மூன்றின்
நாமமார் அறுபான் தத்துவங் களையு
நவில்புறக் கருவியா கவும்பன்
னலமலி சீவான் மாபர மான்மா
நாலையை யாவரு மெளிதில்
ஏமமின் மொழியாற் கரதலா மலக
மென்னநன் கறிந்தினி துணர
எமக்கருட் பரமா சிரியரன் றிசைத்த
விசைப்படி விரித்தெடுத் துரைப்பாம்.

ஆன்மா எனினும், ஆத்துமா எனினும் ஒன்றே. ஆன்மா - பிராணன் - பசு - உயிர் - புற்கலன் - சீவன்-சேதனன்-அணு -இயமானன் - ஆதன் - செந்து - ஆவி - பூதம்- உறவி-கூத்தன் - நாயகன் என்பன ஒருபொருட் பல பெயர்.

சிலர் ஆன்மா வேறு, பிராணன் வேறு என்று சாதிக்கின்றனர். பிராணன் போய்விட்டதற்கு ஆத்துமாபிரிந்துவிட்டதென்று சொல்லிக்கொள்வதை அறியார்போலும்.

## சரீர ஆன்ம விசாரணை.

ஒவ்வொரு மனிதனுக்கும் தேகம் - ஆன்மா என்னும் இரண்டு பொருள்கள் இருக்கின்றன. இவ்விரண்டில் தேகம் தூலமாயும், ஆன்மா சூக்குமமாயும் உள்ளது. தேகத்துக்கு நிறையுண்டு; அளவும் ரூபமும் இருக்கின்றன. ஆன்மாவுக்கு அவையில்லை. ஆகலின் சாமானியமாக யாருக்கும் தேகத்திலேயே அபிமானம் உண்டாகிறது. ஆன்ம ஆனந்தமானது, அதை அனுபவிக்கும் ஞானிகளுக்கே தெரியுமன்றி - மற்றவர்கட்குத் தெரியாது. உதாரணம்:—ஒருவனுக்கு சுகந்த பரிமளமுள்ள ஒரு கலவைச்சந்தன வில்லை தருவதாகவும், சந்தனத்தைப் பூச வேண்டாம் என்பதாகவும் சொன்னால் பயன்படாது. அந்த வில்லையின் வாசனையை அனுபோகத்தில் அறியாத வரையில் சந்தனமே சிலாக்கியம் என்பான். அதுபோல் தேகம் பிரத்தியட்சமாகத் தெரிகிறது; அதனால் பலவித ஆனந்தங்களை அனுபவிப்பதும் தெரிகின்றது. ஆன்மாவோ அங்ஙனமன்று; அது கண்ணுக்குத் தெரியாத பொருள். அதன் குணம் இன்னதென்று தெரியவில்லை. ஆதலால் தெரியாத சங்கதியைப்பற்றி யோசிப்பதில் என்னபிரயோசனமென்று வாளா விருந்துவிடுகிறார்கள். ஆயினும் ஒரு காலத்தில் ஆன்மாவைப்பற்றித் தீர்க்கமாய் விசாரிக்கிறார்கள். அதாவது:—ஒரு மனிதன் இறந்த தருணத்தில் மயான ஞானமுண்டாகி, மனிதன் ஆடியோடுவதெல்லாம் வீண் பிரயாசை என்று அறிந்து, ஆன்ம விசாரணை செய்ய ஆரம்பித்து, அடடா! செத்துப்போனவன் எங்கே போனான்? அவனுடைய சரீரமோ சாம்பலாயிற்று, அல்லது புதைக்கலாயிற்று. ஆன்மா என்ன கதி ஆயிற்று என்று கேள்விகள் கேட்கத் தொடங்குகிறார்கள். இப்படிக் கேட்டவுடன்

தன் சரீரத்தையும், மற்றப் பொருள்களையும் பார்த்துப் பரிசீலனை செய்கையில், எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாய் மாறுகிறதென்றும், இலயத்தை அடைகிறதென்றும் எண்ணுகின்றனர்.

விதைகளிலிருந்து செடிகளுண்டாகி, அச் செடிகளில் காய் - கனிகளுண்டாகி, மறுபடியும் அக்கனியில் விதைகளுண்டாகி உதிர்ந்து, முன்போல் செடி - மரங்கள் முளைக்கின்றன. இப்படியே உலகத்திலுள்ள சகல உயிர்களும் மாறிக்கொண்டிருக்கின்றனவென்று பலர் மதிக்கின்றனர்.

ஆன்மாவானது சீவான்மா - பரமான்மா என இருவகைத்தாகும். பரமான்மா அரசனைப்போலவும், சீவான்மா அவ்வரசனுக் குள்ளடங்கிய தேசாதிபதியைப் போலவும் ஐக்கியப்பட்டிருக்கிறது. ஆகையால், மகான்களெல்லாம் பரமான்மாவை அறிவதற்கே அரும் பெரும் பாடு படுகிறார்கள். கண்டத்திலுள்ளது சீவான்மா. இது இறக்கும். சிரத்திலுள்ளது பரமான்மா. இது இறக்காது.

ஒரு தேகத்தில் சீவான்மா பிரவேசிப்பதே பிறப்பென்றும் அது தேகத்தைவிட்டு நீங்குவதே இறப்பென்றும் சீவான்மா ஒரு சரீரத்தில் சிலகாலம் வசித்து, அதைவிட்டு நீங்கி மற்றொரு சரீரத்தில் பிரவேசிப்பது (*) புனர்

---

(*) மறு பிறப்பு என்பதுதான் மாற்றிப் பிறப்பது. அது சூக்கும காரண சரீரங்க ளெடுக்கும் அப்பியாசிகளுக்கு நன்கு விளங்குமேயன்றி மற்றவர்களுக்கு தெளிவாய் விளங்காது. இது சம்பந்தமாக வேதாந்த பாஸ்கரன் துறவு அத்தியாயத்தில் சவித்தாரமாகக் கூறப்பெற்றுள்ளது.

மாற்றிப் பிறக்க வகையறியா மாந்தர் செயல்
ஆற்றிற் கரைத்த புளியாம்.

சென்மமென்றும் சிலசர்ரார் எண்ணுகிறார்கள். பிறப்பின் உண்மைதானென்ன வென்பதை குறிப்பாக எழுதினலோ சாமானியர்களுக்கு விளங்காது; அதைப் பிரித்தெழுதும் படிக்கும் உத்தரவில்லை. அவ்விய மாகத் தெரிந்துகொள்ள வேண்டியவர்கள் குர்-ஆனில் இதில் முஹ்றி மூன நாக்கிசூ, நன்ஷிஅக்கும் பிமாலா தஉல மூன் என்னும் ஆயத்தின் பொருளையும், முகியித்தீனிபுனு அறபி, மௌலானுறூமி, கஸ்ஸாலி இமாம் முதலானவர்கள் நூற்களையும் தேர்ந்து அறிந்து கொள்ளவும்.

## ஆன்ம தெரிசனம்.

மனமானது, (*) சத்துவ-இராசத - தாமதம் என்னும் முக்குணங்களை யுடையதாய் இருப்பினும், சத்துவ குணத்தையே அதிகமாகப் பொருந்தியுள்ளது. அங்ஙன மிருந்தும் இராசத - தாமத குணத் தன்மையையே மனிதன் அதிகமாகக் கொள்வதால் ஆன்மாவை அறிய அசத்தனுகிறான். பெரிய ஒரு தூண் ஒரு சிறிய பொந்தில் நுழைய முடியாது. அதுபோல், மேன்மை பொருந்திய சத்துவ குணத்தால் தெரிசிக்கக்கூடிய ஆன்மாவை இராசத-தாமத குணத்தால் காணமுடியா. கண்ணாடிக்குள்ள பளபளப்பு மண்சட்டிக்கு வராது. கண்ணாடியில் பிரதிபிம்பம் தோன்றுகிறதே யன்றி மண் சட்டியில் தோன்றுகிறதில்லை. அது போல், மண்சட்டி போன்ற பாவம் நிறைந்த உள்ளத்தினை

(*) இந்த முக்குணங்கள் இன்னின்ன வாரத்தில் இன்னின்ன குணங்கள் உதயமாகிறதென்றும், அதை யறிந்தால் ஆன்மலாபம் அடைவதற்கு சாதகமென்றும் வேதாந்த பாஸ்கரன் 2-வது பதிப்பில் சத்துவாதி முக்குணம் என்ற அத்தியாயத்தில் கூறப்பெற்றுள்ளது.

ராகிய இராசத-தாமத குணம் மலிந்த மனிதர்களுக்கு கடவுள் பிரத்தியட்சமாகிறதில்லை. கண்ணாடிபோலும் சித்த சுத்தியையுடைய சத்துவகுண சர்துக்களுக்கு கடவுள் எப்போதும் தரிசனம் கொடுக்கிறார்; அவரைக்கண்டு அவர்கள் சதா ஆனந்தத்தை அடைகின்றனர்.

மகான்களுடைய மனம் உலக சுகத்தில் திரும்பாமல் இருப்பதால், சில வேளைகளில் உலகத்தார்கள் அவர்களை பைத்தியக்காரர்கள் என்கின்றனர். பைத்தியமானது உலகத்தவர்களைத்தான் பலமாய்ப் பிடித்துக்கொண்டதேயன்றி அவர்களைப் பிடிக்கவில்லை. அவர்கள் ஆன்மாவை தரிசிப்பதில் பைத்தியம் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் உலக சுகத்தை அடைவதில் பைத்தியம் கொண்டிருக்கிறார்கள். அந்தப் பைத்தியம் முத்தியையும், இந்தப் பைத்தியம் துக்கத்தையும் தருகின்றன.

### சீவான்ம—பரமான்ம பேதம்.

ஆன்மாவானது ஒன்றேயெனினும் சிற்சில குணபேதத்தால், சீவான்மா—பரமான்மா என இருவகைப்படுகின்றது. சீவான்மாவும் - பரமான்மாவும், உடலும் - உயிரும், மரமும் - நிழலும், பொன்னும் - ஒளியும் போன்றவை. உடலில்லாமல் உயிரும், உயிரில்லாமல் உடலும், மரமில்லாமல் நிழலும், நிழலில்லாமல் மரமும், பொன்னில்லாமல் ஒளியும், ஒளியில்லாமல் பொன்னும் எங்ஙனம்பிரிக்க முடியாதோ, அதுபோல் பரமான்மாவின் சம்பந்தமில்லாமல் சீவான்மா தனித்திருத்தல் முடியாது. ஆயினும் சில விசேடத்தால் இரண்டென்றும், ஒன்றென்றும் சொல்லும்படி நேரிடுகிறது.

பரமான்மாவானது, உயிர்களுக்கு அவரவர் செய்கைகட்குத் தக்கவாறு பலாபலன்களைத் தருகின்றது. சீவான்மாவானது அந்தப் பலா பலன்களை அநுபவித்துக் கொண்டு வாழ்கின்றது. எனினும், தத்துவ தரிசிகளாகிய பிரம்மஞானிகள் மாத்திரம் சீவான்மா-பரமான்மா என்று பிரித்தறிகிறதில்லை. ஏனெனில், அவர்கள் 'எல்லாம் கடவுள் செயல், அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்னும் நிச்சய விவேக கோசமுடையவர்கள். ஆதலால், அவர்களுக்கு எல்லாம் ஒன்றே! ஏனைய சீவர்கள், காண்பானும் காட்சியுமாகிய திருக்குத் திரிசியம் உடையவர்கள். ஆதலால் அவர்களுக்கு இரண்டாகின்றன.

பரமான்மா என்றும், சீவான்மா என்றும் பகுத்தறியப்படாத ஆன்மாவானது நித்தியமாயும், பரிசுத்தமாயும், பிறப்பு-இறப்புநீங்கியதாயும், இருக்குமெனின், பிரகிருதிவடிவமான தூலதேகத்தில் சம்பந்தப்பட்டு சுகாசுகங்களை அநுபவிக்கவேண்டிய காரணம்யாது எனக் கேட்கப்படுமாயின், அவரவர் செய்த நல்வினை - தீவினை என்னும் இருவினைக் குலால சக்கரத்தில் கட்டுண்டு, சனன - மரணங்களைப் பொருந்தி அநுபவிக்கின்றதெனச் சிலர் கொள்வர். அவற்றுள் வினையானது சீவான்மா தன் மனசாட்சி யறியச் செய்த கருமங்களினது பலாபலன். கடவுளுக்குத் திருத்தியாக நடத்திய கருமம் நல்வினை; அவருக்கு விரோதமாக நடத்தியதெல்லாம் தீவினை. இவ்வித இருவினைகளும் வளர்ந்தோங்கச் செய்தது சீவான்மாவேயாகும். அதாவது தூலதேகமாவது தான் என்றும், அதைச் சேர்ந்த சுகதுக்கங்கள் தன்னுடையதென்றும் எண்ணி மயங்குவதினாலேயே வினைகள் உண்டாகின்றன. இந்த அஞ்ஞானத்தினாலேயே

காமக் குரோதாதிகள் ஏற்பட்டு, சீவான்மாவானது கருமங்களுக்கு உட்படுகிறது.

சீவான்மா தீவினைகளைச் செய்யாதிருக்கும்படி கடவுள் தடுத்து ஆளக்கூடாதோ எனின், கடவுளானவர் சீவான்மாவின் நன்மையைக் கருதி 'நன்மை கடைப்பிடி - தீவினை அகற்று' என்ற சுருதிப் பிரமாணத்தையும், சுதந்தரத்தையும் கொடுத்திருக்கிறார்.

ஒரு தனவந்தர், ஒருவனுக்கு பதினாயிரம் ரூபாய் முதலைக் கொடுத்து, "இதைக் கொண்டு வியாபாரம் செய்து பிழைத்துக்கொள்" என்று கடன் கொடுக்கிறார். அதைக் கொண்டு அவன் ஒழுங்காக வர்த்தகம் நடத்தி சேமகாம் அடைந்தால், அவன் யாவராலும் நன்கு மதிக்கப்பெற்று வாழ்வான். ஒழுங்கின்றி நடந்து, முதலாளிக்கும் தொகையைச் செலுத்தாதிருந்தால் வாரண்டு - சப்தி முதலிய நிர்ப்பந்தங்களுக்குள் அகப்பட்டுத் தண்டனையையும் அடைவான். அதுபோல், கடவுள் வேதங்களிற் கூறியிருக்கிறபடி தீவினை செய்தவனுக்குத் தீமையையும், தீவினைக்குப் பயந்து நடந்து நன்மைசெய்து வந்தவனுக்கு நன்மையையும் அளிக்கின்ற எசமானனாயிருக்கின்றனர். எல்லாம் கடவுள் செயலாயிருந்தாலும், சிவச்செயல் என்றும், சீவச்செயல் என்றும் பிரிக்கப்பட்டிருப்பதால் நாம் பாவக் கருமங்களைப் புரிந்துவிட்டு, எல்லாம் கடவுள் செயல் என்று சொல்வது மூடத்தனமாகும்.

பட்டினத்தடிகள்.

எல்லா மறிந்து படித்தே யிருந்தெமக் குள்ளபடி
வல்லா னறிந்துள னென்றுணா ராது மதிமயங்கிச்
சொல்லான் மலைந்துறு சூழ்விதி யின்படி துக்கித்துப்பின்
எல்லாஞ் சிவன்செய லேயென்பர் காண்கச்சி யேகம்பனே.

(*) காமம்-குரோதம் - உலோபம் - மோகம் - மதம்-மாற்சரியம் என்னும் உட்பகையாகிய ஆறு பகைகளுக்குள் அடங்கிய பிரபஞ்ச வாழ்க்கைகள் யாவும் சீவான்மாவினது செயலேயன்றிக் கடவுள் செயலன்று.

கைவல்லிய நவநீதம்.

இந்தச் சீவனால் வரும்அறு பகையெலாம் இவன்செய லென்னாமல்
அந்தத் தேவனால் வருமென்ற மூடர்கள் அதோகதி யடைவார்கள்
இந்தச் சீவனால் வருமறு பகையெலா மிவன்செய லல்லாமல்
அந்தத் தேவனு லன்றெனும் விவேகிகள் அமலவீ டடைவாரே.

## ஆன்ம மோட்சம்.

ஆன்மாக்கள் அடைகின்ற பதவியானது கைவல்லியம் என்றும், பிரம்மானந்த கைவல்லியம் என்றும் இருவகை. சீவான்மா தனது இயற்கை யிருப்பிலேயே பரமசுகத்தை அடைவது கைவல்லியம். பரப் பிரம்மத்தைப் போலவே பரிபூரண சுகத்தை அடைவது பிரம்மானந்த கைவல்லியம். இதற்கு சாயுச்சிய பதவியென்றும் பெயர். சாயுச்சியமென்றால் ஐக்கியமென்று பொருள். எனினும் எந்தக்காலத்திலும் சீவான்மாவானது பரப்பிரம்மத்துடன் அவ்வளவு

(*) (i) காமம் :—மடமாதர்கள் சல்லாபத்தையே உல்லாசமாகக் கொள்ளுதல். (ii) குரோதம் :—கோபாவேசத்தினால் பிறருக்குத் தீமை விளைக்க எண்ணுதல். (iii) உலோபம் :—சம்பாதித்த பொருளை பூதம்போல் காத்துக்கொண்டு பிறருக்கும் ஈயாமல், தானும் உண்ணாமல் உலோபத்தனம் செய்தல். (iv) மோகம் :—மண் பொன் முதலானவைகளிடத்து அதிக ஆசைகொண்டு மேன்மேலும் சம்பாதிக்க விரும்புதல். (v) மதம் :—செல்வச் செருக்கால் பிறரை மதிக்காதிருத்தல். (vi) மாற்சரியம் :—பிறர் வாழ்வைக் கண்டு பொறாமை கொள்ளுதல்.

பூரணமாகப் பொருந்துகிறதில்லை. பரப் பிரமத்தைப்போல் சீவான்மாவானது பரிபூரணசுகத்தை அடைவதனால், பிரம்மானந்த கைவல்லியத்தைச் சாயுச்சியபதம் என்னலாயிற்று. ஒருவாறு இதைச் சாரூப்பியபதம் என்று சொல்வதே தகுதியாகும்.

(*) பஞ்ச கோசங்களினாலும், சரீரத் திரயங்களினாலும் மறைக்கப்பட்டிருக்கும் சீவான்மாவானது, அவைகளைப் படிப்படியாக விட்டொழிந்து மோட்சத்தை அடையுமேயன்றித் தூலம் எடுக்காது. ஆனால் பரமான்மாவிடம் நித்தியானந்த சுகம் அடைய சின்மாத்திரையான சூக்குமதேகம் எடுக்கும். எனினும் சீவான்மாவும் பரமான்மாவும் ஒன்றாகிறதில்லை. சீவான்மாவானது பூரண சித்தியை அடைந்தபோது பரமான்மாவின் சன்னிதியில் பிரவேசித்து, தான் மாத்திரம் தனியாகவும் இயற்கையுடன் சனன மரணம் அற்றதாகவுமிருந்து, பரமான்மாவின்

---

(*) பஞ்சகோசங்களாவன :—அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் என்பவைகள்.

இவைகளில் தாதுக்களாலெடுத்தது அன்னமயகோசம். அன்னசாரத்தினாலே பிராணனும் பலனும் அடங்கியது பிராணமயகோசம். பலத்தினாலே வந்து தோற்றப்பட்டது மனோமயகோசம். அம்மனத்தின்கண்ணே தோற்றப்பட்டது விஞ்ஞானமாதலால் அது விஞ்ஞானமயகோசம். வித்தையால் அல்லது கல்வியால் ஞானம் வந்துதோற்றும், அதுவே ஆனந்தமயகோசம்.

சிவஞான சித்தியார்.

தூலமா மன்ன கோசம் தூலத்தில் பிராண னுற்றால்
வாலிய பிராண கோசம் மன்னும்பின் மனோ மயத்தால்
சாலவே புத்தி யுற்றால் தரும்பின்விஞ் ஞான கோசம்
ஏலவே விடய முன்போ லியன்றது கோச மாமே.

சமூகத்தில் சுதானந்தத்தை அனுபவிக்கும். இதுதான் முத்தி என்னும் பதம். இதுவே மனிதனுக்கு முடிவாகிய கிரீடம்.

## ஆன்ம சுத்தி (தன்னை யறிதல்.)

ஐந்து விடயங்களையும், இத்தன்மையவென்று ஞானேந்திரியங்களால் அறிந்து, கன்மேந்திரியங்களால் பற்றி, அந்தக் கரணங்களினால் அவற்றுள் அழுந்தும் கிஞ்சிக்ஞ போதத்தை ஆன்மாவானது, இயற்கைக் குணமன்றென்று உன்னி, மதுபானம் கொண்டோனுக்கு இலகிரி தோன்றியதுபோல் அவ்விருவகை இந்திரியங்களையும், கரணங்களையும் கூடியவிடத்துத் தோன்றிய விடயபோதம் இஃதென்றறிந்து. அவ்விந்திரியங் கரணங்களோடும் அப்போதத்தை நீத்து தன்னை அறிந்தகாலத்து, இந்திரியங் கரணங்களையும் தனக்கு வேறாகப்பிரித்து, தன்னை அறிவித்தது திருவருள் எனக்கண்டு, அத்திருவருளின் வடிவாகியிருந்து, தான் மலமுமகாமல், பரமுமாகாமல், அபபரானந்தத்தில் இரண்டற அழுந்தி நிற்பதுவே ஆன்ம சுத்தி.

இச்சா ஞானக்கிரியைகள் சிவ தத்துவங்களைச் செலுத்த, சிவதத்துவம் கலாதிகளைச் செலுத்த, கலாதிகள் ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளை எழுப்ப, அதில் ஆன்மாவின் இச்சையானது அந்தக் கரணங்களினிடத்தும், ஞானமானது ஞானேந்திரியங்களினிடத்தும், கிரியையானது கன்மேந்திரியங்களினிடத்தும் நின்று விடயங்களைப் பகுத்தறிந்து பற்றி அழுந்தி நிற்கும். ஆகலின், இவ்விருவகை யிந்திரியங்களும், கரணங்களும் நீங்கவே, ஆன்மாவின் இச்சா ஞானக்கிரியை நீங்கும். அந்த நீங்கலாகிய சக்திகள் நீங்கும். அவை நீங்க சிவதத்துவங்களும் நீங்கும். அவை நீங்க, தன்னை உள்ளபடி அறியவரும்

மகா பராக்கிரமமுடைய சீராவியானது, இயந்திரங்களின் ஒத்தாசையின்றி ஒரு காரியத்தையும் செய்ய முடியாததுபோல், ஆன்மாவானது சரீரத்தின் ஒத்தாசையின்றி யாதொரு கிரியையும் செய்யமுடியாது. சீராவியின்றி இயந்திரங்கள் தாமாகவே ஒன்றையும் செய்ய முடியாதது போல், ஆன்மா நீங்கிய பிரேதத்தினால் யாதுதான் செய்யமுடியும்?

சரீர சீவ வாதம்.

சரீரம் இருப்பதுமட்டும் தெரிகின்றதேயன்றி ஆன்மா என ஒன்றிருப்பது எல்லாருக்கும் சர்வ சாதாரணமாய்ப் புலப்படுவதில்லை. இதை விளக்கும் சரித்திரமொன்றுளது. அதாவது சரீரம் - இந்திரியம் - அந்தக்காணம் - பிராணவாயு - சீவன் என்பவைகட்குள் யார் பிரதான புருடன்! என்னும் வாக்குவாதம் உண்டாயிற்று. சரீரம் தானே பிரதானபுருடன் எனக் கூறிற்று. இந்திரியங்களுள்ளே மெய் என்னும் சரீரமானது நான்தான் பிரதான புருடனென்றது. வாய் - நான்தான் பிரதான புருடனென்றது. கண் - நான்தான் பிரதான புருடனென்றது. செவியும் அவ்வாறே சொன்னது. இப்படி ஞானேந்திரியங்கள் ஒவ்வொன்றும் தனித்தனி பிரதான புருடத்துவம் தமக்கேயுண்டென்று வாதித்தன. கன்மேந்திரியங்களுள் வாக்கு நான்தான் பிரதான புருடனென்றது. பாதமும்-பாணியும் - பாயுருவும் - உபத்தமும் அவ்வாறே கூறின.

அந்தக் கரணங்களுள் மனம் தானே பிரதான புருடனென்றது. புத்தியும்-அகங்காரமும்-சித்தமும் அவ்வாறே கூறின. இவை யெல்லாவற்றையுங் கேட்டிருந்த பிராணவாயு, யான் உட்புகுந்து இயக்கிய பொழுது யாவும்

இயங்குகின்றன! யான் வெளியே சென்றுவிடின் ஒன்றும் இயங்குவதில்லை! ஆதலால் எனக்கே பிரதான புருடத்துவ முண்டென்றது. அது கேட்ட சீவன் மிகவும் நகைத்து, நீங்கள் யாவரும் எனது ஏவலர்கள்; யானே உங்களை வைத்து இயக்கி உலக விடயங்களை உணர்ந்து இன்பதுன் பங்களை நுகர்வேன்; என்னுடைய இச்சைப்படியே நீங்கள் தொழில் செய்வதன்றி உங்களுக்கு யாதொரு சுதந்தரமு மில்லை; ஆதலால், நீங்கள் பிரதான புருடராக மாட்டீர்கள்; யானே பிரதான புருடனுமென்றது. அவ்வார்த்தையை சரீரமும் ஞானேந்திரிய-கன்மேந்திரியங்களும், அந்தக் கரணங்களும், பிராண வாயுவும் ஆகிய இவைகள் கேட்டு, நாங்கள் இத்தனை பெயர் இருக்க நீ மாத்திரம் பிரதான புருடனுவதெப்படி? உன் வார்த்தையை நாங்கள் ஒத்துக்கொள்ளோமென்றன. அதனால் அவைகளுள்ளே பிணக்கு நேர்ந்து பெரிய வாக்கு வாதமுண்டாயிற்று. ஒருவகையானும் சமாதானமுண்டாகாமல் முரண்பட்டு வாதஞ் செய்து கொண்டிருந்தன.

அவ் வழியேபோன ஒரு பெரியவர் அதைக்கண்டு மனமிரங்கி, அவைகளை சமாதான மாக்க எண்ணி, நீங்கள் இப்படி வாக்குவாதஞ் செய்து முரண்படாது சமாதான முறல் வேண்டும் என்றனர். அவை ஒவ்வொன்றும் தனித் தனி வீரம்பேசி, என்னை யல்லாமல் வேறு பிரதான புருடனுமுண்டோ! வென வாதித்தன. சீவன் அப்பெரியாரை வணங்கி ஐயா! அடியேன் பூர்வ புண்ணிய வசத்தால் இந்த உடல் முதலிய சாதனங்களைப் பெற்றேன். இவைகளைக் கொண்டு நல்வினைப் பயனாகிய இன்பத்தையும், தீவினைப் பயனாகிய துன்பத்தையும் அநுபவிக்கின்றேன். அவ்

வருபவகாலத்தில் வந்தேறுகின்ற (*) ஆகாமியமும் எனவே சார்கின்றது. வினைசெய்தலும் அதன் பயனை யனுபவித்

(*) மதி, விதி யென்று இரண்டாம். அவற்றில் ஆகாமியம் சஞ்சிதம், பிராரத்தமென மூன்றும். இவ்வகளிற் சுயஞ் சைதன்னியத்தி லுண்டான சங்கற்பமே பந்த ஆகாமிய மென்றும், அது வெகுர்முகமாய்த் தனது சைதன்னியப் பிறிதி பலனமான விடயத்தை, யெதிரிட்டனுபவிக்க வுன்முகமா யபேட்சித்த விடத்தில் அப்போதனுபவிக்கக் கூடாத போகமெல்லாங் கட்டுப்பட்டதே பந்த சஞ்சிதமென்றும், இதிற் கட்டுப்பட்ட விடய போகங்களைச் சிற்பிரோகத்தினாற் பின்னனுபவிக்கக் கொடுக்க அனுபவிப்பதே பந்த பிராரத்தமென்றும், அச்சங்கற்பஞ் சைதன்னிய வுன்முகமானதே விடுதியாகாமியமென்றும், அது அந்தர் முகத்திற் றனது சைதன்னியத்தையுடைய வுன்முகமாயபேட்சித்த விடத்தி லப்போ தனுபவிக்கக் கூடாத நிரதிசயானந்த சைதன்னியானுபவங் கட்டுப்பட்டதே விடுதி சஞ்சித மென்றும், இதிற் கட்டுப்பட்ட பரமானந்த போகத்தைச் சைதன்னியப் பிரோகத்தினால் அனுபவிக்கக்கொடுக்க அனுபவிப்பதே முடிவான விடுதி பிராரத்தம் என்றும் சொல்லுவார்கள்.

மேற்கூறிய பந்த வாகாமியத்தினாலுண்டான சஞ்சிதமும், அதனால்வரும் பிராரத்தமும், சனன மரணத்துக் கேதுவாய்த்துன்பப்படுத்துவதென்றும், விடுதியாகாமியத்தினா லுண்டான சஞ்சிதமும், அதனால்வரும் பிராரத்தமும், சனனமரண ரகிதமான நிரதிசயானந்த சைதன்னியாகார மாக்குதற் கேதுவாய்ச் சுகப்படுத்துவதென்றும், தன்னால் மதிக்கப்பெற்ற இந்த ஆகாமியத்தை மதியென்றும், சஞ்சிதத்தினால் விதிக்கப்பெற்ற பிராரத்தத்தை விதியென்றும் அச்சஞ்சிதத்தையே பூர்வவாசனையென்றும், இதில் பந்தவாகாமியத்தை அசாத்திரிய முயற்சியென்றும், விடுதியாகாமியத்தை சாஸ்திரிய முயற்சியென்றும், பந்த சஞ்சிதத்தை அசுப வாசனை யென்றும், விடுதி சஞ்சிதத்தை சுப வாசனை யென்றும், பந்த பிராரத்தை விடயானுபவ சாட்சாத்கார மென்றும், விடுதி பிராரத்தத்தை சொரூபானுபவ சாட்சாத்கார மென்றும் சொல்லுவார்கள்.

தலுமாகிய இவை என்னதேயன்றி அவ்விரண்டற்குத் துணையாய் நிற்கின்ற இக்கருவி காரணங்களுடைய வாகா. ஆதலால் இவ் வுண்மை யறியாத இக் கருவி காரணங்கள் முதன்மைத் தத்துவமாகிய பிரதான புருட தத்துவத்தை வயக்க இச்சைப்படுதல் எனக்கு வியப்பா யிருக்கின்றது. தேவரீர் தம்மனதிற் பட்ட உண்மையை ஒளியாது கூறி, எங்கள் பிணக்கை யொழித்தல் வேண்டுமென்று மன்றாடிக் கேட்டது.

---

ஆகையால் முன் வாதனை யென்பது விதியெனவும், தன் முயற்சியென்பது மதியெனவும், விதி வருவதும் கெடுவதும் இம் மதியினு லாதலில், ஆன்ம விசாரமான சுத்த வாசனையின் விதியினால்வரும் அசுத்த வாசனையைக் கெடுத்த பரோட்ச சாட்சாத்காரமாக வேண்டு மென்று கூறுவார்கள்.

சஞ்சிதம் :—பயிர் வினைஞனொருவன் தன்முயற்சியால் விளைந்த தானியத்தைச் சேர்ப்பித்திருக்கும் நெற்களஞ்சியம்போன்றது.

பிராரத்துவம் :—களஞ்சியத்திலிருந்து தானியத்தை யெடுத் தனுபவித்து வருதல் போன்றது. ஆகாமியம் : களஞ்சியத்தினின்று எடுத்தனுபவித்து வருங்கால் மறுபடியுங் களஞ்சியம் குறையாவண்ணம் விளைவித்துப் பூர்த்திபண்ணிக்கொள்ளுதல் போன்றது. மேற் கூறிய பிராரத்துவமானது : ஆதிதெய்வீகம் ஆதிபௌதீகம் ஆதி யான்மீகமென மூவகைத்தாகும். மாதாவின் கருப்பத்திலிருக்கு மிடத்துண்டான விசனம் நரை - திரை - யமதண்டம் - நரகவேதனை முதலியன. ஆதிதெய்வீகம். குளிர் - வெப்பம் - மழை - காற்று - மின்னல் - இடி - சுவர்விழுதல் - கல் விழுதல் முதலியன ஆதிபௌதீகம். தத்தஞ் சரீரத்திலுண்டான வியாதிகளினாலும் - மிருகங்களி னாலும், இராசாங்கத்தாலும், பசாசுக்களினாலும், கள்வராலும், மனிதராலும் உண்டாகும் துக்கம்; பிறருடைய கல்வி செல்வமுதலியவற் றைக்கண்டு பொறாமை கொள்ளல் அபிமானம் கெடுதல், எழுந்தது புத்தியாகச் செய்தல், கோபித்தல் முதலியன ஆதியான்மீகம்.

அப்பெரியோர் இவ்வசனங்களைக் கேட்டு நகைத்து; நல்லது, எனக்கும் உங்களுள்ளே எவர் பிரதான புருடரென்பதில் உள்ள சந்தேகந் தீரவேண்டும். நான் அதனை யறிதற்கு ஓர் உபாயஞ் சொல்கின்றேன். நீங்கள் யாவரும் உடல் வேறு - கருவி வேறு - கரணம் வேறு - பிராணன் வேறு - சீவன் வேறாகப் பிரிந்து வெளியேறிவிடல் வேண்டும். பின்பு எவரை யின்றி இவையனைத்தும் தொழிற் படாவோ! எவரால் இவையனைத்துந் தொழிற்படுகின்றனவோ! அவ்வாறு யாவற்றையும் கூட்டித் தொழிற்படுத்துபவரே பிரதான புருடராவர். இதுவே நும்மை அளவிடுதற்கு உபாயமா மென்றனர். அவர் சொல்லுக்கு அவை யாவும் இணங்கி, தனித்தனி பிரிந்து நின்றன. சீவன் தனியாயிற்று, பிராணன் தனியாயிற்று, அந்தக் கரணங்கள் - ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்கள் இவை யனைத்தும் தனித்தனி பிரிந்துவிட்டன. உடல் தனித்துக்கொண்டது.

## சரீர விசாரணை.

பெரியவர் உடலின் அருகே வந்து, உடலே! நீ எழுந்து நட, உண் - பேசு - காண் - கேள் - நினை - உணர் உயிர்த்தல் செய் என்றனர். தொழில் செய்யுங் கருவிகளில்லாமையால் உடல் இயங்குதலின்றி, உணர்வின்றிக் கட்டைபோற் கிடந்தது. பின்னும் உடலே எழு - நட - உண் - பேசு - காண் - கேள் - நினை - உணர் என்றனர். அப்பொழுது உடல் சவமாய்க் கிடந்தது. மறுபடியும் உடலைக் கையினால் தட்டி, உடலே! காலிருந்தும் நடவாய், கையிருந்துஞ் செய்யாய், வாயிருந்தும் பேசாய், கண்ணிருந்துங் காணாய், மூக்கிருந்தும் மூக்கால் - உயிர்த்தல் செய்யாய், காதிருந்துங் கேளாய், வாயிருந்தும் உண்ணாய், உன்

செயலென்னை ? எழு - நட - தொழில் செய் என்றனர்.
அப்பொழுதும் பிணமாய்க் கிடந்தது. பெரியவர் புன்னகை
செய்து உடலே! உனது பிரதான புருடதத்துவம் நன்று
யிருந்தது! இப்போது பிரதான புருடதத்துவம் யார்பாலது
சொல் பார்ப்போம் என்றனர். உடல் நாணமுற்று, யாவும்
என்செயல்போ லிருந்தமையால் நான் அகங்காரங்கொண்டு
என்னைவிட வேறொருவரும் இல்லை, நானே பிரதான புருட
னென்று எண்ணினேன். இப்பொழுது யாவும் நீங்கிவிட்
டமையால், நான் எதற்கும் அசத்தனாய் வறிதே யிருக்கின்
றேன். நான் எதற்கும் இடமாயிருப்பது மாத்திரம் அன்றி;
எச்செயலுக்கும் உரிமை யுடையேனல்ல னென்பது வெளி
யாயிற்று. என்னை இடமாகக்கொண்டு நடத்துபவர் யாரோ
அவரே பிரதான புருடரென்பது என்க்கு இப்பொழுது
தான் புலப்படுகின்றது. அவர் அகன்றால்; நான் இயங்
கேன் - நடவேன் - உண்ணேன் - காண்டல் செய்யேன்;
ஒன்றும் என்னாலாகாதென்றன.

## கன்மேந்திரிய விசாரணை.

பெரியவர் கன்மேந்திரியங்களுள் வாக்கைப் பார்த்து,
வாக்கே! நீ இவ்வுடலிற் புகுதி என்றனர். வாக்கிந்திரியம்
பரபரப்போடு உடலுட் புகுந்து நாவில் நின்றது. பெரிய
வர் அதனைப் பார்த்து, நீ பிரதான புருடனல்லவா? என்
னோடு சிறிது நேரம் வசனித்தல் செய் என்றனர். வாக்கு
இயக்கமின்றி ஊமைபோல் இருந்தது.

வாக்கே! நீ நாக்கை இடமாகக்கொண்டும் வசனித்
தல் செய்யாய்; நின் பிரதான புருடதத்துவம் நன்றாயிருந்
தது எனக் கூறி, அப்பால் நின்ற பாதத்தை நோக்கி: நீ உட
லிற் புகுந்து காலில் நின்று நட என்றனர். பாதம் உட

விற் புகுந்து நடக்க வலியின்றி முடமாய்க் கிடந்தது. பின் பாணியை நோக்கி நீ உடலிற் புகுந்து கையை இடமாகக் கொண்டு ஏற்றலும், இடுதலும் செய் என்றனர். பாணி உடலிற் புகுந்து எதுவும் இயக்கமின்றி முடமாய்க் கிடந்தது. பாயுருவை நோக்கி, நீ உடலிற் புகுந்து மலசல விசர்க்கஞ் செய் என்றனர். அதுவும் உடலிற் புகுந்து வாளா விருந்தது. பின் உபத்தத்தை நோக்கி, நீ உடலிற் புகுந்து ஆனந்தத்தை விடு என்றனர். அதுவும் உடலிற் புகுந்து வாளா விருந்தது. பெரியவர் இவ்வைந்தினையும் நோக்கி, உங்களுள்ளே எவர் பிரதான புருடரென்பதை இப்பொழுது சொல்லுதிர் என்றனர். அவை யாவும் நாணமெய்தி ஐயனே! எங்களால் யாவும் நிகழ்வன வென்றிருந்தோம். இப்பொழுது எங்கள் நிலை வெளியாயிற்று. எங்களை இயக்கி நடத்துபவன் எவனோ! அவனே பிரதான புருடனு மென்பதை இப்பொழுதுதான் நன்குணர்ந்தோமென்றன.

## ஞானேந்திரிய விசாரணை.

பெரியவர் ஞானேந்திரியங்களுள்ளே, மெய்யை நோக்கி, நீ உடலிற் புகுந்து பரிசவின்பம் நுகருதியென்றனர். மெய்யிந்திரியம் உடலிற் புகுந்து வாளாவிருந்தது. வாயை நோக்கி, நீ இவ்வுடலிற் புகுந்து சுவையை யுணருதி என்றனர். வாய் உடலிற் புகுந்தும் வறிதே யிருந்தது. கண்ணிந்திரியத்தை நோக்கி, நீ உடலிற் புகுந்து விஷயங்களைக் காணுதி யென்றார். கண் உடலிற் புகுந்து விழியை இடமாகக் கொண்டும் காண்டற் றொழில் செய்யாது குருடாயிருந்தது. மூக்கை நோக்கி, நீ உடலிற் புகுந்து நாற்றத்தை யுணருதி யென்றனர். மூக்கு நாசியிற் சென்று

தொழில் செய்யப் பெறு திருந்தது. பின்பு செவியை நோக்கி, நீ உடலிற் புகுந்து நின் றொழில் செய்குதியென்றனர். செவி காதினிடமாகத் தங்கி நின்றும் கேட்டல் செய்யும் வன்மை பெறாது வறிதிருந்தது.

பின்பு பெரியவர் ஞானேந்திரியங்களைப் பொதுமையாக நோக்கி, உங்களுள்ளே பிரதான புருடரெவர் இப்பொழுது சொல்லுங்கள் என்றனர். அவையனைத்தும் அவரை வணங்கி நாங்கள் உடலை இடமாகக் கொண்டு நின்று தொழில் செய்யினும், எங்களை இயக்கி நடத்தும் ஒரு பிரதான புருடனால் யாவும் செய்கின்றோமென்றும், அவன் எம்மை இயக்கி நடத்தா தொழியில் வறிதிருப்போமன்றித் தொழிற்படேோமென்றும் இப்போதுதான் தெரிகிறது. இவ்வுண்மையை உணராது இதுவரை வீண் பெருமை படைத்திருந்தோம். இன்று நன்குணர்ந்தோம். எங்கள் அபசாரங்களைப் பொறுத்தருளல் வேண்டும் என்று பிரார்த்தித்தன.

## அந்தக்கரண விசாரணை.

பெரியவர் அந்தக் கரணங்களில் மனத்தை நோக்கி, நீ உடலிற் புகுந்து நின்றொழில் செய்குதி யென்றார். மனம் உடலுட்சென்று ஒரு தொழிலுமின்றி யிருந்தது. அகங்காரத்தை விளித்து நீ உடலுட்புகுந்து நின்றொழில் செய் என்றார். அகங்காரம் உடலுட்சென்றும் இயங்காதிருந்தது. புத்தியை நோக்கி, இனி நீ சென்று தொழில் செய்குதியென்றார். புத்தியும் உடலுள் ஏகி வாளாவிருந்தது. சித்தத்தைப்பார்த்து நீ உடலுட்சென்று சிந்திப்பாயாக வென்றார். சித்தமும் உடலுட் புகுந்து செயலற்றிருந்தது.

பின்பு பிராண வாயுவை நோக்கி நீ பிரதான புருடனுகில், இவ்வுடலிற் சென்று இந்திரிய அந்தக்கரணங்களை இயக்கி, எவற்றையும் தொழிற்படுத்தி இன்ப-துன்ப நுகருதியென்றார். பிராணன் உடலுட் புகுந்து நெடுமூச் செறிந்து கிடந்ததேயன்றி, எதனையும் இயக்கவில்லை; இன்ப துன்ப உணர்வு தோன்றவுமில்லை.

## சரீராதிகளுக்கு அறிவு போதித்தல்.

சரீரமே! இந்திரிய அந்தக் கரணங்களே! பிராண வாயுவே! நீங்கள் தனித்தனியா யிருத்தலன்றி யாவரும் ஒருங்குகூடி ஒற்றுமையோடு முயன்று பாருங்கள். தனித் தனி யிருந்த காலத்து உங்கள் தொழில் நிகழாதொழியினும், நீவிர் யாவரும் ஒருங்கு கூடிய பொழுதாவது உங்களுங்கள் வல்லமை வெளிப்படுகின்றதோ வென்பதை ஆராயுங்கள் என்றார் பெரியவர். அவை அப்பொழுதும் செயலற்றிருந்தனவே யன்றி யாதுஞ் செய்தில. பெரியவர் யாவற்றையும் ஒருங்கு நோக்கி, உங்களுக்குள்ளே ஒருவராவது பிரதான புருடரா யிருக்கவில்லையா? என்றார். நானே பிரதான புருடனென்று சொல்ல எதுவும் முற்படவில்லை.

## சீவ விசாரணை.

பெரியவர் சீவனை நோக்கி நீ யார்? என்றனர். நானே பிரதான புருடன். நான் பிராணனோடு கூடி அகங்காரத்தை இயக்கி, மனதைச் செலுத்தி, இந்திரியங்களைச் சார்ந்து விடயங்களை யுணர்வேன். நான் விரும்பியவற்றையே கருவி கரணங்கள் செய்யும். யான் இவைகளைப் பொருந்த யாவுந் தொழில் செய்யும். யான் பிரிய யாவும் ஒடுங்கும். என்னால் இவை இயங்கும். யான் வறிதிருக்கில் யாவும் வறிதிருக்கும்.

இவை அறிவற்றவை, செயலற்றவை, விருப்பு-வெறுப்பற்றவை; யானோ! அறிவுடையேன், செயலுடையேன், விருப்பு வெறுப்புடையேன். இச்சாசத்தி - கிரியா சத்தி-ஞானசத்தி என மூன்று சத்திகள் எனக்குள்ளன. இச்சா சத்தியால் எவற்றையும் விரும்புவேன். கிரியா சத்தியால் எத்தொழிலும் செய்வேன். ஞான சத்தியால் எதனையும் அறிவேன். யான் விரும்புதற்கு மனம் முதலியவை கரணங்களாம். யான் விடயங்களை அறிதற்கு ஞானேந்திரியங்கள் கருவிகளாம். யான் தொழில் செய்வதற்குக் கன்மேந்திரியங்களுங் கருவிகளாம். யான் கருவி கரணங்களைக்கொண்டு நடத்திச் சுக - துக்க நுகர்வதற்கு உடம்பு இடமாகும். ஆதலால் யானே பிரதான புருடனென்றது.

## சரீராதி சீவச்செயல்.

பெரியவர் மகிழ்ச்சியோடும், குளிர்ந்த முகத்தோடும், இனிய மொழியோடும் புன்சிரிப்புடையவராய் நீ உடலிற் புகுந்து கருவி - கரணங்களைக் கொண்டு தொழில் செய்து இன்ப - துன்ப நுகருதி யென்றார். சீவன் உடலினுள்ளே புகுந்தது. புகவும், பிராணன் தசநாடிதோறும் பிரிந்து தசவாயுக்களாயியங்கிற்று. அகங்காரம் அப்பிராண வாயுவைச் செலுத்திற்று. சீவன் அவ்வகங்காரத்தோடும் கூட, அது மனத்தை நடத்த, மனம் இந்திரியங்களோடு கூடிற்று. இந்திரியங்கள் சரீரத்தோடு கூடின. சீவனாற் செலுத்தப்பட்ட மனம் எதை யெதைச் சங்கற்பித்ததோ, அதையதை இந்திரியங்கள் செய்தன. நடக்கவேண்டும் என்று எண்ணிய சீவனோடுகூடிய மனச் சங்கற்பப்படி பாதம் நடக்கலாயிற்று. அவ்வாறே வாக்கு வசனித்தது. பாணி சீவ மனச் சங்கற்பப்படி ஏற்றல் இடுதல் செய்தது. பாயுரு

மலசல விசர்க்கம் செய்தது. உபத்தம் விந்துவை வெளிப் படுத்தி ஆனந்தத்தை விளைவித்தது. இவை, சீவனுடைய கிரியாசத்தியின் ஏவுதலால் நடந்தன. சீவனுடைய ஞான சத்தி மனத்தோடு கூடி இந்திரியங்களைச் சார, இந்திரியங்க ளுள்ளே கண்ணானது செம்மை - வெண்மை - கருமை - பொன்மை முதலிய உருவங்களைக் கண்டு மனதிற் சேர்க்க, மனம் அதனை வெளி நோக்கிச் சங்கற்பித்து உள்நோக் காய்ச் செல்ல, அதனை அகங்காரம் வாங்கிக்கொண்டு உள் ளெழ, சித்தம் சிந்திக்க, புத்தி இது செம்மை, இது கருமை யென்று நிச்சயிக்க, அதனைச் சீவன் உணர்ந்து நின்றது. இப்படியே மெய்யினாற் பரிசமும், வாயினால் இது தித்திப்பு, இது புளிப்பு, இது கார்ப்பு என்பனவாகிய சுவைகளும், மூக்கினால் நறு நாற்றமும், துர் நாற்றமும், செவியினால் ஓசைகளும் விடயமாயின. சீவன் அவற்றைச் (*) சத்துவ குணத்தோடு கூடிச் சுகமென்வும், தாமத குணத்தோடு கூடித் துக்கமெனவும் பாவித்து, அவ்வின்ப - துன்பானு பவத்தில் அழுந்தினன். அவன் ஒடுங்கியபோது யாவும் ஒடுங்கின. அவன் எழுந்தபோது யாவும் எழுந்து தொழில் செய்தன.

அதுகண்ட பெரியவர் கருவி - கரணங்களை நோக்கிப் பிரதான புருடதத்துவம் யார்பாலதென இப்பொழுது சொல்லுங்கள்! என்றார். சரீர - இந்திரிய-அந்தக்கரணங் களும், பிராண வாயுவும் அவரை வணங்கி ஐயனே! அடி யேங்கள் உணர்வின்றி இதுகாறும் அகந்தையுற்று உலந்

(*) சத்துவம் தாமதம் என்னும் இரண்டு குணங்களினுடன் இராசத குணமானது சந்தர்ப்பம்போல் சேர்ந்து கொள்ளுவதால் இராசத குணத்தைத் தனியாகப் பிரித்துக் கூறவில்லை. இவற்றை நமது வேதாந்த பாஸ்கரனில் குணத்திரய அத்தியாயத்திற் காண்க.

தோம். இந்த மகானுகிய சீவன் எங்களை வைத்து ஆண்டு அநுபவித்ததால் இவரே பிரதான புருடன். எங்களை அடிக் கடி கேட்டு அவமானப்படுத்த வேண்டாமென்றனர். பெரியார் அங்ஙனமாயின் நீவிர் யாவிரும் இனிப் பிணக் கின்றி, ஒற்றுமையாயிருந்து வாழுங்கள் என்று ஆசீர்வ தித்து விடைபெற்று ஏகினர் என்பதே.

இந்தச் சரித்திரத்தால் சரீர முதலானவைகள் பிரதான மல்லவென்பதும், சீவ-பரமான்மாக்களே பிரதானமென்ப தும் தெள்ளிதிற் புலனுகின்றது. ஆகையால் நாம் சரீராபி மானத்தை விடுத்து ஆன்ம சம்பந்தமான அப்பியாசங்க ளைச் செய்ய வேண்டுமல்லவா?

## தேகாலய பூசை.

ஆன்மா வசிப்பதற்குச் சரீரமானது ஒரு ஆலயம் (வீடு) போல் ஆகிறது. இது பற்றியே சிவஞான வள்ளல்

ஆலயமே காயம் அறிவே சிவலிங்கம்

என்று திருவாய் மலர்ந்துள்ளார்.

"தேஹோ தேவாலய ப்ரோக்தோ
ஜீவோ தேவஸ் ஸநாதனஹ"

இதன் பொருள்:—இத்தேகம் ஒரு ஆலயத்தை நிகர்க் கும். சீவன் அவ்வாலயத்தில் இருக்கும் கடவுளது பிரதி பிம்பத்தை நிகர்க்கும் என்பதாம்.

இத்தகைய மேன்மையான ஆன்மா வசிக்கும் ஆலய மான நமது சரீரத்தை எவ்வளவு பரிசுத்தமாய் வைத்துக் கொள்ள நாம் கடமைப்பட்டுள்ளோம் என்பதை ஒவ் வொருவரும் கவனிக்கற்பாலதேயாம்.

வீடு பெருக்கவில்லை, வாசல் பெருக்கவில்லை, கொல்லை கூட்டவில்லை, குப்பை தள்ளவில்லை, சாணி தெளிக்கவில்லை, சட்டி - பானை கழுவவில்லையென்று வீட்டிலுள்ள பெண்டு -

பிள்ளைகளை அட்டகாசம் செய்கிறோம். ஏன்? அசுத்தமானது நமக்கும், பிறருக்கும் கண்ணுக்கு அலங்காரமாகக் காணப்படவில்லையென்றும், துர்க்கந்தம் வீசுகிறதென்றும் அவ்வாறு கண்டிக்கிறோம். ஆனால் கடவுள் சன்னிதானமாகிய இருதய கமலாலயத்தை எவ்வளவு பரிசுத்தமாக வைத்திருக்கவேண்டும் என்னும் விஷயத்தில் ஓர் எட்டுணையேனும் நாம் அறிந்திருப்பதாகவும், ஞாபகம் கொண்டிருப்பதாகவும் சொல்வதற்கோ ஆதாரத்தையே காணோம்.

நமது வீட்டிற்கு ஒரு தனவந்தர் அல்லது ஒரு உத்தியோகத்தர்! வரப்போகிறார் என்பதாயிருந்தால், வீட்டை எவ்வளவு சிரத்தையுடன் சுத்தப்படுத்தி, இரத்தின கம்பளங்கள் விரித்து, சுகந்தபரிமள புட்பங்கள், நறுமணச் சந்தனம், நல்ல அறுசுவை உண்டி முதலானவைகளைத் தயாரித்துவரவேற்கின்றனம். கேவலம் ஒரு மனிதனை அவ்வித உபசாரத்துடன் வரவேற்கின்றோமென்றால், நின்மல சொரூபியாக விளங்கும் ஆன்மா என்னும் எசமானன், நமது தேகத்தில் வசிக்கும்பொழுது, நமது உள்ளம் என்னும் வீட்டில், இராகாதி தோஷங்கள் முதலிய துர்க்குணமலினங்களை, அறவே அகற்றிச் சுத்தமாக்கி, வாய்மை - பொறை முதலிய சற் குணங்கள் என்னும் இரத்தின கம்பளம் விரித்து, அன்பு என்னும் சந்தனம் - புட்பம் - நிவேதனம் முதலியவைகளால் அவரை ஆராதித்தல்வேண்டும் என்பது எவ்வளவு அத்தியாவசியம்?

பிரபுலிங்கலீலை.

அருளெனும் புனலினை யாட்டிச் சாந்தமாம்
வரைநறுஞ் சந்தொடு மருவ விந்திய
விரைமலர் புனைந்தறி வினை யருத்துமிற்
பரமனை யவன்சிவ பத்த னாகுவான்.

இவ்வாறு நாம் ஆராதனை புரிவோமாயின், சீவான்மா வாகிய தன்னை அறிதலையும், அதன் பின் பரமான்மாவாகிய தலைவனை (கடவுளை) அறிதலையும் பெறுவோம். (Self realization leads to God's realization) என்பது ஓர் ஆங்கில் முதுமொழி.)

தாயுமான வள்ளல்.

*தன்னை யறிந்தருளே தாரகமாய் நிற்பதுவே*
*உன்னை யறிதற் குபாயம் பராபரமே.*

### தத்துவ நீக்கம்.

சத்த முதலான பஞ்ச விடயங்களின்மீது ஆன்மா வுக்கு அனிச்சை பிறந்தகாலத்து, பஞ்சேந்திரியங்களும் விடயங்களை அபகரிக்காமல் நீங்கும். இவை நீங்க, வசன-கமன-தான-விசர்க்க-ஆனந்தங்களை விடயீகரிக்கும் வாக்காதி கன்மேந்திரியங்கள் ஐந்தும் நீங்கும். இவை நீங்க பத்து இந்திரியங்கட்கும் இடமாய் நின்ற பூதங்கள் நீங்கும். இவை நீங்கவே விடயங்களைப்பற்றி நிச்சயித்து அபிமானித்துச் சிந்தித்து நிற்கும் அந்தக்கரண வாசனை நீங்கும். இது நீங்க, அவ்விடயங்களைப் புசித்தற்கு ஓரெல் லையுமுண்டாம். விடயப்பயனும் அவ்விடயத்தைப் புசிக்கும் போது ஓர் காலங்களினும் அறியாததுபோலப் புதுமையை யும், அவ்விடயத்தை அநுபவிக்க வேண்டும் என்னும் கருத்தையும் உண்டாக்கும் காலதத்துவமும் நீங்கும். இது நீங்க விடயங்களைப் புசிக்கும்போது இவனுக்கு இவ்வளவு புசிப்பு என்னும் அளவைக்குறித்து நிற்கின்ற நியதி நீங்கும். இது நீங்க, ஆன்மா விடயங்களை இச்சித்துப் பகுத்தறிந்து அநுபவிக்க, அவ்வான்மாவுக்கு இச்சா ஞானக்கிரியைகளை எழுப்பும் இராகம்-வித்தை-கலை என்னும் மூன்றும் நீங்கும்.

இவை நீங்க ஆன்மாவைப் பஞ்சேந்திரிய வாயிலாய்ச் சுழற்றும் புருடன் நீங்கும். இது நீங்க, அவ்விடயங்களைப் புசிக்குமிடத்தில் விடயம் என்றும், தான் என்றும் இரண்டற மயக்கி நிற்கும் மாயை முதலிய வித்தியா தத்துவங்கள் நீங்கும். இவை நீங்க, இவற்றைப் (*) பிரேரகம் செய்யும் சுத்த தத்துவங்கள் ஐந்தும் நீங்கும். இப்படித் தத்துவங்கள் ($) 36-ம் நீங்கினவிடத்தில் ஆன்மாவின் இச்சையானது பெத்தத்தில் விடயத்தின்மீது செனித்ததுபோல், பரத்தின்மேற் செனிக்கும். அதன் பின்னரே சாயுச்சிய பதம் எய்தும்.

---

(*) பிரேரகம் செய்தல் - காரியம் நடத்துதல்.

($) ஆன்மதத்துவம் (24), வித்தியா தத்துவம் (7), சிவ தத்துவம் (5), ஆக தத்துவங்கள் 36-ம் அகக்கருவிகள், ஏனைய தத்துவங்கள் (60)-ம் புறக்கருவிகள்.

1. ஆன்ம தத்துவமாவன:—பிருதிவியாதி பூதங்கள் (5), மெய்யாதி ஞானேந்திரியங்கள் (5), வாக்காதி கன்மேந்திரியங்கள் (5), சத்தமாதி தன்மாத்திரைகள் (5), மனமாதி அந்தக்கரணங்கள் (4), ஆக 24. இவை அசுத்த தத்துவம் அல்லது அசுத்த மாயை என்று பெயர் பெறும்.

2. வித்தியா தத்துவமாவன:—காலம் - நியதி - கலை - வித்தை - இராகம் - புருடன் - மாயை ஆக 7. இவை சுத்தா சுத்த தத்துவம் அல்லது சுத்தா சுத்த மாயை என்று பெயர் பெறும்.

3. சிவதத்துவமாவன ;—சுத்தவித்தை - ஈச்சுரம் - சாதாக்கியம் - சத்தி - சிவம் ஆக 5. இவை சுத்த தத்துவம் அல்லது சுத்த மாயை என்று பெயர் பெறும். இவை ஐந்தில்—ஞானம் அதிகரித்துக் கிரியை குறைந்தது சுத்தவித்தை. ஞானம் குறைந்து கிரியை அதிகரித்தது ஈச்சுரம். ஞானமும், கிரியையும் சமமானது சாதாக்கியம் ஞானமின்றிக் கிரியையே விரும்புவது சத்தி. ஞானம் ஒன்றையே விரும்புவது சிவம்.

ஒழிவிலொடுக்கம்.

மண்ணாதி சத்தாதி வாக்கு மனமாதி
கண்ணாதி நாதாந்தங் கண்டகன்ற—உண்மை
தனையணுவென் றேயுணர்ந்துஞ் சார்பினையுங் கண்ட
உனையறிவென் றுன்னே யுணர்.

மேற்கூறிய ஆன்ம தத்துவம் 24-ம் பிர்மன் பாகம். வித்தியா தத்துவம் 7-ம் மால்பாகம். சிவ தத்துவம் 5-ம் உருத்திரர் பாகம். இந்தத் தத்துவங்களிலிருந்து (*) சூக்குமை முதலிய வாக்குகளும், பிராணன் முதலிய வாயுக்களும், வசனாதிகளும், குண தத்துவமும், சாக்கிர முதலிய ஐந்தவத்தைகளும், ஏனையவைகளும் தோன்றும் என்று கூறப்பெற்றிருக்கிறது.

திருவிளையாடற் புராணம்.

ஆதியி லான்ம தத்துவ மான அலர்மகன் பாகமும் நடுவில்
நீதியின் விச்சா தத்துவ மான நெடியவன் பாகமும் முடிவில்
ஓதிய சிவதத் துவமென லான உருத்திர பாகமு முதிக்கும்
பேதியா மூன்றில் எண்ணில்தத் துவங்கள் பிறக்குமம் மூன்
[றினு முறையால்.

தத்துவக் குப்பை.

இன்னும் தத்துவங்களைப்பற்றி 'குருடன் அளந்ததும், கோணி கொண்டதும்' என்னும் பழமொழிக்கிணங்க பஞ்ச பூதங்களையும் பஞ்சீகரணப்படுத்தி, எவ்வளவு வேண்டு

(*) சூக்குமை - பைசந்தி - மத்திமை - வைகரி என வாக்கு நான்காம். இவற்றின் விபரத்தை இங்கு எழுதப்புகின் விரியுமாகையால், சித்தியார் முதற் சூத்திரம் 20 - 21 - 22 - 23-வது செய்யுட்களிற் காண்க.

மென்றாலும் அவரவர்கள் இஷ்டப்படி கூட்டியோ குறைத்தோ எழுதலாம். அது சூக்குமப் பொருளாயிருப்பதாலும், சரி-சரியல்லவென்று நிதரிசனமாக ஒருவர்க்கு எண்பித்துக் காண்பிக்க முடியாததாயிருப்பதாலுமே எவரும் முடிவு சொல்லக் கூடாததாய் இருக்கிறது. எவ்வித மெனில், 'பிருதிவிசரம் பொன்னிறம், அப்பு வெண்மை' யென்று கூறப்பெற்றிருப்பதை மாற்றி பிருதிவி வெண்மை, அப்பு பொன்னிறம், என்று மாறுதலாக ஒருவன் சொன்னால், பிருதிவிசரம் பொன்னிறமேயன்றி வெண்மையல்ல, இதோ பார்! என்று பிரத்தியட்சமாகக் காண்பிக்க முடியாதிருப்பதே அதற்குக் காரணம். தத்துவங்களைப்பற்றி விரிவாக, அந்த தத்துவம் அப்படி! இந்தத் தத்துவம் இப்படி! யென்று சொல்லிப் பிதற்றுவதானது, காலாதீதமும், குருடர்கள் யானையைக் கண்டு அபிப்பிராயப்பட்ட கதைபோலவும், பிறவிக்குருடன் பால் நிறத்தை அறியவேண்டிக் கொக்கைப் போல் வெண்மை யெனத் திருட்டாந்தம் கூறக் கேட்டு, கொக்கு எவ்விதம் இருக்குமென்ன வளைத்துக் காட்டிய முழங்கையைத் தடவிப் பார்த்து, ஆ! இவ்வளவு கோணலும், நீளமுமுள்ள பால் ஒரு சிறிய குழந்தை வாய்க்குள் நுழைந்தால் பிள்ளை பிழைக்குமா? என்று துக்கித்த கதைபோலவு மிருக்கிறது.

ஒரு பரதேசி கண்ணை மூடிக்கொண்டு, இதோ கைலாசம் தெரிகிறது. பார்வதியும் பரமசிவனும் இருக்கிற கோலாகலமும், தேவர்கள் அனைவரும் திருவோலக்கம் காண வருகின்ற காட்சியும் என்ன அற்புதம்! என்ன அற்புதம்!! என்று கனவு கண்டவர் போல் புலம்பினர். அதைக் கேட்ட மற்றொருவர் தன் கண்ணை மூடிக்கொண்டு, சுவாமி! 'அதோ பரமசிவத்தின் அருகில் ஒருக்கணித்து நித்திரை

செய்கின்ற விஷ்ணுவைக் கவனித்தீர்களா?' என்றனர். அதற்குப் பரதேசி, உனக்கு எப்படித் தெரிந்தது? என்றனர். தங்களுக்கு எப்படித் தெரிந்ததோ? அப்படியே எனக்கும் தெரிந்தது; சந்தேகம் தோன்றினல் தாங்கள் பரமசிவனைக் காட்டுங்கள். நான் மகாவிஷ்ணுவைக் காண்பிக்கிறேன் என்று கூற, பரதேசி வெட்கித் தலை குனிந்தார். அதுபோலவே தத்துவங்களைப் பற்றி அதிகமாகப் பேசுவதும் முடியும். இதற்குச் சான்றாக 'தத்துவப் பேயோடு தலையடித்துக் கொள்ளாமல்' எனவும், 'தத்துவக் குப்பையைத் தள்ளுங்கடி' எனவும் ஆன்றோர் வசனம் இருப்பது சிந்திக்கத்தக்கது.

ஆகையால் தத்துவங்களைப் பற்றியே சதாகாலமும் சிந்தித்து அந்தத் தத்துவம் அப்படி, இந்தத் தத்துவம் இப்படி, அது கறுப்பு, இது செவப்பு, அது $4\frac{1}{2}$-முழம், இது $8\frac{3}{4}$-முழம் என்று பிதற்றி, நாவிதன் தான் சிறைத்த மயிர்க் குப்பையில் இரத்தினம், பொன் முதலானவைகள் அகப்படுமா என்று கிண்டிக் கிளறிப் பார்த்துச் சலிப்பதுபோல், நாமும் தத்துவக் குப்பையைக் கிண்டிக்கொண்டிருந்து விடாமல், தத்துவங்கட்கு அதீதமாயுள்ள ஆன்ம சம்பந்தமான இரத்தினப் பொற்குப்பையைக் கிண்டி ஆன்மலாபப் பெருநிதியைப் பெற்றுய்வோமாக.

## இருபத்திரண்டாவது அத்தியாயம்.

## ஆன்ம ஞானம்.

விருத்தம்.

மன்னிய யோக ஞான மார்க்கமாம் பலவற் றுள்ளும்
தன்னையே யறியு மார்க்கஞ் சாலவுஞ் சிறப்பென் றன்றோர்
உன்னைநீ யறிந்தா யாகி லுனக்கிலை கேடென் றோத
என்னைநா னறிந்த வாறு இவண்சில வியம்பு வாமால்.

நவரத்தினங்களுள் மாணிக்க மணியானது மிகச் சிறப்புடையதா யிருத்தல்போல, சகல யோக-ஞான அப்பியாசங்களுள்ளும் தன்னையறியும் ஞானமே சாலச் சிறப்புடைத்தாம். தன்னை யறிந்தவன் தலைவனை யறிவான் என்பதே இதற்குச் சான்றாகும். எந்த வேத-வேதாந்த நூற்களைப் பார்த்தாலும் தன்னையும், தனக்காதாரமான தலைவனை—அதாவது பரப் பிரம்மத்தையும் அறிய வேண்டுமென்று வற்புறுத்திக் கூறி யிருக்குமே யன்றி, சாதாரண யோக-ஞானங்களைப் பற்றி சிறப்பாகக் கூறப்பெற்றிராது. அதுபோலவே எந்த மகானுபவர்களைக் கேட்டாலும் முடிவாக தன்னை யறிவதைப் பற்றியே கூறுவார்கள். கைவல்லிய நவநீதம்-ஞானவாசிட்டம்-ரிபுகீதை-பிரம்மகீதை-இன்சான் காமில்-சூறத்துர் றஹ்மான் முதலான பிரபல நூற்களை ஆராய்ந்துணரு மிடத்து சகல ஆசைகளையும் விட்டு, தன்னையும்-தலைவனையும் அறியவேண்டுமென்று கூறி யிருக்கின்றதே யன்றி, இதர மார்க்கங்களைப் பற்றி அவ்வளவு சிறப்பாகக் கூறவில்லை.

ஞானவாசிட்டம்.

உன்னுருவை நீகாணும் ஞானக் கண்ணில்
ஒன்றலா ஆசையெனும் காச மூறும்
அன்னதுதீர்த் துளக்கமலத் துன்னே ரெய்ய
அறிவுடைய வுன்மனத்தா லுன்னு லுன்னை
இன்னபடி யெனநோக்கி மயக்க மெல்லாம்
இறையுமற வொழித்தின்ப மெய்தி நிற்பாய்.
பின்னவனே யெனமுன்னே னுரைத்தா னென்று
பெருந்தகைக்கு வசிட்டமுனி பேசி னனே.

கைவல்லிய நவநீதம்.

வாராயென் மகனே தன்னை மறந்தவன் பிறந்தி றந்து
தீராத சுழல்காற் றுற்ற செத்தைபோற் சுற்றிச் சுற்றிப்
போராத கால நேமிப் பிரமையிற் றிரிவான் போதம்
ஆராயுந் தன்னைத் தானென் றறியும்வ் வளவுந் தானே.

தன்னையுந் தனக்கா தாரத் தலைவனை யுங்கண் டானேல்
பின்னையத் தலைவன் றானய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னைநீ யறிவா யாகி லுனக்கொரு கேடு மில்லை
என்னைநீ கேட்கை யாலே யீதுப தேசித் தேனே.

உன்முகம் போற்கண் ணாடிக் குள்ளொரு முகங்கண் டாற்போற்
சின்மய வடிவின் சாயைச் சித்துபோற் புத்தி தோன்றும்
நின்மனே விருத்தி யந்த நிழல்வழி யாயு லாவும்
தன்மான் மகனே யித்தைத் தானன்றோ ஞான மென்பார்.

சகல அப்பியாசங்களிலும் தன்னையறியும் மார்க்கமே சாலச் சிறந்ததென்பதுபோல், சகல சீவ ராசிகளிலும் மனிதப் பிறவியே சிறந்ததென்பது பலரும் நன்கறிந்த தோருண்மை. எந்தச் சீவராசிகளுக்கும் பகுத்தறிவைக்

கொடுக்கவில்லை. மனிதப் பிறவிக்கும், தேவர்களுக்குமே பகுத்தறிவைக் கொடுக்கப் பெற்றிருக்கிறது. என்றாலும், தேவர்களினும் மனிதப் பிறவிதான் மிகச் சிரேட்டமான தாகும். ஏனெனில், தேவர்களை மனிதனுடைய ஒளியைக் கொண்டு படைத்தேன்; மனிதனை என்னுடைய ஒளியைக் கொண்டு படைத்தேன். மனிதன் என் அந்தரங்கத்தை அறிவானேயானால், அவனே இராசாதி ராசன்; அவனுக்கு மேற்பட்டவர்க ளில்லையென்று கவுதல் அஃலம் அவர்களிடம் கடவுள் அறிவித்ததாகக் கூறப்பெற்றிருக்கிறது. தேவர்களும் மனித வுருவத்திலேயே முத்தியை அடைவார்களென்பது நூற்சம்மதம்.

பிரபுலிங்கலீலை.

போகபூ மியினிற் போக தனுவினாற் பொருந்த லாகா
தேகமா மின்ப சித்தி யியம்புறிற் கரும பூமி
யாகமா னதுகொண் டன்றி யாதலான் ஞாலத் தெய்தி
யோகமா னெறியி னின்றோ ருண்மைசா தித்துக் கொள்வர்.

அவ்வாறு எல்லாப் பிறப்பிலும் மனிதப்பிறவி சிறந்த தானாலும், சிற்சில குண விசேடங்களில் மனிதனைப் பார்க்கிலும் சிறந்த தன்மை - பறவை - மிருகம் முதலானவைகளி லிருக்கின்றன. அதனாலேயே மனிதருக்கு அறிவுறுத்தும் போது காக முறவு கலந்துண்ணக் கண்டீர்!, நாயினிடம், கற்கத் தகுங்குணங்கள் காண்! என்பது போன்ற நீதி வசனங்களை ஆன்றோர் உபயோகப்படுத்தி யிருக்கின்றனர். ஆங்கிலத்தில் (As faithful as dog நாயைப்போன்ற விசுவாசமுள்ள) என்ற பழமொழியு மிருக்கிறது. அன்றியும் Dog (நாய்) என்னும் ஆங்கில அட்சரத்தை மாற்றிப் படித்தால் God (கடவுள்) என்று பொருள் தருகிறது.

நெஞ்சறி விளக்கம்

நற்பிடி சோறு வைத்த நாயனென் றறிந்து கொண்டு
சொற்படி பின்னே யோடும் சுண்ணகன்போற் குணமுண் டாகி

என்பதற் கிணங்க தைல தாரைபோல் கடவுளிடத்தில் இடைவிடாத விசுவாசம் உள்ளவர்கள் எவர்களோ! அவர்கள் God என்னும் கடவுள் பதத்தைச் சேர்வார்கள். அன்றியும், நாயகம் என்னும் சிறப்புப் பெயரானது தலைமை என்று பொருள் பெற்றாலும் (நாய் அகம்) நாயினுடைய அகம் (இருதயம்) போல் மாறாத விசுவாசமுடையவர்களுக்கே நாயகம் என்பது தகும் என்று ஒருவிதத்தில் பொருள் தந்து நிற்கின்றது.

மனிதர்கள் பலகுணம்.

நெல்லைப் போலிருக்கும் பதர்களை நெற்பதர் என்று குறிப்பதுபோல், மனிதர்களைப் போலிருக்கும் பதர்களை மனிதப் பதர் என்றுதான் குறிக்கப்பெற்றிருக்கிறது. சில மிருகங்களுக்கும், சில பறவைகளுக்கும் இவ்வகை மனிதப் பதர்களை ஒப்பிட்டுக் கூறுவது பொருத்தமன்றாம். ஏன்? அவைகளிடத்தில் ஒவ்வொரு திறமான நற்குணங்களிருக்கின்றன. இந்தப் பதர்களுக்கோ,

வணக்கம்வருஞ் சிலநேரங் குமர கண்ட
வலிப்புவருஞ் சிலநேரம் வலிய செய்யக்
கணக்குவருஞ் சிலநேரம் வேட்டை நாய்போற்
கடிக்கவருஞ் சிலநேரம் கயவர்க் கெல்லாம்

என்று ஆன்றோர்கள் கூறியபடி பலவிதமான குணங்கள் இருக்கின்றன. இது பற்றியே,

*காலையிலொன் றுவார் கடும்பகலி லொன்றுவார்*
*மாலையிலொன் றுவார் மனித ரெல்லாம்*

என்று மனிதனுடைய நிலையற்ற குணங்களைப்பற்றி இழிவாகக் கூறி யிருக்கின்றார்கள்.

### மனிதனின் இழிவும்-நாயின் சிறப்பும்.

ஆங்கில மகா கவியாகிய பைரன் என்பவர், ஒரு சமயத்தில், அக்காலத்திலுள்ள சனங்கள் செய்த அக்கிரம அட்டூழியங்களை சகிக்க முடியாமல் மனிதர்களை நோக்கி, ஏ! நாய்களே என்று கூவினார். பின்னர் விசுவாசத்தில் மனிதரினும் நாய்ச்சாதி மேம்பாடுடைய தாகையால், மனிதர்களை நாய்களே என்று சொல்லியதிலிருந்து நாய்ச் சாதிக்கு அவமரியாதை ஏற்படுமென்று நினைந்து அதை மாற்றி மறுபடி "ஏ! மனிதர்களே!" என்று கூவியதாகப் பத்திரிகைகளில் கூறப்பெற்றிருக்கிறது. ஆனால், அவர் மனிதர்களே! என்று கூவாமல் மனிதப்பதர்களே என்று கூவியிருந்தால் சாலப் பொருத்தமாயிருக்கும்.

இத்தன்மை யுடைய பதர்களை நோக்கி ஏ, நாய்களே! என்று கூறியது பொருந்துமா? பொருந்தாது. ஏன்? நாயினிடத்திலிருந்து மனிதப் பதர்கள் அனேக நற்குணங்களைக் கற்றுக்கொள்ள வேண்டியதா யிருக்கிறது. இதுபற்றியே ஆன்றோர்,

*பேராசை அற்பம் பெறினும் பெருமகிழ்ச்சி*
*போாத வீரம் பிரபுத்தி—சோராமை*
*யுற்றதுயில் வல்லே யுணர்ந்தொழுகை நாயினிடம்*
*கற்கத் தகுங்குணங்கள் காண்*

என்பதனால் நாயினிடத்தி லிருந்து அனேக குணங்களை மனிதன் கற்கவேண்டியதா யிருக்கிறது.

யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை தழீஇக் கொளல்வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கு நாய்.

(இதன்பொருள்) யானையானது தனக்குத் தினம் பாகன் கவளம் கொடுத்துக்கொண்டு வருவதை நன்றாய் அறிந்தும், சினம்-மதங்கொண்டகாலத்து அப்பாகனையே கொல்லும். நாயானது தன்னை வளர்த்தவன் தன்னைக் கொல்லும்படி வேலாயுதத்தைப் பிரயோகித்த காலத்து, அவ்வேல் சரீரத்தில் ஊடுருவி நிற்கும்போதும், வாலைக்குழைத்துக்கொண்டு அவனருகே செல்லும். ஆகையால், நன்றி மறக்கும் இயல்பினையுடைய யானையை யொத்த கீழ் மக்களது நட்பை ஒழித்து, எந்நாளும் நன்றி பாராட்டும் நாயை யொத்தவாது நட்பையே தேடிக்கொள்ளவேண்டும் (எ-று.)

## மனிதனே உயர்ந்தவன்-தாழ்ந்தவன்.

பல தன்மையினால் மனிதர்களே மேம்பாடுடையவர்களாயும், மனிதர்களே மிகத் தாழ்ந்தவர்களாயும் ஏற்படுகிறார்கள். தூங்குவது போன்ற சில தன்மையினால், மனிதர் மிருகங்களினுங் கீழ் நிலைமையை அடைந்திருந்தாலும், பகுத்தறிவாகிய விழிப்பென்னும் நிலைமை வந்து விட்டால், எல்லாச் சீவராசிகளிலும் மனிதர்களே உயர்ந்தவர்களாவார்கள். இதுபற்றியே நமது ஔவை மூதாட்டியார் "அரிதரிது மானிடராய்ப்பிறத்தலரிது" எனத்திருவாய்மலர்ந்துள்ளனர்.

உண்பதும், உறங்குவதும், புணர்வது முதலான சில செய்கைகள் சாதாரண நாற்கால் மிருகங்களும் செய்கிறதாயிருப்பதால் அச் செய்கை மட்டு முடையவர்கள் இரண்டு

கால் மிருகங்களே! அச்செய்கையுடன் சீறிப் பாய்வதும் பீறிக் கொல்வதும் துஷ்ட மிருகங்களின் செய்கையாயிருப்பதால், அக்குணங்களுடையவர்கள் துஷ்ட மிருகங்களே. கலகம் கபடமாதி துர்க்குணங்கள் பைசாசங் (ஷைத்தான்) களுடைய குணமாயிருப்பதால், அக்குண முடையவர்கள் பைசாசங்களிலும் கேடு கெட்டவர்களே. இவ்வித துர்க்குணங்களில்லாதவர்கள், ஆண்டவனுடைய தரிசனையையும், அவனுடைய தண்கொண்ட கருணையையும் விரும்பியவர்கள் தேவர் (மலக்கு) களாதலால், அவர்களுடைய குணங்களை மனிதர்கள் பின்பற்ற வேண்டும். என்று ஆன்றோர்கள் போதித்திருக்கின்றனர்.

மனிதர்களுக்கு நற்குணத்தையும், துர்க்குணத்தையும் கொடுத்து, நீ உன்னிஷ்டப்படி துர்க்குணங்களைச் சிறையிட்டு, நற்குணங்களால் மேன்மை யடைந்தாலுஞ்சரி; நற்குணங்களை கைவிட்டு துர்க்குணங்களுக்கு அடிமையாகி சிறைப்பட்டாலுஞ்சரி என கடவுள் ஆக்ஞாபித்திருப்பதால், நமது பகுத்தறிவைக் கொண்டு நம்மை இன்னதென்று அறிந்துகொள்ள வேண்டியது நமது கடமையாகவேயிருக்கிறது.

## உலகம் அனித்தியம் - பிரம்மம் நித்தியம்.

இந்நிலவுலகிலுள்ள சகல பொருள்களும் கண்டிப்பை உடையவைகள். இந்த கண்டமான உலகப்பொருள்களெல்லாம் அகண்டமான பரம்பொருளில் அடங்குகிறது. ஆனால் அகண்டமாயுள்ள பரம்பொருள் கண்டமான உலகத்தில் அடங்காது. கண்டமாகிய இவ்வுலகிற் சேர்ந்த மனிதன் அகண்ட உலகத்தை ஒரு சிறிதும் அறியமுடியாவெனின் அகண்டமான பரம்பொருளை எங்ஙனம் கண்டறிதல் கூடும். காணுதல் என்னும் செய்கையானது கண்

ணுக்கே உரித்தானது. அந்தக் கண் சரீரத்திலுள்ள ஞானேந்திரியங்களில் ஒன்ருகிய ஓர் உறுப்பு - சரீரமோ, வாஞதி பஞ்சபூதச்சேர்க்கை. ஆதலால் கண்ணுனது பஞ்சபூதங்களாலாய் கண்டமான இப்பிரபஞ்சத்தைமட்டுந்தான் காணும். அத்தகைய உலகத்தைப்பார்க்குங் கண்ணே தன்னை (கண்ணை)ப்பார்த்துக்கொள்ளுஞ் சக்தியில்லை.

இருவிழிக ளுலகறிந்துந் தனையறியா திதுபோல்
யானறியும் பொருளிலதிங் கெனையறியா மையினுல்

என்றபடி கண்ணுனது கண்ணேயே காணமுடியாவிட்டால் கண்ணிந்திரியத்தையும், அதற்கு ஆதாரமான மனதையும், மனதிற்கு ஆதாரமான அறிவையும் எப்படிக் காணும்? ஒவ்வொரு மனிதனுக்கும் மனதுண்டென்பது நிச்சயம். அந்த நிச்சயம் கண்ணுல் பார்த்துண்டாகவில்லை. கண்ணுல் பாராததினுல் இல்லையென்று சொல்லுதல் கூடாது. அதைப்போல மனிதன் ஞானத்தினுல் தன்னையறிந்து தனக்கு ஆதாரத்தலைவனுகிய கடவுளையறியவேண்டும். தன்னையறியாமற் போனுல் கடவுளை யெப்படி அறிவது? நெற்குவியலை அளப்பதற்கு எடுத்த மரக்கால் இத்தனைபடி கொண்டது என்று தெரியாவிட்டால் அந்த நெற்குவியலை அளந்து இவ்வளவு நெல் என்று கூறமுடியாததுபோல் எவராலும் முற்றிலும் அறியாத முடியாத பெரும்பொருளாகிய பரப்பிரம்மத்தை அளவிடுவதற்கு முயன்ற ஒருவன் தன்னையே இன்னவன், இனியான் என்று அறிந்துகொள்ள முடியாத தன்மையில் தன் தலைவனுகிய பிரம்மத்தின் இலட்சணங்களை எங்ஙனம் கண்டறிதல் கூடும்.

அறிஞர்களென்றும் கலாவல்லுனரென்றும் பேர்வைத்துக்கொண்டவர்களும், நான் செய்தேன், நான் கொடுத்

தேன் என்பதுபோன்ற வசனங்களை தன்னை அறிந்தோ அறியாமலோ சாங்கோபாங்கமாக கூறுகிறார்கள். அன்னவர்களை நோக்கி, இப்போது நான் என்று கூறினீர்களே அதுயாது? நான் என்று எதைச்சொல்லுகிறீர்கள்? நீங்கள் நான் என்று கூறுவது சரீரத்திலுள்ள அவயவாதிகளையா அல்லது எலும்பு, தோல், நரம்பு, தசை முதலானவைகளையா? அல்லது இவை எல்லாம் சேர்ந்த சரீரத்தையா? என்று கேட்டால், பதில் கூறுவதற்கு வழி இன்றி விழிப்பார்கள். அப்படி விழித்தவர்கள் தான் விழித்ததை மறந்துவிட்டு பின்னரும் நான், நான் என்பதை ஒரு பாடமாக அகங்கரித்து பேசுகிறார்கள்.

... ... — மெய்யாக
உற்றுணரின் நானென் றுரையார் ஒருவரிலை
முற்றுணர்வால் நானே முதல். (சொரூபானந்தர்)

## தன்னை யறியச் சவுக்கடி.

கண்ணானது எல்லாப் பொருளையும் பார்க்கிறது. ஆனால், அது தன்னைப் பார்க்க நினைப்பது மில்லை. தன்னைப் பார்த்துக் கொள்ள சகாயமின்றி முடிவதுமில்லை. அது போல், மனிதன் சகல சராசரப் பொருள்களையும் உற்றுப்பார்த்தறிகிறான். ஆனால் தன்னை யறியும் விதத்தில் மூடனாகவே யிருக்கிறான். புகைரதம் - மரக்கலம்-ஆகாய விமானம் முதலியவைகளை ஆச்சரியகரமாக நீராவியின் பலத்தால் ஓட்டிவைக்கிறான். கம்பியில்லாத் தந்தி யென்ன! கிராமபோன் என்ன! பயாஸ்கோப் முதலிய விதவித ஆச்சரியகரமான—அதாவது இதை மனிதன் செய்ய முடியுமா? என்று சந்தேகிக்கும்படியான அற்புதமான வேலைகளென்ன! இவைகளைக் கணக்கிட முடியாமல் செய்கிறான்.

ஆனல், நாம் யார்? எங்கிருந்து இங்கு வந்தோம்? எதற்காக வந்தோம்? எதற்காக மனிதனுகப் பிறந்தோம்? நாம் உண்மையாகச்செய்யவேண்டிய காரியமென்ன? மோட்சம்என்றுலென்ன? தன்னை யறிவதென்று லெப்படி? தலைவனுகிய கடவுளை அறிவதெப்படி? தலைவனை அறிவதிலும் புறக்குறிப்பு அகக்குறிப்பு-அதாவது—புறத்தில் இணைவைத்தல் அகத்தில் இணைவைத்த லில்லாமல் சொப்பிரகாசமாகக் காண்டல் எவ்விதம்? என்றறிந்தவர்கள் மிகச் சிலரே. ஆகையால், விவேகிகள் என்று பெயர்வைத்துக் கொண்டவர்கள் தன்னை இன்னுரென்று அறியாமலிருப்பது பேதமையிலும் பேதமையேயாம்.

மௌலானுரூமீ.

சவ்ஹஸாராஞ் சீசுக்கே பச்சான்ஞ
அஹ்மக்கீஹே ஆப்க்கு நஜான்ஞ.

(இதன் பொருள்) (மனிதர்கள்) நூறுயிரம் பொருட்களின் விபாங்களை அறிந்திருப்பார்கள். தன்னை யறிகிற விஷயத்தில் மடையர்களா யிருக்கிறர்கள்.

மோல்ஹர்ஹர் சீசுக்கேபஸ் லோஹுனர்
லக்கின் அப்னே ஹால்சேஹைஞ் பேகபர்.

(இ-ள்) (மனிதர்கள்) ஒவ்வொரு பொருட்களின் நிலையையும் பிரித்தறிந்திருக்கிறர்கள். ஆனல் தன்னுடைய நிலைமையைப் பற்றி ஞாபகமற்றவர்களா யிருக்கிறர்கள்.

தன்னையறியும் விதம்.

எவன் தன் அகம்பாவமாகிய நான் என்னும் தன்னை (நபுசை) அறிந்தானே, நிச்சயமாக அவன் தன் தலைவனுகிய கடவுளை யறிந்தான் என்று கூறப்பெற்றிருக்கிறது.

இதன் மூலவாக்கியம் மன் அறப நப்சகு பகத் அறபறப்பகு என்பதேயாம். இதனால் தன்னை யறியும் வழியே சாலவுஞ் சிறந்ததென்றும், அவசிய மென்றும் தெள்ளிதிற் புலனாகின்றது. தனக்கு அதி சமீபமாக நெருங்கிய வத்துவானது தானாகவிருக்க, தான் தன்னை யறியாவிட்டால் பிறரியலையும், பிறவத்துக்களினியலையும் எங்ஙனம் அறிதல் கூடும்? ஆனால், தோல்-தசை-நரம்பு-எலும்பு முதலானவைகளால் கட்டுண்ட தூலமாகிய தனது அவயவங்களை பார்த்திருப்பதால் தன்னை யறிந்துகொண்டதாக சிலர் நினைக்கலாம்! அத்தகைய அறிவானது பாமரர்களுக்கும், மிருகங்களுக்கும் தெரிந்ததா யிருப்பதால் அது தன்னையறியும் அறிவாகமாட்டாது.

தன்னை யறிவதானது அவன்-இவன்-நீ-நான் என்று பேதங்காட்டியுழலும் தானாகிய நான் என்னும் பூதாதி அகங்கார அந்தக்கரணத்தை யறிந்து, அவ்வகங்காரத்தின் பரிசுத்தமாகிய பிரம்மாகங்காரத்தை தனித்திருக்க விடாமல் அதைக் கரைத்து பிரம்மத்தோடு ஒன்றாக்கிவிட்டால், அப்போது (இலவணக்கற்கள் நீரில் கரைந்தபின்னர் அதற்கு நீர் என்பதுபோல்) நான் என்பது பிரம்ம மயமாய்த் துலங்கும்.

### தன்னை பிரம்மமாய்க் காண்டல்.

ஆசித்தவனும் நான், ஆசிக்கப் பெற்றவனும் நான் என்பது, கடவுளை நாஸ்தியாக்கி தன்னைக் கடவுளுக்கு ஒப்பிட்டதாகும். ஆனால், ஆசித்தவனும் அவனே! ஆசிக்கப் பெற்றவனும் அவனே! என்று கொள்வது தன்னை நாஸ்தியாக்கி கடவுளை ஒன்று படுத்திய அத்துவிதமாகும். இதுவே தானென்னும் அகம்பாவத்தை உள்ளபடி விட்டு நீங்கி,

கடவுள்மீது பூரண அன்பும்-ஆசையும் கொண்டவர்கள் தான் னுடைய கொள்கை. இக்கருத்துடனேதான் பெரியோர் கள் தன்னையே கடவுளென்று கூறியுள்ளார்கள். இவ் வுண்மையை விபரமா யுணராமல் சிலர், தன்னைக் கடவு ளென்று சொல்லலாமா? என்று தடிதூக்குகின்றனர். தான் கடவுளென்று சொல்லக் கூடாதே யன்றி, தன்னைக் கடவுளென்று மகான்கள் சொல்லலாம். இது பற்றியே தத்துவமசி மகாவாக்கியம், நீ-அது-ஆனாய் என்று கூறாமல், அது-நீ-ஆனாய் என்று கூறப்பெற்றிருக்கிறது. ஆனால், நாம் அதுவா யிருந்தால், பின்னர் நாம், நாமல்லாதிருத்தல்வேண் டும். அப்படி யிருந்தால்தான், நாம் அதுவென்னும் பிரம் மம் ஆவோம்.

பிரபுலிங்கலீலை.

தன்னைச் சிவமென் றறிந்தவனே யறிந்தான் றன்னை யுண்மையாத்
தன்னைச் சிவமென் றறியாதா னறியா னென்றுந் தன்னுண்மை
தன்னைச் சிவமென் றறிந்தவன்றே தாழ்வாம் பாசந் தனைநீப்பன்
தன்னைச் சிவமென் றறியாதான் றனக்குப் பிறப்பே துணையாகும்.

தன்னைப்பேத மாய்க்காண்கை சகத்திற் காணப் பட்டதாந்
தன்னைப்பேத மறச்சிவமென் றறிவோன் ஞானி தானொருவ
னென்னக்கருதி மறையதுநீ யானு யென்ன வத்துவிதந்
தன்னைப்புகலுங் கண்டதனைச் சாற்றன் மறையின் கருத்தன்றே.

தூய்தா கியநெஞ் சுடையார்க்குத் தாமே சிவமாத் தோன்றுமாற்
றீதா கியநெஞ் சுடையார்க்குத் தெளிய வபேத மிகவின்றி
வேதா கமங்கள் விளம்பிடினும் விளங்கா தென்றும் வேறென்னும்
வாதா லழிவ ரவர்மாயை மயக்க மயங்கு மதியினர்.

நெஞ்சஞ் சோகம் பாவனையி னிற்க நிறுத்தி விடயங்க
ளஞ்சுந் துறவாத் துறந்தசிவ யோகி யொருவ னடியிணையிற்
றுஞ்சுந் திருமான் முதலமர ருள்ள மவனைத் துதித்திறைஞ்சா
தெஞ்சுந் தவமா முனிவரிலை யெனநான் மறையு மியம்புமால்.

மெய்ஞ்ஞானிகளாகிய ஆரிபீன்களும், ஆஷிக்கீன்களும், அவர்கள் நிற்கிற மக்காம் (தானம்) களுக்குத் தக்கபடி கடவுளைப் பற்றிப் பேசுவார்கள். சூபியாக்கள் சில மக்காம்களில் லாஅன இல்லாகூ அவனில்லாமல் நானில்லை என்று தன்னை நாஸ்தி (பஞு) ஆக்கி, கடவுளை நிலைபடுத்தி திக்று (தியானம்) செய்வார்கள். சில மக்காமில் நானே யன்றி அவனில்லை யென்று திக்று செய்வார்கள். இந்த திக்ருவது, தன்னை நாஸ்தியாக்கிய பின்னர் ஆண்டவனருளால் இவன் நாவால் வெளியாகிறதாகும். சில மக்காமில் அவனுமில்லை, நானுமில்லை என்று திக்று செய்வார்கள். நானென்றும், நீ யென்றும் துவிதப்படுத்திப் பேசுவதெல்லாம் நானென்றும், நீ யென்றும் எண்ணமிருக்கும் வரையிலேதான். துவித எண்ணம் அற்றுப்போனல் நானென்றும், அவனென்றும் சொல்லவிடமில்லை. ஆனல் அந்த மக்காம்களிலேறியவர்கள் அவ்விதம் சொல்லலாமே தவிர சாமானியர்கள் அப்படிச் சொல்வது பிழையாகும்.

சிவவாக்கியர்.

என்னகத்து ளென்னைநா னெங்குநாடி யோடினேன்
என்னகத்து ளென்னைநா னறிந்திலாத தாகையால்
என்னகத்து ளென்னைநா னறிந்துமே தெரிந்தபின்
என்னகத்து ளென்னையன்றி யாதுமொன்று மில்லையே

மவுனவஞ் செழுத்திலே வாசியேறி மெள்ளவே
வானளாய் நிறைந்தசோதி மண்டலம் புகுந்தபின்
அவனும்நானு மெய்கலந் தனுபவித்த வளவிலே
அவனுமில்லை நானுமில்லை யாருமில்லை யானதே.

## தன்னை யறிவது எப்படி?

சிலர், தன்னுடைய தலை-முகம்-புருவமையும்-வெளி மார்பு, குதத்துக்கும்—குய்யத்துக்கும் மத்தியப் பிரதேச

முதலான விடங்களில் ஏதாவது ஒரு அட்சரத்தை தரபித்து தியானித்து, இவைகளேயே தன் அந்தரங்க மென்றுணர்ந்து அவ்விடங்களில் சிற்சில சிறு பிரயோசனங்களைக் கண்டு அதுவே தன்னை அறிந்ததென்று தவருக நினைத்துக் கொள்ளுகிறார்கள். தன்னை யறிவதானது வெளியுறுப்பான மாமிசத் துண்டை யறிவதல்ல. இருதயத்தின் அந்தரங்கத்தை அறிந்து, பிரம்மாகம்பாவமாகிய நபுசை அறிவதுவே கடவுளை அறிவதற்குத் திறவுகோலாகும். குர்-ஆனில், ஸநுரீஹிம் ஆயாத்திறு பில்ஆபாக்கி வபீஅன்புசிஹிம் ஹத்தாஎத்த பய்யனலகும் அன்னகுல்ஹக்கு (நம்முடைய உண்மை அவர்களுக்கு விளக்கமாகும்படி உலகத்திலேயும், அவர்களுடைய நபுசுகளிலேயும் நம்முடைய திருட்டாந்தங்களை நாம் அவர்களுக்குக் காட்டுகிறோம்) என்று கூறப்பெற்றிருக்கிறது.

நமது சரீரத்திற்குள் சூக்குமப் பொருளாயிருக்கிற மனம்-சித்தம்-புத்திகளுக்கு மேற்பட்டிருக்கும் அகங்காரம்-இருதயம் - ஆன்மா - (நபுசு -கல்பு - ரூஹு) இவைகளின் குணங்களை அறிவதே தன்னை அறிவதாகும். இம்மூன்றையும் ஆராய்ந்துணருமிடத்தில் ஒன்ருயிருந்தாலும் தானத்துக்குத் தக்கபடி வெவ்வேருகக் கூறும்படி ஏற்படுகிறது.

மூன்று அகங்காரம்.

நபுசு என்னும் அகங்கார தத்துவமானது, புத்தி தத்துவத்திலிருந்து தோன்றி, நான் என்னும் அகந்தைக்குக் காரணமாகி; இவ்வுலகில் என்னை நிகர்ப்பவர் யாவர்? எல்லா மென்னுடைமை, எல்லா மென்னடிமை என்று அகங்கரித்து மீசை முறுக்கிக்கொண்டு நிற்கும்.

இவ்வகங்காரமானது சாத்துவிக குண மிகுதியால் தைசச அகங்காரமெனவும், இராசதகுண மிகுதியால் வைகரி அகங்காரமெனவும். தாமதகுண மிகுதியால் பூதாதி அகங்காரமெனவும் மூவகைப்படும். அதாவது, பிரம்ம மென்னும் சமுத்திரத்திலிருந்து உண்டாகிற முதல் அலைக்கு தைசசமென்றும், இரண்டாவது அலைக்கு வைகரியென்றும், மூன்றாவது அலைக்கு பூதாதி யென்றும் பெயர். இந்த மூன்று அகங்காரங்களில் முதலிரண்டும் நன்மையைத் தரத் தக்கது; எஞ்சிய ஒன்று இழிவைத் தரத்தக்கது.

சகல வுலகங்களும், அவற்றிலுள்ள சராசரப்பொருள் களும், பரமான்மாவும் நாமே. நாமே முடிவில்லாமலிருக் கிறேம். நம்மையன்றி ஒரு பாவனையுமில்லை என்னும் அபேத நிலையே தைசச அகங்காரம். மிக நுட்பமாகியும், எல்லா வுலகங்களுக்கும் புறம்பாகியும் நாமெப்பொழுதும் நிலையா யிருக்கின்றேம் என்னும் துவித நிலையே வைகரி அகங்காரம். இவ்விரண்டகங்காரமும் ஞானவான்களிடத் திலே யுதித்து ஒன்றுக்கொன்று சகாயமாய் மோட்சத் தைக் கொடுக்குமேயன்றி பந்தத்தைக் கொடுக்கமாட்டா. கால் - கை-தலை முதலான உறுப்புகளுடைய சரீரத்தையே தானென்று நிச்சயிக்கும் கேவலமான புத்தியை பூதாதி- அகங்காரம் என்பார்கள்.

முதலிரண்டகங்காரங்களிஞல் பிரம்ம பதத்தில் கலந்து, அவ் விரண்டகங்காரங்களையும் கைவிட்டு, கடைசியான பூதாதி அகங்காரம் வந்து பொருந்தாமல் திடமாக நிற்குமந் நிலையே முதிர்ந்த பிரம்மபதமாகும். இவற்றின் விளக்கமா வது:—தேகத்தை நான் என்பது ஒன்றும், பிரம்மத்தை நான் என்பது இரண்டும், ஆக மூன்று அகங்காரங்களும்

கலைந்தவிடமே மோட்சம், கைவல்யம் என்று சொல்லத் தகும். இதுவே வேதங்கள் முறையிடுகின்ற திருவாணைப்பதம்.

### தேவிகாலோத்தரம்.

யானெனு மதனை நீக்கி யேகமாய் நின்ற ஞானம்
ஆனவவ் வொளியாய்த் தோன்று மதுமுத்தி வித்து மாகித்
தேனமர் கரிய கூந்தல் செய்யவாய்ப் பாந்து நீண்ட
மானமர் விழியாய் மேலாம் யோகவத் தகமு மாமால்.

நபுசென்னும் அகம்பாவமானது நற்குணத்தையும், துர்க்குணத்தையும் பொருந்தியிருப்பதால், இது குர்-ஆனில் நபுசு அம்மாரு முதலான பலபெயர் புனைந்து நிற்கிறது. சிலர் நபுசு 7 என்றும், சிலர் 3 என்றும் சிலர் சுருக்கமாகக் காணுமிடத்தில் நபுசு என்பது ஒன்றுதானென்றும் மதிக்கிறார்கள். விரிந்த மனதுடையவர்களுக்கு நபுசு பல விதமாகவும், குவிந்த மனதுடையவர்களுக்கு ஒரேவிதமாகவும் அமைகிறது.

“நீ” என்னும் நபுசானது தமிழ்மொழியில் தைசசம்-வைகரி-பூதாதி என மூன்று அகங்காரமாகக் கூறப்பெற்றுளது. அறபிப் பாஷையில் அதை, அம்மாரு, லவ்வாமா, முல்ஹிமா-முத்மயின்னு-ருலிய்யா-மர்லிய்யா-காமிலா என ஏழு விதமாகப் பிரித்துக் கூறப்பெற்றிருக்கிறது. ஆயினும், முடிவில் அந்த 7 நபுசையும் நபுசுன்னுத்திக்கா என்னும் ஒரே நபுசாகச் சுருக்கியும் கூறப்பெற்றிருக்கிறது.

நபுசை 7 என்று கூறும்போது, நபுசு அம்மாருவிலிருப்பவருக்கு லவ்வாமா திரையாகவும், லவ்வாமாவிலிருப்பவருக்கு முல்ஹிமா திரையாகவும், இவ்விதம் கீழான நபுசுக்கு மேலான நபுசு திரையாக மறைந்திருக்கும். ஒவ்வொரு நபு

சுக்கு மத்தியில் 10 திரைகள் வீதம் அடியானுக்கும், ஆண்டவனுக்கு மிடையில் 70 திரைகள் உண்டாயிருக்கின்றன. இவற்றுள் நபுசுஅம்மாரு வென்பதுதான் மிகக் கொடியது. அந்த அம்மாருவை அடக்கி யாண்டுவிட்டால் ஒவ்வொரு நபுசையும் படிப்படியாக அடக்கி மேல் நிலமைக்கு வந்து விடலாம். இந்த அம்மாரு வென்னும் அந்தகாரமான நபுசை "நான்" என்பதென்ன? நான் எங்கிருந்து வந்தேன்? இவ்வுலகில் வந்த நோக்கமென்ன? நான் இப்பொழுது என்ன செய்துகொண்டிருக்கிறேன்? என்னுடைய முடிவென்ன? என் கதி எவ்வாறாகும்? என்று சதா சிந்தித்து, அதையடக்கி ஒளியுடைய லவ்வாமா என்னும் நபுசுக்கு வரவேண்டும். பின்னர் லவ்வாமா என்னும் நபுசு முதல் ஒவ்வொரு நபுசையும் அடக்கி, நபுசுன்னுத்திக்காவுக்குப் போய்ச் சேரவேண்டும்.

பஞ்சமா பாதகம் முதலான கெட்ட காரியங்களைப் புரியும்படி தூண்டுகிற மனதுக்கு நபுசு அம்மாரு வெனவும், அந்தக் கெட்ட காரியங்களைச் செய்ய முயல்வது பாவம் என்றுணர்த்துகிற மனதுக்கு நபுசுல் லவ்வாமா எனவும், நன்மை-தீமை முதலான காரியங்களை உதிக்கச் செய்கிற மனதுக்கு நபுசு முல்ஹிமா எனவும், ஆண்டவன்மீது பூரண விசுவாசம் நிலைபெறச்செய்கிற மனதுக்கு நபுசு முத்மஇன்னு எனவும், அந்த விசுவாசத்தை நிலைக்கச் செய்து அதிற் பொருந்திக்கொள்கிற மனதுக்கு நபுசு றாலியா எனவும், தன்னுடைய செய்கைகளை ஆண்டவன் பொருந்திக்கொள்ளும்படியான நன்மையைச் செய்யு மனதுக்கு நபுசு மறுலிய்யா எனவும், எல்லாவற்றிலும் பூரணமான நிரப்பம் பொருந்திய மேலான மனதுக்கு நபுசு காமிலா எனவும் கூறப்பெற்றுளது. இந்த ஏழு நபுசுகளும் இருதயத்தையே

இடமாகக்கொண்டுள்ளது. இதற்குமேல் இருதயத்தின் மேற்பாகத்தில் நபுஈன்னுத்திக்கா என்பது இருக்கிறது. அதுதான் ஆண்டவனுடைய தரிசனையைக் காணும் மகா சன்னிதானம்.

## ஞானப்படிகளின் பரீட்சை.

சரியையின்படி வணங்குதல், நோன்பு-தானம்—தருமம் இயமம்-நியமம் இவைகளை அநுட்டித்தல் நபுசல் லவ்வாமாவின் குணம். இந்த நபுசுக்கு இத்தகைய நற்குணங்க ளிருந்தாலும் பூதாதி அகம்பாவ மென்னும் நபுசு அம்மாறுவுக்குரிய சிலகுணங்களும் இதில் கலந்து கொண்டேயிருக்கும். அதாவது:—

மேற் காட்டிய நற் கருமங்களை அநுட்டித்து வருகையில் தன்னை வணக்கமுடையவனென்றும், நோன்பு பிடிக்கிறவனென்றும், தான - தருமம் செய்கிறவனென்றும், இயம-நியமாதி மேற்கொண்டவனென்றும் பிறர் மெச்சுகிறார்களா? என்றெண்ணி; அங்ஙனம் மெச்சக்கண்டால் சந்தோஷங்கொள்வதும் ஏற்படும். பெருமையை வெளியில் காட்டிக்கொள்ளா விட்டாலும் இருதயத்தில் குடிகொண்டிருக்கும். இது ஆண்டவனுக்கு வெறுப்பான விஷயம் என்றறிந்தாலும், அதை விடுவதற்கு மனோதிடமும், முயற்சியும் ஏற்படாது. இதுவே நபுசு லவ்வாமாவின் குணம். இந்தக் குணமுள்ளவன் நபுசல் லவ்வாமாவின் தன்மையி லிருக்கிறானென்று தெரிந்து கொள்ளலாம். ஆகையால், இந்தப் பெருமைக் குணங்களை ஒடுக்கினால் அதற்கு மேற்படியாகிய அஸ்ரூறு என்னும் அந்தரங்கங்களடங்கிய நபுசு முல்ஹிமாவிற் சேரலாம். ஒடுக்காவிட்டால் கீழான நபுசு அம்மாறுவிற் கொண்டுபோய்ச்சேர்த்துவிடும்.

ஆகையினால், மகான்கள் இந்த மக்காமென்னுந் தானத்திலி ருந்து மேல் தானத்திற்கு ஏறுவதற்காக மிகவும் பிரயாசைப் படுவார்கள்.

## சாகுமுன் சாகுவது.

சாகுமுன் சாகுவதான்து சரீரத்திலுள்ள ஞானேந் திரிய-கன்மேந்திரிய - அந்தக்கரண முதலான சரீரத்தின் குணங்கள் முழுவதுமற்று, தன்னை நாஸ்தி (பனா) ஆக்கி கடவுளிடத்தில் ஐக்கியம் பெற்றதாகும். இந்தத் தன்மை யானது கமால் அல்லது பூரண மென்னும் 4-வது நபுசு முத்மயின்னாவிலும், விஸால் அல்லது ஒன்று படுதலென் னும் 5-வது நபுசு ருலியாவிலும் தஜல்லியாத்துல் லபுஆ - லென்னும் தெரிசனைக் காட்சி வெளியாகும் 6-வது நபுசு மறுலிய்யாவிலும், அஸ்மாக்களாகிய செபத்தின் காட்சிகள் வெளியாகிற 7-வது நபுசு காமிலாவிலும் வந்துசேரும். சாகு முன் சாகுதலென்னும் தன்மையைப் பெற்றவர்களுக்கு அறபியில் முகர்றபீன்கள்-அவுலியாக்கள் என்றும், தமிழில் ஜீவன்முத்தர்களென்றும் கூறுவார்கள்.

### குணங்குடி மஸ்தான்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சாதாமற் செத்திருக்குஞ் சற்குருவின் குணங்குடியைச்
சார்ந்தோ மாகிற்
சாகாமற் செத்திருக்குஞ் சாயுச்ய பதந்தருஞ்சாட்
சாதி யாக்குஞ்
சாகாமற் செத்திருக்குந் தன்மயத்தோர்க் குற்றபெருந்
தகையுங் காட்டுஞ்
சாகாமற் செத்திருக்கு முத்தியுஞ்சித் தித்திடுங்காண்
டன்க்குத் தானே.

## அகம் புற வணக்கம்.

ஒருவன் ஒரு காட்டை வெட்டித் தோட்டமாக்க நாடினல் அந்தக்காட்டிலுள்ள பிரயோசனமற்ற விருட்சம் செடி கொடி முதலானவைகளை வேரோடறப் பிடுங்கி, பூமியைச் சுத்தமாக்கி, மாதுரியமான இனிய கனிவர்க்கங்களைத்தரும் வித்துக்களைப் பதித்து பயிர்செய்து, அதன் பலப்பிரயோசனத்தை அடைவான். அதுபோல், சாகரமற் செத்திருக்குந் தன்மையால் அகவணக்க முள்ள சீவன் முத்தர்கள், தமது இருதய பூமியில் முளைத்திரா நின்ற நபுசென்னும் அகம்பாவத்தின் தீயகுண மாகிய விடவிருட்சத்தை வேரோடறப் பிடுங்கி, அவ்விடத்தில் (திக்று) தியானம்-சமாதி என்னும் விதைகளைப்பதித்து, பொறுமை-சாந்தம்-அன்பு என்னும் நீர் வார்த்து, அதன் பலனுகிய நித்தியானந்த வாழ்வென்னுங் கனியைப் புசித்து ஆனந்தமடைவார்கள்.

சரீராதி இந்திரியச் சேஷ்டையைப் பொருந்திய புற வணக்க முடையவர்கள் இருதய பூமியில் முளைத்திரா நின்ற தீயகுணங்களென்னும் விடவிருட்சங்களை எத்தனை தடவை வெட்டினலும் முழுவதும் அகலாது. சில சமயங்களில் மரண பயத்தைப் பற்றியும், மரணத்துக்குப் பின்னுண்டாகுந் துன்பத்தைப்பற்றியும் நினைந்து மனோ சஞ்சலமும், அச்சமும் உண்டாகி அப்போதியற்றும் முயற்சியால் அத் தீய குணங்கள் சில சந்தர்ப்பத்தில் மாறினலும் மேற்கூறிய அச்சம் தீர்ந்தவுடன் அக்குணங்கள் திரும்பவும் உண்டாகிவிடும், இவர்கள் ஒரு விடவிருட்சத்தை நிர்மூல மாக்க நினைந்து மேற்கிளைகளை வெட்டுகிற தன்மை யுடையவர்கள். வேரோடு வெட்டாமல் கிளைகளை மட்டும் வெட்டுவதால், சில நாளையில் மறுபடியும் கிளைகள் வளர்ந்து முன்போலாகி

விடும். அகவணக்க முள்ள மகான்களோ மரத்தை வே ரோடு பிடுங்கி எறிந்ததுபோல், இருதயத்திலுள்ள கெட்ட குணங்களை முற்றிலும் அகற்றியவர்களாவார்கள்.

தியானம்-சமாதி முதலிய உயரிய நிலையை அடைய விருப்ப முள்ளவர்கள் கூர்மையான புத்தி சாதுரியமும், விவேக கோசாமும், ஆசையை யடக்க மனோதிடமும், வைராக்கியமும் உடையவர்களாயும், தன் சரீர குணத்தை நீக்கி கடவுளுடைய குணத்தைக் கொள்ள ஆசித்தவர்க ளாயும், பிரபஞ்சத்தில் வெறுப்பும், துறவில் விருப்பும், சிற் றின்பத்தில் வெறுப்பும், பேரின்பத்தில் விருப்பும், நிலை பெற்றிருக்கக் கூடியவர்களாயு மிருத்தல்வேண்டும். இவ் வாறு ஆன்மாவை (நபுசை) சுத்தப்படுத்தும் குணம்பொ ருந்தியவர்களே ஞானவீரராவார்கள். குர் ஆன் ஷரீபில் வஷ்ஷம்சி என்கிற சூறத்தில் "கது அபுலஹ மன்ஸக்காகா" (தன் நபுசை) பரிசுத்தமாக்கினவன் நிச்சயமாக வெற்றி யடைந்தான். "வகது ஹாப மன்தஸ்ஸாஹா" (நபுசை) அசுத்தமாக்கினவன் மாறாத தோல்வியை (கைசேதம்) அடைந்தான் என்று வழுதாம் சத்தியம் செய்து கூறப் பெற்றிருக்கிறது.

நல்ல நபுசு கெட்ட நபுசாக மாறுதல்.

நாம் தாயுடைய கர்ப்பத்திலிருக்கும்போது நான்கா வது மாதத்தில் சரீரத்தோடு சீவான்மா சேர்ந்துகொண்ட போதிலும், இளம்பிராயமுதல் சரீரத்தின் குணமே நபுசுக் கும் சேர்ந்து வேரூன்றி விட்டபடியால், வாலிப காலத்தில் அக்குணங்களை நபுசு அடக்கி யாள முடியாமற்போய்விடு கிறது. நபுசின் சொந்தக் குணமான அறிவு - ஆராய்ச்சி முதலிய பகுத்தறிவினால் இது நன்மை, இது தீமையென்று

உணர்த்தினலும், மெய்யென்னும் ஞானேந்திரிய சரீரகுண மானது மேலாகி, நபுசையும் அதற்கு ஒத்தாசையாக்கிக் கொள்ளுகிறது. ஒருமனிதன் பரதாரகமனம் செய்ய நாடினல் அது பஞ்சமா பாதகத்திலொன்று! அதைச்செய்தால் இருமையிலுந் துன்பம்! ஆதலால் அதைச் செய்யக் கூடாதென்று புத்தி சொல்லித் தடுத்தாலும், மோகமானது நபுசைத் தனக்கு உதவியாக்கிக்கொண்டு பர மாதர் வீட்டுக்குள் சென்று வருவதற்குரிய தந்திர-மந்திரோபாயங்களை நபுசு சொல்லிக் கொடுப்பதுபோல் செய்து, சரீரத்தின் மூர்க்க இச்சைக்குக் கீழ்ப்படிந்துவிடுகிறது. இத்தன்மை போன்ற துர்க்காரியங்களுக்குக் கீழ்ப்படியும் குணத்துக்கு நபுசு அம்மாரு என்று பெயர்.

நபிகள் பெருமான் முகம்மது (சல்) அவர்கள், "உன்னுடைய சத்துருக்களில் கொடிய சத்துரு உன் இருவிலாவுக்கும் இடையிலிருப்பவனே" என்று நபுசைக்குறித்து திருவாய்மலர்ந்திருக்கிறார்கள். ஆகையால் அந்தக் கொடிய சத்துருவுக்கு நாளடைவில் சற்புத்தியைக் கூறி அவனை மீற விடாதபடி அடக்கி ஒன்று படுத்தவேண்டும்.

## தன்னைக் காணும் தத்துவம்.

நான் என்னும் தைசச அகங்காரத்தின் பொருளாகிய பிரம்மத்தைக் காணாதவர்கள் ஞான சிதாகாயத்தைக்கண்டறியமாட்டார்கள். அங்ஙனம் கண்டவர்கள் அந்தச் சிதாகாய சொரூபமே யாவார்கள்.

மேகமானது சந்திரனை மறைத்தால் குமுதப்புட்பம் விகசிதம் பெறாததுபோல, அகங்காரமானது ஞானகாயத்தை மறைத்தால் பிரம்ம மென்னும் நிலையானது கைவல்லியமா

காது. ஆகையால்,நான் என்னும் இந்தக் காரணஅகங்காரத்தைத் தணந்து, நான் என்னும் அந்தப் பரமாகங்காரத்திற் பொருந்தித் தானாக விளங்குபவர்களே மெய்ஞ்ஞானிகள்.

மனமென்னும் மூலப் பிரகிருதியிலிருந்து சித்தந் தோன்றி சிந்தனை செய்யும். சித்தப்பிரகிருதியிலிருந்து புத்தி தத்துவந்தோன்றி சித்தஞ்சிந்தித்தவைகளை நிச்சயம்பண்ணி ஞானக் கிரியைகளை யுண்டுபண்ணும். புத்தி தத்துவத்திலிருந்து அகங்காரம் தோன்றும்.

மனமானது தைசச அகங்காரத்தில் ஒரு விடயத்தை முதலில் நினைந்து பின்னர் சந்தேகிக்கும்; ஞானேந்திரியங்களும் தோன்றும். வைகரி அகங்காரத்தில் தோன்றி கன்மேந்திரியங்கள் தோன்றும்.பூதாதிஅகங்காரத்தில் தோன்றி நானென்னும் ஆணவத்தை யுச்சாடிக்கும். இந்தப் பூதாதி அகங்காரத்தையே தொலைக்க வழிதேட வேண்டும்.

ஞானவாசிட்டம்.

கொடிதிது கொடிது சாலக் கொடிதிதன் கொடுமை யாலே
முடிவறு முயிர்க ளெல்லா மோகமுற் றறிவு கெட்டார்
கடிதிலவ் விரண்டி னாலுங் கடிந்திதெவ் வளவு விட்டாய்
படிவுறவ் வளவே யெய்தும் பரமமாந் தற்ப தார்த்தம்.

## ௩புசு அம்மாருவென்னும் பூதாதி அகம்பாவத்தை அடக்க முயலுதல்.

ஏ! தாமத குணத்தில் தோன்றிய பூதாதி அகங்காரமே! பூலோகத்தில் விளையும் தீங்குகளெல்லாம் உன்னாலேயே. அனேக அரசர்கள் தத்தம் நாடு நகரங்களை யிழந்ததும்; அநேக ஞானப்பியாசிகள் தத்தம் நிலையிலிருந்து வழுவியதும் உன்னாலேயே. மனிதர்கள் சண்டை யிடுவதும்,

மண்டை யுடைபடுவதும், பொன் முதலாய பொருட்களை யிழப்பதும், உடலை யிழப்பதும், உயிரை யிழப்பதும் உன்னாலேயே. சுருங்கக் கூறுமிடத்தில் உன்னாலேயே சகல ஆன்மாக்களும் முத்தியடையாமற் போனார்கள். நீயே அவர்களை அழியச்செய்தாய். நீயே அவர்களைக் கொன்றாய். இத்தனைகோடி ஆன்மாக்களைக் கொன்ற உனக்கு சீவஹத்தி தொடரவில்லையா? அந்த சீவஹத்தி உன்னைக் கொல்லவில்லையா? ஏ அகங்காரமே! எத்தனையோ மகான்களெல்லாம் மறைவா யிருக்கிறார்களே. நீ மாத்திரம் மறையமாட்டேனென்கிறாயே? எல்லாச் சீவர்களிலுஞ் சிறந்த மனிதர்களும் சொற்ப ஆயுளுடையவர்களாகத்தானே போய்விடுகிறார்கள்? உன்னுடைய ஆயுளுக்கு ஒரு கணக்கு வழக்கில்லையா? நீ அழியாவரமா வாங்கிவந்திருக்கிறாய்? உன்னுடைய பட்டோலை இன்னுமா கிழியவில்லை? உன்னுடைய ஓலையைக் கிழிக்க எமன் மறந்தா போய்விட்டான்? ஞானிகள் கூட உன்னை அழிக்க முடியாமல் நான் நான் இங்கேனுமகந்தை எனக்கேன் வைத்தாய்? என்று கடவுளிடம் முறையிடும் படியாகச் செய்து விட்டனையே! ஞானிகளெல்லாம் உன்னை அடியோடு அழிக்க வேண்டியே பல மனிதர்கள் நிறைந்த சங்கங்களில்,

யான்என தென்னுஞ் செறுக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்

என்பது போன்ற அநேக அரிய பெரிய தத்துவ உபதேசங்கள் செய்கிறார்கள். உன்னை எவ்விதத்தில் தொலைக்கலாம் என்று சங்கங்கூடி ஆலோசிக்கிறார்கள். உன்னைத்தொலைக்கவே மகான்களெல்லாம் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். அன்றியும்,

தூணைச்சிறு துரும்பாகத் தோற்றிடச் செய்வோம்
துரும்பைப் பெருந் தூணுகத் தோன்றச்செய்கு வோம்
ஆணைப்பெண்ணும் பெண்ணையாணு மாகச்செய்கு வோம்
ஆரவாரித் தெதிர்நின் ருடுபாம்பே.

மூண்டெரியும் அக்கினிக்குள் மூழ்கிவரு வோம்
முந்நீருள் ளிருப்பினும் மூச்சடக்கு வோம்
தாண்டிவரும் வெம்புலியைத் தாக்கிவிடு வோம்
தார்வேந்தன் முன்புநின் ருடு பாம்பே.

செப்பரிய மூன்றுலகும் செம்பொன் ஞக்குவோம்
செங்கதிரைத் தண்கதிராய்ச் செய்து விடுவோம்
இப்பெரிய வுலகத்தை யில்லாமற் செய்வோம்
எங்கள்வல் லபங்கண் டாடுபாம்பே.

என்று கூறும் மகா வல்லமை பொருந்திய சித்தர் குழாங்களும் எத்தனையோ காலமாக அரும்பெரு முயற்சிசெய்தும், உன்னை அழித்தும், நீ இன்றளவும் அழியாமல் பதுங்கி பதுங்கி, மறைந்து-மறைந்து புறப்படுகின்றுய். எத்தனையோ காடுகள் அழிந்து நாடுகளாகி விட்டது, எத்தனையோவிடத்தில் கடலழிந்து திடலாகிவிட்டது. நீ மாத்திரம் இன்னும் அழிந்தபாடில்லை. ஏ! அகங்காரமே! உனக்கு ஒரு நாசகாலம் ஏற்படாதா? ஏற்படாமலென்ன! எத்தனையோ மகான்கள்கூடி உனக்கு அழிவுகாலம்ஏற்படவேண்டுமென்று சதா சிந்தித்துக் கொண்டிருக்கும்போது, உனக்கு வாராமலா போய்விடும்? வந்துகொண்டு தானிருக்கிறது. அந்த நாச காலம் எது வென்றுல் உன்னை அடியோடு அழிப்பதற்காக சைசச அகங்காரமானது வைகரி அகங்காரத்தைத் தன் வசப்படுத்திக்கொண்டு பரமாகங்கார மென்னும் வெற்றிப் பெயர் புனைந்து வெளியே புறப்பட்டிருக்கிறது, அந்தப் பரமாகங்காரமே உனது சென்ம சத்துரு.

ஞானவாசிட்டம்.

மூவகை யுலகி லிந்த வகங்கார மும்மை யென்று
மேவரு மிரண்டு நன்று மிகவுமொன் றீன மாகும்
யாவது பரமு நாமே யீறில மெமைய லாதோர்
பாவனை யிலதென் றோரும் போதமே பரமாங் காரம்.

## காரணகங்காரத்தின் சத்துரு.

ஏ! காரண அகங்காரமே! உனது சத்துருவாகிய பரமாகங்காரத்தை உன்னைப்போல் இலேசாக மதிக்காதே. நீயோ அற்பகுண முள்ளவன். அவனோ பெருந்தன்மை யுள்ளவன். நீயோ அழியக் கூடியவன். அவனோ அழியாதவன். உன்னை சாமானியர்க ளிடத்திலும் காணலாம். அவனையோ அறிவிற் சிறந்த மகான்களிடத்தில் மட்டும் காணலாம். நீயோ நான் என்ற அகங்காரம் உள்ளவன். ஏனெனில் "நான்" என்றும் "நீ" என்றும் "அவன்" என்றும் இவனென்றும்பலவாறு பேதப்படுத்திக்கொண்டுபோவதனாலே தான். உன் பகைவனோ, "நான்" என்ற கர்வம் அற்றவன்: ஏன்? அவன் பேதத்தையெல்லாம் ஒன்று படுத்துகிறவன்; எல்லாரையும் தானாகச் செய்து கொள்ளுகிறவன். இவன் நம்மை அழிக்கவந்தவனு என்று உனக்கு அவன் மீது பகை யுண்டு. அவனுக்கோ உன்மீது பகை இல்லை: ஏன்? அவன் சன்னிதியில் உன்னைக் காணும். உன்னை தன் அவயவங்களில் ஒன்ருகப் பார்க்கிறான். அவன் சன்னிதியில் உன் பொய்ம்மை . உன்னை அழிக்கிறதே யொழிய, உன்னை அவன் அழிக்க நீ ஒரு பொருளாகவே அவனுக்குத் தோற்றமாட்டாய். ஆகையால், அகங்காரமே! உனக்கு அவன் சத்துருவேயன்றி, அவனுக்கு நீ சத்துருவன்று. இன்னம் சுருக்கமாய்ச் சொல்லுமிடத்து

உனக்கு நீயே சத்துரு. எப்படியெனில், உன் பேராசை யால் நீ மற்ற இடங்களில் போனதுபோல் அந்தப் பெரிய வன் முன்பும் போனாய், அன்று முதல் நீ கெட்டாய். ஆகையால், உன்னை விழுங்கி இருளாக்கி, ஓங்கிப் பரந்த ஒளியா யுள்ளது பரமாகங்காரம்.

ஞானவாசிட்டம்.

மடிவறு பிறவி யென்னு மாத்திர னெனக்கீ தென்னு
நெடியபல் பணைக ணீட்டி நிரையமாங் காய்கள் காய்க்கு
முடிவறு துயராங் கார முளையாக விளையா நிற்கு
மிடியிலா ஞானத் தீயால் வேரொடும் வெந்துபோமே.

அகங்காரம் அடைக்கலம் புகுதல்.

ஓ! அகங்காரமே! நீ செய்யும் தீமைக்கு அளவில்லை. மற்றவரைவிட உன்னை உயர்த்திக் கொண்டாலொழிய உனக்குத் திருப்தி இல்லை. உன்னைவிடப் பிறரைத் தாழ்த் தினாலொழிய உனக்குத் திருப்தி இல்லை. உனக்கு என்ன பெயர் வைத்துக்கொண்டால் பெருமை என்றும், உனக்கு என்ன வடிவம் வைத்துக்கொண்டால் அழகு என்றும், உன்னை எல்லாரும் வணங்குகிறார்களா என்றும், உன் பேச் சுக்கு மறு பேச்சு ஒருவரும் சொல்லாமலிருக்கிறார்களா என்றும், உன்னிலும் மேலான பொருள் இல்லை என்று அவர்கள் பேசிக்கொள்ளுகிறார்களா என்றும்—இவ்வாறு நீ எண்ணுகிற எண்ணங்களுக்குக் கணக்கில்லை. ஐயோ! உன் வாழ்வு எவ்வளவு அற்பம்! இப்படியிருக்க, நீ செய் கிற யோசனை எவ்வளவு? நீ செய்கிற தீமை எவ்வளவு? இந்த உன் எண்ணங்களிலும் பிறரினின்றும் உன்னைப் பிரித் துக் கொள்வதிலும் உனக்கு இன்பம் இருக்கிறதென்று

நீ மயங்கி யிருக்கிறாய். இவையெல்லாம் உனக்குப் பெருமை செய்வனவல்ல. ஏன்? இப்படி நினைக்க ஒவ்வொருவனும் பாத்திய முள்ளவ னல்லவா? கோடான கோடிப் பேர்களுக்கு பாத்தியமுள்ள ஒரு பொருளில், உனக்கு வீதம் எவ்வளவு? இப்படியிருக்க, நீயே முழுதும் கட்டியாள எண்ணும் வீண் எண்ணம் வேண்டாம். இதனாலே உனக்கும் தீமை செய்து கொண்டு, பிறருக்கும் தீமை விளைக்கிறாய். என் அன்பான யோசனையைக் கேள். நீ பகைவனென்று யாரை எண்ணி யிருக்கிறாயோ, அவனே உள்ளபடி உனக்கு நண்பன். உன்னை உண்மையான பெருமைக்கும் நன்மைக்கும் ஆளாக்க அவனுக்குத் தெரியும். அவனிடம் அடைக்கலம் புகு. உன்னைப் பகைவனென்று கருதாத கருணையாளி அந்தப் பரமாங்காரம்.

## ஞானவாசிட்டம்.

கரசர ணாதி மட்டா நானிவ னென்று காணுந்
திரமது தானே மூன்று மகங்கா ரஞ்செகத்தோர்க் கெல்லா
முரியதா மிகவும் பொல்லா துற்பவ மென்னு நச்சு
மரமெழு மூல மாகும் வருந்தியு மொருக்க வேண்டும்.

## அகங்காரம் சரணடைதல்.

அந்தப் பரமாங்காரத்தை நீ அடைக்கலம் புகுந்தால், உன்னை அது என்ன பெருமையில் வைக்கப்போகிறதென்பதை இப்பொழுது நீ என்ன பாடுபட்டாலும் அறியமாட்டாய். யான் எவ்வளவு சொன்னாலும் நீ அறியமாட்டாய். அவனை அடைக்கலம் புகுந்து, அதனால் கிடைக்கும் உன் சொந்த அநுபவத்தால் அறியவேண்டிய விஷயம். தன் பதவியே உனக்கும் பதவியாக அவன் உன்னை வைப்பானே

யொழிய, வேறெந்தச் சிறிய பதவியிலும் உன்னை வைக்க மாட்டான். ஆகையால், உன் கதியைக்குறித்து நீ சிறிதும் சந்தேகப்படாதபடி சரணம் அடை. சரணமடைந்த அந்தச் சணம் முதலே உனக்கு இன்பம் தோன்றுவிட்டால், உடனே திரும்பிவிடு. பால் அருந்துபவனுக்கு உண்ணத் தொடங்கியதிலிருந்து சுவையும், உண்டு முடிந்ததும் பசியாறுதல் என்ற பரம திருப்தியும் உண்டாவதுபோல, நீ அவனைச் சரணடைந்ததிலிருந்து இன்பமும், அச்சரணுகதியின் பயனுக இன்பம்-துன்பம் என்னும் பேதமற்ற பரமானந்தமும் நீ பெறுவை. ஆகையால் சந்தேகமற்று நீ சரணடையத் தக்கவன் அந்தப் பரமாகங்காரனே.

ஞானவாசிட்டம்.

அகங்கார முகில்பட்ர வாசைமலை மல்லிகையவ்
வளவிற் ருகு
மிகுந்துயரிவ் வகங்காரத் தொழில்பிரிந்தும் பேதமையின்
மிகவு னொந்தேன்
செகந்தனிலா பத்திடமாய்த் திறந்துறப்ப தாயுள்ளாய்த்
தியக்க மாயு
முகந்தவிசா ரமுமுணர்வு மிலாவகங்கா ரம்போமா
றுபதே சிப்பாய்.

அகங்காரத்தின் ஆனந்தநிலை.

பரமாகங்காரனை நீ சரணடைந்த பின்னர் உன்னைக் குறித்தே வேதங்களும், எல்லாவுலகமும் புகழ்கின்றன. மதங்கள் அருமையாய் உபதேசிப்பதெல்லாம் உன் பெயராலேயே. அப்பொழுது எல்லாம் உன் உலகம். எல்லாம் உன் வடிவம். உன் வடிவையன்றி ஒருவருக்கும் வடிவமில்லை. ஆலயத்தில் வணங்கப் பெறுபவன் நீ. வேதத்தில்

வருணிக்கப்பெறுபவன் நீ. திருவிழா கொண்டாடப்படுவது உனக்கு. உன் சக்திதான் என்ன?—உன் சந்நிதானத்திலேயே உலகம் நடக்கிறது. சுருக்கமாய்ச் சொல்லுமிடத்து எல்லாப் பொருள்களும் உன்னைப்பற்றிப் புகழ்ந்து உனது இருப்புக்குச் சாட்சி சொல்லுகின்றன. இதே அவைகளுடைய வேலை. இத்தகைய ஒரு உன்னத பதவி உனக்கு வருமென்று கனவிலும் கண்டிருக்கமாட்டாய். இப்பொழுதே அபிமானத்தை விட்டுப் புறப்படு. உன் வருகையை எதிர்பார்த்திருக்கிறான் பரமாகங்காரன்.

ஞானவாசிட்டம்.

சென்னெல்வா லினுஞ்சற் றாகிச் செகங்களுக் கயலா யென்று
மன்னுது மெனக்கொள் போத மற்றையாங் கார மாகு
மிந்நிலை யிரண்டுஞ் சீவன் முத்தர்பா லிருந்தீ டேற்றித்
துன்னரு முத்தி நல்குஞ் சுழல்வுறு பந்த நல்கா.

அகங்காரத்தின் விழிப்பு.

கனவினின்றும் விழிக்க உனக்கு எண்ணமா? இன்னும் கனவு கண்டுகொண்டிருக்கவே எண்ணமா? கனவில் கண்ட பொருள் எத்தனை நேரம் நிலைக்கும், சோம்பலையும், தூக்கத்தையும்விட்டு விழித்துக்கொள்! உன் தோற்றங்களை நீயாகக்கண்டு ஏன் வீண் கற்பனைகள் செய்துகொண்டிருக்கிறாய்? உன் தோற்றங்களைக் காண்கிற உன்னை யார் என்று நீ பார். உன்னிடத்தில் தோன்றி உன்னிடத்தில் இலயிக்கக் கூடியவைகளை நீயாக எண்ணி மயங்காதே. இந்தக் கனவிலும் உன் விழிப்பு மேலானதென்று விழித்த மறுகணமே நீ உணரப்போகிறாய். இதை உன் நன்மைக்காகச் சொன்னேனே யன்றி எனக்கு இதில் என்ன லாபம்? என் வார்த்தையை நீ நம்பிப்பார்த்து, நன்மையில்லாவிட்டால்

திரும்பலாகாதா ? எத்தனையோ பெரியோர் களுடைய சொல்லும் உனக்குப் பயனற்றதாகுமானால், நான் செய்து கொள்ளுவது தானென்ன ! இதனிலும் மேலான பதவி யில்லை. இதனால் உனக்கும் நன்மை ; உன்னால் மற்றவருக் கும் நன்மை. உன் அகங்காரத்தை இப்பொழுது இவ்விடத் திலும் காட்டவேண்டாம். உன் சொந்த மனிதன் பரமாகங் காரனே.

ஞானவாசிட்டம்.

மனத்துயரு மாபத்தும் வளர்தொழிலு மகங்காரத்தால்
வருமி தைப்போற்
கனத்தபகை யிலதுநெடுங் காலம்வினை யிதுசேர்ந்து
கலங்கா நின்றே
னனத்தொடுதண் ணீர்நுகரே னரும்போகம் விளம்புவதென்
னகங்கா ரஞ்சேர்
தினத்தொழில்க ளோமமுண வினைத்தும்பொய் யகங்காரந்
தீர்தன் மெய்யே.

ஏ! அகங்காரமே! உலகத்துக் கெல்லாம் நீ அடிமை யாகி உழல்வதைப் பார்! உன் நிலைமை எவ்வளவு பரிதா பம்! ஒவ்வொருவரும் உன்னை எதிர்க்கிறார்கள். நீ "எனக் குத்தான்" என்றால், மற்றவரெல்லோரும் "எனக்குத்தான், எனக்குத்தான்" என்கிறார்கள். நீ "நான்தான் பெரியவன்" என்றால், ஏன் ? நாங்கள்தான் என்கிறார்கள் மற்றவர்கள். உன்னையொழிய மற்ற எல்லாம் உனக்குப்பகையே. அவர் கள் படுத்தும் துன்பத்தால், உன் கற்பனை கோடானு கோடியாய் வளருகிறதே! ஒருவனைச் சரணமாக அடைந்து உயர்பதவி பெறலாகாதா? உன் பகைவரெல்லாரும் உன்னை வணங்கி நேசிப்பார்களே! "எல்லாம் உங்களுக்கு"—என்று நீ சொல்லி விட்டால், உனக்கு எல்லாரும் நண்பர்தான்.

அவ்வளவு பெருந்தன்மையை உனக்குக் கொடுக்கும் ஒருவன் இருக்கிறான்; அவனே பரமாகங்காரன்.

ஏ அகங்காரமே உனக்கு முடிவாக ஒரு வார்த்தை சொல்லுகிறேன். கவனமாய்க்கேள்! இது வரையில் நான் சொல்லிவந்த வார்த்தைகள், எல்லாருடைய நன்மைக் காகவும் சொன்னேனேயன்றி என்னுடைய நன்மைக்காக அல்லது உன்னுடைய நன்மைக் காக நான் சொல்லவில்லை.

அன்றியும் இது என் அகங்காரத்தால் நான் சொன்ன வார்த்தையுமன்று. இவ்வாறு நான் சொல்லவேண்டியது எனது கடமைகளி லொன்றென் றுணர்வாயாக. எல்லோருக்கும் மோட்சத்தைக் கொடுக்கக் கூடியது அந்தப் பரமாகங்காரமே என்று பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள்.

ஞானவாசிட்டம்.

நானெனும் பொருள்கா ணாதோர் ஞானவா காயங் காணார்
நானெனும் பொருளைக் கண்டோர் ஞானவா காய மாவார்
நானெனு மகங்கா ரக்கார் ஞானவிண் மதியை மூடி
நானெனும் பரம வாம்ப னன்மலர் விரியா தன்றே.

தன்னைப் பிரத்தியட்சமாக வுணர்தல்.

இதுவரையில் நபுஞ ஆம்மாருஷாதிய காருணைகங்காரத்தை ஓர் முன்னிலையாக்கி, அதனுடன் உரையாடுவதுபோற் கூறிவந்தோம். அந்த நபுசின் துர்க்குணங்களை யடக்கி பரமாகங்காரமாகச் செய்வதுதான் தன்னை யறியும் மார்க்கம். இன்னும் சுருக்கமாகக் கூறுமிடத்தில் பிறர் கூறுவதை இன்னதென்று விளங்கிக்கொள்கிறதும், ஆலோசிக்கிறதும்; கடவுளை அறிய வேண்டுமென்று விரும்புகிறதும் “ நீ ” என்னும் நபுசேயன்றிப் பிறிதில்லை. அந்த நபுசு தான் “ நீ ”

நீ தான் அந்த "நபுசு" இதை யறிவதற்குத்தான் தன்னை யறிவதென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். இதையே நாம் கடைப்பிடித்தொழுக வேண்டும்.

இந்தச் சரீரமானது "நீ" என்னும் நம்முடைய வீடு. அந்த வீட்டையும், நம்மையும் ஒன்றாய்ச்சேர்த்து நாம் என்று நினைத்துக்கொள்ளக்கூடாது. ஏனென்னில், நம்முடைய சரீரம் இந்த தூல உலகத்திற்குடையது. நாமோ மறைவான சூக்கும உலகத்திற் குடையவர்கள், சில காரியங்களை நிறைவேற்றிக்கொள்ள சொற்ப காலத்திற்கு இந்தத் தூல லோகத்தில் பிரயாணிபோல் வந்திருக்கிறோம். நாமோ அரூபி; நம்மை ஒருவரும் காணமுடியாது. அங்ஙனமிருந்தும், நாம் சரீரத்திலுள்ள அவயவங்களை இயக்கி, அதனதன் வேலைகளைச் செய்யும்படிச் செய்வதால் நாம் மறைவாயிருக்கின்றோம் என்றுயூகிக்கப்பெறுகிறது. ஆகிலும், நாம் இந்தச் சரீரத்தோடு சம்பந்தப்பட்டிருப்பதால், இந்தத் தூல லோகத்தைச் சேர்ந்தவனென்று மதிக்க இடந் தருகிறது. இந்தச் சரீரம் எவ்வளவு கால மிருந்தாலும் ஒரு காலத்தில் அழிந்துபோகும். நாமோ ஒரு காலத்திலும் அழியமாட்டோம். இதையுணர்ந்து சிந்திப்பவர்கள் சரீரம் வேறு, நாம் வேறென்று காண்பார்கள். இவ்விதமே பிறரையும் வெவ்வேறாக வுணர்வார்கள். இந்த உபதேசமானது சாமானியர்களுக்கு எளிதில் விளங்காது. ஆனால், இது சுலூக்கென்னும் யோகபாட்டையில் நடப்பவர்களுக்கு மிக்க அனுகூலமாயிருக்கும்.

ஷஹ்-ஹறு-வென்னும் தெரிசிப்புடைய அப்பியாசிகள் ஆரம்பத்தில் அரும்பாடு படுவது கண்டிப்பையுடைய திரை நீங்குவதற்கேயாம். இந்தத் திரை நீங்கினால் சரீரமுதல்

கண்டிப்பானவைகளெல்லாம் நீங்கி விட்டது போலவும்; அப்போது, நாம் கண்டிப்பற்ற விதமாய்க் கண்டிப்பற்றவுலகத்திலிருப்பது போலவுமாகும். யோக பாட்டையில் மறைவான வுலகம் தோன்றும்போது நாம் பேசுகிற பேச்சும் எண்ணுகிற எண்ணமும் ரூபமுடையதாக் காண்போம். அந்த ரூபம் அகக் கண்ணுக்கேயன்றி முகக் கண்ணுக்குப் புலப்படாது. இவ்வுண்மை அகக்கண் திறந்த மெய்ஞ்ஞானிகளுக்கே நன்குவிளங்கும். நமக்கு ஞானக்கண் திறக்கும் வரையில் மெய்ஞ்ஞானிகளுடைய வார்த்தையில் நம்பிக்கையும், விசுவாசமும் வைத்துக்கொள்ளவேண்டும். பின்னர் அந்நிலையை நாம் அடைந்தபிறகு சகலமும் தானாகவே விளங்கும். ஆகையால், மனிதனென்பதும், "நான்—நீ" என்பதும் இந்த நபுசு என்னும் அகங்காரத்துக்கென்பதை நன்குணர்வோமாக.

## இருதயமும்—சரீரமும்.

மனிதனை இரண்டு வத்துக்களால் கட்டிக் கொடுத்திருக்கிறது. அவற்றுள் பிரதானமானது இருதயம் என்பது ஒன்று; அவ்விருதயத்திற்குக் கூடாகிய இந்தச் சரீரம் என்பது மற்றொன்று. சரீரமானது பகிரங்கமாகவும், இருதயமானது அந்தரங்கமாகவும் அமைக்கப்பெற்றிருக்கிறது.

இருதயமானது ஒரு சக்கரவர்த்தியைப் போலிருந்து சரீரமென்னும் பட்டினத்தில், கை-கால் முதலிய உறுப்புகள் பட்டினத்தில் தொழிலாளிகளாகவும், ஆசை தாசில்தாராகவும், கோபம் கொத்துவாலாகவும், புத்தி மந்திரியாகவும் அமைத்து அடக்கியாளுகிறது.

இதில், சரீரமென்னும் இராச்சியமானது நல்ல உத்தியோகத்தர்கள் அதிகாரத்தால் நன்மையையும், கெட்டவுத்

தியோகத்தர்கள் துர்ப் போதனையால் தீமையையும் அடை கின்றது. ஒருவருக்கொருவர் முறைப்படி வசப் பட்டு இராச்சியம் நடந்தால் மேன்மையாக விருக்கும்; இருதய மென்னும் சக்கரவர்த்தியும் ஆனந்தத்துடன் ஆட்சி புரிவார்.

நான் என்பதும், தான் என்பதும், நீ என்பதும், அகங்கார மென்பதும் ஒன்றே யாதலால் "நீ" என்பது அந்த இருதய கமலத்தைச் சேர்ந்ததே. அகம்பாவமாகிய நபுசுக்கு அடுத்த பதவியாயுள்ளது இருதய மாகையால், அதன் இயற்கையையும், உண்மையையும் ஆராய்ச்சி செய் தால் அகம்பாவம்-ஆன்மா என்பவைகளின் உண்மை தெற் றென வெளியாகிவிடும். ஆகையினாலேயே இருதயத்தைப் பற்றிப் பெரியோர்களெல்லாம் ஆராய்ச்சி செய்தார்கள்- செய்கிறார்கள்.

சரீரமானது இருதயத்துக்கு வசப் பட்டிருக்கிறது. இருதயம் அசைந்தால் சரீரமுழுவதும் அசைகிறது. இரு தயத்தில் கோபம் பிறந்தால் சரீர முழுவதும் வியர்வை யாகி உஷ்ணம் பிறந்து கண்கள் சிவந்து போகிறது. இரு தயம் மலர்ந்து சந்தோஷ முண்டானால் முகமலர்ச்சியும் புளகாங்கிதமும் உண்டாகிறது.

இருதயமென்பது மார்பின் இடது பாகத்தில் அமைக் கப்பெற்றிருக்கும் மாமிசத்துண்டுக்குப் பெயரல்ல. ஏனென் றால், இதானது மிருகம் பறவை முதலியவைகளுக்கும், பேரீதத்திற்கும்கூட இருக்கின்றது. மார்பின் மாமிசத் துண்டானது இருதயத்தின் வாகனம் போலாகிறபடியால் இந்த மாமிசத் துண்டைப் பற்றி ஆராயாமல், அதற்குள் சூக்குமமாயும், மிக அந்தரங்கமாயுமிராநின்ற இருதயமாகிய

நான் என்பதைப்பற்றி ஆராயவேண்டும். நான் என்னும் தன்னையும், அதன் இயற்கையான குணத்தையும் அறிவதானது கடவுளை அறிவதற்குச் சிறந்த திறவு கோலாகும்.

தாயுமானவர்.

தன்னை யறிந்தருளிற் றூாகமாய் நிற்பதுவே
உன்னை யறிதற் குபாயம் பராபரமே.

குணங்குடி மஸ்தான்.

தன்னை யறிந்தாற் றனக்கொருகே டில்லையெனச்
சொன்ன மொழியே சுகங்கா ணிராமயமே.

## இருதயத்தின் ரகசியம்.

இருதய கமலமானது மாமிசத்தைப் பொருந்திய மிருதுவான நரம்புகளுடன் சிவந்த வர்னமுடையதாய் கதலிப் பூவைப் போலும், குண்டலிசத்தியைப் போலும் தலைகீழாய் மார்பின் இடது பக்கம் சற்று சாய்வாக தொங்கிக் கொண்டிருக்கிறது. அது தொண்டைக்கு 9-அங்குலம் அதாவது அவரவர் கையால் ஒரு சாணளவுக்குக் கீழும், நாபிக் கமலத்திற்கு 9-அங்குலம் (ஒரு சாணளவு) மேலுமான மத்தியப் பிரதேசத்தில் நிலை பெற்றிருக்கிறது. அந்த இருதய கமலத்தின் மத்தியில் ஒரு சிறிய துவாரம் அதிக சூட்சுமமாக இருக்கிறது. அந்தத் துவார மத்தியில் கடுக்காயி னுள்ளிருக்கும் பருப்பை எடுத்துவிட்டுப் பார்த்தால் எப்படி வெளியிருக்கின்றதோ! அதுபோல், இருதய கமலத்தில் ஒரு அங்குலப்பிரமாணம் இடைவெளி (சிதாகாயம்) அன்றலர்ந்த வெண்டாமரைப் புட்பம்போல் தவளநிறமாக சொலிக்கிறது. அந்தக் கமல தளத்திலேயே பரமான்மா வசிக்கிறது.

இருதயமானது நெஞ்சின் இடது புறத்தில் மாங்காய் அல்லது கொட்டை நீக்கிய பெரிய முந்திரிகைப் பழத்தின் வடிவான தசைக்கட்டியாகும். அந்தக் கட்டிக்குள் ஓர் குழியும், அந்தக் குழிக்குள் கரு நிறமான இரத்தமும் இருக்கும். இது மிருகத்தின் சீவத்தன்மையான ஊற்றுக் கண்ணும், சுரங்கமும்போலிருக்கிறது. இப்படியிருப்பது பிரேதங்களுக்கும், மிருகங்களுக்குமேயன்றி உயிருள்ள மனிதருக்கல்ல.

## இருதய சிதாகாயம்.

உயிருள்ள மனிதருடைய இருதயத்தில் சிவந்த இரத்தமும், சிதாகாய வெள்ளியுமிருக்கும். இவ்விதமான இருதயத்திலேயே பகுத்தறிவு - ஆராய்ச்சி முதலிய விசேஷ குணங்களுண்டாகும். இதற்கு ஹுக்மாக்கள் நபுசுன்னாத்திக்கா வென்றும், சூபியாக்களிற் சிலர் றூகுல் அகுலமென்றும் கூறுகிறார்களென்று ரிசாலத்துல் காதிறிய்யா என்னும் நூலிற் கூறியிருக்கிறது. அந்த சிதாகாயத்திற்கு அப்புறத்தில் ஒரு வாசலிருக்கின்றது. அதைக் கொழுப்பு மூடியிருக்கும். ஆண்டவனை நோக்கி தியானம் (திக்று) செய்யும்போது தியானத்தினுடைய மூலாக் கினியினால் கொழுப்பு எரிந்துபோகும்; சூக்கும வாசல் திறக்கும். பின்னர் கல்புக்கண்ணிலிருந்து அற்புதங்கள் தோன்றி பஞ்சேந்திரியங்களுக்குப் புலனாகும். ஆதலால், தியானஞ்செய்து முடிந்தவுடன் தண்ணீர் குடிக்கப்படாது. தண்ணீர் குடித்தால் குளிர்ச்சி ஏற்பட்டு அந்தக் கொழுப்பானது உறைந்து சூக்கும வாசலை மூடிக்கொள்ளும். அதனால் மறைவான ஆலத்தில் நடக்கும் அற்புதங்கள் தோன்றாது என்று பெரியோர்கள் கூறுகிறார்கள்.

இருதயத்தில் 7 தட்டுகள் இருக்கின்றன. அவற்றுள் 1-வது தியானத்தின் (திக்றின்) தானம். 2-வது கடவுள் மீது ஆசையுண்டாகும் தானம். 3-வது கடவுள்மீது அன்புண்டாகும் தானம். 4-வது கடவுள் அந்தரங்கத்தானம். 5-வது சீவன் (றூகின்) தானம். 6-வது அறிவின் தானம். 7-வது முத்தியின் ஆனந்தத் தானம்.

## இருதயத்தின் கபாட அமைப்பு.

இருதயமும் - இரத்தாசயமும் ஒன்றாகவேயிருக்கிறது. இருதயத்தின் உட்புறத்தில் இரண்டு அறைகள் அல்லது இரண்டு குழிகள் உண்டாகும் வண்ணம் தடுக்கப்பெற்று, வலது புறம் ஒரு அறையும், இடதுபுறம் ஒரு அறையுமிருக்கின்றன. இவ்வறைகள் மேல்பாகம் - கீழ்பாகம் என்று சொல்லும்படியாகவும் தடுக்கப்பெற்று நான்கு குழிகள் அமைந்திருக்கின்றன. அதின் மேற்பாகத்திலுள்ள குழிகளுக்கு சிரவங்களென்றும், கீழ்ப்பாகத்திலுள்ள குழிகளுக்கு சடரங்களென்றும் பெயர். சிரவங்களிலிருந்து சடரங்களுக்கு இரத்தம் செல்லும்படியாக துவாரங்கள் இருக்கிறது. ஆனால் சடரமாகிய கீழ்த் துவாரத்திலிருந்து, சிரவமாகிய மேல் துவாரத்திற்கு இரத்தம் போகாமல் தடுப்பதற்கும் அந்தத் துவாரங்களில் கபாடங்களிருக்கின்றன. இரத்தாசயத்திலுள்ள நான்கு குழிகளில் இரண்டு சிரவங்களும், இரண்டு சடரங்களுமாம். ஓர் பக்கத்து சிரவ - சடரம், மற்றப் பக்கத்து சிரவ - சடரத்துடன் சிறிதும் சம்பந்தமற்றிருக்கும்.

இருதய கபாடங்கள் நெகிழ்ந்தாழத்தக்க தசைகளால் அதிக நுட்பமாகவும், நன்றாகவும் பின்னப்பெற்று தடித்த

பிறைகளைப்போ லிருக்கின்றன. இருதயத்தின் உட்புறக் கவசமும் அதிக நுட்பமாய் அமைக்கப்பெற்றுளது. இருதயத்தின் உட்பக்கத்தில் இரண்டு தசைக் கபாடங்களிருக்கின்றன. அதில் (1)-வது சிரவச்-சடா கபாடம். (2)-வது நாடிக் கபாடமாகிய பிறைபோன்ற கபாடம்.

இருதயத்தின் வலது - இடது கபாடங்கள்.

வலது சிரவத்திற்கும், சடாத்திற்கும் மத்தியிலுள்ள கபாடங்கள் மூன்று பாகமாகப் பிரிந்து, மூன்று பிறைக் கோடுகளைப்போற் காண்பதால், அவற்றிற்கு முப்பிறைக் கோட்டுக் கபாடங்கள் அல்லது திரிகபாடங்கள் என்றும், இடது சிரவத்திற்கும்-சடாத்திற்கும் மத்தியிலுள்ள கபாடங்கள் இரண்டு பாகமாகப்பிரிந்து இரண்டு பிறைக் கோடுகள்போல் காண்பதால், அதற்கு இருபிறைக் கோட்டுக் கபாடங்கள் அல்லது துவய கபாடங்கள் என்றும் சொல்வார்கள். இந்த வலது-இடது கபாடங்களுக்கிடையே சில சிறிய கபாடங்களு மிருக்கின்றன.

இருதயத்தின் வேகம் அதிகப்பட்டால் இரத்தாசயச் சுழலின் விசையானது குறைவுபடும். இந்தக் குறைவினால் விரியும் காலமும், வேலையற்று விஸ்ராந்தியா யிருக்கும் காலமுமே பாதகமடைகின்றது. இரத்தாசயமிருக்கும் பாகத்தில் காதைவைத்துக் கேட்டால் இரத்தாசயத்தின் ஒவ்வோரடிக்கும் இரண்டு சத்தங்கள் கேட்கும். இந்த இரண்டு சத்தங்களும் ஒன்றின்பின் ஒன்றாக வேகமாய் வரும். பின்னர் சிறிது நேரம் நிசத்தத்துடனிருக்கும். முதல் சத்தம் மெதுவாயும், நீண்டுமிருக்கும். இரண்டாம் சத்தம் சுருங்கினதாயும், உரமுள்ளதாயுமிருக்கும். இந்தச் சத்தங்களுண்டாகுமிடத்திற்கு மேற்பாகமாகிய மார்பின்மீது துடிப்பதையும் காணலாம். இந்தத் துடிப்பானது பெரிய கடிகாரத்தின்

சத்தம்போல் டிக்-டிக் என்று கேட்கும். மார்பில் கையை வைத்து அழுத்திப் பார்த்தாலும் கேட்பது தெரியும். இந்தச் சத்தம் கேட்குமிடத்திற்குத்தான் இருதயம் என்று பெயர். இந்த மார்பின் மேற்பாகத்தை இலட்சியமாக வைத்து அதில் மனதைச் செலுத்தியும் அப்பியாசிக்கலாம் அவ்வப்பியாச முதிர்ச்சியால் மார்பின் மேற்பாகத்தில் சுடர்ப்பிரபை பிரகாசிக்கும்.

இருதயச் சுடர் (ஷூக்லு) அப்பியாசம்.

நமது மார்பின் இடது பக்கத்தில் மார்பிலிருந்து நான்கு அங்குலத்தின் கீழ் அதாவது இரத்தாசயம் துடிக்குமிடத்திற்கு சமீபத்தில் படத்திற் காட்டியபடி ஹூ என்ற ஓங்கார வட்டமிட்டு, அவ்வட்டத்தைக் கூர்மையாக நோக்கி சூரியப் பிரகாசம்போல் சிந்தித்து, இரண்டு பார்வைகளையும் ஒன்றாக நிறுத்தி அழுத்தமாக மனதை நோக்கி வந்தால் ஐம்புலச் சேட்டைகளொழிந்து அலையில்லாக் கடல் போலவும் சித்திர தீபம்போலவும் மனமானது உபசாந்தத்துடன் தெளிவடையும். அவ்வாறு தெளிந்த மனக் கண்ணாகிய அறிவினுடைய பார்வையினால் இருதயத்தின் உட் சுடரை நோட்டமிட்டால் தாத்து என்னும் பிரமப் பிரகாசம் வெளியாகி தன்னையறிதலையும் தன் தலைவனை அறிதலையும் விளக்கமாக்கும். ஆகலால் இருதயத்தின் அந்தரங்கத்தை அறிந்து, அதில் சற்குருமூர்த்தி உபதேசித்தபடி தொடர்ந்து, அதிற் குடியிருக்கப் பழகி உன்னை இன்னாரென்று தெரிந்து கொண்டால் கடவுளைக் காணுவது மிக்க எளிதேயாம்.

பரமான்ம நிலை.

ஒரு அரசன் தன் தேச முழுவதும் அதிகாரஞ் செலுத்தினாலும், அல்லது சஞ்சரித்தாலும் அவன் நிரந்தரம் வசித்

துக்கொண்டிருப்பது தன்னுடைய இராசதானிப் பட்டினத்திலேதானென்பது வெளிப்படையாம். அதுபோல், கடவுளானவர் எங்கும் நிறைந்தவரானாலும் அவர் வசிப்பது இருதய கமலாசனத்திலேதான். துரியோதனனுதியர் பஞ்ச பாண்டவர்கள் மனைவியாகிய துரோபதையின் துகிலை உரியும்போது அவள் பண்டரிநாதா! வைகுந்தவாசகா! துவாரகை மூர்த்தி! அந்தவூரிலுள்ள மூர்த்தி! இந்தவூரிலுள்ள மூர்த்தி!! என்று கதறியும் பிரயோசனப்படாமல் ஏ! இருதயமூர்த்தி! என்று ஓலமிட்ட வுடனே ஆதரிக்கப்பெற்ருள் என்பது மகா பாரதத்தின் கருத்து. ஆகையால், கடவுளானவர் நமக்கு மிக்க சமீபமான இருதய கமலத்திலேதான் வசிக்கிறார் என்பது நன்கு விளங்கப்பெற்றும்.

பரமாகங்கார மென்னும் நபுசு காமிலாவுடைய எதாஸ்தானமானது கடவுளுடைய சன்னிதானமாகும். அந்தச் சன்னிதானத்திலிருந்தே நான் என்பது தூல உலகத்திற்கு வழிப்பிரயாணியாக வந்திருக்கிறது.

## இருதய பரிசோதனை.

இருதய கமலத்தையும், அதன் நுட்பங்களையும் அறிந்துகொள்ளாத வரையில் ஆன்மஞானமே சோபிக்க மாட்டா. இருதயம்-இருதயம் என்று புத்தகங்களில் எழுதியிருப்பதைப் பார்த்தோ, பிறர் சொல்வதைக் கேட்டோ எல்லோருங் கற்றுக்கொண்டு பேசுகிறார்களே யன்றி, இருதயத்தையும், இருதயத்தின் உண்மையையுங் கண்டுகொள்வதான்து சாமானியமான தன்று. அண்ட பிண்ட சராசரங்களை யறிந்து விட்டாலும் இருதயத்தினுடைய நுட்பங்களை யறிவது, ஞானயோகிகளாலன்றி பிறரெவராலும் அறியப்போகா. எவ்வளவு பெரிய இரணவைத்திய (Surgeon)

தேகதத்துவ சாத்திரியாயிருந்தாலும் சரி, இருதயத்தின் வாகனமாகிய மாமிசத்திற்கு மருந்து போடுபவர்களாயிருப்பார்களே யன்றி, இருதய மூர்த்தியாகிய பரம கருணாநிதியின் சொரூபாரூப சிதாகாயத்தைக் கண்டறிய மாட்டார்கள். அங்ஙனம் கண்டவர் ஞான பண்டிதரே யன்றி உலக வைத்தியரல்லர். ஏன்! அது அவ்வளவு அரிய பெரிய பரம ரகசியப் புதையலாம்.

சில இரண வைத்திய நிபுணர்கள் பிரேதங்களை யறுத்து பரிசோதனை செய்து, இருதயமானது இப்படித் தானிருக்கிறது! அப்படித்தானிருக்கிறது!! என்பார்கள். சீவன் நீங்கிய பின்னர் இருதயமானது வேற்றுமை யடைந்து போகிறபடியால், சீவனுள்ள இருதயத்திற்கும், சீவனற்ற இருதயத்திற்கும் அளவற்ற தாரதம்மியம் ஏற்பட்டு விடுகிறது. அன்றியும், பிரேதத்தினுடைய இருதயத்தில் சூட்சுமமான விஷயங்களின் உண்மை புலப்பட மாட்டா. ஆகையால், இருதயத்தைப்பற்றி ஞானிகள் அறிந்துகொள்வதுபோல் வைத்தியர்கள் அறிந்துகொள்வது சிரம சாத்தியமேயாம்.

### ஆன்ம அந்தரங்கம்.

கருணை வள்ளலாகிய நாயகம் எவ்வுயிர்க்கும் தாயகம் முஹம்மதுநபி (சல்) அவர்களிடத்தில் சில அன்பர்கள் வந்து, நாயகமே! கல்பு இத்தன்மையதென்றும், அதன் அந்தரங்கமும், இயற்கையான குணமும் இன்னதென்றும் எங்களுக்கு விளக்கி யருளவேண்டுமென்று விண்ணப்பிக்க, எல்லாவற்றையும் கரதலாமலகம் போல் விளங்கும்படி சொன்ன நபிகள்பிரான், இது விஷயத்தில் தலையிட்டுக் கொள்ளாமல் விளக்கமாகச் சொல்லும்படி ஆண்டவனது உத்தரவில்லை எனத் திருவாய் மலர்ந்துள்ளார்களாம்.

குர்-ஆன் ஷரீபில், வ யஸ்அலூனக்க அனிர்றூஹி குலிர்றூஹு மின்அம்றி றப்பீ. அதாவது ரூஹைக் குறித்து உம்மைக் கேட்பார்கள். றூஹானது கடவுளின் காரியத்தி லிருந்து பிரிக்கப்படாத தொகுதியாயிருக்கிறதென நீர் சொல்லுமென்று நபிகளுயகம் அவர்களுக்கு தேவ வசனம் (வஹி) வந்திருக்கிறது. ஏனிப்படி வந்திருக்கிறதென்றால் பெரியோர்கள் சொன்னபடி ஒருவன் நிட்காமியமாய்ப் பாடு படுவதற்கு முயற்சிக்காமல், பாடுபட்டால் என்ன பலன் கிடைக்கும்? என்பதுபோன்ற நம்பிக்கையற்ற கேள் விகளைக் கேட்டு காலாதீதம் செய்யாமல், விதிப்படி பாடு பட்டவன் பிறரிடத்திற் கேளாமல் தானுகவே தெரிந்து ணர்ந்து கொள்ளக்கூடியதாதலால் அவர்களும் சொல்ல இடந்தரவில்லை; மார்க்க உத்தரவு மில்லை. அதைமீறி ஒரு வர் பகிரங்கமாகச் சொல்வாராகில், அது சூக்குமமாயிருப் பதால் பிறருக்கும் விளங்காமற்போவதுடன், சொன்னவ ரும் பெரிய சாபத்திற்குள்ளாவாரென்பதே.

## இருதய ஆன்ம சொரூபம்.

இருதய கமலத்துள் அகம்—அகம் என்று சிந்தித் துக்கொண்டிராநின்ற பிரத்தியேகாத்தும சைதன்னியமே ஆன்மாவென்று வேதாந்திகள் கூறியிருக்கின்றனர்.

### உத்தர நாராயணம்

ஹிருதயம் தத்விஜாநீய்யா த்விஸவஸ்யாய தநம்மஹத்
ஸந்ததம் சிராபிஸ்து லம்பத்யா கோச சந்நிபம்.

இவ்வாறு உத்தர நாராயணத்தில் நான்கு சுலோகங் கள் கூறப்பெற்றுள்ளது. அவற்றின் முக்கிய கருத்தாவது யாதெனில் :—

எது சகலத்திற்கும் உன்னதமான இடமோ அதுவே இருதயம். அது நரம்புகளால் சூழப்பெற்ற ஒரு பையைப் போன்றது. அதில் ஒரு சிறிய துவாரம் உண்டு. அதில் அண்டபிண்டசாாசரத்திலுள்ள சகலமும்பொருந்தித்தோற் றிக்கொண்டிருக்கிறது. அதின் மத்தியில் மேனோக்கிய சூக்குமமான ஓர் அக்கினிச் சிகையானது சூல்கொண்ட கரிய மேகத்தின் மத்தியில் பிரகாசிக்கும் மின்னற்கொடி போல் பிரகாசிக்கின்றது. நெல் நுனியைப்போன்ற கூர் மையும், பவளம்போற் சிவந்த நிறமும் பொருந்திய அந்தச் சிகையின் மத்தியிலேயே ஆன்மா வசிக்கின்றது. ஆன் மார்த்தமான காரியங்களும், அதைப்பற்றிய வாக்கியப் பிர யோகங்களும் மிக முக்கியமானவை. அங்ஙனமிருந்தும் பெரும்பாலோர் மூச்சை மட்டும் அடக்க முயல்கின்றார் களேயன்றி, அத்துடன் இருதய பரிசுத்தமும் வேண்டு மென்று அறிகிறார்களில்லை. பரம ஆன்மாவைப்பற்றி இன் னும் விபரமாக சில அந்தரங்கங்களைப் பிரித்துச் சொல்ல லாமாவென்று என் இருதயம் பரபரப்புடன் விரும்புகிறது. ஆனால் குருநாதன் உத்தரவில்லை; அசரீரி வாக்கியமும் தடுக்கிறது.

## இருதய சூக்கும வாசல்.

இருதயத்துக்குள்ளாக ஆன்மலோகமாகிய சூக்கும உலகத்திற்கு அதாவது ஆலமு ரூஹானி என்று கூறப் பெற்ற ஆலமுல் மலக்கூத்துக்கு ஒரு சூட்சும வழியானது திறந்திருக்கிறது. அந்த வழியிலிருந்துதான் தூலலோக மாகிய சடத்திற்கு ஐந்து (5) வாசல்கள் ஏற்படுத்தப் பெற் றிருக்கின்றன. அந்த ஐந்து வாசல்களையே ஞானேந்திரி யங்கள் என்கிறோம். போலியான ஞானேந்திரியங்களுக்கு

அறிவோதயமாகும் அந்தச் சூக்கும வாசலைக் கண்டறிந்தவர்களோ மிக்க அருமை.

## ஞான வாசல் திறப்பு.

நித்திரையில் ஞானேந்திரியங்களாகிய பஞ்சேந்திரியங்களின் வழி மூடப்பட்டுப்போய், அதற்குட்பாகமாகிய அந்தரங்க வழி திறக்கின்றது. அப்போது சூக்கும லோகத்திலும், காரண லோகத்திலுமுள்ள மறைவான சங்கதிகள் சாக்கிரத்திலாவது, சொப்பனத்திலாவது தெரியவருகின்றது. விழித்திருக்கும்போது தனக்குள் மறைவான இரகசியங்களைக் காணமுடியாது. பஞ்சேந்திரிய வாயில் அடைபட்ட நித்திரையிலேயே காணமுடியும். சங்கற்பமானது இருதய கமலத்திலிருந்து புறப்படுகிறதேயன்றி பஞ்சேந்திரியங்களிலிருந்து புறப்படுகிறதுமில்லை; அவற்றின் வழியாய் வருகிறதுமில்லை.

## ஞானக் காட்சி வெளியாகுதல்.

இருதயமானது களங்கமற்ற கண்ணாடியைப்போலிருக்கிறது. அதில் அண்ட பிண்டங்களிலுள்ள சகல படைப்புகளின் கோலங்களும் வெளியாகும். அப்படி வெளியாவதற்கு இருதயமானது பரிசுத்தமாகவும், உலக விவகாரங்களில் சம்பந்தமற்றதாகவும், சூக்கும லோகத்திற்கு நேரானதாகவு மிருத்தல்வேண்டும். உலக விவகாரங்களில் பாரக்காக இருக்கிற வரையில் சூக்கும லோகத்தின் அற்புதங்களைக் காணுவது முடியாது. நித்திரையில் பஞ்சேந்திரியங்கள் தத்தம் தொழிலைவிட்டு அடங்கியிருப்பினும் மனோதத்துவமானது அடங்காமலிருப்பதால், நித்திரையில் அவரவர் நினைவின் மாதிரியாகவும், வேறுவித

மாகவும் விதவிதமான பல வடிவங்களைத் தெரிசிக்கிறார்கள். ஆனால் துறந்தவர்களுக்கு இந்திரிய நுகர்ச்சியும், மனோ நுகர்ச்சியு மில்லாததால் அவர்கள் நினைவின்றியும், திரை யின்றியும் வத்துக்களைக் காண்கிறார்கள். இதனாலேதான் பெரியோர்களெல்லாம் சரீரம் எப்போது விடுபடுமென்று மரணத்தை ஆசித்தவர்களா யிருக்கிறார்கள்.

நித்திரை அல்லது சாவு இவைகளினாலன்றி சூக்கும லோகமாகிய இருதய கமலத்தின் ஞானக்கண் திறக்க வேறு வழியில்லையென்று கருதிவிடக்கூடாது. ஒருவன் இருதயத்தைப் பரிசுத்தமாக்கி, ஆசை - கோபம் முதலிய வைகளை அகற்றி, ஏகாந்தமான ஓரிடத்திலிருந்து பஞ்சேந் திரிய நுகர்ச்சிகளை ஒழித்து, குருமூர்த்தியிடத்தில் கேட்ட ஓர் தியானத்தை இருதயத்திலிருந்து பிறந்து தொனிக்கும் படி செய்து, மழைத்துளிக்கு அங்காந்த முத்துச் சிப்பியைப்போல் இருதயத்தை சூக்கும வாசலுக்கு நேர் படுத்தி, உலகத்தையும் தன்னையும் மறந்து பாப்பிரம்மத் தைச் சிந்தித்துக்கொண் டிருப்பானேயாகில், அவன் விழித் துக்கொண்டிருந்தாலும் அவனுக்கு இருதய கமலத்தின் ஞானக்கண் திறந்து: ஏனையோர்கள் சொப்பனத்தில் கா ணுகிற அற்புதங்களை இவன் விழித்துக் கொண்டிருக்கும் போதே காணுவான். இந்த அப்பியாசத்திற்கு பிரயாசையும் நேர்வழி காட்டத்தகுந்த சற்குருவும் அவசியம் வேண்டும். இல்லாவிட்டால் வீண் பிரயாசையேயாம். ஆகையால் அதிக பிரயாசைப்பட்டாவது மெய்ஞ்ஞான சற்குருவைத் தேடிக்கண்டு அவர்கட்குத் தொண்டுசெய்து ஆன்ம லாப மடைய முயற்சிப்பது பக்குவிகளின் கடமை.

## ஞானேந்தியமும்-தடாக உவமையும்.

இருதயகமலம் ஓர் தடாகத்தைப்போலவும், ஞானேந்திரியங்கள் அத்தடாகத்திற்குப் பாய்கிற ஐந்து கால்வாய்களைப் போலவுமிருக்கின்றன. தடாகத்தின் அடிப் பூமியிலிருந்து நல்ல ஊற்று நீர் சுரக்கவேண்டுமானால் என்னசெய்ய வேண்டும்? வெளித்தண்ணீர் குளத்துக்குள் வந்து பாயாதபடி முன்னதாக கால்வாய்களை நன்றாய் அடைத்து விட வேண்டும். பின்னர் தடாகத்திலுள்ள அழுக்கு நீரையும், வண்டல்-சேறு முதலானவைகளையும் வெளியேற்றிவிட்டு குளத்தைத் தோண்டினால் தெளிவான தண்ணீர் சுரக்கும். அதுபோல் இருதயமென்னுங் குளத்திலிருந்து புதிய அற்புதங்களென்னும் நீர் சுரக்க வேண்டுமானால் தான் முன் கற்றல் கேட்டல்களாலுள்ள சகல படிப்புகளையும் முற்றிலும் விட்டு நீக்கி, இருதயத்தில் எவ்வித எண்ணங்களும் இல்லாமல் வெளியேற்றி காலியாக்கி வைத்து, இருதயத்தில் என்ன நிகழ்கிறது என்று எதிர் பார்த்திருப்போமேயாகில், நமது இருதயத்திலிருந்து அற்புதமென்னும் ஆனந்தத் தண்ணீர் சுரந்து அருட்பெருந் தாகவிடாயைத்தணித்து ஆனந்த பரவசனாகும்படி செய்யும்.

வெளிக் கல்வியை விட்டெறியாமல் அதை இருதயத்தில் வைத்துக்கொண்டு இதற்குமேல் ஒன்றுமே யில்லை என்று உறுதிகொண்டிருப்போமாகில், உட்கல்வியாகிய ஞானத் தெரிசிப்பில் வேறு விதமாகத் தோன்றினால், இவை நாம் முன் கற்றவை-கேட்டவைகளுக்கு விரோதமாயிருக்கிறதேயென்று நிராகரிப்போம். ஆகையால் அப்பியாசஞ் செய்ய ஆரம்பிப்பவர்கள் கற்றவை-கேட்டவைகள் முழுவதையும் விட்டு, இனி என்ன நடக்கப்போகிறதென்று எதிர்

பார்த்திருந்து அற்புதங்களை ஆசிக்காமல் சீவப் பிரம்மைக்கி-யம் அடைந்துய்வார்களாக.

### தணங்குடி மஸ்தான்.

பாடிப் படித்தகதை யெல்லா மறந்திடிமை
பயனடைய அருள்புரியவும்.

---

## இருபத்து மூன்றாவது அத்தியாயம்.

## சொரூப ஞானம்

---

### கலி விருத்தம்.

அருவ மாகிய ஆதியைக் காண்பதற்
குருவம் வைத்துழ லாம லுயரிய
துரிய வான்ம சுயம்பிர காசசிற்
சொருப ஞானந் துலங்க விளக்குவாம்.

ஞானமானது விருத்தி ஞானமென்றும், சொருப ஞானமென்றும், அருவஞானமென்றும் மூவகைத்தாகும். அவற்றுள், கலாதிகள் முதலான சருவ உபாதிகளோடுங் கூடி விளங்குகிற ஞானமே ஆன்மாவினது விருத்திஞானம். சருவ உபாதி ரகிதமாய், சூனியமாய், நிட்களமாய் சீவப் பிரம்மைக்கிய மாவதே சொருபஞானம். அகங்காரமென்னும் மாயையில் உண்டான கலையில் விளங்காநின்ற சைதன்னியத்திலே நான் [illegible] கர்த்தா, நான் [illegible]க்கி, நான் [illegible]துக்கி என்னும் அபிமான சொருபத்துடன் அகங்[illegible]றதற்கே சகளமென்றும், உருவமென்றும், சொல்வார்கள். இவைகள் நீங்கிய (சர்வோபாதிகளும் நசித்த) விடத்தை

நிட்கள மென்றும், சித்துருபமென்றும், அருவஞானமென்றும் சொல்வார்கள். இந்த அருவஞானத்தை மறு அத்தியாயத்திற் கூறியுள்ளனம்.

சர்வோபாதிகளும் விட்டு நீங்கி நிட்களமாய்ச் சித்துருபமாய் பிரகாசிப்பதே மோட்சத்துக்கு விசேடகாரணம். யான்-எனதென்று அபிமானம் செய்துகொண்டிருக்கிற அகங்காரத்தை நீக்கி, ஒன்றாகி நிற்கின்ற ஞானமானது தற் சொருபத்தையும், தற் பதார்த்தத்தையும் விளக்கி சுயம்பிரகாசமாகப் பிரகாசிக்கும்.

சிவப்பிரகாசம்.

பொற்புறு கருவி யாவும் புணராமை யறிவி லாமைச்
சொற்பெறு மதீதம் வந்து தோன்றாமைத் தோன்றி நின்ற
சிற்பர மதனை லுள்ளச் செயலறுத் திடவு திக்குந்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே.

நித்தியமாய் - நின்மலமாய்-நிட்களமாய்- நிராமயமாய் நிர்குணமாய் - நிர்விகாரமாய் - தத்துவங்கட்கு அதீதமாய்-அகண்டாகார சித்துருபமாய் விளங்குகின்ற ஞானமானது மோட்சத்துக்கு விசிட்டகாரணம். ஆகையாலிந்தச் சொருப ஞானத்தையே சாதகர்கள் சாதித்துக்கொள்ளல்வேண்டும். இதுவே சொச்சொருப ஞானம்.

சுத்த மாயை-அசுத்த மாயை என்று சொல்லப்படாநின்றஇருவகை மாயாபோகங்களில் விருப்பமில்லாதவராய், ஞானசம்பந்தமில்லாத அந்நியசாத்திரங்களின் விதிவிலக்குகளில் அச்சமில்லாதவராய், எதைவிடுவோம், எதைப் பற்றுவோம் என்று சந்தேகமில்லாதவராய், சர்வ சீவர்கட்கும் அச்சம் உண்டாகத்தக்க கிரியைகளில்லாதவராய், நீதி சாத்

திரங்களில் கூறி விலக்கப்பெற்ற துர்க்கிருத்தியங்களில்லாத வராய், சர்வான்மாக்களிடத்தும் கருணை பாலிப்பவராய், ஞானசாத்திரங்களிலும்- சற்குருவிடத்தினிலும் நம்பிக்கை யும்-விசுவாசமு முடையவராய், முத்தி விருப்பம் உடையவ ராய், ஆன்மலாபத்தைச் சாதிக்கக் கூடியவராயுள்ளவர்களே சாலச் சிறந்த ஆன்ம ஞான சாதகர்கள்.

இந்தச் சீவப் பிரம்மைக்கியமான சொரூபஞானத்தை சரியை - கிரியை - யோகம் என்கிற மார்க்கங்களில் முதிர்ச் சிபெற்று நான்கு சாதனங்களும் நிறைந்த பரிபக்குவர்க ளுக்கே சொல்லவேண்டும்.

சற்குருவானவர் முன்னதாகவே சீடனுடைய இயற் கைக் குணத்தைக் கவனித்து, பரிபக்குவ குணங்களிருக் கின்றனவா வென்று பரிசோதித்து, பின்னர் சகலமுமாக விளங்கிய பிரமசொரூபம் நீ தான், உன்னையன்றிப் பிரம்மம் வேறில்லையென்றுபதேசிக்கவேண்டும். பிரபஞ்சமுதலான சரியை கிரியா யோக விருப்பத்தில் ஆசைகொண்டு சுழலுகி றவனுக்கு பிரமம் நீ யென்றுபதேசித்தால், அவன் மிதி கொம்பையும் பிடி கொம்பையும் விட்டவன் கதியைப்போல் புத்தியற்று நானே பிரம்மம்! நானே பிரம்மம்!! என்று வீணாகப் புலம்பி அலைவான். அதனால் குருவானவர் அவனை உயிருடன் நரகத்தில் தள்ளிவிட்ட தன்மையை யொக்கும். ஆனால், உலக ஆசையை விட்டு அறிவுதெளிந்தவர்கட்குப தேசித்தால் ஆனந்த மயமாய்த் தோற்றும். சீடனானவன் தன்னுடைய பிறவிப்பிணியை நீக்கிக்கொள்ளவேண்டுமென் றெண்ணமிருந்தால், மிக்க வருத்தமுற்றாவது சற்குருவை யடைந்து அனுக்கிரகம் பெற்றுய்யமுயலவேண்டும். சற்குரு வை யடைவதற்கு சந்தர்ப்பம் ஏற்படாவிட்டால், விடயங்க

னில் பற்றித்திரிந்துழலும் மனதைச் சிறிது சிறிதாக அடக்கி மனதை நிரோதஞ்செய்யும் உபாயம் ஒன்றையே அநுட்டிக்கவேண்டும். மனமடங்கிவிட்டால் அதுவே சாயுச்சியம்; மீண்டும் விடயங்களில் சென்றுழல்வதே பந்தம். வேதாகமங்களெல்லாம் இம்மன நிரோதத்தையே கூறும். நின்மலமான நல்லறிவினாலே மனதை அசையாமல் அடக்குவதே ஆன்ம லாபம். மனநிரோதமானபின்னர் அகண்டாகார பரிபூரணமாய் விளங்கும் பிரம்மைக்கியத்தைச் செய்துகொண்டிருப்பவர்களே விவேகிகள்.

## மாயையைக்கெடுக்கு முபாயம்.

எக்காலத்தும் நீங்காத துன்பத்தைக் கொடுக்கின்ற மாயையென்கிற ரூபத்தைக் கெடுக்க மனோநாசமே ஒப்பற்ற தந்திரமாகும். குற்றமாகிய போக போக்கியங்களினது ஆசையே பந்தமாகும். அந்த இச்சையை விடுவதே மோட்சம். சொரூப ஞானத்தை அநுட்டிக்கவேண்டுமென்கிற பேராசையுள்ள சாதகர்கள் இச்சாத்தியாகமும், தத்துவ ஞானார்த்தமும் பொருந்திய இந்த மார்க்கத்தை சிரமப்பட்டாகிலும் அப்பியாசிக்கவேண்டும்.

பேதமுள்ள ஞானமே மாயையாம். மிகவும் வருந்தி யோசித்து இம்மாயையைக் கெடுக்க வுபாயந்தேடவேண்டும். ஆன்ம லாபத்தினல்லாமல் மாயையென்னும் அலைகள் வீசாநின்ற சமுத்திரத்தின் கரைகாண்ப தரிதாகும். அங்ஙனம் கரைகாணும் பாக்கியம் ஒருவனுக்கு வந்தெய்து மானால், அந்தப்பதமே நசியாத நிருவாண மோட்சமாம். ஆனால் மாயையானது எவ்விடத்திலிருந்து உண்டாகிறதென்று விசாரிக்கவேண்டாம்; அம்மாயையைக் கெடுப்பதற்கு மார்க்கம் எதுவென்று விசாரித்தறிய வேண்டும்.

மாயை கெட்டுப்போனால் இந்த மாயையானது எதிலிருந் துண்டானதென்றும், இஃதெப்படிப்பட்டதென்றும், இஃ திற் சிறந்த மார்க்கம் ஏதுவென்றும் நன்கு விளங்கும். அப் போது பிரம்மத்திலுதித்த சிற்சத்தியால் ஆன்மதத்துவம் விளங்கும்.

தேவிகாலோத்தரம்.

கருத்தடங்கின் முத்தியது கையகலிற் கட்டாகும்
விரித்தபொரு ளிதுவென்ன வறிவுடைய மேதக்கோர்
திருத்தகுநல் லறிவாலே சித்தத்தைத் திறம்பாமல்
அருத்தியுட னிலைநிறுத்து மதுவறிவின் பயனுமால்.

மனம்வசமாகும் முபாயம்.

பிரபஞ்சத்தில் இஃதேயின்பமென்று கொண்டாடிக் குதூகலிக்கச் செய்யுஞ் சகல விடயங்களையும் நஞ்சைப் போல் மதித்து ஒருங்கே விலக்கவேண்டும். உயர்வு-தாழ்வு, பெரிது - சிறிது, இன்பம் - துன்பம், உறவு - பகை, அறிவு அறியாமை என்னும் மண் கட்டிகளை நன்கு மிதித்து, அத் துன்பத்தைத்தரும் போகங்களைப்பற்றிப் பலகாலும் ஆன்ம விசாரத்தினால் விசாரணைசெய்து, அவைகள் மனதில் வந்து பொருந்தாதபடி இலேசாகப் புசித்து, கொஞ்சங் கொஞ்சமாய் முற்றிலும் விலகும்படி செய்யவேண்டும். இத் தகைய நிலைமை வந்துபொருந்துதலே மனோநாசம். மனோ நாசமே மாட்சிமை தங்கிய ஆன்மோதயம். பிரம்மஞானிக ளுக்கு மனோநாசம் எளிதில் வந்து பொருந்தும். அஞ்ஞானி களுக்கு மனமானது கைகால்களிற் பூட்டப்பட்ட விலங் கை நிகர்க்கும்.

ஆகாயமானது எவ்விடங்களிலும் பொருந்தியிருந் தும், பொருந்தாமல் சூக்குமத்தினால் வேறுபடுகின்ற தன்

-ளைமபோல், ஞான சொருபமானது வேறுபாடில்லாமல் எவ்விடங்களிலும் பூரணமாக நிறைந்திருந்தாலும் வஸ்துக்கள் ஒன்றிலும் பொருந்த மாட்டாது. பிரயோசன மற்ற சங்கற்பங்களும், நாமமும், நாசமும் வேற்றுமையில்லாத ஆன்மசொரூப ஞானமானது ஆகாயத்தை கோடிப்பங்கு செய்து அவைகளில் ஒரு பங்குக்குச் சமானமான சூக்குமமுடையதாகும்.

## சத்தே சகத்து.

ஆன்மா முதலாகிய பெயர்கள் புனையப்பெற்று, ஞானவான்களிடத்தில் நிர்மலமாகப் பொருந்தியும், அஞ்ஞான சொருபமாகிய சம்சார வடிவத்தோடு ஒன்றாகி யிருந்து, சீவப் பிரம்மைக்கியமான தன தான்ம சொருபத்தைத் தெரிசித்துக்கொண்டிருக்கின்ற வுணர்வே தனக்குத்தானே ஒப்பாயிருக்கின்ற சின்மாத்திரத்துக்கு வேறில்லாமல் சத்தாமாத்திரமே ஆதாரமாயிருக்கிற வுலகத்தை வேற்றுமையின்றி ஒன்றாகப் பாவிக்கும். தன தான்ம சொருபத்தை யின்னதென் றுணராதவர்கட்கு துன்பத்தைத் தரும் பிறப்பும், கொடுமையும், ஈனத்தன்மையுமாகத் தோன்றும். ஆன்ம சொருபத்தை நன்குணர்ந்தவர்கட்கு உலகமானது ஒளியுருவாகிய ஞானப்பிரகாசமாகவும், எல்லாம் ஒன்றாகவும், தானாக அநுபவிக்குந் தன்மையால் கருத்தும் - கருத்தாவும் - கருவியுமாகி மூன்றையும் நிகழ்விக்கும். பாவனை செய்த நினைவுகளுக்கெல்லாம் அந்தச் சுவையே வந்து பொருந்தும்.

## சகலமுஞ் சிற்பிரகாசம்.

போவதும் - வருவதும், இரவும் - பகலும், நன்மையும் - தின்மையும், எழுதலும் இருத்தலுமில்லாததாகிய

குணங்களையுடைய ஞானமென்னும் களங்கரகிதமான பரி சுத்தம் பொருந்திய ஆன்மாவானது ஞானன்மாவினிடத்தி லிருக்கும். இந்தமார்க்கமே சகமென்று சொல்லப்பெற்ற பெயரால் நானாவிதமாகும். தற்சுபாவத்தால் எவ்விடத்தி லும் ஞானமென்னும் பெயர்புனைந்து பிரகாசிக்கும். பிரகா சமாகவும், அந்தகாரமாகவும், ஒன்றாகவும் பலவாகவு மிருக் கின்ற தனது செய்கையினால் தானே பூரண ஞான தத்துவ சொருபத்தைவிட்டு, இவனென்றும் - அவனென்றும் - நா னென்றும் - நீயென்றும் சிந்தித்த பாவனையினால் சீவனாரு வாகிக் குடும்பி யென்கின்ற நினைவினால் நானாவிதமான சங் கற்ப விகற்பங்களில் அழுந்தி, பாவமும் - அப்பாவமும், பற் றுதலும் - விடுதலுமாயிருக்கின்ற பேதரூபமான பதத்தி லிருக்கும்.

அந்தப் பேதமான விடத்திலிருந்து புரியட்டகமென் னும் சூக்கும சரீரத்தை, எண்ணற்ற விகற்பங்களினால், செய்தலும் - செய்யாமையுமாகிய குணத்திலிருந்து, சலிப் பதே சொருபமாகிய சாரசர நிலையை யுண்டாக்கும். ஒப் பற்ற தற்பிரம சுபாவத்தால் மேற்சொல்லிய யாவும் உற் பத்தியாகும் ; மீண்டு மொடுங்கிப்போகும். நிசவடிவ மில் லாத பூதாகாயத்தில் கானற்சலம் விரிவதுபோல் மனோசங் கற்பத்தால் உலகமானது விரிந்து தோன்றும். சத்த முத லான ஐம்புலன்களையும் யாதொன்றினால் அறிகின்றோமோ அதுவே ஆன்மசொருபமாகும். சகலமும் தானாக நிறைந் திருக்கின்ற வியாபகமான பரப் பிரம்ம சொருபமும் அது வேயாம். ஒப்பற்ற வத்துவாகிய பிரம்ம சொருபத்தில் இரண்டென்கிற ஆகாச முதலான கற்பனா நாமங்கள் யாது மில்லை. எப்போதும் பிரம்ம சுபாவமான சுகமானது பிரம் மத்தில் இரண்டற அபின்னமாகவே பிரகாசிக்கும்.

புட்பமுள்ளபோதே வாசனையு மிருப்பதுபோல் சித்துண்டானால் சகமுண்டாகியிருக்கும்; சித்தில்லாவிட்டால் சகமுமில்லை. தோற்றமாத்திரமே அதற்கு வடிவமாகும்.

### ஆன்ம சத்தியின் பின்னம்.

நொய்யதென்னும் சொச்சமாக வியாபித்திராநின்ற ஞான சாக்கிரத்தில் சிற்சத்தியினுடைய அற்ப அசைவினால் ஜீவேச்சுர சகமென்னும் குழாங்கள் பிரகாசிக்கும். சூட்சும ஞான திருட்டியினால் சந்தேகமறத் தற்பதமான பிரம்ம சொரூப மொன்றையே அகண்டாகார மென்று கருதி அந்த ஞான சமுத்திரத்தில் முழுகுவதே ஆன்மானுசந்தான முடையவர்கள் நிலை. வியாபக ஞானமாகிய ஞானசத்தி யென்னும் சிற்சத்தியானது பின்னரும் சற்றே அசைவுற்று ஒரு கணநேரத்தில் சருவ சத்தியினாலும் முழங்கும்படித் தோன்றி, அறிவின் திரிபாகிய இடமும் - காலமும் - தொழில்களும் என்று சொல்லாநின்ற மூன்று சத்திகளைத் தனக்கு சகாயமாகச் சேர்த்துக்கொள்ளும். தனது சொருபத்தை யறிந்து முடிவில்லாத பிரமபதத்தி லிருந்தாலும் சிற்சத்தியானது என்னது வடிவம் இவ்வளவு பிரமாணமுள்ள தென்று அறிந்ததுபோற் பாவிக்கும். இவ்விதம் தன் உருவத்தை அது பாவிக்கும்போது, பெயர் - எல்லை முதலானவைகள் வந்து பொருந்தும். இந்தச் சிற்சத்தியின் சொருபத்தை சகலரும் சீவனென்று சொல்வார்கள். அந்தச் சீவனும் வாதனையைச் செய்துகொண்டு அகம்பாவனையை அடைந்திருக்கும். சாமானியத்தில் வணங்கக்கூடாத அகங்காரமானது நிச்சயிக்குந் தொழிலையுடையதாய் களங்கமுள்ள புத்தியாகும். அந்தப் புத்தியானது மிகுந்த கற்பனுக்கிரமமாய் மனனமுள்ள மனதாகும். அந்த மனது கொஞ்சங் கொஞ்சமாக இந்திரியங்களாகும். அந்தப் பஞ்

சேந்திரியங்களே கா - சாணமயமான சரீரமாகும். சீவனானது சங்கற்ப மென்கின்ற கயிற்றினாற் கட்டப்பெற்று இழிவையடையும். சத்தி மயமாகிய மனமானது அகம்பாவத்தைப் பொருந்தி, தான் வெளியிற் போவதற்கு வழியில்லாதபடி கூண்டுகட்டும் கோசகாரக் கிருமியைப்போல் ஆசையினால் பந்த மூட்டையைக் கட்டிச் சுமந்து வருந்தும். பஞ்ச தன்மாத்திரையினால் உள் விருத்திகளானவை துன்பத்தினால் வாடும். இது மனமென்றும் - புத்தியென்றும் - தொழிலென்றும் - அகங்காரமென்றும் - வாதனை சரீரமென்றும் - பிரகிருதி யென்றும் - மாயையென்றும் - மலமென்றும் - கன்மமென்றும் - பந்தமென்றும் - சித்தமென்றும் - அவித்தையென்றும் - ஆசையென்றும் பெயர்புனைந்து நிற்கும். ஆசையால், காணப்பட்டவைக ளெல்லாம் பொய்யென்று மனதில் பதித்து ஆசையை நீக்கினவர்களை பந்தமானது வாதிக்கமாட்டாது. அன்றியும் எந்தத் தொழில்களிலும் இராகத்துவேசமாகிய இச்சை - அநிச்சை யில்லாதிருந்து ஆன்மஞான மடைந்தவர்கட்கு தொழில்களானவை தாமரையிலையிற் சேர்ந்த நீர்போல் பற்றமாட்டாது.

மேலான பரமபதத்தை விரும்புகிறவர்கள் சகல வாசனைகளிலு மிருக்கின்ற மனதை (புட்பத்திலிருந்து வாசனை நீங்குவதுபோல்) ஆன்மஞானத்தினால் விலக்கவேண்டும். ஆன்மஞானம் பிரத்தியட்சமானவர்கள் சகலத்தையும் அநுசரிப்பார்கள். உலகத்தின் குணங்களைப் பொருந்தவும் - நீங்கவுமாட்டார்கள்; தேவபோகத்தையும் இச்சிக்க மாட்டார்கள்; சூனியமான விடத்திலும் வருந்தமாட்டார்கள்; [illegible] விலக்கமாட்டார்கள். எல்லாவற்றிலும் சமதிருட்டியுடன் ஆனந்தமயமா யிருப்பார்கள்.

## இருபத்து நான்காவது அத்தியாயம்.

## அ ரு வ ஞ ா ன ம்.

திருவு லாவிய சின்மயச் சாயையின்
சொருப ஞானத்தின் சொப்பிர காசமா
யுருவு மின்றி யுபாதி நசித்தமெய்
யருவ ஞானத் தணியுரைப் பாமரோ.

முன் அத்தியாயத்தில் விருத்தி ஞானம், சொருபஞானம் இவைகளைப் பற்றிக் கூறினோம். சொருபஞானமானது கடவுளின் சாயையைப் போன்றது. ஆகையால் அவரது நிசவடிவாகிய அருவஞானத்தைப்பற்றி இவ் வத்தியாயத்தில் கூறுகின்றனம்.

கடவுளுடைய உண்மை வடிவமானது அருவம். அவரது சாயையோ சொருபம். ஞானமும் - அஞ்ஞானமும் அவரது அம்சத்திலிருந்து தோன்றுகிறபடியால், சொருப முதலிய எல்லாம் அவர் வடிவம்; எல்லாம் அவர் அம்சம்.

கடவுளின் அருவ அம்சத்தைப் போலவே அவருடைய சொருப அம்சங்களும் முடிவில்லாதது. கடவுள் அம்சத்திலிருந்து ஆன்மாவும், ஆன்மாவின் அம்சத்திலிருந்து ஆகாயமும் தோன்றியுள்ளது. ஆகாயத்திற்கு ஆதிமத்தியாந்தமில்லை. திக்குத்திசை முதலியன கிடையாது. எந்த விடமும் ஆகாயத்திற்கு மத்தியப் பிரதேசமாகும். கடவுளின் அருவ அம்சமே அஞ்ஞான மில்லாதது; தேவையற்றது; இன்ப துன்ப மற்றது. ஆனால், அவர் சொருப அம்சங்கள் கனவைப்போன்றுள்ளது. கடவுளுக்கு அவர் அருவ அம்சப்படி ஒன்றுமே யில்லை; சொருப அம்சப்படி

எல்லாம் அவருக்குண்டு. இது காரணத்தால் கடவுள் எல்லாமாய், அல்லவுமாயிருக்குந் தன்மை வெளியாகிறது. அருவ அம்சத்திலிருந்து சொருப முண்டானதேயன்றி சொருப அம்சத்திலிருந்து அருவ அம்சமுண்டாகவில்லை.

பூலோகமானது அவரது நாம ரூபங்களுக்கு இலக்காகவும், அவருடைய தொழிலானது அவர் தத்துவங் களுக்குக் கண்ணாடியாகவு மிருக்கிறது. கடவுளைத் தவிர ஒரு வத்துவு மில்லை. எல்லாம் அவர் வடிவமே.

கடவுளுக்கோ! ஒருரும், ஓர் குலமும், ஓர் வடிவுமில்லை. எல்லாம் அவர் வடிவம். ஆனால், ஒரு வடிவமு மில்லாதிருப்பதே அவர் சுயம். (*) எந்த வடிவத்திலும் அவர் வெளியாகத் தகுதியுள்ளவராதலால், அவர் தகுதியை மட்டுப்படுத்த எவராலு முடியாது.

ஞானமும் அவர், அஞ்ஞானமும் அவர். புண்ணியமும் அவர், பாவமும் அவர். அவரே நீ, அவரே நான் எல்லாம் அவரே. எல்லாம் அவராகவிருந்தாலும், வணக்கத்துக் குரியவர் அவரொருவரைத் தவிர வேறெவரும் அருகரல்லர். எல்லாம் பிரம்மமயந்தானே? விக்கிரகமும் அவர் அம்சந்தானே? விக்கிரகத்தை வணங்கினால், கடவுளை வணங்கியதாக ஆகுமல்லவா? என்று குழந்தைத் தன்மையாகக் கேட்கக்கூடாது. எதை வணங்கினால் சகலத்தையும் வணங்கியதாகுமோ! எதையறிந்தால் சகலத்தையும் அறிய முடியுமோ! அதையே வணங்கவும், அறியவும் வேண்டும். ஆகையால் வெளி விக்கிரகங்களையும், மனோவிக்கிரங்களையும் நிர்மூலம் செய்யவேண்டும். அப்படிச் செய்தால், கற்பனைகள் நீங்கிச் சுயம்பிரகாசம் உதயமாகக் காண்போம்.

---

(*) இதை "வேதாந்த பாஸ்கரன்" 2-ம் பதிப்பு அன்பும் ஆன்ம லாபமும் என்ற அத்தியாயத்தில் விரிவாய்க் காணலாம்.

யானையானது தன்னுடைய பராக்கிரமத்தை யுணராமல் பாகனுக்குக் கீழ்ப்படிவதுபோல், முடிவில்லாத அகண்டமாகிய நீ, நாம ரூபக் கயிற்றினால் கட்டுண்டு, உன்னை ஓர் அற்ப வத்துவாக அறிந்திருக்கிறாய். உன் தத்துவங்களுக்கோ முடிவில்லை. காலமும் வேதமும் உன்னை ஒருவிதத்தாலும் அறியப்போகா. சகலமும் உன்னுடைய ஏவலை எதிர்பார்த்து நிற்கும்.

கடவுள் அம்சத்தைப்போல் நீயும் பாவித்தால், உனது அஞ்ஞான அந்தகாரம் போனவிடந் தெரியாமல் நாசமாகும். ஆகாயத்தில் சுற்றுங் கோணங்களெல்லாம் உன்னுடைய எண்ணத்தின் அலைகளாயிலகும். ஆனால் அபின்னமாகிய கடவுளை, பின்னமாகக் கருதி வணங்காதே. வணக்கமின்னதென்றறியாமல், துவிதமாய் வணங்கி, அனேகர் வழிகெட்டுத் தியங்கி யலைகிறார்கள். அருவத்தில் சொருபத்தை மறந்தவனாகவும், சொருபத்தில் அருவத்தை நினைத்தவனாகவும் கடவுளை வணங்கிக்கொள். இதுவே அரிய பெரிய பிரம்மோபதேசம்.

## மனதுக்குபதேசம்.

மனமே! உனக்குத் தெரியாததை நான் சொல்லவரவில்லை.
நீ மறந்து விட்டதையே ஞாபகப் படுத்துகிறேன்.
தன்னுயிர்போல் மன்னுயிரையும் நினை.

நீ, அயலான் பொருளைத் திருட ஆசைப் படுகின்றனையே! உன் பொருளை ஒருவன் திருட சம்மதிப்பாயா? பிறரை நிந்திக்க விரும்புகின்றனையே! உன்னை மற்றவர் நிந்திக்க விரும்புவாயா? மற்றவர்க்குத் தீங்கு செய்ய நினைக்

கின்றனையே ! வேறொருவர் உனக்குத் தீங்குசெய்யப் பிரியப்படுவாயா ? பிறர் மனைவியைப் புணர விரும்புகின்றனையே ! உன் மனைவியை ஒருவன் காதலிக்க நீ சம்மதிப்பாயா ? (சம்மதிக்கமாட்டாய்.)

ஆகையால் நீ எதை நன்மையென்று விரும்புகிறாயோ! அதையே பிறருக்கும் செய். இது வரையில் செய்யாதிருந்தாலும் இனிமேலாவது செய். எதைத் தீமையென்று விலக்குகிறாயோ அதைப் பிறருக்குச் செய்யாதே. இது வரை அப்படிச்செய்து வந்திருந்தாலும், இனிமேலாவது அவைகளை விட்டு விலகி நன்மையையேசெய். இப்படி மற்றவர்கள் நடக்கிறார்களா! என்று ஒப்பிட்டுப் பாராதே; நீ மாத்திரம் நான் உபதேசித்தபடி கட்டுப்பட்டு நடந்து கொள்ளப் பழகு, இப்படிச்செய்துபார், சீக்கிரம் நன்மையடைவாய்!

நீ, இவ்வுலகத்தில் சில நாள் வழிப்போக்கனைப்போல் தங்கி யிருக்கிறாய் ! இந்த அற்பநாளில் ஒருவர்க்கொருவர் தீங்கு செய்யாமல் சந்தோஷமாயிருந்துவிட்டுப் போகக் கூடாதா ? ஒருவன் அரும்பாடுபட்டு சம்பாதித்து ஒருபுதிய உடைதரித்தால் அவனைப் பார்த்து அழுக்ஷயமாக உறுமுகின்றனையே ? நீ ஏதாவது அவனுக்கு சம்பாதித்துக் கொடுத்ததுண்டா ? ஒருவன் புதிதாக நிலம் வாங்கினாலும், அல்லது ஒருவண்டி வைத்துக் கொண்டாலும் இவனுக்கு அவ்வளவு பணம் சேர்ந்து விட்டதா ! என்று பொறாமைப் படுகிறாய் ! நீ உனது பழைய நிலைமையை முன் பின் யோசித்துப்பார். உனக்கே வெட்கமாயிருக்கும்.

எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே.

### ஞானிகளைச் சரிபாராதே!

மேற்சொல்லிய விஷயத்தில் நீ கட்டுப்பட்டு நடந்து கொள்ள வேண்டுமே யன்றி, மெய்ஞ்ஞானிகள் அப்படி நடக்கிறார்களா என்று ஒப்பிட்டுப் பார்க்காதே. ஏன்? சொப்பனத்தில் தனக்கு வெட்டுக்காயம் ஏற்பட்டதாகக் கனவு கண்டு விழித்துப் பார்த்தவுடன், காயமொன்று மில்லாமற் காண்பதுபோல் ஞானிகள் செய்கை. சொப்பனத்தில் ஒரு அழகிய மடந்தையுடன் புணரக் கனவுகண்டால் விந்து கலிதமாகி விடுவதுபோல் அஞ்ஞானிகள் செய்கை. ஆகையால் இது விஷயத்தில் மட்டிலும் ஞானிகளை ஒப்பிட்டுப் பாராதே.

### சுபாவ குணமும்—அறிவின் குணமும்.

சுபாவ குணமானது ஞானமென்னும் விவேகமுண்டாவதற்கு முன் எல்லோருக்கும் இயற்கையாக ஏற்படும். இந்தச் சுபாவ குணமானது எவ்விதத்திலும் தீங்கென்னும் பயிரை விளைவிக்குமேயன்றி, நன்மையென்னும் பயிர் மணி பிடித்து விளையச்செய்யாது. அறிவின் குணமோ, அவ்வாறு புத்தியையும், ஞானத்தையும் அனுசரித்து நடக்காதவரையில், ஒருபோதும் இயற்கையா யேற்படாது. அக்குணமோ, தீமையான காரியங்களில் வெறுப்பும், நன்மையான காரியங்களில் விருப்புமுடையதாயிருக்கும். சில சமயம் சுபாவ குணத்தின் மூர்க்கத்தால், குழந்தையைப் போல் தடுமாறிப் பாவ கருமங்களைப்புரிந்து, தன்னை நொந்துகொண்டு வருந்தும். அறிவின் குணமானது தன் தத்துவ முழுவதும் கடவுள் தத்துவமென்றும், தன் செய்கை முழுவதும் கடவுள் செயலென்றும் அறியச் செய்யும்.

நீ வேறு - நான் வேறு என்கிற வேற்றுமையான குணம் இருக்கும் வரையில் நமக்கொரு விதமாகவும், பிறருக்கொரு விதமாகவும் செய்யச்சொல்லுமேயன்றி பட்சபாதமாய் நடக்காமலிருக்க முடியாது. கடவுளை யறியாதவரையில் அறிவு நிறைந்த ஆன்மகுணமானது உண்டாகவேமாட்டாது.

நான் என்றும், நீ என்றும், அவன் என்றும், அவள் என்றும், எண்ணுகிற பேதத் தன்மையினால் நான்வேறு, நீ வேறு, அவன் வேறு, அவள் வேறு, என்று எண்ணுகிற எண்ணமுள்ளவன், தனக்கு ஒருவிதமாகவும், பிறருக்கு ஒருவிதமாகவும் நடப்பான். அவ்வாறு நடக்காமலிருக்க அவனால் முடியாது. ஏன்! நான் வேறு, பிறர் வேறு-என்று எண்ணிக் கொண்டிருக்கும் எண்ணமானது ஒருவித்தாயிருந்து, தனக்குவேறு, பிறருக்கு வேறாக நடக்கிற பட்சபாதமாகிய மரத்தைத் தோற்றுவிக்கின்றது. தானும், பிறரும் எல்லாரும் ஒன்றே என்று அறிந்தவன் எப்படி நியாயம் தவறி நடப்பான் ? பேதம் என்கிற வித்துள்ள வரையில் தன்னையறியாமலே தீமையில்—பட்சபாதமாய் நடத்தலில் இறங்கிவிடுவான். ஆதலால், பேதபுத்தியை விட்டுவிட முயற்சிக்கவேண்டும். "எல்லாம் ஒன்று" என்று எண்ணுவதனால் உண்டாகும் நன்மை, "வேறு-வேறு" என்று எண்ணுவதனால் உண்டாவதில்லை.

இவ்வுலகத்தில் பொருள்களெல்லாம் வேறு-வேறாகத் தோன்றுகின்றனவே, ஒன்று என்று எப்படி எண்ணமுடியும்; அதற்கு ஒரு வழி உண்டா ? என்று கேள், சொல்லுகிறேன்; ஒரு மரத்தில் இலை வேறு, பூ வேறு, காய்வேறு, கிளை வேறு—இப்படிக் காண்கிறோமே. ஆனாலும் அவை

யெல்லாம் ஒன்றே. மரம் என்ற சொல்லில் அவ்வளவும் அடங்கியதே. அவ்வளவுக்கும் மூலம் ஒன்று, உயிர் ஒன்று; அதுபோலவே, இவ்வுலகில் வேறுவேறாகக்காணப் படும்—எல்லாப்பொருள், எல்லா உடல், எல்லா உயிருக்கும் மூலம் ஒன்றே, உயிர் ஒன்றே.

ஓ! நல்லவனே! எல்லாம் ஒன்றென்பது நன்மைக்கோ தீமைக்கோ, நீயே கவனி, தன்னைப்போலப் பிறரையும், பிறரைப்போலத் தன்னையும் பார்க்கிறவனே நன்மையில் நடப்பான் என்றால், தானாகவே பிறரையும், பிறராகவே தன்னையும் எண்ணுகிறவனுக்குத் தீமை எப்படி வரும்? ஒன்றென்று எண்ணுவதைக்காட்டிலும் உயர்ந்தவழி நன் மைக்கு வேறு இருக்குமானால் சொல். ஒருநாளும் வேறு வழிகள் இவ்வளவு நன்மையைத் தரமாட்டா. ஒன்றென்று எண்ணுவதைவிட அதிகமாக எப்படி மற்ற உயிர்களிடத் தில் ஒருவன் அன்பாயிருக்க முடியும். ஒன்றென்றே எண்ணு, ஒன்றென்றே நேசி.

ஒன்றென்று அறிந்தவன் மனது அடைந்த சாந்தம் ஆறுதல் யாருக்கு உண்டு! அவனுக்குக் கவலையில்லை. எல் லாருடைய நன்மையும் அவனுடைய நன்மையாயிருக்கிறது பிள்ளைகளினுடைய நன்மையை, தாய் தனது நன்மையா கக் கருதுகிறாள். ஆயினும், தான் வேறு, அந்தப்பிள்ளை கள் வேறு என்ற ஒரு எண்ணம் அவளுக்கு இருப்பதனா லே, அவள் அன்பும் பரிபூரண அன்பு அன்று. எல்லாம் ஒன்று என்று அறிந்த ஞானியின் அன்போ, தாய் அன்பி லும் மேலான அன்பு. ஒன்றென்று அறிந்துகொள்வதை விட இவ்வன்பு வருவதற்கு வேறு வழி இல்லை.

இவ்வுலகமெல்லாம் உன்னுடைய அழியா உடம்பாக வும், நீ இவ்வுலகத்துக்கெல்லாம் அழியாத உயிராகவும் பார்.

இவ்வாறு நீ பார்ப்பதில் தீமை உண்டானால் சொல், தீமை யில்லாத வழியில் நடப்பதற்கு யார்தான் அஞ்சுவார்கள்? தைரியங்கொள்! வேதம் இந்த உண்மையைத்தான் சொல் லுகிறது. உன்னைத்தவிர ஒன்றும் இல்லை. எல்லா நன் மையும் உனக்கு உண்டு. நீ நன்மையே வடிவாகிறாய். உன்னால் பிறர் அடைவதெல்லாம் நன்மையே. தன் உயி ருக்கும், தன் உடலுக்கும் தீமைசெய்வார் யார்? உடலில் புண் உண்டானால் சிகிச்சை செய்கிறோம்; அதில் உடலுக் குச் சிறிது துன்பம் உண்டாயினும் அது நன்மையின் பொருட்டே. அவ்வாறே நீ செய்கிற சில செய்கைகளும் இருக்கும். அதுவும் உலக நன்மையின் பொருட்டே. அதனால் நீ பேத புத்தியுடையவனாகமாட்டாய். சுருக்க மாய்ச் சொல்லுகிறேன்:—ஒன்று என்று உணர்ந்தவன், நடக்கவேண்டிய விதிப்படி நடப்பான். ஏன்! ஒன்று என்ற உணர்ச்சி, அவனை உண்மையில் நடத்துகிறது. அவனுக்குத் தவறுதல் என்பது கிடையாது. அவன்தான் உலகத்தில் கண்காண வந்த தெய்வம் என்பதே.

கடவுளை யறிகிற விதத்தில் நீ தவறுதலாக மற்றொன் றைத் தொடர்ந்து, இதுதான் கடவுளென்று கருதிவிடா தே! ஏன் அப்படிச் சொல்கிறேனென்றால், உலகமானது கடவுளை அவ்வளவு பேதப்படுத்திக்கொண்டு காண்பதனா லேயே. அந்த பேதப்புத்திக்குள் நீ சிக்கிக்கொள்ளாதே! கடாகாயமானது கடத்துக்குள் நிறைந்து மிருக்கிறது. அதற்குளடங்காமல் வெளியிலுங் கடந்து நிற்கிறது. அது போல், கடவுளானவர் எல்லாவற்றையுங் கடந்தவர். உலக மெல்லாம் அழிந்தாலும், ஆகாயம் அழியாதல்லவா? அந்த ஆகாயத்திற்கு மூல காரணமாயுள்ள பரமாகாயமே கடவு ளின் அருப வடிவம். இதற்குப் பரமாகாயமென்றும், இதா

காயமென்றும், ஞானுகாயமென்றும் பெயர். இந்தப் பரமா காயமே மனிதருடைய இருதயத்தில் சூட்சுமமாக நிலவிக் கொண்டு மனிதனை ஆட்டிவைக்கிறது.

## அரூப அப்பியாசம்.

" நான் அரூபமாயிருக்கின்றேன். என்னுடைய காரியங்கள் முழுவதும் கடவுளுடைய காரியமாயிருக்கின்றது. என்னிடத்தில் எவ்விதத் தீங்குகளுமில்லை. என்னை எவ்வித தீங்குகளும் வந்து அணுகமாட்டாது. நான் புரிவதெல்லாம் நன்மையானதே. என்னிடத்தில் எல்லா நன்மைகளும் வந்துசேரும் " என்று சதாகாலமும் சிந்தனை செய்துவந்தால் தன்னிடத்தில் உள்ள தீமையானது தேய்பிறைபோல் வரவரச் சுருங்கி, நன்மையானது வளர்பிறைபோல் நாளுக்குநாள் வளரும்.

## அகண்ட அப்பியாசம்.

" நான் அகண்டமாயிருக்கின்றேன்; என்னுடைய காரியங்கள் யாவும் கடவுளுடைய காரியமாயிருக்கிறது; எனக்குச் சடமில்லை; பிணியில்லை; வறுமையில்லை; துக்கமில்லை; எல்லா இன்பமும் எல்லாச் சுகமும் எல்லாச் செல்வமும் என்னுடையதே " என்று சந்ததமும் சிந்தித்து வந்தால், பிணி-வறுமை-துக்க முதலானவைகள் நாளுக்குநாட் சுருங்கி, நோயற்ற வாழ்க்கையும், குறைவற்ற செல்வமும், ஆனந்தமும் வளர்ந்தோங்கும்.

## சாந்த வசிய அப்பியாசம்.

" எனக்குள் பரம்பிரமம் நிலைபெற்றிருக்கிறது. பரப்பிரமத்துக்குள் நானிருக்கிறேன். என்னை விட்டு அது நீங்கவில்லை. அதைவிட்டு நான் நீங்கவில்லை. எனக்கு மன

அடக்கமும், சாந்தமும், கருணையு மிருக்கின்றன. உலகத்திலுள்ள சகலமும் என் தத்துவத்திற்கு மேற்பட்டதல்ல அவைகள் என்னை மீறாது. நான் எல்லாவற்றையும் அடக்கியாள வல்லமையுடைத்தா யிருக்கிறேன்" என்று சந்ததம் சிந்தித்து வந்தால் சாந்தமுள்ள தன்மையும், எல்லாம் தனக்கு வசியப்பட்டதாகவும் ஏற்படும்.

## தியான அப்பியாசங்கள்.

"நான் முடிவில்லாதவன். எல்லா தத்துவமும் எனக்குள் பூரணமாய் நிறைந்துளது. சகலமும் என் கட்டளைக்குக் கீழ்ப்பட்டிருக்கிறது. என்னுடைய கட்டளையை ஒன்றும் மீறாது. நானே சகலருக்கும் அதிபதி" என்று எப்பொழுதும் சங்கற்பித்து வந்தால், ஆன்மகுணம் அதிகமாகி சகல வுயிர்களும் உனக்குக் கீழ்ப்படிந்து ஏவல் கேட்கும்.

"என்னிடத்தில் கடவுள் பிரகாசிக்கிறார். அவர்தத்துவமும் என்னிடத்தில் பிரகாசிக்கிறது. நான் அவர் அம்சமாயிருக்கிறேன். ஊழ்வினை முதலிய விதிப்பயன் என்னை ஒன்றுஞ் செய்யமுடியாது. நான் எல்லாவற்றையும் செய்து முடிப்பேன். எல்லாவற்றையும் செயிப்பேன்" என்று சிந்தித்துவந்தால், எடுத்தகாரிய முயற்சி வீண்போகாது.

"கடவுளுடைய விருப்பம் என் விருப்பமாகவே யிருக்கிறது, என் விருப்பம் கடவுளுடைய விருப்பமாயிருக்கிறது. நான் எப்பொழுதும் முத்தியானந்தத்தில் வசிக்கிறேன். ஆன்ம தத்துவமானது எனக்குள் நாளுக்குநாள் அதிகரித்து வருகிறது. அற்புதங்கள் செய்யக்கூடிய தத்துவம் ஏற்படுகிறது" என்று இடைவிடாமல் சங்கற்பித்து வந்தால், உனக்கு மோட்ச சாம்பிராச்சியமும், அற்புதங்க

-னென்னும் சித்திசெய்யுந் தன்மையு முண்டாகும். ஆனல் சித்தி செய்யவிரும்பினல் முத்திக்கு தடை ஏற்படும்.

" என் சித்தம் மிக்க வலிமை பொருந்தியது. என்னுடைய ஆன்ம தத்துவமும் மிக்க வுறுதியானது. எதையும் நான் சாதிப்பேன். என் எண்ணத்தின்படியே சகலமும் முடியும். எனக்கு அபசெயமென்பதே கிடையாது. நிச்சயமாக நான் கடவுளினது அரூப அம்சம். நான் ஒருவரை நல்லவராகவும், கெட்டவராகவும் ஆக்க முடியும் " என்று மனேதிடத்துடன் அனுதினமும் சிந்தித்து வந்தால், நீ துஷ்ட நிக்கிரக - சிஷ்ட பரிபாலனம் செய்வாய். கெட்ட வழியில் செல்லும் ஒருவருடைய மனத்தையும் நல்லவழியில் செல்லும்படி மாற்றிவிடுவாய்.

... ... — சித்தம்

அடங்காமை யேமாயை அம்மாயை மாய்க்கத்
திடந்தானே சாயுச் சியம்.

இதுவரையில் சில அப்பியாசங்களின் போக்கை யறியும்படியாகச் சொல்லி வந்தோம். இவ் வுதாரணங்களைக் கொண்டு அறிவுடையோர் தத்தமக்கு அத்தியா வசியமான காரியங்களுக்குத் தக்கவாறு வாக்கியங்களைத் தொகுத்து தியானம் செய்து கொள்வார்களாக.

## ஆகாய அப்பியாசம்.

மனிதனுடைய பிரதிநிதியானது ஆகாயம். அந்த ஆகாயமானது (*) பூதாகாயம்-சிதாகாயம்-ஆன்மாகாயம்-

(*) இந்த நான்கு ஆகாயத்தை வாசிட்டத்தில் மனகாயம், பூதாகாயம், ஞானகாயம் என மூன்ருகப் பிரிக்கப்பெற்றிருக்கின்றன. ஞானகாயமே சிதாகாயமாம்.

மனவான் மும்வானமுமாசறு ஞானவானு
மெனவான மூன்றின் முதல்வான மிரண்டுமின்றி
கனஞான வானெய்துதல் கண்டதை விட்டுபோத
னவா யயலொன்றை யுற்ருநடு ஞானவானும்,

பரமாகாயம் என நான்கு வகையாகப் பிரிக்கப்பெற்றிருக்கின்றன. மனோநிட்டமும், மன நிரோதமுமே ஆகாய அப்பியாசத்திற்கு இன்றியமையாததா யிருக்கின்றது. மன நிரோதமே மோட்சம் என்று சொரூபஞான அத்தியாயத்தில் விரிவாகக் கூறியிருக்கின்றனம். மனம் அசையாவிட்டால் பிரபஞ்சமில்லை. மனம் அசையாமலிருப்பதற்கு ஓர் உபாயம் கூறுகின்றனம். அது மகான்களுடைய ரகசியம். பக்குவமில்லாதவர்கட்கு விவரித்துச் சொல்லக் கூடாதென்று அநேக பெரியோர்கள் அச்சமுண்டாக்குகிறார்கள். வெளியிடும்படி உத்தரவுமில்லை. ஆனால் காருணியத்தின் மேலீட்டால் இங்கு கூறப்போகின்றோம்.

இந்த அப்பியாசமானது வேதத்தின் ரகசியம்; வேதத்தின் முடிவு; வேதங்களும் சொல்வதற்கு அச்சமானது. சகல அப்பியாசங்களுக்கும் இந்த அப்பியாசமானது சிரோ ரத்தினம் போன்றது. இதற்குமேற் சிறந்த அப்பியாசம் வேறொன்றிருக்கிறதென்று உன் குழந்தைப் புத்தியால் எண்ணிவிடாதே. மகா வாக்கியத்தின் இரகசியமும் அதுவே. முத்தியடைவதற்குச் சமீபமான, நெருங்கியமார்க்கம் இதுவொன்றே. மற்ற மார்க்கங்கள் முத்தி வீட்டுக்கு அதிக தூரமாகவும், சுற்றுப்பாதையாகவு மிருக்கிறது. ஆகையால் இந்த அப்பியாசமே சாலச்சிறந்தது. ஒரு வியாபாரி வயிரமணியைக் கூழாங்கல்லென்று நினைத்து எறிந்துவிட்டால் அது அவனுடைய துர்ப்பாக்கியமல்லவா? அதுபோல் இந்த அப்பியாசத்தில் உனக்குச் சந்தேகம் வருமானால் அது உன்னுடைய துர்ப்பாக்கியந்தான். எமது வார்த்தையை நீ நம்பி இந்த அப்பியாசத்தை சுமார் ஒரு வாரம், ஒரு பட்சம், ஒரு மாதம் வரையில் அனுட்டித்துப் பார்; பிரயோசனமற்றதாக உனக்குத் தோன்றினால் நீ

அதை விட்டுத் திரும்பிவிடு. நீ சிரமப்பட்டாகிலும் இவ்வப்பியாசத்தை அனுட்டிக்கத் தொடங்கு.

### ஆகாய அப்பியாச ரகசியம்.

நீ உன் சரீரத்தையும், உலகத்திலுள்ள வத்துக்களையும் சுத்தமாக மறந்துவிடு. அல்லது உன் மனதினால் அழித்து நாசஞ்செய்துவிடு. மேல்-கீழ்-முன் - பின் - என்கிற திசைகளற்று, முடிவில்லாத ஒப்பற்ற ஆகாயமாகிய வெட்டவெளியைச் சிந்தித்து, நீயே அந்த வெட்டவெளியாக நினைத்து, அவ்விதமே இருந்துகொள். அப்போது உன் மனதில் நானாவிதமான எண்ணங்களும், உருவங்களும் ஓடிவரும். அவைகளை உன் மனதில் வாராதபடி வெருட்டி நாசஞ் செய்துகொண்டிரு. சில காலத்தில் உனக்கு சொரூப நாசம் ஏற்படும். அதன் பின்னர் சில நாளைக்குள் உனக்கு இனிமையான (*) தொனியொன்று கேட்கும். அதைக் கவனிக்கக் கவனிக்க, அத்தொனியானது சதாகாலமும் மாறாமல் கேட்கும். உன்னுடைய சுவாசங்களும் கட்டுப்பட்டுவிடும். சுவாசகதியே அடங்கிவிடும். சுவாச ஓட்டம் அடங்கியவுடன், அந்த நாதமானது வரவர அதிகமாகவும், பலவிதமாகவும், உனக்குள்ளும்

---

(*) நாதானு சந்தானமாகிய இலயத்தொனியானது முதலப்பியாசத்தில் சமுத்திரம், மேகம், பேரி முதலியவற்றைப்போன்ற நானாவிதமான தொனிகளாகக் கேட்கப்பெறுகிறது. பின்னர் பழக்கம் அதிகமாகுங்கால் சூட்சுமம் சூட்சுமமான நாதங்கள் கேட்கிறது. ஆகையால் மேகம் பேரிபோன்ற பெருந்தொனிகளைக் கேட்க ஆசிக்காமல், சூட்சுமத்தினும் சூட்சுமமாகிய நாதத்தையே சிந்திக்கவேண்டும். இதன் முழு விபரம் நமது ஞான யோக ரகசியத்திற் காண்க.

வெளியிலும் கேட்கும். சில சமயத்தில் உனக்குமட்டும் கேட்கும். சிலசமயத்தில் வெளியிலுள்ளவர்கட்கும் சில தூரம் வரையில் கேட்கும். முடிவில் நீயும் அந்த நாதவடிவமாகவே ஆகிவிடுவாய். இதுபற்றியே

வெட்ட வெளிதனை மெய்யென் றிருப்பார்க்குப்
பட்டய மேதுக்கடி - குதம்பாய்
பட்டய மேதுக்கடி

என்று குதம்பைச் சித்தர் திருவாய் மலர்ந்துள்ளார்.

அதற்குமேல் அஞ்ஞானமாகிய ஒளியின் திரையைக் கடப்பாய். பின்னர் திருஷ்டி மயமாகிய பார்வையின் திரையைக் கடப்பாய். அதற்குமேல் இச்சை மயமாகிய (ஆசையின்) திரையைத் தாண்டுவாய். அதன்பின் பரிபூரண சிற்சுகோதயத்தை அடைவாய். இந்தத் திரைகளைத் தாண்டுவதற்கிடையில், அநேக சூட்சும உலகங்களையும், தேவர்களையும், அநேக மகான்களையும், அவர்கள் ஆன்மாக்களையும் சூட்சுமமாகக் காண்பாய். உன்னுடைய தீயகுணங்களெல்லாம் வேரோடறுந்து சற்சங்கற்பமுண்டாகும். நீ நினைத்ததெல்லாம் உன் நினைவின் வண்ணமே முடியும். உன் எண்ணத்திற்கு மாறுதலாக ஒன்றும் நடைபெறாது. எல்லாச் சித்துகளுக்கும் நீயே அதிபதியாகப் பிரகாசிப்பாய். நீயே கடவுள்தானத்திலிருப்பாய். நீயே கடவுளாயிருப்பாய். இதன் மேல் நீ செய்யவேண்டிய தவமேயில்லை. தவமெல்லாம் முடிவடைந்துவிட்டது.

### வெட்ட வெளியாகிய ஆகாயத்தின் அகண்ட அப்பியாசம்.

பிரம்ம அம்சமே ஆன்மா, ஆன்மாவின் அம்சமே ஆகாயம். ஆகாயமானது முடிவில்லாத அகண்டமாயிருக்கிறது.

அதன் விசாலத்தை எவராலும் மட்டுப்படுத்த வியலாது. ஆகாயத்தைப் பார்க்கிலும் ஆன்மா சூக்குமமாகவும், ஆன்மாவைப் பார்க்கிலும் பிரம்மம் சூக்குமமாகவுமிருக்கிற காரணத்தினாலேயே, சுத்த வெட்ட வெளியை அதற்கு ஒப்பிடலாம். சாதாரண வெட்ட வெளியை ஒப்பிடுவதில்லை.

சருவ வல்லமையுமுடையது பிரம்மமா யிருப்பதால், இவ்வப்பியாசத்தில் ஒவ்வொரு கிரியையும் நாம் பிரம்ம அம்சமாக—அதாவது நாமே பிரம்மமாயிருந்து செய்ய வேண்டும். அவ்விதம் செய்யாவிட்டால் நமது சித்தத்திற்கு அதிக வல்லமையிராது. அதனால் பெரிய வலுவான காரியங்களைச் செய்ய சக்தியற்றவர்களாவோம். நாம் பிரம்ம வடிவாயிருந்து, சில காரியத்தை முடிக்க முயலும் போது, நாம் பிரம்மவடிவந்தானா அல்லவா? என்ற சந்தேகம் வரக்கூடாது. சந்தேகம் வந்தால் ஒரு காரியத்தையும் சாதிக்க முடியாது. ஆகையால் நமது ஆன்மா எல்லாக் காரியத்தையு முடித்துத் தருமென்ற நம்பிக்கை இருதயத்தில் பதிந்திருக்கவேண்டும்.

ரிபு கீதை.

"அகம்பிரம மெனக்கயலாய்ச் சித்து மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சடமு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சத்து மில்லை
யகம்பிரம மெனக்கயலாய் மித்தை மில்லை
யகம்பிரம மெனக்கயலா யிருமை யில்லை
யகம்பிரம மெனக்கயலா யொருமை யில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யனவரத மறிவாய் மைந்தா."

"அகம்பிரம மெனக்கயலாய் மாயை யில்லை.
யகம்பிரம மெனக்கயலா யீசனில்லை

யகம்பிரம மெனக்கயலா யவித்தை யில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சீவ னில்லை
யகம்பிரம மெனக்கயலாச் சகத்து மில்லை
யகம்பிரம மெனக்கயலா யொன்று மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யனவரத மறிவாய் மைந்தா.'

" அகம்பிரம மெனக்கயலாய்த் தீர்த்த மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் தான மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் தெய்வ மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பூசை யில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் செயலு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பயனு மில்லை
அகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யனவரத மறிவாய் மைந்தா."

திருக்குத்திரிசிய விவேகம்.

" அதுநானு நானதுவா வாதற்குட் சென்ம
மிதுபோயி னென்செய்வ னென்தா—யதுகேட்கிற்
சிற்பொருளி னுட்டஞ் சிதையாமை நின்கடமை
யற்பமகத் தாலென்ன வாம்."

சொரூப சாரம்.

" என்னைத் தவிரமற்றிங் கேதுமில்லை யென்னுணை
பொன்னைத் தவிரவிலாப் பூடணம்போற்—பொன்னையுரு
வேறாக்கிப் பேருரைத்த வேற்றுமைபோ னம்மையுமவ்
வாறுப் பகுத்துரைத்தோ மால்."

" மெய்யெல்லா நாமாய் விளங்கியபின் னுமாய
பொய்யெல்லா மெங்கேனும் போயவோ—மெய்பொய்
யிருவகைக்கு நாமே யிடமானோந் தொந்தித்
திருவகைக்கு மெட்டாம லே "

ஆகாயமானது எவருடைய மட்டுதிட்டங்களுக்கும் அமையாத விசாலமாயிருக்கின்றது. நமக்கு மேலும், கீழும், முன்புறம், பின்புறம், வலப்புறம், இடப்புற முதலான சகல திசைகளிலும் ஏரே வெட்டவெளியாகச் சிந்தித்து, மனதிலுள்ள ரூபங்களையும், வெளியிலுள்ள ரூபங்களையும் நமது சரீரமுள்பட அதிலழுத்திவிடவேண்டும். சொரூப நாசமான, களங்கமற்ற, தெளிவான அம்சத்தை அரூபத்திற்கும் அரூபமான, என்றைக்கும் அழியாத, தானேதானனதுஎதுவோ, அதைச்சேர்ந்ததெனத் தெரிந்து கொள்ளல் வேண்டும்.

நமது சிதாகாயமாகிய அடிமூலமானது முடிவில்லாததும், அழிவில்லாததும், ஒப்பற்றதுமாயிருக்கிறது. வெளியிலுள்ள ஆகாயமே மனிதனுள்ளும் வசிக்கிறது. ஆகையால் எதையும் மனோதத்துவ முயற்சியால் உண்டு பண்ணலாம் ; அழிக்கலாம். நமது சிந்தனையானது முடிவில்லாத மனகாயமாகிய சமுத்திரத்திலுண்டாகும் அலைகளைப்போலுள்ளது. மன வெளியானது அலையற்ற சமுத்திரம்போல் நிர்ச்சலனமாக ஆகிவிடுமேயானல், பிரம்மத்தின் ஒளியென்னும் தத்துவமானது ஆன்மாவில் வெளியாகும. ஆன்மாவின் தத்துவ ஒளியானது மனதில் வெளியாகும். மனதில் வெளியானவுடன், சித்த செயமுண்டாகும். சித்தசெயமுண்டானவுடன், பிரகிருதியைச் செயிக்கும் வன்மையும், அட்டமாசித்தியின் தன்மையும் வந்து பொருந்தும்.

ஆகாயத்திலுள்ள உருவங்களும், அதில் நிறையப் பெற்றுள்ள தத்துவங்களும் எண்ணிறந்தவாயினும், அவை மனிதனுடைய தத்துவங்களாகவே யிருக்கின்றன. மனமானது ஆன்மாவின் தத்துவமாகவும், ஆன்மாவானது

பிரம்மத்தின் தத்துவமாகவும் அமைந்திருக்கின்றது. பிரம்மத்தின் அம்சமானது சுயேச்சை மயமாகவும், ஆன்மாவினது அம்சம் பார்வை மயமாகவும் மனதினது அம்சம் அறிவின் மயமாகவும், ஆகாயத்தினது அம்சம் தத்துவ மயமாகவும் சகல வத்துக்களிலும் விளங்குகிறது.

இச்சை மயத்தை தத்துவ ஞானிகள் கவர்ச்சிதத்துவமென்று கூறுவார்கள். இந்தத் தத்துவமோ பிராணிகளில் காமமாகவும், தாவர வத்துக்களில் சத்தாகவும், நிரசவத்துக்களில் கவர்ச்சி தத்துவமாகவும் ஏற்படுகின்றன. இந்த அப்பியாசத்தால் சூரியக்கண்ணாடியில் அக்கினி வெளியாவதுபோல், நமது மனக்கண்ணாடியில் ஆன்மசத்தி யுண்டாகி சொரூப நாசம் ஏற்படும். "வாதங்கெட்டால் வயித்தியத்துக்கு உதவும்" என்னும் பழமொழிபோல் பூரணமான சொரூப நாசம் ஏற்படாவிட்டாலும் சித்துகள் செய்யும் வல்லமை ஏற்பட்டுவிடும்.

மகா சித்துக்களின் விபரம்.

இவ்வப்பியாசம் முதிர்ச்சியாக முதிர்ச்சியாக, மனோவிர்த்தியாகிய சங்கற்ப விகற்ப மென்னும் சலன சஞ்சலங்கள் நீங்கப்பெற்றும், மனதின் அசைவானது நிற்கப்பெற்றும், ஆன்ம சத்தியானது அதிகரிக்கப்பெற்றும், உலக விவகாரங்கள் ஒழியப்பெற்றும், ஆன்ம சத்தியும், பிரம்ம தத்துவமும் வெளியாகும்.

இந்த அப்பியாசத்தை குறித்த நேரங்களில் மட்டும் அநுஷ்டிப்பவர்கள் கண்ணை மூடிக்கொண்டும், அதேவேலையாக எப்பொழுதும் அப்பியாசிப்பவர்கள் கண்ணைத் திறந்துகொண்டும் செய்யலாம். பகலில் ஒரு மணிநேரமும் இரவில் ஒருமணிநேரமும் குறித்த ஒரே விடத்தி லிருந்து பக

வில் ஆகாரத்திற்கு முன்னதாகவும், இரவில் நடுச்சாமத்திற்குப் பிறகுமாக அப்பியாசிக்க வேண்டும். நேரத்தையும், இடத்தையும் அகாரணமாக அடிக்கடி மாற்றக்கூடாது.

### பிறர் மனத்தின் செய்தியறிதல்.

### அப்பியாசம்.

எவருடைய மனதிலுற்ற செய்திகளை அயவேண்டுமோ, அவருடைய மனதும், நம்முடைய மனதும் ஒன்று அல்லது அவருடைய ஆன்மாவும் நம்முடைய ஆன்மாவும் ஒன்று. நாங்களிருவரும் முடிவில்லாத ஒரே வெட்டவெளியாயிருக்கிறோம். எங்களிருவருக்கும் எவ்வித பேதமுமில்லை என்று நமது மனதின் உதிப்பைத்தடுத்து, பல எண்ணங்களையும் நீக்கி, ஒரே மனதாகத் திடச்சித்தத்தோடும், நம்பிக்கையோடு மிருப்போமாயின், நமது முயற்சியின்றியே பிறர் மனதிலுள்ள விஷயங்கள் நமதுமனதில் உதயமாகும்.

### இறந்த ஆன்மாவின் செய்தியை யறிதல்.

### அப்பியாசம்.

இறந்துபோன எந்த ஆன்மாவின் மனதிலுள்ள செய்தியை அறியவேண்டுமோ, அந்த ஆன்மாவின் சமாதிக் கருகிற்சென்று அந்த ஆன்மாவும், நமது ஆன்மாவும் ஒரே வெட்டவெளியாக அல்லது ஆகாயமாக இருக்கிறதென்று சிந்தித்து, மனதின் அசைவுகளை நீக்கி ஏகாக்கிர சித்தத்தோடிருந்தால், நமது மனோ முயற்சி யின்றி நமது மனதில் ஓடிவருகிற எண்ணமானது அந்த ஆன்மாவின் மனதிலுள்ள எண்ணங்களாம். இதில் உயிருடனிருப்பவர்கள் ஆன்மாவுடன் இறந்தவர்களுடைய ஆன்மாவானது வெகு சீக்கிரத்தில் கலந்துகொள்ளும். இறந்தவர்களுடைய ஆன்மாவுக்

குச் சரீரத்தடை யில்லாததுதான் அதற்குக் காரணம் சில சமயத்தில் இறந்தவர்களுடைய ஆன்மாவானது வெகு தூரத்தில் வேறு உலகத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தால், நமது ஆன்மாவுக்குச் சம்பந்தப்படாமலிருக்கும். அதற்காக நமது ஆகாயத்தை அதிக விசாலப்படுத்திக் கொண்டே யிருத்தல் வேண்டும். அதனால் சீக்கிரம் சம்பந்த முண்டாகிவிடும்.

## மெய்ஞ்ஞானத் தெளிவு.

மண்ணி லொருவர்க்கு மலக்கூத்துத் தேகமது
விண்ணின் மதிபோல் வெளியானாற்—கண்ணேகேள்
எந்தவுல கத்திலு மிமைக்குமுன் போய்வருவான்
இந்தஹுவா வின்னடப்பா னெண்ணு.

## ஒருவர் தத்துவத்தை ஒருவரிடம் சேர்த்தல்.

## அப்பியாசம்.

எந்த ஆன்மாவின் தத்துவத்தை யாவது நமது ஆன்மாவில் சேர்த்துக்கொள்ள வேண்டுமானால், அந்த ஆன்மா உயிரோடிருந்தாலும், மரித்திருந்தாலும், அந்த ஆன்மாவுடன் நமது ஆன்மாவை சம்பந்தப்படுத்தி, அந்த ஆன்மாவும், நமது ஆன்மாவும் ஆகாயத்தைப்போல் ஒரே வெட்டவெளியா யிருக்கிறதெனச் சிந்தித்து, அந்த ஆன்மாவே நான், அதன் தத்துவமே என் தத்துவம் என்று அழுத்தமாய்ச் சிந்திக்கவேண்டும். திடமான நம்பிக்கை யுண்டாகிவிட்டால் அதன் தத்துவம் கொஞ்சம் கொஞ்சமாக வந்துசேரும். பெரிய காரியங்களுக்கு மஹான்களுடைய ஆன்ம சம்பந்தத்தையும், கடவுள் சம்பந்தத்தையும் உண்டாக்கிக்கொள்ளவேண்டும்.

இறந்து போனவர்களுடைய சூக்ஷுமத்திற்கு, உயி ருள்ள சரீரத்தைப்பார்க்கிலும் பன்மடங்கு வலுவேறப்பட்டு விடுகின்றது. சிலருக்கு அதன் ஞானத்திற்குத் தக்கபடி இன்னும் அதிகமான வலுவேற்பட்டிருக்கும். இவ்வித மான சம்பந்தத்தை ஒரே ஆன்மாவிடத்தில் நாம் உண் டாக்கும்பொழுது, அது மரித்ததாயிருந்தால் நம்முடன் சம்பந்தப்பட்டவுடன் வெகு சீக்கிரத்தில் நமக்கு மட்டும் தன் ரூபத்தைக்காட்டி, நம்முடன் பேசுவது முண்டு. பரிசுத்தம் பொருந்திய ஆவிகளுடனே பேசுவதுதான் நல்லது. மரித்துப்போன மனிதனின் கெட்ட ஆவிகளு டன் இத்தகைய சம்பந்தங்களை சாதாரண அப்பியாசிகள் உண்டாக்கிக்கொள்வது மகா பயங்கரத்துக்கும், சில சம யத்தில் ஆபத்துக்கும் இடமானது. ஆனால் வலுவான திடச்சித்தமுள்ள ஞான வீரர்களுக்குப் பயமேயில்லை. அவர்களை, துரான்மாக்கள் ஒன்றுஞ் செய்ய முடியாது.

## நமது மனதிலுள்ள செய்திகளை வேறொரு ஆன்மாவிடம் அனுப்பும் (Telepathy) மானத தந்தி.

### அப்பியாசம்.

நமது மனதிலுள்ள விஷயங்களை வேறொரு ஆன்மா தெரிந்துணர்வதற்காக மானதமாயனுப்ப வேண்டுமானால், அந்த ஆன்மாவையும், நமது ஆன்மாவையும் ஆகாயத் தைப்போல் ஏக வெட்டவெளியாகச் சிந்தனை செய்து, நம் முடைய எண்ணமானது அந்த ஆன்மாவுடைய எண்ண மென்றும், நம்முடைய தத்துவம் அதனுடைய தத்துவ மென்றும் திடமாக நம்பிக்கையோடு எண்ணவேண்டும். இவ்வாறு ஒரே நினைவாயிருந்தால் நமது மனதிலுள்ள செய்திகள் சிலகாலத்தில் பிறர்மனதில் விளக்கமாகும்.

## தனையறி சாயா தத்துவ
## தூல சூக்கும ஞான சாதனை.

(நாஸூத்—மலக்கூத் ஷுஹூது முறையது)



முதலாவது அப்பியாசம்.

598-ம் பக்கம் பார்க்க.

PICTURE: OF K. G. P. 1927.

ஆனால் அப்பியாசிப்பதற்கு முன் இத்தனை மணி நேரத்திற்கு இரண்டு பேரும் சிந்திக்கவேண்டும் என்று முன்னரே முடிவு செய்து கொள்ளவேண்டும். தந்தி சொல்கிறவர் ஒருவர் தந்தியை வாங்குகிறவர் ஒருவராயிருக்க வேண்டுமே யன்றி இரண்டு பேரும் சொல்கிறவர்களாகவாவது வாங்குகிறவர்களாகவாவது இருத்தல் கூடாது.

## எதிர் காலத்தை யுணர்தல்.
### அப்பியாசம்.

நடக்கப்போகிற செய்திகளை முன்னதாகவே தெரிந்து கொள்ள விரும்பினால், நம்மை முடிவில்லாத ஒரே வெட்ட வெளியாக ஆகாயத்தைப்போற் சிந்தனை செய்து மனதின் அசைவை நிறுத்திவிடுவோமானால், கனவிலாவது அசரீரி வாக்கியமாகவாவது பிரத்தியட்சமாக விளக்கிக் காட்டும். இவ்வப்பியாசத்தை தினம் விடாமல் அரை மணி அல்லது ஒரு மணி நேரமாவது ஏகாந்தமான விடத்திலிருந்து செய்தால் சுமார் ஒரு வாரம், ஒரு பட்சத்தில் எதிர்காலத்தை யுணரலாம்.

## தூரதிருஷ்டி யுண்டாகும் விதம்
### அப்பியாசம்.

நமது சரீரத்தையும், நம்மைச் சுற்றிலுமுள்ள சகல பாகத்தையும் சுத்த சூனியமாக்கி, நமது சரீரமே யில்லை யெனக்கருதி, எவ்வித ரூபமுமில்லாமல் முடிவில்லாத ஒரே ஆகாயமாகச் சிந்தித்து அலையற்ற சமுத்திரம்போலிருந்தால், களங்கரகிதமான கண்ணாடியில் எதிர்ப்பட்ட பொருட்கள் பிரத்தியட்சமாகத் தெரிதல்போல், தூரத்திலுள்ள நட்சத்திரமாகிய உலகங்கள் நமது ஆகாயத்தில் முதலில் தோன்றும். பின்னர் அப்பியாசம் முதிர-முதிர எந்த வுலகத்தில் எந்த விடத்தை நோக்கினாலும் இடைவெளியிலுள்ள பொருள்கள் தோன்றுவதுபோல் தோன்றும்.

## இறந்த ஆன்மாவை வரவழைத்துப் பேசுதல்.

### அப்பியாசம்.

நாம் ஒரு ஆன்மாவை வரவழைத்துப் பேசவேண்டுமானால் அந்த ஆன்மாவையும்-நமது ஆன்மாவையும் ஒரே அம்சம், ஒரே தத்துவம் என்ற நம்பிக்கையுடன் ஆகாயத்தைப்போல் அரூபமாகச் சிந்தித்து, அந்த அரூப அம்சத்தில் நமது அரூப அம்சமானது தாக்கும்படியாக நமது மனோகாயத்தை விசாலமாக்கிக்கொண்டே யிருக்கவேண்டும். ஏனெனில், இறந்த ஆன்மாவானது சில சமயங்களில் வெவ்வேறு உலகங்களில் சஞ்சரித்து வெவ்வேறு கிரகங்களிற்சென்று, நமது ஆன்மாவுக்கு வெகு தூரத்திலிருக்குமாதலால், அவ்வாறு ஆகாயத்தை விசாலமாக்கிக் கொண்டே யிருக்கவேண்டும். நமது நாட்ட மென்னுஞ் சீவ காந்த சத்திக்கவர்ச்சியினால், அந்த அரூப அம்சத்தைக் கவர்ச்சித்துக்கொண்டே யிருந்தால், நமது அரூப அம்சம் ஆன்மாவில் மோதியவுடன், அது எவ்வளவு தூரத்திலிருந்தாலும், உடனே நம்மிடத்தில் வந்துபேசும். இவ்வாறு பேசமுடியுமாவென்று சந்தேகமும், ஆச்சரியமுங் கொண்டவர்களில் பலர் இவ்வப்பியாசத்தை பரீட்சித்துப்பார்த்ததில், சிலரிடம் வந்து பேசியும், சிலரிடம் வந்து பேச, விளங்காமலு மாகிவிட்டது. ஏன் விளங்கவில்லையென்பதை ஆராய்ந்து பார்க்குமிடத்தில் சிலருடைய இருதயமானது களங்காகிதமான (பரிசுத்த மில்லாத)துதான் அதற்குக் காரணமென்று தெரியவந்தது.

## சீவராசிகளை வசமாக்குதல்.

### அப்பியாசம்.

நமது ஆன்மாவையும், நாம் எந்தச் சீவனை வசமாக்க விரும்புகிறோமோ அந்தச் சீவனின் ஆன்மாவையும் ஆகா

யத்தைப்போல் ஏக வெட்டவெளியாக ஒன்றென்று சிந்தித்து, அந்தப் பிராணி நமக்குக் கீழ்ப்படும்படியாக நமது மனோசங்கற்பத்தைத் திடச்சித்தமாகக் கருதினால் வசியமாகிவிடும். ஆனால் கெட்ட காரியங்களில் இவ்வப்பியாசத்தைப் பிரயோகிக்கக்கூடாது. பிரயோகித்தால் அப்பியாசிக்கே கெடுதல் நேரிடும் (கெடுவான் கேடு நினைப்பான்.)

## வறுமை, பிணிகளை நீக்குதல்.

## அப்பியாசம்.

"என்னுடைய இந்தச் சரீரமானது மெய்யான சரீரமல்ல. என் சரீரத்திற்கு தோல், தசை, எலும்பு, நரம்பு கிடையாது. நான் ஆகாயத்தைப்போல் சுத்தமான வெட்டவெளியாயிருக்கிறேன். நான் அரூபத்திற்கு அரூபமான பரமாகாயமென்னும் சுத்தப் பரப்பிரம்மமாயிருக்கின்றேன். எனக்கு வறுமையுமில்லை; பிணியுமில்லை. எல்லாம் என்னுலகம். எல்லாம் என்னுடைமை. எல்லாச் சுகமும், எல்லாச் செல்வமும் என்னிடத்தில் நிலைபெற்றிருக்கும்" என்று காலையிலும், மாலையிலும் அரைமணிநேரம் சிந்தித்து வந்தால் வறுமை-பிணி நீங்கி ஆனந்தமயமா யிலகுவார்கள்.

## இறந்த ஆன்மாவுக்கு மோட்சமளித்தல்.

## அப்பியாசம்.

இவ்வப்பியாசமானது அதிக சீவகாந்த சக்தி உள்ளவர்களே செய்யவேண்டியது.

"நான் ஆகாயத்தைப்போல் அழிவில்லாத சுத்த வெட்டவெளியான முடிவற்ற சுத்தப் பிரம்மமாயிருக்கின்றேன். நான் எப்பொழுதும் மோட்ச ஆனந்தத்திலேயே மூழ்கியிருக்கின்றேன். நானும் இந்த ஆன்மாவும் ஒன்று. இந்த ஆன்மாவைப் பூமியிலிருந்து ஆகாயத்திற்கு உயர்த்து

கின்றேன். இந்த ஆன்மாவுக்கு மோட்சத்தை அளித்து விட்டேன்.'' என்று சிந்திக்க வேண்டியது. அதற்கு மறு மொழியாக "ஆம்" "சரி" என்று அசரீரி வாக்கியம் நமக்கு வந்தால் சரி; இல்லையென்று மறுமொழி வந்தால் 'பிரம்மத்தால் ஆகாத காரியமோ யாதொன்று மில்லை என மனதைத் திடப்படுத்திக்கொண்டு, மறுபடியும் 'ஆம்' என்று வருகிறவரையில் முன்போல் முயற்சிக்கவேண்டும்.' இவ்வாறு செய்தால் மரித்த ஆவிகள் (சரீரத்திரையில்லாத தால்) உயர்ந்த பதவிக்குச் செல்லும். அந்த ஆவிகள் திரும் பவும் நம்மிடம் வந்து, இது போதும், போதாதென்று குறைவு நிறைவுகளை எடுத்துக்கூறும். இவ்வாறு ஆவிகள் மோட்சம் சேருமென்றேதான் இறந்த நாள் கிரியையென் றும், மூன்றாம்நாள் - பத்தாநாள் - பதினாறுநாள் - நாற்பதா நாள் கிரியையென்றும், வருடாந்தர கிரியை-கத்தம்-பாத்தி ஹா-திதி முதலான கிரியைகளைச்செய்து வேதத்தை ஓதி, அன்னமுதலான தருமங்களைப்புரிந்து, ஆன்மாக்களுக்கு மோட்சங்கிடைக்கும்படி அவர்கள் சந்ததியார்கள் முயற்சி யெடுக்கிறார்கள். ஆகையால் சாதாரண வேதியர்களே வே தத்தையோதி ஆவிகளுக்கு மோட்ச முண்டாகும்படி கிந் திக்கிறார்களென்றால், மெய்ஞ்ஞானிகளாகிய ஆன்ம சக்தியு டையவர்கள் எந்தக் காரியத்தைத்தான் செய்யமுடியாது. அவர்களே எல்லாம்வல்ல சித்தர்கள்.

## குணங்குடி மஸ்தான்

அண்டகோடிகளுமோர் பந்தெனக் கைக்குள்
ளடக்கிவிளை யாடவல்லீர்
அகிலமோ ரேழினையுமாடும் கறங்குபோ
லாட்டிவிளை யாடவல்லீர்

மண்டலத் தண்டளை யழைத்தரு ளிருத்தியே
வைத்துவிளை யாடவல்லீர்
மண்ணகமும் விண்ணகமு மனுவைத் துனைத்ததின்
மாட்டிவிளை யாடவல்லீர்
கண்டித்த கடுகிலெழு கடலைப் புகட்டிக்
கலக்கிவிளை யாடவல்லீர்
கருதரிய சித்தெலாம் வல்லநீ ரடிமையென்
கண்முன்வரு சித்தில்லையோ
நண்டளங் திடுகாழி யாவனே தேவரீர்
நல்லடிக் கானாகியும்
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வான குரு
நாதன் முகியித்தீனே.

## தாயுமானவள்ளல்.

பாட்டளி துதைந்துவளர் கற்பகந னீழலைப்
பாரினிடை வரவழைப்பீர்
பதுமநிதி சங்கநிதி யிருபாரி சத்திலும்
பணிசெயுந் தொழிலாளர்போல்
கேட்டது கொடுத்துவா நிற்கவைப் பீர்பிச்சை
கேட்டுப் பிழைப்போரையும்
கிரீடபதி யாக்குவீர் கற்பாந்த வெள்ளமொரு
கேணியிடை குறுகவைப்பீர்
ஓட்டினை யெடுத்தாயி ரத்தெட்டு மாற்றாக
வொளிவிடும் பொன்னாக்குவீர்
உரகனு மினைப்பாற யோகதண் டத்திலே
யுலகுசுமை யாகவருளால்
மீட்டிடவும் வல்லநீ ரென்மனக் கல்லையன்
மெழுகாக்கி வைப்பதரிதோ
வேதாந்த சித்தாந்த சமாசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

## சூட்சும சொரூபம் எடுக்கும் விதம்.

ஒரு களங்கமற்ற பெரிய நிலைக்கண்ணாடியின் எதிரில் நாம் நின்றுகொண்டு, நமது சரீரத்தை சிரசு முதல் பாதம் வரையில் கண்ணாடியில் உற்று நோக்கி, நாம் இன்ன விதமாக இருக்கிறோம் என்று நமது உருவத்தை ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டியது. பின்னர் நமது சரீரத்தை மன ஆகாயத்தில் அழித்து, நாமும் மன ஆகாய வடிவாயிருந்து கொண்டு, முன் கண்ணாடியில் பார்த்து திடப்படுத்திய நமது ரூபத்தை ஆராய்ச்சி செய்யவேண்டும். பின்னர் அந்த சூக்குமமாகிய ஆகாய வடிவமுள்ள சரீரத்தை நமது சரீரத்திற்கு ஒரு நெடுஞ்சட்டையைப்போல் போட்டு, நமது சரீரம் இருக்கிறதென்னும் எண்ணத்தை முற்றிலு மறந்து, கண்ணாடியில் பார்த்து திடப்படுத்தின நமது சூக்குமவடிவமே நமது சரீரமென்று சிந்தித்து, அந்த சரீரத்திலிருந்து கொண்டே, தொழுதல், சாப்பிடுதல், வேலைசெய்தல், பிரயாணம் போதல் முதலான சகலகாரியங்களையும் நடத்த வேண்டும். கண்ணாடியில் தெரிசித்த அந்த சூக்கும சரீரமாகத்தான் நாம் இருக்கிறோமென்கிற சிந்தனையோடு சகல கிரியைகளையும் அந்தச் சூக்குமத்தைக் கொண்டே செய்ய வேண்டும். இவ்வாறு தினம் ஒன்றுக்கு மூன்றுமணி நேரம் நாற்பது நாள் அப்பியாசம்செய்தால், சூக்கும மென்னும் மலக்கூத்து ரூபம் வெளியாகிவிடும். இதன் முழுவிபரம் மறு அத்தியாயத்தில் விபரமாகக் கூறப்பெற்றுள்ளனம்.

### மெய்ஞ்ஞானத் தெளிவு.

மண்ணுங்கண் ணாடியிலே மாறும லுன்னுருவை
நன்றாகப் பார்த்து நயப்பட்டாற்—கண்ணாடி
பாராமல் விட்டுகியாற் கண்ணாற் பரிவாக
மாறும னீபார்த்து வா.

வெளிச்சடம்போ லுள்தேகம் வெளியாகி விட்டபின்பு
ஒளிவாம் மிதாலே யுட்சடமாய்த்—தழுவியே
எப்போதும் வீற்றிருந்தால் எமனு ருண்க்குண்டோ
அப்போது சாவே தறி.

வெல்லுகின்ற திக்றுடனே மேலாந் தொழுகைமுதல்
நல்ல செயல்முழுது நாட்டத்தாற்—சொல்லிவந்த
மூல சடங்கொண்டு மோகமாய்ச் செய்துவா
ஆலம்போ லாகுமட்டுந் தொடர்,

### அப்பியாசிகட்குப் பத்தியம்.

அப்பியாசி தான் அதிக பசியாயிருக்கும்போதும் உணவு புசித்தவுடனும் அப்பியாசம் செய்யக்கூடாது. நித்தம் காலையில் சுத்த சலத்தில் குளித்து, பரிசுத்தமான வெள்ளை வஸ்திரம் புனைதல் வேண்டும். அவர் சாந்த சொரூபராகவும், சன்மார்க்க முடையவராகவும் இருக்கவேண்டும். மாமிசபட்சணம், லாகிரி வத்துக்கள், மாதர்போக முதலியவைகளை விலக்குதல் நலம். உஷ்ணம் அதிகரித்தால்குளிர்ச்சியான பதார்த்தங்களையும், குளிர்ச்சி யதிகரித்தால் உஷ்ணமான பதார்த்தங்களையும் சேர்த்துக்கொள்ளலாம். சரீரமானது சீதோஷ்ணமில்லாமல் சம நிலையிலிருத்தல் வேண்டும். நெய், பால், வெண்ணெய், அல்லது பஞ்சகற்பம் தேய்த்து தலைமுழுகலாம். நல்லெண்ணெய், கடுகு, புளி, முதலியவைகளை நீக்கவேண்டும், தேக நிலைக்கும்-வழக்கத்திற்கும் தக்கவாறு, வெந்நீராவது, தண்ணீராவது குளிக்கவும்,குடிக்கவும் சேர்த்துக்கொள்ளலாம். ஆனால் கொதித்து ஆறிய தண்ணீர் சேர்ப்பதுதான் நல்லது. குளிர்ச்சி அதிகரித்தால் குளிக்கக்கூடாது. மனதிற்குத் திடமும், மூளைக்கு வலுவும் தரக்கூடிய பதார்த்தங்களை அதிகமாகப் புசிக்கலாம். அப்பியாசம் செய்து சுமார் அரைமணி நேரத்திற்குப் பின்னரே

தாகசாந்தி முதலானவைகள் செய்யவேண்டும். அந்தநோத்திற்குள் எவ்விதபானமும் ஆகாரமும் சாப்பிடக்கூடாது. பசி, தாகம், மோகம், தூக்கம் இவைகளை நாம் விலக்கியிருந்தாலும், அவைகளால் நமக்கு யாதொரு இம்மையும் நேரிடாதபடி நடு நிலைமையாயிருந்து கொள்ளவேண்டும்,

தத்துவங்கள் மீறுதபடி நமக்குக் கீழ்ப்பட்டிருந்தால், பிரகிருதி செயமுண்டாகும். பின்னர் அப்பியாசத்தை இலேசாகச் செய்யலாம் அவசியமானால் அப்பியாசத்தை விட்டும் விடலாம். சில சித்தத்தினர்க்கு நீண்டநாளிலும், சில சித்தத்தினர்க்கு சீக்கிரத்திலும் சித்தியாகிறது. சில சித்தத்திற்கு அதிக சத்தியும், சில சித்தத்திற்கு சொற்ப சத்தியும் ஏற்பட்டிருக்குமானல், சித்துகளும் அவ்வாறுதான் நிகழும். சித்தசெயமுண்டானல் பத்தியம் வேண்டியதில்லை. மற்றப்பத்தியங்களை சமயத்திற் கேற்றபடி அமைத்துக் கொள்வார்களாக.

---

## இருபத்தைந்தாவது அத்தியாயம்.

## சாயாதத்துவ ஞானம்.

### எண்சீர் விருத்தம்.

வுத்துடன் மருவவென்றுற் றன்னின் றால
வடிவகற்றிச் சூக்குமத்தை வடிவாய்க் கொண்டு
சித்துருவாற் காரணத்திற் புக்கி மேன்மேற்
சென்றுமகா காரணமாம் லாகூத் தென்னும்
வித்தகவீட் டிற்கலந்து துவித மாய
விகற்பமற்று வொன்ருகி மிளிரச் சாயா
தத்துவஞா னம்பயிலு முறையை மிக்க
சவித்தார மாகவிவண் சாற்று வாமால்.

கண்டமும்- அகண்டமும்.

நாம் வசித்துக்கொண்டிருக்கிற இப் பிரபஞ்சமானது நமது பஞ்சேந்திரியங்கட்கு புலனுவதால், இவ்வுலகத்திற்கு தூலலோகம் (ஆலம் அஜ்ஸாம்) என்பார்கள். இந்தத் தூல லோகத்தையன்றி சூக்குமம் - காரணம் முதலான மறைவான அநேக உலகங்களிருக்கின்றன. அந்த மறைவான உலகங்களென்னும் ஆலங்களிலுள்ளவைகள், இவ்வுலகத்திலுள்ள பொருட்களைப்போல் தூலமாகிய கண்டிப்பை யுடையவைகளன்று. ஆனல் அந்த மறைவான உலகங்களின் பொருட்கள் இத்தன்மைத்தென நாம் உணர்ந்து கொள்ளுமாறு இந்தத் தூலப் பிரபஞ்சத்தில் வழங்குகிற வசனங்களைக் கொண்டு கூறவேண்டியதா யிருக்கிறது. அதனல் மறைவான உலகத்திலுள்ள பொருட்கள் இப் பிரபஞ்சத்திலுள்ள பொருட்களைப்போல் உருவமுடைய வைகளென்றும், கண்டிப்பை யுடையவைகளென்றும், பஞ்சபூதங்களால் சிருட்டிக்கப்பட்டவைக ளென்றும் எண்ணிவிடக்கூடாது. 'குர் ஆனில்' கடவுளுடைய முகமென்றும், கண்ணென்றும், காதென்றும், கையென்றும், காலென்றும் சொல்லப்பெற்றிருக்கிறது.அன்றியும் நாம்கடவுளை நோக்கி, ஏ கடவுளே! பரிதாப நிலையிலிருக்கும் இந்த ஏழைமுகத்தை உன் கருணைக் கண்கொண்டு பார் என்கிறோம்; என் விண்ணப்பத்தைக் கேள் என்கிறோம்; இன்னதை எனக்கு கொடுத்தருள் என்கிறோம்; உன் திருவடி அடியேனுக்கு எப்பொழுது கிடைக்குமென்று பிரார்த்தனை செய்கிறோம். இப்படியே பல ஆகமவேத புராணங்களும் முறையிடுகின்றன. அதனல் கடவுளுக்கு நமது முகம்-கண்-காது-கை - கால் முதலியவைகளைப்போல் அவயவங்கள் இருக்கின்றனவென்று நினைத்தல் கூடாது.

நபிகள் நாயகம் அவர்களுடைய ஒளியை சிருட்டித் தானென்று கூறியிருப்பதை, நமது கண்ணுக்குத் தோற்று கிற சூரியன் ஒளியுடனும், விளக்கின் ஒளியுடனும் ஒப்பி டக்கூடாது. நரகத்தில் நெருப்பும், சர்ப்பங்களுமிருக்கின் றன வென்பதை இவ்வுலகத்திலுள்ள நெருப்பைப்போலும் சர்ப்பங்களைப்போலும் இருக்குமென்று எண்ணிவிடக் கூடாது. தூலமாகிய பொருட்களும், இந்தத்தூல சரீரமும் ஆலம் அஜ்ஸாமாகிய இப் பிரபஞ்சத்திற்குடையது. நமது சூக்கும சரீரமோ! ஆலம் மிதால் என்னும் சூக்குமலோகத் திற்குடையது.

## மெய்ஞ்ஞானத் தெளிவு.

காணவென்றால் அஜ்ஸாமை யிந்தக்கண் ணற்பாரும்
காணவென்றால் மிதாலேயா லாற்காணும்-காணவென்றால்
மனக்கண்ணால் மனுருகை வளமாகக் கண்டுவா
கன றப்பை யும்மதனாற் காண்.

கூறு மலக்கூத்தைக் குறிப்பாகப் பார்த்துவந்து
தேறும்வத்து இன்னதெனத் திறப்பட்டான்—மாறியே
முன்னுருவைப் பாராமன் மோகமாய்ப் பார்த்ததுவை
வின்னமின்றி யேதெரிசி மின்,

நமது ரூஹென்னும் சீவான்மாவானது ஜபறூத்து என்னும் காரண உலகத்திற்குடையது. நமது சிர்று என் னும் பரமான்ம இரகசியமானது லாகூத்து என்னும் மகா காரண உலகத்திற்குடையது. ஆகையால் இவைகள் ஆரம்ப அப்பியாசிகளுக்கு புதியதாகவும், வியப்பாகவும், மலைப்பாக வும் தோற்றும். கல்விப் பாண்டித்துவமும், அப்பியாச முதிர்ச்சியும் ஏற்பட ஏற்பட அவைகள் காதலாமலகம் போல் நன்கு விளங்கும்.

அன்றியும், பஞ்சேந்திரியங்கட்கு புலப்படுகின்றவைக ளெல்லாம் இந்த தூல உலகமாகிய ஆலம் அஜ்ஸாமுக்குடை யது. இவைகளே யன்றி, இன்னும் மறைவானவைகளும் இருக்கின்றன வென்று நம்முடைய அறிவுக்கு விளக்கமா கின்றது. நமக்கும், மரம்-செடி-கொடிகளுக்கும், மிருகம் முதலான பிராணிகளுக்கும் உயிர் இருக்கிற தென்பது பிரத்தியட்சமானலும், அவ்வுயிரென்பது யாது? அதுஎங் குளது? என்று நமது புத்திக்கு விளங்கவில்லை. நம்மிடத் தில் அறிவு, கோப முதலானவைகள் உதயமாகின்றன. ஆனல் அவைகள் எங்கிருக்கின்றன! எங்கிருந்து வருகின் றன! வென்று இந்திரியங்களால் நிதரிசனமாக அறிய முடி யவில்லையல்லவா? அதுபோல் கடவுள் இருக்கிறார். அவரே இப் பிரபஞ்சம் முதலான யாவையும் நடத்தி வருகிறார். என்று நம்பிக்கை கொண்டிருக்கிறோம். ஆனல் கடவுளை பிரத்தியட்சமாகக் காணக்கூடியதாயுமில்லை; அவர் நடத்து கிறதும் தெரியவில்லை. இவைகளைத்தான் மறைவான உல கத்தைச் சேர்ந்தவைகளென்று முன் சொன்னோம்.

நாம், தூல - சூக்கும முதலான சகல உலகங்களையும் பொருந்தியுள்ளோம். அவ்வுலகங்கள் நமக்கு வெளி யாகச்செய்யும் தத்துவங்கள் நம்மில் பொருந்தியுள்ளன. பஞ்சேந்திரியங்கட்கு இவ்வுலகத்திலுள்ள வெளிக்காட்சி கள் மட்டுமே தெரியும். அகக்கண்ணாகிய ஞானக் கண்ணா னது சூக்கும சரீரம், ரூகு என்னும் சீவான்மா, சிர்று என் னும் அந்தரங்க முதலானவைகட்கெல்லாம் நேத்திரமாக விளங்குகின்றது. சூக்கும சரீரத்தின் கண்திறந்தால் ஆலம் மிதால் வெளியாகும். ரூஹின் கண் திறந்தால் ஆலம் அறுவாகு வெளியாகும். சிர்றின்கண் திறந்தால் ஆலம் லாகூத்து வெளியாகும். இந்தக் கண்கள் திறப்பதற்காகத்

தான் அந்தரங்கமாகிய ஞானக் கல்விகளை ஆராய்ச்சி செய்வதும், யோகமுதலான சுலூக்குடைய பாட்டைகளை அப்பியாசிப்பதுமாக அநேக ஆஷிக்கீன்கள் முயற்சி செய்கிறார்கள்.

## குணங்குடி மஸ்தான்.

மகுலியத் தானதாத் துல்கிபுரி யாவில்
  மறைந்தகன் சுல்மகுபியாம்
மஸ்கூத்து அன்குல் கதீமுல் அமாவான
  மவுஜூதெ னுஞ்சிருபுலே
அகதியத் துகதாதி வாஹிதிய் யத்தான
  ஆலம்அறு வாகானதில்
ஆலம்மி தாலாகி ஆலம்அசி சாமாகி
  ஆலம்இன் சானைபின்
பகுதியத் தில்லா ஜலாலொடு ஜமாலும்
  பதீகுல்க மாலுமாகி
பகுதுகபு லற்றலா கூத்துஜப றூத்தில்
  பகாவான குவியத்தினல்
நகுசியத் தற்றுமுன் றுளினிழல் பெற்றடிமை
  நானினைவு மற்றுய்வனோ
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
  நாதன் முகியித்தீனே.

பறுதானி யத்திலோ சுபுகானி யத்தெனப்
  பகர்பாா பரமதனிலோ
பற்பல விதங்கொண்ட அகியானி யத்திலோ
  பரிபூா ணந்தன்னிலோ
அரிதான தாத்திலோ அலிபெனுஞ் சுகவாரி
  யாகும்நுக் தாபதனிலோ
அகுலல் உலாவான ஆலமலக் கூத்திலோ
  ஆலம்அசு பல்தன்னிலோ

குறிகுண தீதவட் டாங்கயோ கத்திலோ
கோடானு கோடிமறையாற்
கூறரிய சிவராச யோகத்தி லோவருட்
குறையாப்பெ ருங்கடலிலோ
நரலிங்க ரருளான னேநீ யிருப்பதிந்
நாயினேற் கருள்செய்குவாய்
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித்தீனே.

இந்த மறைவான உலகங்கள் எங்கிருக்கின்றன என்ற ஞாபகம் அனேகருக்கு உண்டாகும். மறைவான உலகங்களெல்லாம் தோற்ற மாத்திரமேயன்றி சொரூபமாயில்லை. இவைகள், நாடகக் கொட்டகைகளில் ஒரு திரையை நீக்கினால் சில காட்சிகள் தோற்றுவதுபோலும் மறுதிரையைநீக்கினால் வேறுசிலகாட்சிகள் தோற்றுவதுபோலும்புலனாகும் அந்த உலகங்களின் திரைகளை நீக்குவது நமது சித்ததத்துவமேயன்றிப் பிறிதன்று. ஆலம் மிதாலானது அஜ்ஸாமுடைய ஆலத்தைப் பார்க்கிலும் விசாலம் பொருந்தியது.

## தூல சூக்கும சரீரங்கள்.

உலகத்திலுள்ள பொருள்களுக்கெல்லாம் தூல சரீரமென்றும், சூக்கும சரீரமென்றும் இருவித சரீரங்களிருக்கின்றன. தூலசரீரம் இந்த அஜ்ஸாமுடைய ஆலத்திற்குடையது. சூக்கும சரீரமோ! மிதாலுடைய ஆலத்திற்குடையது. இந்தத் தூல சரீரத்திற் கேற்பட்டிருப்பதுபோல், சூக்கும சரீரத்திற்கும், கை - கால் முதலான அவயவங்களும் உண்டு. ஆனால் சூக்கும சரீரம் மிகவும் நுண்மையானது. அது நூருனியாவென்னும் நுண்ணணுவால் சமையப்பெற்ற வடிவமென்று எண்ணப்பெறுகிறது. தூல சரீரமானது சூக்கும சரீரத்தின் நிழல்போன்றது.

சூக்கும (மிதால்) உலகமானது அநேக தெய்வீக இரகசியங்களைப் பொருந்தியதாயும், மிக்க மிருதுவான அணுக்களால் உண்டாக்கப்பெற்ற வடிவங்கள் வெளியாகுந் தலமாயுமிருக்கின்றன. இந்த சூக்கும உலகமானது கண்டிப்பையுடைய தூல உலகத்திற்கும், ஒளியின் அணுக்களால் உண்டாக்கப்பெற்ற ரூஹானியத் என்னும் காரண உலகத்திற்கும் எல்லையாகவும், மத்தியப்பிரதேசமாகவுமிருக்கின்றபடியால், புத்தி - அகங்காரம் (அக்கல் - நப்சு) என்னும் அந்தக் காரணங்களைப்போல் அறிவிற்குப் புலப்படாமலும், ஒரு மதிப்பிலடங்காமலுமிராமல், அறிவிற்கு எட்டியதாயும், மதிப்பில் அடங்கியதாயும், அணுவிற்குச் சமானமானதாயும் காணப்பெறுகின்றது.

கைவல்ய நவநீதம்.

ஈசனுக் கிது சுழுத்தி யிதுவேகா ரணசரீரம்
கோசமா னந்த மாகுங் குணமிரா சதம வித்தை
தேசறு மவித்தை தோறுஞ் சிற்சாயை சீவ கோடி
நாசமா முயிர்க்கப் போது நாமமும் பிராஞ்ஞ னாமே.

அழுக்கொடு பற்றுஞ் சீவர்க் கதுவேயா னந்த கோசஞ்
சுழுத்திகா ரணஞ் சரீரஞ் சொன்னதிம் மட்டு மோக
முழுக்குணத் திரண்டால் வந்த மூலவா ரோபஞ் சொன்னோம்
வழுத்துசூக் குமவா ரோப வழியுநீ மொழியக் கேளாய்.

பிரதம தேவதூதராகிய ஜிப்றயீல் (அலை) அவர்களை கருணைக்கு உறைவிடமாகிய நபிகள் பிரான் முஹம்மது (சல்) அவர்கள், சித்றத்துல் முந்தஹா என்னுமிடத்தில் 600 இறகோடு கண்டதாகவும், அவர்கள் தினம் காலை - மாலையில் மாவுல் ஹயாத் (சீவதீர்த்தம்) என்னும் நதியில் முழுகிக் குளித்து, இறகுகளை அசைக்கும்போது சொட்டும் ஒவ்

வொரு துளிக்கும் ஒவ்வொரு தேவதூதரை (மலக்கை) சிருட்டித்ததாகவும் கூறப்பெற்றதானது, பெரும்பாலும் அந்தச் சூக்கும உலகத்தில் நடந்தவைகளேயன்றி, தூல உலகத்தில் நடந்தவைகளன்று. ஆதலால் சூக்கும சொரூப அப்பியாசத்தை கியாலுல் முகையது (ஆரோப உலகம் அல்லது இலட்சிய தரிசனை என்பார்கள்.

சூக்கும சரீரமானது, சீவான்மாவையும் - சரீரத்தையும் சமபாவனையாகச் சேர்த்துக்கொள்ளுந் தன்மையை உடைத்தாயிருப்பதால், இந்த தூல சரீரத்தில் அது ஒரு ஒளியான சரீரமாகப் பிரகாசிக்கின்றது. அந்தச் சரீரத்திற்கு அறிகின்ற சத்தியும், வடிவமும் உண்டு. ஆகலின், மீதாக்குடைய காலத்தில், அறுவாகு (காரண சரீரி) களை நோக்கி, அலஸ்து பிறப்பிக்கும் (நான் உங்கள் நாயனல்லவா ?) என்ற கேள்வியை ஆண்டவன் கேட்டதற்கு, காலு பலா (உண்மைதான்) என்று அறுவாகுகள் விடை பகர்ந்திருக்கிறார்கள். சூக்குமமென்னும் இலிங்க சரீரத்திற்கு மட்டுமே பிரம்மத்தை சந்திக்குந் தன்மை யேற்படுகின்றது. ஆகையால், சரீரமுள்ளபோதே சூக்குமப் பழக்கத்தை அதிகப்படுத்தி, கடவுளிடம் போகவரப் பழக்கிவிட்டால், சரீரம் நீங்கியபின் ஆன்மாவானது, அங்கும் - இங்கும் அலையாமல் நேரே கடவுள் சமுகத்திற்குச் சென்று, சீவப்பிரம்மைக்கிய நிலையைச் சேர்ந்துவிடும். அந்தச் சூக்குமமானது, சொப்பனத்தில் ஒவ்வொருவர்க்கும் வெளியாகிக் கொண்டிருப்பதைப் பிரத்தியட்சமாக உணருகிறோம். ஆகலின், நாம் வெளிக்கண்ணை மூடிக்கொண்டு நோக்குபவைகளும், தன்னில்தானே மனதில் பேசிக்கொள்ளும் விஷயங்களும் சூக்கும உலகத்தைச் சேர்ந்தவைகளே.

வித்திலிருந்து மரம் உண்டாவதுபோல், சூக்கும தேகத்திலிருந்து தூல தேகம் உண்டாகிறதேயன்றி, தூல தேகத்திலிருந்து சூக்குமம் உண்டாகவில்லை. முதலில் கடவுளானவர் சூக்கும தேகத்தை யுண்டாக்கிய பின்னரே நானாவிதமான தூல தேகங்களை "பண்டம் ஒன்று பணிதி பல" என்றதுபோலுண்டாக்கியுள்ளனர். இப்பிரபஞ்சத்திலுள்ள தூல காரியங்களெல்லாம் சூக்குமோபாதானத்தைக் கொண்டே செய்யப்பெற்றுளது. சூக்கும தேகம் தூல தேகமாய்ப் பரிணமித்துக் கெடுவதில்லை. தூலவடிவத்திற்கு சூக்கும வடிவங் காரணம். சூக்கும வடிவத்திற்கு மூலப் பிரகிருதி காரணம். மூலப் பிரகிருதிக்கு மாயை காரணம். மாயைக்கு குண்டலி காரணம். அதற்குமேல் கடவுளிருந்து சிருட்டிக்கிறார். ஆன்மா சீவப் பிரம்மைக்கியமாகிய சாயுச்சியம் அடைந்து விட்டால் மேற் கூறப்பெற்ற பேதங்கள் யாதொன்றுமேயில்லை.

சிவஞான சித்தியார்.

சூக்குமங் கெட்டுத் தூலந் தோன்றிடா சூக்கு மத்தி
னாக்கியோ ருடல்கி டப்ப தின்றுட லாக்குந் தன்மைக்
கோக்கிய சத்தி யுண்டா யுடறருங் கால முற்று
நீக்கிட மரம்பின் வேரோர் நீண்மர நிகழ்த்து மாபோல்.

விதிப்படி சூக்கு மத்தே யுருவரும் வினையா லிங்கே
யுதித்திடா வுருவ மாக வுருவரு மரங்கள் வித்திற்
கதித்தெழு மாமும் வித்துங் கழியும்பின் னழியுஞ் சூக்க
மதிக்கெழு கலைகள் போல வருவது போவ தாமே.

தூல சரீரத்தை விட்டு சூக்கும சரீரமானது பிரியும் காலத்திலேதான் மரணம் ஏற்படுகின்றது. அப்போது சீவான்மா அந்த சூக்கும சரீரத்தோடு சேர்ந்துகொண்டு,

மரணத்திற்குப் பின் மனிதனுடைய புண்ணிய-பாவத்திற்குத் தக்கவாறு சுகத்தையும் துக்கத்தையும் அடைகின்றது. அன்றியும், சரீரத் திரையுள்ளபோது எங்கும் சஞ்சரிக்க முடியாத ஆன்மாவுக்கு; சரீரம் நீங்கியபின் வாலாயமாய் எங்கும் சஞ்சரிக்கும் தன்மை ஏற்பட்டுவிடுகிறது. இதற்குத் திருட்டாந்தமாக இரண்டு தபோதனர்கள் பேசிக்கொண்டதாவது;—

நம்மிருவரில் யார் முன்னதாக மரணமாகிவிடுவோமோ! அவர்களுக்கு, மரணத்திற்குப்பின் ஏற்படும் நிலையைப்பற்றி மற்றவருக் கறிவிக்கவேண்டு மென்பதாம். சில காலத்திற்குப் பின்னர், அவர்களில் ஒருவர் நிரியாணத்தை யடைந்தார். அவர் மற்றொருவராகிய தமது நண்பருக்கு சூக்குமத்தில் வந்து சொன்னதாவது:—

சூக்குமம் வெளியாகுதல்.

நண்பரே! எனது மரணத்தைப்பற்றி நிதானிக்குங்கால் நான் வீட்டிலிருந்து வெளியில் புறப்பட்ட தன்மையைப் போலிருக்கின்றேன். நான் இறந்து போனதாக எனது பந்து மித்திரர்கள் பிரலாபித்து அழுவதைப் பார்த்த நான் புன்முறுவலுடன் அவர்களை நோக்கி, நான் உங்களோடிருக்க நீங்கள் ஏன் அழுகிறீர்கள்? என்றேன். அது அவர்களுக்கு கேட்கவில்லை. பின்னர், என் பிரேதத்தை புதைப்பதற்கு எடுத்துச் செல்லும்போதும் அவர்கள் கூடவே நடந்து போனேன். ஆனால்! என்னை ஒருவரும் காணவுமில்லை; பேசவுமில்லை. அவர்கள் புதைத்துவிட்டு தத்தம் இடத்திற்குச் சென்றுவிட்டார்கள். அதன் பிறகு, பரலோகத்தில் என்னுடைய நன்மை தின்மையைப்பற்றித் தெரிந்து கொண்டேன். என்னுடைய சமாதி யறையானது புதை

குழியாகக் காணப்படவில்லை; அது ஒரு பெரிய அலங்காரமான மாளிகையைப் போன்றிருந்தது. அந்த மாளிகையில் வசித்துக்கொண்டு, எங்கும் சஞ்சரித் துலாவி வருகிறேன் என்பதாம். இந்தக் கதையைப்போலவே இறந்து போன (சரீர விடுதலை யடைந்த) அனேக ஆவிகள் தாமிருந்த விடத்திற்கு வந்து போவதை விஸ்தாரமாக கேள்வியுற்றிருக்கிறோம். அன்றியும் இது விஷயமாய் சமாதிக் கிரியை அத்தியாயத்திலும் விளக்கியுள்ளனம். இந்தச் சரிதையால் சூக்கும லோகத்தின் உண்மையானது நன்குணரப்பெறும்.

### கைவல்லிய நவநீதம்.

இராசத குணத்தில் வேறிட் டெடுத்தகூ றைந்து மைந்தும்
பிராணவா யுக்க ளென்றும் பெருந்தொழிற் கருவி யென்றும்
பராவிய பெயரா மிந்தப் பதினேழு மிலிங்க தேகம்
சுராசுரர் நரர்வி லங்காய்த் தோன்றிய வுயிர்கட் கெல்லாம்.

இவ்வுடன் மருவுஞ் சீவ னிலங்குதை சதனென் றுவன்
இவ்வுடன் மருவுமீச னிரணிய கர்ப்பனு வன்
இவ்வுட விரண்டு பேர்க்கு மிலிங்கசூக் குமச ரீரம்
இவ்வுடற் கோசமூன்று மிதுசனு வவத்தை யாமே.

### இந்த உடல் நீயா?

இவ்வுலகத்தில் பெரும்பாலோர் இந்தத் தூல உடலையே தன்னுடையதென்று அபிமானித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் சூக்கும-காரண முதலான சரீரங்களைப் பற்றிக் கேள்விப்படாமையும், ஒருவாறு கேட்டிருப்பினும் சரிவர ஆராய்ச்சி செய்யாமையுமே அதற்குக் காரணம்

இந்த உடல் உன்னுடையதா? அல்லது, இந்த உடல் நீயா? என்ற கேள்வி கேட்கப் பெறுமாயின்: இந்த உடல்

என்னுடையதுமல்ல! இந்த உடல் நானுமல்ல! என்பார்கள் அறிவுடையோர். இந்த உடல் நீயாயின்: தூங்கும் பொழுது இவ்வுடலில் ஒரு சர்ப்பம் ஊர்ந்தாலும் நீ அறிய மாட்டாயே. ஆகையால் இவ்வுடம்புக்கு வேருயுள்ளவன் நீ.

சொப்பனத்திற்காணும் சூக்குமம் நீயா ?

நீ தூங்கும்போது கனவில் உன்னை ஏதோ ஒருவனுக எண்ணிக்கொள்ளுகிருயே; அவ்வொருவன் நீயா? அல்ல, அவ்வொருவன் நீயாயிருந்தால், நீ விழித்துக்கொண்ட வுடன் அவ்வொருவன் எங்கே? அவ்வொருவன் நீ ஆகாமற் போனதோடு அவ்வொருவனுக உன்னை நீ எண்ணியிருந்த தற்காக நீயே வெட்கப்படுகிருய். ஆகையால் அவ்வொரு வனும் நீ அல்ல.

சொக்கிமருண்ட சுழுத்தி நீயா?

கனவும் காணுமல் நீ அயர்ந்து தூங்கும்பொழுது உன் நிலைமை என்ன? அந்த நிலைமைதான் உனக்கு வடிவமோ என்னில், அந்த நிலைமையை உனது வடிவமாக ஒப்புக் கொள்ள உனக்கு ஒருநாளும் சம்மதமிராது. ஏன்?—உன் நிலைமை இன்னதென உனக்கே உணர வாராத ஒரு அந்த காரத்தை நீயாக வைத்துக்கொள்ள நீ அவ்வளவு அறி வற்றவனல்லவே. அறிவினுல் மற்றப் பொருள்களைவிடப் பெருமை பெற்ற நீ, தன் உணர்ச்சியற்ற ஒரு நிலையை நீ யென எப்படி ஒப்புக்கொள்வாய்? அதுதான் எப்படி உண் மையில் உன்னுடைய வடிவமாயிருக்கும்? இருக்காது. "இந்த நிலை, தன்னைத்தான் அறியாத அந்தகாரநிலை" என்று அறிகிற அறிவாளி நீயாயிருக்க, உன்னுல் உணர்ந்து இக ழப்பட்ட ஒரு நிலை நீ ஆவாயா? ஆகையால், இந்த அந்த கார நிலையும் நீ அல்ல.

உன்னுடைய இந்தத் தூல உடம்பே நீ அல்ல என்னும் பொழுது, இதற்குப் புறம்பான ஒரு பொருள் நீ ஆவாயா? ஆகலின் இவ்வுடம்பு நீ அல்லாதது போலவே, இவ்வுடம்புக்குப் புறம்பான பொருள்களும் நீ அல்ல; இவ்வுடம்பினுள் நீ கண்ட கனவாகிய மற்றொரு உடம்பும் நீ அல்ல; ஒன்றும் அறியாத அறியாமை வடிவாகிய சுழுத்தியும் நீ அல்ல; இம் மூவகை வடிவத்துக்கும்-இவ்வுலகத்துக்கும் வேறாயிருப்பவன் நீ.

இம் மூவகை வடிவமும் இருவகையில் அடங்குகிறது. (1) மற்றொரு பொருளைச் சுட்டியறிந்து கொண்டிருக்கும் நிலைமை. (2) தன்னைக்கூட தான் அறியாத நிலைமை. அவையாவன:—

சாக்கிராவத்தையிலும், சொப்பனவத்தையிலும், நீ ஏதாவது ஒரு பொருளை முன்னிலையாகக்கொண்டு சுட்டறிவுடையவனாயிருக்கிறாய், சுழுத்தியில் நீ ஒன்றையும் அறியாத, அதாவது உன்னைக்கூட நீ அறியாத நிலைமையில் இருக்கிறாய். இவ்விரண்டு நிலைமையில் உன்னுடைய சகல அநுபவங்களும் அடங்கும். இவ்விரண்டு நிலைமையும் உன் சொந்தநிலையன்று. இந்த இரண்டு நிலைமைக்கும் புறம்பாயுள்ள மற்றொரு நிலைமையை யுடையவன் நீ.

துரியமே நீ!

அந்த நிலையே துரியமென்னும் நான்காவது நிலை. இப்பெயர் ஏன் வந்ததென்றால், “நீ கண்ட சாக்கிரம்-சொப்பனம்-சுழுத்தி என்னும் மூன்றும் உன் நிலையல்ல” என்பதற்காக அந்த நிலைக்குத் துரியம் என்னும் நாமம் சூட்டப்பெற்றது. சாக்கிரம் - சொப்பனம் - சுழுத்தி என்னும் மூன்றையும் ஒரு சொப்பனமாக வைத்துக்கொண்டால், அம் மூன்றினின்றும் விழித்த சாக்கிரம் துரியமாகும்.

துரியமானது, ஒடுக்கத்தில் சுழுத்தியைக்காட்டிலும் ஒடுக்கமுள்ளதாயும், விழிப்பில் சாக்கிரத்தைக்காட்டிலும் விழிப்புள்ளதாயும் இருக்கிறது. ஆகையால், சாக்கிர சொப்பன-சுழுத்திகளுக்கு வேறாயுள்ள அந்தத் துரிய நிலையே உன் சொந்தநிலை. அந்தத்துரியம் எத்தன்மைத்தானதெனில்,—அறிவானது ஒன்றையும் சுட்டியறியாது; அவ்வறிவு தன்னை யறியாமலும் இராது. அதாவது, வேறொரு பொருளையும் அறியாததாயும், ஆனால் சடத்தன்மை இல்லாததாயும் இருக்கிற அந்த அறிவே பிரகாசம் பொருந்திய ஞானபூமியாகிய துரியமாகும். அந்த துரியத்தை ஒரு கண நேரமாவது கண்டவன் உண்மையைக் கண்டவன். அந்தத் துரியமே "நீ" என்பது ஒருபெரியார் வசனம். ஆகையால் இந்தச் சரீரம் முதலானவை தானல்லவென்பதும், துரிய நிலையே "தான்" என்பதும் விளக்கமாவதால், அந்தத் தன்னையறிவதற்கு படிப்படியாக அப்பியாசம் செய்யு வேண்டியது அத்தியாவசியமாகிறது.

## கைவல்லிய நவநீதம்.

இன்னது தேகந் தேகி யிவனென வுணர்வான் யாவன்
அன்னவன் றன்னைத் தானென் றறிந்தவ னருக மென்றார்
சொன்னபின் றேகி யாரித் தூலமல் லாம லென்றான்
பின்னது கேட்ட வையர் பீழையு நகையுங் கொண்டார்.

தேகமல் லாமல் வேறே தேகியார் காணே னென்றாய்
மோகமாங் கனவில் வந்து மூளைத்தவ னெவனீ சொல்வாய்
சோகமாங் கனவு தோன்றாச் சுழுத்திகண் டவனார் சொல்வாய்
ஆகநீ நனவி லெண்ணு மறிவுதா னேது சொல்வாய்.

நனவுகண் டதுநான் கண்ட நனவுள நினைவு நீங்கிக்
கனவுகண் டதுஞ்சு ழுத்தி கண்டதும் வேறொன் றேபோல்
தினமனு பவிப்ப தொக்குந் தெரியவு மில்லை சற்றே
மனதினி லுதிக்கும் பின்னே மறைக்குமத் தருண வீரே.

## முதலாவது அப்பியாசம்
## (தூல-சூக்கும தெரிசனை)

அதிக அகலமும், நீளமுமில்லாத ஒரு சிறிய அறையில் மாசு மறுவில்லாதபடி நீலம் கலந்த வெண்சுண்ணந்தீட்டி, அவ்வறையின் ஓர் பாகத்தில் மனதிற்கு இசைந்த இடத்தில் எவ்வித (*) ஆசனத்திலாவது வெள்ளை வஸ்திரத்தின்மேல் மேற்குமுகமாகவேனும், வடக்கு முகமாகவேனும் உட்கார்ந்துகொண்டு, களங்கரகிதமான கண்ணாடி ஒன்றில் பாதாதிகேசம் வரையிலாவது, அல்லது பார்க்கக்கூடிய அளவிலாவது அமைத்து, அந்தக் கண்ணாடியில் பிரதி தினமும் மூன்று வேளைக்குக் குறையாமல், குருபிரான் பார்க்கச் சொன்ன மத்தியக் குறிப்பைக் கவனித்து, எவ்வித உலக சிந்தனையுமில்லாமல் பிரணவ(ஹூ)மகாமந்திரத்தை சற்குருவிடம் கேட்டுணர்ந்தபடி தியானித்து, பெரும்பாலும் கண்ணிமையாமல் தன் வதனத்தை அரைக்கண் பார்வையாகப் பார்த்து வரவேண்டும்.

அந்த அறைக்குள் கண்ணாடியையன்றி வேறு எவ்விதப்பொருட்களும் இருத்தல்கூடாது. தனது சற்குருநாதனும், தமது ஆப்த மெய்ஞ்ஞான நண்பரும், அதாவது அப்பியாசியுடைய நன்மையைக் கோறினவர்களையன்றி வேறெவரும் அவ்வறைக்குட் பிரவேசித்தல்கூடாது. இவ்வாறு சிலகாலம் அக்குறிப்பைப் பார்த்து வந்தால் அப்பியாசியுடைய சூக்குமவடிவம் புலப்பட்டுத்திறமாகும், இந்தச் சூக்கும வடிவத்தை இன்னும் பிரத்தியட்சமாகப் பார்க்கவேண்டியிருந்தால் சுமார் ஒரு மண்டலம் (48-நாள்) வேறொரு

(*) இந்த ஆசனங்களின் விபரம் நமது "வேதாந்த பாஸ்கரன்" அட்டாங்க யோக அத்தியாயத்திற் பார்த்துணர்க.

வர் முகத்தைப் பாராமலும், அறையைவிட்டு வெளியில் வாராமலும் தைலதாரைபோல் இடையறுமல் அப்பியாசம் செய்துவரவேண்டும்.

இப்படிப் பார்த்து வரும்போது ஒரு சமயம் முகம் அழகாகவும், ஒரு சமயம் பெருத்தும், ஒரு சமயம் சிறுத்தும் தெரியும். நெற்றியில் சுடர் வீசும். முகவசீகாமும் சர்வ வசியமும் ஏற்படும். சிற்சில சித்துக்களும், காட்சிகளும் உண்டாகும். காலையில் எழுந்து கண்ணுடியைப்பார்க்கும்படி ஆன்ருேர்கள் கூறிய கருத்தும் இதுவே. இது போலவே மனிதர்களுடைய நேத்திரத்தில் தெரிகின்ற பாவை உருவத்தையும் பழக்கலாம். அன்றியும், நமது வெளிக்கண்ணுக்கு ஆகாயத்தில் புலப்படுகிற ஒளி வடிவமாகிய நெளி வடிவத்தையும் அப்பியாசிக்கலாம். முழு விபரம் குருநாதனிடம் கேட்டுணர்க.

## மெய்ஞ்ஞானத் தெளிவு.

உற்றுன்னை நீபார்த்தால் றப்புயிர் சடமுதலாய்ச்
சற்று மறையாமற் ருனறிவாய்—மற்ருென்றைப்
பார்த்தறிந்தாற் றேகமட்டும் பார்வைதனிற் ருேன்றுமல்லா
லாத்துமத்தின் கூறுதெரி யா.

ஆகையினுற் றன்னையறி றப்பையறி வாயென்றே
ஏகனிற சூஉரைத்தா ரேயிசைவாய்ச்—சாயையாந்
தன்னை யுணர்ந்தோர்க்குத் தலைவன்வரை யிற்ருேன்றும்
பின்னையொன் றைப்பிடித்தோர் பேய்.

## மற்ருெருவித சூக்கும அப்பியாசம்.

தன் வதனத்தைப் படிகத்தில் பார்த்து, அத்துடன் மனக்கண்ணினுல் உண்ணுக்கை நோக்கி, அந்த ஆதாரத்திற்

(மக்காமுக்) குரிய தியானத்தை (* திக்றை) தினம் ஒன்றுக்கு நூற்றெட்டு(108) வீதம் ஒரு மண்டலம் தியானித்து வந்தால் இருபத்தோராவது நாள் உண்ணுக்கானது வெண்மையாகப் பிரகாசிப்பது மனக்கண்ணுக்குத் தோன்றும். அதன் பின்னர் நாம் பார்த்துவருகிற கண்ணாடியில் நமது வதனத்தை நோக்கினால் நமது முகத்திற்கு வலது பக்கத்தில் பிரகாசமுள்ள மற்றொரு முகம் தோன்றிப் புன்முறுவலுடன் வார்த்தையாடும்.

அந்த முகமானது நம்மிடம் பேசிய பின்னர், கண்ணாடியையும் - உண்ணுக்கையும் நோக்குவதைவிட்டு, முற்கூறப்பெற்ற தியானத்தை தினமொன்றுக்கு ஆயிரத்தெட்டு (1008) முறை, செபியாமல் செபித்து ($) வலது பக்கத்தில் தோன்றிய முகத்தை முன்னிலையாக நிறுத்தி நோக்கிக்கொண்டேவர, மனிதராகப் பிறந்ததின் பயனைப் பிரத்தியட்சமாக வுணரலாமென்பதை அவரவரனுபவத்திற்காணலாம்.

### இரண்டாவது அப்பியாசம்.

### உயர்தரச் சூக்கும் (மலக்கூத்உல்வீ)

முன் அப்பியாசத்தில் கூறியபடி கண்ணாடியில் தோன்றிய தன்னுருவை கண்ணாடியில் பார்ப்பதைவிட்டு, மனக்

---

(*) திக்று— இலாஹி அந்த மக்சூதி என்ற எக்கீன்
இலாஹி என்னுடைய நாயனே அந்த நீயா
கிறவன் மக்சூதி என்னுடைய நாயகத்திற்குடையவன்.

($) இடது பக்கத்திலும் முகம் தோன்றும் அந்த முகம் பைசாசத்தி (ஷைத்தானி)ன் முகமானதால் அதைச் சிந்திக்காமல் விலக்க வேண்டும். அன்றியும் தாயினுடைய முகம் தகப்பனுடைய முகம் குருவினுடைய முகம் இப்படிப் பலமுகம் தோன்றும். அவற்றுள் தான் தான் எந்தமுகத்தைப்பற்றி சிந்தித்தோமோ அந்த முகத்தை மட்டும் பற்றித்தியானிக்கவேண்டும்.

(இயால்) கண்ணினால் பார்த்துவரவேண்டும். அந்தச்சூக்கும வடிவத்தையே அனவரதமும் உற்று - உற்று நோக்கி உருவாக்கவேண்டும். சிரமப்பட்டாகிலும் இவ்வாறு சில காலம் பழகிவிட்டால், தூல சரீரம் மறைந்துபோய் சூக்கும சரீரமே முன்னிற்கும் அந்தச் சூக்கும வடிவத்தை அடிக்கடி பார்த்துவந்தால் பளீர் பளீரென்று மின்னிப்பிரகாசிக்கும். இந்தத் தூல சடம்போல் சூக்கும சரீரம் வெளியாகிவிட்டால், அந்தச்சடமே நித்திய சரீரமாகும். அந்தச் சடத்திலேயே குடியிருக்கப் பாவிக்கவேண்டும். அப்படிக் குடியிருப்பதற்கு வேண்டிய விபரங்களை சீடனுக்குச் சந்தேக விபரீதங்கள் வாரதபடி தக்க உபமான உபமேயத்துடனும், சிவகாந்தப் பவருடனும், அதிக விளக்கமாகவும் கூறவேண்டியதாதலால் குருநாதனிடம் கேட்டுணர்க.

சூக்கும சடமானது சில காலத்தில் பூரண சந்திரனைப் போல் பிரகாசிக்கும். அதிலே நாம் குடியிருக்கப் பழகிவிட்டால் எந்த லோகங்களுக்கும் சீக்கிரம் சென்று வரலாம். யாருடைய வடிவத்தையும் எடுக்கலாம், சூக்குமமாயுள்ள எந்தப் பெரியோர்களையும் கண்டு பேசலாம். நமக்குப்பிரியமானவர்கள் கனவில்போயும் சம்பாஷிக்கலாம். கனவிலேயே உபதேசம் செய்யலாம். அப்படி உபதேசிப்பதற்குத் தான் யோக தீட்சை என்று பெயர். அப்பியாசம் முதிர்ச்சியாக முதிர்ச்சியாக பல பெரியோர்களும் நம்மிடத்திற்கு வருவார்கள். அநேக இரகசியங்களையும் நமக்கு அறிவிப்பார்கள், தேவதூதர்களையும் சந்திக்கலாம். ஆண்டவனிடமிருந்து தேவ வசனம் வெளியாகிற தன்மைகூட இத்தன்மைத்தெனை உணரும்படி புலனாகும். இன்னும் இவ்விதமான அற்புதங்களும் ஆச்சரியக் காட்சிகளும் தோன்றும். அட்டமாசித்து (விலாயத்து) கள் செய்யும் வல்லமையும் ஏற்ப

டும். (இதன் விபரம் முந்தின அருவஞான அத்தியாயத்தில் விரிவாகக் கூறப்பெற்றிருக்கிறது.) இந்த நிலையை ஆழ்ந்து சிந்திப்பவர்களுக்கு மிஃறுஜின் இரகசியங்கள் காதலாமல கம்போல் விளங்கும்.

குரு வடிவத்தையாவது, தன் வடிவத்தையாவது, வாலிபன் அல்லது யுவதி வடிவத்தையாவது, அல்லது தன்மனதிற்கு அதிகப் பிரியமான எந்த வடிவத்தையாவது சூக்குமமாக அமைத்துக்கொள்ளலாம். ஆனால், தன்னுடைய வடிவமே சாலச்சிறந்தது. அப்படி அமைத்த சூக்கும வடிவமானது சோதி சொரூபமாகிவிட்டால், உண்பதும் அதுவே! உடுப்பதும் அதுவே! உறங்குவதும் அதுவே! உலாவுவதும் அதுவே! நடப்பதும் அதுவே! இருப்பதும் அதுவே! தொழுவதும் அதுவே! என்று அந்தச் சூக்கும வடிவத்திலேயே குடியிருந்து சகல கிரியைகளையும் அந்தச் சூக்கும வடிவமே செய்வதாகப் பாவிக்கவேண்டும் இந்தத் தூல சரீரத்தின் ஞாபகம் வரவேகூடாது, தூல சடத்தைப்பற்றிய எண்ணம் மறந்தே போகவேண்டும்.

இவ்வாறு அனுட்டித்துக்கொண்டேவர, சிலகாலத்தில் அந்த வால சரீரம் பல்லாயிரம் சூரியன் ஒன்று சேர்ந்ததுபோல் பிரகாசிக்கும். இந்த ஒளி வடிவமே நூருனிய்யா வென்னும் சோதி சொரூபமாகும். இதையே கூடுவிட்டுக் கூடு பாய்தலாகிய பரகாயப்பிரவேசம் என்பார்கள்.

திருமந்திரம்.

இக்காய நீக்கி யினியொரு காயத்திற்
புக்குப் பிறவாமற் போம்வழி தேடுமி
னெக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்
றக்கால முன்ன வருள் பெறலாமே.

உருவன்றி யேநின் றுருவம் புணர்க்குங்
கருவன்றி யேநின்று தான் கருவாகு
மருவன்றி யேநின்ற மாயப் பிரானைக்
குருவன்றி யாவர்க்குங் கூடவொண் ணாதே.

உருவ நினைப்பவர்க் குள்ளுறுஞ் சோதி
யுருவ நினைப்பவ ரூழியுங் காண்ப
ருருவ நினைப்பவ ரும்பரு மாவ
குருவ நினைப்பவ ருலகத்தில் யாரே.

மூன்றாவது - சிந்தனை
காரண நிலயம் (ஜபறூத் - மக்காம்)

நான்காவது - நிர்ச்சிந்தை
மகாகாரண துரிய நிலயம் (லாகூத்மக்காம்)

என்பதுபோன்ற பல நிலயங்களுமிருக்கின்றன. இந்த மூன்றாவது - நான்காவது நிலயங்களின் அப்பியாசங்கள் மிக்க இரகசியமாகவும், முதல், இரண்டு அப்பியாசங்களை நன்கு பழகாதவர்களுக்கு விளங்காததாகவுமிருப்பதாலும் இன்னும் தெளிவாக எழுதவேண்டியது அவசியந்தான். அப்படி எழுதினாலோ சாதகர்கள் சரிவர விளங்கிக்கொள்ளாமல், தாறுமாறாக அர்த்தம் பண்ணிக்கொண்டு, அப்பியாசங்களை எங்கே விபரீதமாகச் செய்துவிடுவார்களோ! என்று இடைக்கிடையே தோன்றுவதால் இம்மட்டோடு வெளியிட்டு விட்டோம். இவ்வப்பியாசத்தில் அவாவுள்ள அன்பர் (ஆஷிகீன்) கள் நம்மிடம் நேரிலாவது ஏனைய(காமிலான) சற்குரு பிரான் மூலமாகவாவது கேட்டுணர்ந்து அநுட்டித்து எப்படியாவது ஈடேறுவார்களாக.

புலவர்கள் நாயகம் பூங்கழல் வாழ்க.



இந்நூலாசிரியர்மாணவர்களில் ஒருவராகிய 'வித்வரத்தினம்'

## க. சோமசுந்தரம் பிள்ளை

அவர்கள் துதி செய்த

## மங்களப்பாக்கள்.

—oo:o:oo—

எழுசீரடியாசிரிய விருத்தம்.

1. கடலமு தனைய தனிமொழி ஞானக்
களஞ்சிய மிதைப்படித் துணர்ந்தோர்
திடமொடு யோக சாதனை பயின்று
செழுமதி யமுதினை யயின்று
சுடரவிர் துரிய பூமியை யடைந்து
சுத்தநின் மலசுகா னந்தத்
தடவெளித் துரியா தீதமுந் தாண்டித்
தனிப்பர மௌனவிளங் குவரே!

2. திருவளர் கமல மலர்ந்திட வுதித்த
சேயிளங் கதிரவ னெனவும்
மருவெழுங் குமுத மலர்ந்திட வெழுந்த
மழகதிர் மாமதி யெனவும்
இருநிலத் தடியார் மனமலர் மலர
வெழுந்தருள் கருணையா னந்த
குருவெனு ஞான பூபதி யவர்கள்
கோமள வடிகள்வா ழியவே!

முற்றுப் பெற்றது.

Printed at The Kandan Press, 32, Broadway, Madras.

# குருவில்லாமல் நூலைப் பார்த்தே
# அப்பியாசிக்கக்கூடிய
# ஞானயோக ரகசியம்.

(நூற்றுக்கணக்கான சித்திரப்படங்கள் அடங்கியது.)

எத்தனை எத்தனை விதமான தேகப்பயிற்சிகள், எத்தனைவித மான யோகாப்பியாசங்கள், எத்தனைவிதமான வைத்திய முறைகள், நெடுநாள் நீடித்திருக்கும்படியான காயகற்பங்கள், இன்ன பச்சிலையைச் சாப்பிட்டால் இவ்வளவு காலம் இருக்கலாம், இன்ன பாலைச் சாப்பிட்டால் இவ்வளவுகாலம் இருக்கலாம் என்பது போன்ற பரம ரகசியத்திலும் பரமரகசியமான பெரியோர்களின் முறைகளை எடுத்து விசிறிவிடப் பெற்றிருக்கிறது.

இந்நூலில் அடங்கியுள்ள விஷயங்களில் சிலவற்றை
மாதிரிக்காக இங்கு குறிப்பிடுகிறோம்.

இராஜயோகம், மனோலயம், தேகாப்பியாசங்கள், பிராணயாம யோகம், இதுவரையில் எந்த நூலிலும் வெளியிடாத பிராணயாம யோகப்பிரிவு, எட்டுவகைப் பிராணயாமம், அம்சகாயத்திரி, சோகப் பிரணவம், அப்பியாசம் செய்யுமிடம், அப்பியாசக்கணக்கு. அப்பியாச முறை, வமனம், (தௌதி) விசர்க்கம், (பஸ்தி) பிரமணம், நாசிபாவனம், குதக்கிரியை, உண்ணுக்கிரியை அப்பியாசகாலம், அப்பியாசக் குறிகள், சண்முகிமுத்திரை, மகாமுத்திரை. சாலந்திரபந்தம், உட்டியானபந்தம், மூலபந்தம், விபரீதகரணி, சாம்பவி முத்திரை. இலாஞ்சனை, கேசரி முத்திரை, வஜ்ரோலி முத்திரை, கபசுத்தி (கரிசாலை நெய்,) மூலசுத்தி—(எரண்டநெய்) கபமல நிவாரணம், பஞ்சகற்பம், மூதண்டக்கியாழம், தாம்பூலச்சுண்ணம். உப்புக்கட்டு, சூரியயோகம், சந்திர யோகம், காயகற்பம், மும்மூல அகக்கற்பம், கற்பம் உண்பதற்கங்கம், கற்பமுண்ணுங்காலம், பேரண்டகற்பம் கற்பமுண்ணுங்கால் அபத்தியம் நேரிட்டு வியாதிகண்டால் இலகுவான வைத்தியமுறைகள், போசன நியமங்கள், யோக விக்கினங்கள், யோகப்பரீட்சை, சயனவிதி, கற்பசாதனைக்கிரமம். அநேக புறக்கற்பங்கள், அயக்காந்த செந்தூரம், கருப்புமூலிகைப் பயிர், கடுக்காய் கற்பம், காந்தக்கிண்ணம், பேய்த்தேற்றான் பாத்திரம், மிளகுகற்பம், தூதுவேளை கற்பம், சீந்திற்கற்பம், வேம்புக்கற்பம், கரிசாலைகற்பம், காரண்டக் கற்பம், கனை எருமைக்கற்பம், சர்க்கரைவேம்புக் கற்பம், செங்கற்றாழைக் கற்பம், சுந்தரானந்தர் கேசரிகற்பம், முதலான ஏராள முறைகள் கடல்மடை திறந்தாற்போல் கூறப்பெற்றுளது.

சீர்மை முழு காலிக்கோ பைண்டு ரூ. 3 0 0

வேதாந்த பாஸ்கரன், ஞானக் களஞ்சியம் ஆசிரியராகிய
கருணையானந்த ஞானபூபதிகளால் பிரமோதூதஹு
சித்திரைமாதம் முதல் வெளியாகிவருகிற
சித்திரப்படங்களுடன் கூடிய






## இது ஒரு உயரிய மாதப் பத்திரிகை

இப்பத்திரிகையானது சில ஆண்டுகளுக்குமுன் திருவாரூர் விஜயபுரத்திலிருந்து வெளியாகி வந்ததையும், அதன் அருமை பெருமையையும், இரகசியமான கல்விகளின் விளக்கத்தையும் நேயர்கள் நன்கறிவார்கள். இதை [illegible]த்தும்படி பல இந்து முஸ்லிம் அன்பர்கள் சதா [illegible]ண்டதால் பத்திரிகையை முன்னிலும்விசாலமாக [illegible]ன் [illegible] அனு[illegible]கிறோம். இது இனிய செந்தமிழ் நடையி[illegible]பெற்ற வியாசங்களைத் தாங்கி, ஆண் பெண் இரு[illegible]ம் படிக்க படிக்க நல்லறிவை விளக்கி பரமானந்த[illegible]. இந்து முஸ்லிம், முதலான சகல சமயத்தினரும் முன்னேற்றமும் சமரசமும் அடையும் பொது நலத்திற்காகவே கங்கணங்கட்டி உழைப்பது. இப்பத்திரிகையில் கல்வி, சுகாதாரம், கைத்தொழில், விவசாயம், அறிவைத் தரும் விநோதம், பக்திமார்க்கம், ஞானமார்க்கம், தேசீயஞானம், முஸ்லிம்நீதி, மாதர்நீதி, மாணவர்நீதி, உலக வர்த்தமானம் முதலான ஏராள விஷயங்களைப் போதிப்பதுடன், நமது சந்ததியார்கள் எதற்காகப் பிறந்தோம் என்பதையுணர்ந்து ஆன்மலாப சுயராச்சியம் அடைவதற்கு வேண்டிய வழிகளையும் அருமையாக போதிப்பது.

வருட சந்தா ரூ. 1-8-0 வெளி தேசங்களுக்கு ரூ. 2-0-0

மானேஜர், "ஞான சூரியன்" ஆலயம்,
22, மூக்கர் நல்லமுத்து வீதி, G. T., சென்னை.

---

மேற்கண்ட புத்தகங்களும் பத்திரிகையும்,
M. A. நாவலர் அண்டு சன்ஸ்,
விஜயபுரம் — தஞ்சாவூர் ஜில்லா.
என்ற விலாசத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.